# தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள்

பன்மொழிப் புலவர் மு.கு.ஜகந்நாத ராஜா






தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ISBN:81-7090-362-9

தமிழ்ப் பல்கலைக்கழக வெள்ளி விழா ஆண்டு வெளியீடு -19

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு: 301
திருவள்ளுவராண்டு 2036, மார்கழி-டிசம்பர் 2005

| | | |
|---|---|---|
| நூல் | : | தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள் |
| ஆசிரியர் | : | மு.கு.ஜகந்நாத ராஜா |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | ; | சமயம் மற்றும் மெய்ப்பொருளியல் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு 2005 |
| பக்கம் | : | 420 |
| தாள் | : | டி.என்.பி.எல்.மேப்லித்தோ 18.6 கிலோ |
| அளவு | : | டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : | சாதாக்கட்டு |
| விலை | ; | உரூ. 130/- |
| படிகள் | : | 1000 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம் தஞ்சாவூர் |



# தமிழ்ப் பல்கலைக்கழகம்
## தஞ்சாவூர்

முனைவர் சி.சுப்பிரமணியம்
துணைவேந்தர்

## அணிந்துரை

தொன்மையான பண்பாட்டின் இருப்பிடமாகத் திகழும் இந்தியத் திருநாட்டில் சமயம் என்பது ஒரு வாழ்நெறியாகப் போற்றப்பட்டு வந்துள்ளமையை நமது இலக்கியம் திறம்பட வெளிப்படுத்தும். பண்பாட்டின் கூறுகளில் ஒன்றான சமயம் என்பது வெறும் சடங்குகளால் ஆனதல்ல; ஒழுங்கு நெறிகளாலும் அறச்சிந்தனைகளாலும் வார்த்தெடுக்கப் பட்டதாகவே அமைந்திருந்தது. மனிதன் எப்படி வாழ்க்கையை வாழ வேண்டுமென வழிகாட்டியது சமயமேயாகும். வாழும் வாழ்வினைச் செம்மைப்படுத்தியதும் சமயமே.

உலகிலுள்ள மிகப்பழமையான - பண்பட்ட சமயம் இந்து சமயமாகும். இந்து சமயத்தின் இருபெரும் பிரிவுகளாக அமைந்திருப்பன சைவமும், வைணவமுமேயாகும். சிந்துவெளி நாகரிக காலத்தில் தோன்றி திராவிட ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டமைந்தது சைவமெனில், வேத உபநிடதங்கள் வைணவத்தை வடிவமைத்தன என்றுகூட நாம் கூறலாம். சைவம், வைணவம் என்னுமிரண்டில் இந்நூல் வைணவத்தைப் பற்றி சமய, தத்துவ, வரலாற்று நோக்கில் ஆய்கிறது. அதிலும் குறிப்பாக, தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகளைப் பற்றி விரிவாக எடுத்துரைக்கும் இந்நூலில் வைணவத் தத்துவமாம் விசிட்டாத்வைதத்தைப் பற்றியும், வைணவ சமயத்தின் வரலாற்றினைப் பற்றியும், அதிலும் குறிப்பாகத் தமிழகம் மற்றும் ஆந்திரத்தில் வைணவத்தின் வரலாறு பற்றியும் நூலாசிரியர் பல்வேறு செய்திகளைப் பாங்குற எழுதியிருப்பதை மனநிறைவுடன் பாராட்டலாம்.

தமிழகத்தில் வைணவ வளர்ச்சியைக் குறிப்பிடும்போது திருமாலைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கிய நூல்களான

தொல்காப்பியம், அகநானூறு, புறநானூறு, பரிபாடல், நற்றிணை, கலித்தொகை, சிலப்பதிகாரம், மதுரைக்காஞ்சி, திருமுருகாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, திருக்குறள் போன்றவற்றில் இடம் பெற்றுள்ளதை ஆசிரியர் சுட்டியுள்ளார். கி.மு.3-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு தமிழகத்தில் வைணவம் தழைத்தோங்கியுள்ளது. பன்னிரு ஆழ்வார்கள் மற்றும் ஸ்ரீஇராமானுஜர் போன்றோர் வைணவத்தை மேலும் செழிக்கச் செய்ததை நூலாசிரியர் நன்கு விவரித்துள்ளார். ஆறாயிரப்படி, குருபரம்பரைப் பிரபாவம் போன்ற நூல்கள் மூலம் வைணவ வளர்ச்சி தெளிவாகின்றது. ஆழ்வார்கள் காலநிலை, அவர்கள் அருளிச் செய்தது போன்றவை நன்கு விவரிக்கப்பட்டுள்ளது.

இராமானுசர் காலத்திற்கு முன்பு வைணவத்தை வளர்த்த பெரியோர்கள், அவர்கள் வைணவத்திற்குச் செய்துள்ள தொண்டுகள் போன்ற செய்திகள் உள்ளன. அதே போன்று ஸ்ரீபராசரபட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, வடக்கு திருவீதிப்பிள்ளை, ஸ்ரீவேதாந்த தேசிகர், பிள்ளை லோகாச்சாரியார் மற்றும் அதனைத் தொடர்ந்து வந்துள்ள ஜீயர்கள், வைணவ மடாதிபதிகள் போன்றவர்கள் பற்றிய செய்திகளை நன்கு தெரிவித்துள்ளார். வைணவ வளர்ச்சியில் அகோபிலம், வானமாமலை மற்றும் பரக்கால மடங்களின் பங்கு அதிகமெனலாம்.

வைணவக் கோயில்களைக் குறிப்பிடுகையில் அகோபிலம் மற்றும் திருப்பதி, ஆந்திர மாநிலத்தின் மற்ற வைணவ கோயில்களைப் பற்றியும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன. ஆழ்வார்கள் இக்கோயில்களில் கொண்ட தொடர்பு, ஆந்திரத்தில் வைணவம் வளர்ந்த விதம், தமிழ்மொழித் தாக்கம், தமிழகத்து வைணவர்கள் ஆந்திரத்தில் குடிபெயர்ந்த விவரம், மன்னர்களின் காலத்தில் வைணவ வளர்ச்சி, அவர்கள் வைணவத்திற்கும் வைணவக் கோயில்களுக்கும் ஆற்றியுள்ள தொண்டுகள் போன்றவை இந்நூலில் எடுத்தாளப்பட்டுள்ளன. ஆந்திர மாநிலத்தில் இந்துக்களில் வைணவர்களே அதிகம் என்ற செய்தியும், இம்மாநிலத்தில் தொழில் முன்னேற்றம், கணிம வளம், அங்குள்ள நதிகளின் பயன்கள் போன்றவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

மொழி பற்றிய ஆய்வும் மேற்கொள்ளப்பட்டு தமிழ்-தெலுங்கிலுள்ள தொடர்பு ஒப்புநோக்கப்பட்டுள்ளது. கி.மு.235 தொடக்கம் ஆந்திர மாநிலத்தில் பல்லவ மன்னர்கள் மற்றும் கிருஷ்ணதேவராயர் ஆட்சி போன்றவற்றில் வைணவம் வளர்ந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே

ஆந்திரத்தில் வைணவம் இருந்தது என்று ஆசிரியர் கூறும் செய்திகளின் மூலம் அதன் தொன்மை நன்கு விளங்குகின்றது. மேலும் வைணவ ஆச்சாரியர்கள் ஆந்திர வைணவப் பெரியோர்களான ஸ்ரீகிருஷ்ணமாச் சாரியர், அன்னமய்யா, திருமலாச்சாரியார் போன்றவர்கள் வைணவத்திற்கு செய்துள்ள தொண்டின் மூலம் வைணவம் சிறப்பாக வளர்ந்து வந்ததை ஆசிரியர் தெரிவித்துள்ளார்.

மேலும் தற்கால வைணவ சமூகத் தொடர்புகளைக் குறிப்பிடுகையில் தமிழகத்து வைணவர்கள் சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்னர் ஆந்திரத்தில் குடிபெயர்ந்துள்ளனர். அதன் மூலம் வைணவம் வளர்ந்து பல வைணவ நூல்கள் தெலுங்கு மொழியில் வெளியிடப்பட்டுள்ளன என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளதையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இந்நூலாசிரியர் பன்மொழிச் சான்றோர், புலமையும் திறமையும் கொண்ட அவர் மேற்கொண்ட முயற்சியும், அவரது கடின உழைப்பும் நூலின் தரத்தை உயர்த்துகின்றது. வடமொழி, மணிப்பிரவாள நூல்கள், மற்ற சமய நூல்கள், பிறமொழி நூல்கள் ஆகியவற்றிலுள்ள நல்முத்துக்களைத் தொகுத்து இந்நூல்வழி நமக்குத் தந்துள்ளார். இந்நூலை வழங்கிய ஆசிரியர்க்குத் தமிழ் உலகம் தமது நெஞ்சார்ந்த நன்றியினை என்றென்றும் தெரிவிக்கும் என்று கூறிக் கொள்கிறேன். இதுபோன்று அவர் மென்மேலும் பல நூல்களை வெளியிடவேண்டுமென்ற என் விழைவுளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நேர்த்தியாக அச்சிட்டு வெளியிட்டுள்ள தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநருக்கும், பதிப்புத்துறையினருக்கும் என் வாழ்த்துக்களும் பாராட்டுதல்களும்.

(சி.சுப்பிரமணியம்)

# முன்னுரை

உலகச் செம்மொழிகளில் மிகத் தொன்மையான இலக்கிய வளமும் தத்துவ வளமும் உடைய மொழிகள் எனப் போற்றப் படுபவை இந்திய மொழிகளான வடமொழியும், தென்மொழியாகிய செந்தமிழுமே ஆகும். வடமொழி இன்று பேச்சு வழக்கில்லாமல் நூல் வழக்கிலும் மதச் சடங்குகளில் மட்டுமே பயிலப்படுதலின் இன்றும் மக்கள் பேச்சு வழக்கிலும் உடைய சிறப்புடையது உயர்தனிச் செம்மொழியாகிய தமிழே ஆகும். அண்மையில் நமது இந்திய அரசும் இதனை ஏற்று சிறப்புச் செய்துள்ளது நமக்குப் பெருமை தரும் செய்தியாகும்.

தமிழ்மொழியை வளமுறச் செய்யவும் மகாகவி பாரதி கண்ட கனவை நனவாக்கும் வகையிலும், புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். அவர்கள் ஆளுமையில் தஞ்சாவூரில் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவப்பட்டது. தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு முதல் துணைவேந்தராக பேரறிஞர் வ.அய். சுப்பிரமணியம் நியமிக்கப்பட்டார்கள். அப்போது பதிவாளராக சிறந்த பேச்சாளராகவும் செயல்திறன் மிக்க அறிஞருமாகிய சிலம்பொலி செல்லப்பன் இருந்தார்கள். அப்போது அரண்மனை வளாகத்தில் பல்கலைக் கழகம் இயங்கி வந்தது. பின்னர் ஒரு சில ஆண்டுகளிலேயே தற்போதுள்ள தமிழ்ப் பல்கலைக் கழக கட்டிடங்கள் உருவாக்கப்பட்டு இன்று சீரும் சிறப்புடனும் பொலிவுறுவது அனைவரும் அறிந்ததே.

தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் வ.அய். சுப்பிரமணியம் அவர்கள் 2.5.1983ல் தொலைபேசி மூலம் என்னை அழைத்து, ஆய்வுப்பணி ஒன்று தரவேண்டி நேரில் வருமாறு கூறினார்கள். நானும் இசைந்து சென்றேன். துணைவேந்தர் அவர்கள் ''தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகள்'' என்ற தலைப்பில் ஆய்வு செய்து நூல் படைத்தளிக்குமாறும் தமிழக, ஆந்திர வைணவத் தலங்கட்கு நேரில் பயணம் செய்து செய்திகள் திரட்டி தமிழ், தெலுங்கு இலக்கியச் சான்றுகளுடன் ஆய்வு நூல் அமைய வேண்டும் என்றும் கூறினார்கள். அதற்கான ஊதியமும், பயணச் செலவுகளும் அளித்து உதவினார்கள்.

நான் 11.5.1983ல் திருக்குறுங்குடிக்குச் சென்றேன். பின் தமிழக தலங்கட்குச் சென்று விவரங்கள் சேகரித்தேன். பின் தொடர்ந்து ஆந்திராவிலுள்ள அகோபிலம், ஸ்ரீகூர்மம், விசாகப்பட்டினம், சிம்மாசலம் முதலிய ஊர்கட்குச் சென்று அங்குள்ள வைணவத் தலங்களைத் தரிசித்து அங்குள்ள தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட வைணவ அர்ச்சகர்கள் மற்றும் கல்லூரி தெலுங்குத் துறைத் தலைவர்கள் முதலியவர்களை நேரில் கண்டு செய்திகள் சேகரித்தேன்.

துணைவேந்தர் அவர்கள் பூரி ஜகந்நாதர் கோவிலுக்கும் சென்று வருமாறு கூறியிருந்தார்கள். அதன்படியே 26.5.1983ல் ஒரிசா மாநிலத்தின் தலைநகர் புவனேஸ்வர் சென்றேன். கண்டவல்லி உதயகிரி குகைகள் கண்டு களித்தேன். 27.5.1983ல் பூரி ஜகந்நாதர் கோவில் சென்று தரிசித்து அங்குள்ள வைணவம் குறித்தும் பல செய்திகள் அறிந்தேன். என் பயணம் முடிந்து திரும்பினேன். திரும்பும்போது குர்தாரோடு என்ற ரயில் நிலையத்தில் எனது பயணப் பைகளில் ஒன்று களவுபோனதால் சிரமமுற்று சிறு துயரடைந்தேன். பின் அன்னவரம் என்னும் ஊரில் சத்தியநாராயணசுவாமி திருத்தலம் வந்து அங்குள்ள கோதாவரி நதியின் கிளைநதியில் உள்ள அணைக்கட்டின் நீர்த்தேக்கம் கண்டதும் மகிழ்வுற்று நிம்மதியுடன் 30.5.1983ல் இராஜபாளையம் வந்து சேர்ந்தேன்.

பின்னர் மீண்டும் திவ்விய பிரபந்தம், குருபரம்பரா பிரபாவம் முதலிய தமிழ் நூல்களையும், தெலுங்கில் ஆமுக்தமால்யத, தாள்ளபாக அன்னமய்யா மரபினர் நூல்களையும்,

தற்கால அறிஞர்கள் ஆய்வு நூல்களையும் மீண்டும் ஆய்வு நோக்கில் படித்தேன். ஆய்வு நூல்கள் குறித்த பட்டியல் இறுதியில் தந்துள்ளேன்.

இந்நூல் 1987ம் ஆண்டில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சமர்ப்பித்தேன். காலம் உருண்டோடிவிட்டது. இப்போது எனது ஆய்வு நூல் பல்கலைக் கழக வெளியீடாக வருவதில் பேருவகை கொள்கிறேன்.

தற்போது தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராகத் திகழும் பேராசிரியர் சி. சுப்ரமணியம் அவர்கள் செயல்திறன் மிக்க சிந்தனையாளர். அவர்கள் ஆளுமைக்காலத்தில் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெள்ளிவிழா கொண்டாடும் வாய்ப்பு நேர்ந்துள்ளது அறிந்து மகிழ்கின்றோம். இத்தருணத்தில் இந்த ஆய்வுப் பணியை எனக்கு நல்கிய வ.அய். சுப்ரமணியம் அவர்களையும், அதனை நூலாக வெளியிட்டு எனக்குச் சிறப்புச் சேர்த்த சி. சுப்ரமணியம் அவர்களையும் நன்றிப் பெருக்குடன் வாழ்த்திசைக்கின்றேன்.

இந்நூலை அழகுடன் வெளியிட்டுள்ள பல்கலைக் கழகப் பதிவாளர் முனைவர் க. பாஸ்கரன் அவர்களுக்கும், பதிப்புத்துறை இயக்குநர் முனைவர் ஆறு. இராமநாதன் ஆகியோருக்கும் என் நன்றி.

இதனை கணிப்பொறியில் படியாக்கம் செய்து, இருமுறை இராஜபாளையம் நேரில் வந்து ஆலோசனை பெற்று சிறப்பாக வடிவமைத்துத் தந்த தஞ்சாவூர், முல்லைபாரதி கம்ப்யூட்டர் பிரிண்டர்ஸ், திரு வை. இராமமூர்த்தி அவர்களுக்கும் என் நன்றி.

மேலும் என் ஆய்வுப் பணியின்போது பல்லாற்றானும் உதவிய தமிழக, ஆந்திர நாட்டு வைணவ அறிஞர்கட்கும் நன்றி பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

—மு.கு. ஜகந்நாதராஜா

# பொருளடக்கம்

# 1. வைணவத் தத்துவம்

*உயர்வற வுயர்நலம் உடையவன்யவனவன்*
*மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்*
*அயர்வறு மமரர்கள் அதிபதி யவனவன்*
*துயரறு சுடரடி தொழுதெழென் மனனே*
*-திருவாய்மொழி, 1.1.1*

*மிக்க இறைநிலையும் மெய்யாம் உயிர்நிலையும்*
*தக்க நெறியும் தடையாகித் - தொக்கியலும்*
*ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்*
*யாழினிசை வேதத் தியல்.*
*-தனியன்*

*யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம*
*வ்யோமோஹதஸ்ததிதராணி த்ருணாய மேனே!*
*அஸ்மத்' கு' ரோர் பக'வதோஉஸ்ய த'யை கஸிந்தோ!*
*ராமானுஜஸ்ய சரணௌ ஸரணம் பரபத்யே!*

## 1. அ. சமயங்களில் வைணவத்தின் நிலை

உலக வரலாற்றில் தொன்னெடுங் காலமாகவே அருளாளர்களும், மெய்ந்நெறி கண்ட சான்றோர்களும் மானுட சமுதாயத்தை நெறிப்படுத்த முயன்று வந்துள்ளார்கள் என்பதைக் காண்கிறோம். நமது உயர்ந்த சிந்தனைகளாலும், வாழ்முறையாலும், மரபு வழிப்

பட்ட நடைமுறைகட்கும், புதிய தரிசனங்கட்கும் ஏற்பட்ட முரண் பாடுகளில் நல்லன கொண்டு அல்லன விலக்கி புதிய நன்னெறி களைக் காட்டியுள்ளார்கள்.

புலன் மயக்கமும், தன்னல வெறியும் இயல்பாகக் கொண்ட மனிதனின் விலங்கியல் சார்ந்த பண்புகளை அடக்கிக் கட்டுப்படுத்தி, சமூகத்தோடிணைந்து வாழும் அறநெறிப் பண்புகளை மேலோங்கச் செய்து, மானுட நேயத்தையும், அனைத்துயிர்களையும் நேசிக்கும் தெய்வீகப் பண்பாட்டினையும் அறிமுகப்படுத்தி, வாழ்வாங்கு வாழ நெறிப்படுத்தி சமுதாயத்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் சென்றிருக்கிறார்கள். மெய்ப்பொருள் கண்ட அச்சான்றோர்கள், தாம் வாழ்ந்த இடத்தின் பௌதீகச் சூழ்நிலைகட்கும், அக்காலப் பொருளாதார அமைப்புகட்கும், தம் காலச் சிந்தனை வளத்துக்கும் ஏற்ப தமது புது நெறியையும், புதிய சிந்தனைகளையும் பரப்பி யுள்ளார்கள். படைப்பின் இரகசியத்தைப் புரிந்து கொள்ள முயன்று, முரண்பட்ட பல கற்பனைகளைச் சொல்லிச் சென்றாலும், அவற்றின் அடிப்படை நோக்காக அறநெறி வாழ்வினையே வலியுறுத்திச் சொல்லி இருக்கின்றார்கள் என்பது தெளிவாகும். இவ் அறிவார்ந்த அறநெறிச் சான்றோர்களின் கருத்துக் கருவூலமே பிற்காலத்தில் அவ்வவர் பெயரில் மதமாகப் பரிணமித்துள்ளது. சமுதாயத்தை நெறிப்படுத்தும் சமயமாக அமைந்துள்ளது. சிந்து சமவெளி நாகரிகத் திலும்கூட மதமும், கோயில்களும் இருந்தன எனக் கண்டறிந் துள்ளனர். தொன்மைக் காலத்தில் மதம் இன்று நாம் காணும் குறுகிய பொருளில் அமைந்திருக்கவில்லை. மெய்ப்பொருள் ஆராய்ச்சி, அறநெறிகளின் தொகுப்பு, நடைமுறைப் பழக்க வழக்கங்கள், பொருளாதாரக் கட்டமைப்பின் நெறிமுறைகள், கலைகளின் நிலைக்களனான தொடர்புகள் யாவும் கலந்த கலவையாக இருந்தது. மதத்துடன் தொடர்புடைய குருமார்களும், கோயில்களும், சமுதாயப் பொதுநலம் பேணும் வகையில் அமைதல் காணலாம். எனினும் தொடக்கக் காலத்தின் தூயத் தன்மையும், தியாக உணர்வும் இழந்து காலஞ் செல்லச் செல்ல வெற்றுச் சடங்குகளும், மூட நம்பிக்கைகளும் மலிந்ததாகி சீர்கேட்டினை அடைந்தபோது மீண்டும் செம்மைப்படுத்தி பொலிவும், வலிவுமுடைய நன்னெறி காட்டிய அருட் செல்வர்கள் மதத்துக்குப் புதிய ஆக்கமும், ஊக்கமும் அளித்தனர். இத்தகு அருளாளர்கள் பெயரிலேயே அம்மதங்கள் அமைந்துள்ளன என்றும் காண்கிறோம். பௌத்தம், சமணம், கிறிஸ்தவ, முகம்மதிய மதங்கள் அத்தகையன. இம்மதக் கோட்பாடுகளில் புலன் கடந்த தத்துவங்களில் (Moto Physics)

ஏற்பட்ட முரண்பாடுகளாலும், ஒரு சில சீர்திருத்தக் கருத்துக்க ளாலும், மீண்டும் பல்வேறு பிரிவுகள் உருவாகி தனித்தனி நிறுவனங் களாகவும், சமயப் பிரிவுகளாகவும், மடங்களாகவும் இயங்கத் தொடங்கின. ஒவ்வொரு பிரிவும் மற்றப் பிரிவுகளை ஐயக் கண்கொண்டு நோக்கிப் பூசலிடுதலும், தம் கருத்தை மெய்மையானது என்ற பிடிவாதப் போக்கால் கருத்துப் போர்களேயன்றி வாளேந்திப் போரிட முனைதலும் வரலாற்றில் காண்கின்றோம். இம் முரண்பாடு கட்கு கருத்து மாறுபாடுகள் மட்டுமேயன்றிப் பொருளாதாரப் பின்னணிகளும் அரசியல் ஆதிக்க வெறிகளும் உண்டு. இவற்றால் பல்வேறு மதங்கள் தேய்ந்தும், வளர்ந்தும், சில அழிவுற்றும் சில நலிவுற்றும் போயினும் அதன் தொன்மைக் கூறுகள் இன்றும் இலக்கியத்திலும், சிற்சில வகுப்பாரின் கடைப்பிடிப்பிலும் இருப்பதைக் காணலாம். விஞ்ஞான விந்தைகளால் புத்தம் புதிய அறிவுச் செல்வங்களைத் தேடிக் கண்டறிந்த இன்றைய அணு யுகத்திலும் கூட சமயங்கள் (மதம்) சமுதாயத்தை நெறிப்படுத்தும் வலிவுடைய ஆற்றலாக அமைந்துள்ளன. சட்டங்களும் அரசியற் பொருளாதார அமைப்புகளும் சாதிக்க இயலாத சமுதாய நலக் கோட்பாடுகளை சமயம் சாதித்துக் காட்டியுள்ளது. அதற்கு மூலகாரணம் சமயத்தில் வெறும் சடங்குகள் மட்டுமின்றி மெய்ப் பொருட் கூறுகளும் அமைந்திருப்பதேயாகும். இன்றும் மானுட குலத்தில் சமயங்கள் வழிகாட்டும் ஒளி விளக்குகளாகவே திகழ்கின்றன. அத்தகு சமயங்களில் வைணவமும் ஒன்றாகும்.

உலகிலுள்ள மிகப்பழமையான சமயங்களில் வைணவமும் ஒன்றாகும். அது நமது வேத காலந்தொட்டு இடையறாது இயங்கி வரும் ஒரு வாழ்நெறித் தத்துவச் சமயமாகும். பண்பட்ட சமயங்களில் வைணவமும் ஒன்று. நமது நாட்டின் சமய வரலாற்றில் தத்துவமும் இலக்கியமும் ஒன்றுபட்டிணைந்திருப்பதைக் காண முடியும். அவை வாழ்நெறியோடு தொடர்புற்றும் இலங்குகிறது. உலகச் சமயங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்திய நாட்டுச் சமயங்கள் அனைத்தும் ஆன்மாவை ஒப்புக்கொள்வதோடு பல் பிறவிக் கொள்கையும், ஊழ்வினைக் கொள்கையும் சிறப்பித்துப் பேசுகின்றன. யூத, கிறித்தவ, மகம்மதிய சமயங்களில் ஆன்மா வையும், ஊழ்வினையையும் ஏற்பினும் பல்பிறவிக் கொள்கையை ஏற்பதில்லை. இறை மறுப்புச் சமயங்களான பௌத்தமும், சமணமும் கடவுளை மறுத்தாலும் பல பிறவிக் கொள்கையை ஏற்றுக் கொண்டுள்ளன. இக்கொள்கையே சமண சமயத்திடமிருந்துதான் வைணவம், சைவம், சனாதன தருமம் எனப்படும் நமது இந்து

மதத்திற்கு வந்துற்றது எனச் சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். வேத இலக்கியங்களில் பல்பிறவிக் கொள்கை எடுப்பாகக் காணப்படவில்லை. மனிதன் சிந்திக்கத் தொடங்கிய நாளிலிருந்தே தான் யார்? தன் இருப்புக்குக் காரணம் யாது? தனது முதலும் முடிவும் என்ன? வாழ்விற்குப் பொருள் என்ன? தன்னைச் சுற்றிலும் உள்ள பிரபஞ்சத்தைப் படைத்தது யார்? ஏன்? தனக்கும் அம்மூலப் பொருளுக்கும் உள்ள தொடர்பு யாது? எப்படி வாழ வேண்டும்? என்று சிந்தித்து வந்திருக்கிறான். இச்சிந்தனைகளின் முதிர்ச்சியே சமயத் தத்துவங்களில் காணப்படுகிறது. தான், தன் முன் காணப்படும் படைப்பு, அப்படைப்பின் மூலகாரணம் ஆகிய ஆன்மா, உலகு, இறை என்னும் மூலப்பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியே தத்துவ ஞானம் எனப்படுகிறது.

முப்பொருள் ஆய்வின் காரணமாக தத்துவச் சிந்தனைகளில் பல்வேறு முரண்பாடுகள் தோன்றியுள்ளன. உள்பொருள் (Substance) யாது? அஃது ஒன்றா பலவா? என்பதில் கருத்து முரண்பாடுகள் ஏற்பட்டுள்ளன. ஒவ்வொரு சிந்தனையாளரும் தமது கருத்தே மெய்மையானதென உறுதியாக நம்பி, பிற கருத்துக்களை தருக்க நெறி மூலம் ஊக்கியுள்ளனர். அவர்களது தருக்க நெறி, வாதத்திறன் சுவை பயப்பதோடு அறிவுக்கு விருந்தாகவும் அமைந்து சிந்தனைச் செழுமையைக் காட்டுகிறது. நடுநின்று நோக்குவார்க்கு இருமுரண் கருத்தோட்டங்களிலுமே சில ஏற்புடையதாகவும், சில போலி களாகவும் விளங்குதலைக் காணலாம். உலகக் கருத்தோட்டத்தில் சமண சமயம் ஒன்றே தன் கருத்துக்களை முடிந்த முடிபெனக் கருதாமல் சார்பு நிலைக் கருத்துத்தான் என்ற உண்மையை ஒத்துக்கொண்டுள்ளது. அதன் பெருந்தன்மையை இது காட்டுகிறது. சியாத்வாதம என்றும், அனேகாந்த வாதம் என்றும் கூறப்படும் சமண தருக்க முறையில் எந்த ஒரு கருதுகோளும், தான் காணும் சார்நிலைக் கோணத்திற்கேற்பவே அமையும் என்றும், மெய்மைக்கு பல முடிபுகள், பல காரணங்கள் இருக்கலாம் என்றும் கூறப்பட்டுள்ளது.

தமிழ் முனிவராகக் கருதப்படும் குந்த குந்தாச்சாரியர் தமது பஞ்சாஸ்திகாயத்தில், ★

*சிய அத்தி ணத்தி உஹயம் அவ்வத்தவ்வம்*
*புணோய தத்திதயம்*
*தவ்வம் கு சத்தபங்கம் அதேஸவஸேண*
*சம்பவதி*

★ *பஞ்சாஸ்திகாயம் - 25.*

என்று சப்தபங்கியைப் பற்றிக் கூறியுள்ளார். பொருண்மை பல இயல்புகளையுடையதென்றும், விளக்கும் முறையால் அது ஏழு முறைகளில் சொல்லப்படுமென்றும் அவை இருக்கலாம், அல்லதாகலாம், இருந்து மில்லாததாகலாம், விளக்க முடியாதமையலாம், உண்டென விளக்க முடியாதிருக்கலாம் எனும் அம் முறைகளில் தம் கருதுகோள்களைச் சொல்லலாம் என்ற கருத்துமுறை, பல்வேறு கருத்துக்களையும், பொறுமையுடன் ஏற்கவும், இணக்கம் காணவும், பிற கருத்துக்களை மதிக்கவும் வழி செய்கிறது. இக்கருத்து முறை பிற சமயவாதிகள் ஏற்காமல், குழப்பமும் தெளிவின்மையும் ஏற்படுத்துமெனக் கண்டித்துள்ளனர். எனினும் ஆழ்ந்து சிந்தித்தால் அனேகாந்த வாதம், கொல்லாமை (அஹிம்சை) நெறி உலகில் பரவ அடிப்படையாகும் என்பதும், இன்றைய உலகப் பிரச்சினைக்கு தீர்வான மருந்து என்பதும் புரியும். உலகச் சமயங்களில் சமணம் மட்டும் தருக்க நெறி முறையில் தனித்துள்ளது. வைணவம் பிற சமயங்கள் போல ஏகாந்த வாதமுடையதாகும். பொருள் முதல் வாதம், கருத்து வாதம் (Materialism and Idealism) எனும் தத்துவப் பிரிவுகளில் வைணவம் புறநிலைக் கருத்து முதல் வாதம் (Objective Idealism) எனும் பிரிவினைச் சார்ந்ததாகக் கருதலாம். உள்பொருள் (சத்) பற்றிய ஆய்வில் கீழ்நாட்டுச் சிந்தனையாளர்கள் மட்டுமேயன்றி கிரேக்கச் சிந்தனையாளர்களும், டெகார்ட்டே, ஸ்பினாஸோ போன்ற மேனாட்டுச் சிந்தனையாளர்களும் கிட்டத்தட்ட ஒரேவிதமான முடிவுக்கே வந்துள்ளனர் என்பதைக் காண்கிறோம். உலகு, உயிர், இறையாகிய முப்பொருளைப் பற்றியும், அதன் தொடர்புகளைப் பற்றியும் உள்ள கருத்துக்களை எல்லாச் சமயங்களும் தத்துவ ஞானங்களும் தருக்க முறையில் நிறுவ முயன்றுள்ளன.

சார்வாகர்கள், பொருள் முதல்வாதிகள் (Materialists) உள்பொருள் ஒன்றே என்றும், அது சடப்பொருள்தான் என்றும் நிறுவுவர். பொருளின் பண்புநிலைப் பரிணாமமே உயிர் (ஆன்மா) என்றும், இறை (கடவுள்) என்று ஒன்று இல்லை என்றும் இவர்கள் கருதுவர். பவுத்தமும் மாற்றமுடைய பொருளே உள்பொருள் எனக் கருதும். சங்கரரும் உள்பொருள் ஒன்றே என்றும், அஃது இறைமைத் தத்துவமே என்றும் இறைமையே விளக்குதற்கரிய முறையில் (அனிர்வசனீயம்) மாயையால் உயிராகவும், உலகாகவும் தோற்றமுற்றுள்ளது என்று கருதுகிறார்.

சமணத் தத்துவ ஞானிகள், உள்பொருள் ஐந்தென்று கூறுவர். உயிர், பொருள், இடம், இயக்க ஆற்றல் (தருமாஸ்தி காயம்), இயக்க

மறுப்பாற்றல் (அதருமாஸ்திகாயம்) எனக் கூறுபடுத்துவர். அவற்றை, உயிர், பொருள் எனும் இரண்டில் தொகுக்க முடியுமாதலின் சமணம் உள் பொருளாக உயிர், பொருள் என இரண்டையுமே ஏற்கிறது. இறைமைத் தத்துவத்தை ஏற்பதில்லை. உயிரின் கட்டற்ற நிலையே (மோட்ச நிலை) இறைமை என்று கருதுகிறது.

உள்பொருள் உயிர், உலகு (பொருள்) இறை எனும் முப்பொருள்களுக்கும் ஆகும் என்று சைவ சித்தாந்தமும், வைணவ தத்துவமும் நிறுவுகின்றன. பெரும்பாலான சமயங்கள் முப்பொருள் உண்மையை ஏற்கின்றன. அறிவும், இன்பமும், நிலைபேறுடைமை யும் (சத்சித் ஆனந்தம்) இயல்பாகக் கொண்ட உயிர்த் தத்துவம், அறிவற்ற, நிலைபேறற்ற, உருவுடைய பொருளோடு உறவு பூண்டு கட்டுற்றுக் கிடப்பதற்கும் பொருளின் படைப்பாக்கங் கட்கும் இறையே மூலகாரணம் என்றும், இச் சித்தாந்தங்கள் வலியுறுத்திக் கூறுகின்றன. பேராசிரியர் ஹிரியண்ணா, அறிஞர் சி. லட்சுமணன் ஆகியோர் வைணவத் தத்துவத்துக்கு அளிக்கும் விளக்கம் சிந்தனைக் குரியதாகும்.

''இப்பிரபஞ்சத்தின் இயல்பையும், அதன் மூலத்தையும் ஆராய்வது தத்துவ ஞானம். ஆனால், இந்த ஆராய்ச்சியோடு மட்டும் மக்கள் உள்ளம் திருப்திப்படுவதில்லை. வாழ்க்கைக்கு ஒரு குறிக்கோளையும், அந்தக் குறிக்கோளை அடையும் வழியையும் நாடுவதிலேயே மக்கள் உள்ளம் திருப்தி அடைகிறது. அத்தகைய குறிக்கோளையும் அதனை அடையும் வழிகளையும் நல்குவதே சமயம். மக்களது வேண்டுதல்களைப் பூர்த்தி செய்து அவர்களை ஈடேற்ற வல்ல ஒரு முழு முதற் கடவுளைப் பற்றுக் கோடாகக் கொண்டவையே அநேகமாக எல்லாச் சமயங்களும். ஆகவே, சமயங்கள் பெரும்பாலும் கடவுட் கொள்கையாகவே இருந்து வந்திருக்கின்றன. எனவே, தத்துவ ஆராய்ச்சியின் முடிவு வேறு. சமயத்தின் முடிவு வேறு. இவ்வாறு வேறுபட்டிருந்த இரு துறை களையும் ஒன்றுபடுத்தித் தத்துவ ஆராய்ச்சியின் முடிவாகிய மூலப் பொருளும், சமயங்கள் பேசும் முழு முதற்கடவுளும் ஒன்றே எனக் கொள்ள விரும்பினர் சில அறிஞர். அவருள்ளே மிக முன்னணியில் நின்றவரே இராமானுசர் எனப்படுவர். இதுவே இராமானுசரது கொள்கைகள் தோன்றிய வரலாறு என்கிறார் பேராசிரியர் ஹிரியண்ணா. இத்தகைய ஒன்றே சைவ சித்தாந்தம் தோன்றிய வரலாறும் என்பது அவர் கருத்து.'' ★

---

★ இந்திய தத்துவ ஞானம் - கி. லட்சுமணன்

இம் மேற்கோள் மூலம் சமயமும் தத்துவ ஞானமும் இணைந்து வைணவ தத்துவமும், சைவ சித்தாந்தமும் உருவாக்கப் பட்டுள்ளது தெளிவாகிறது.

முப்பொருள் உண்மையை பிரகிருதி (உலகு), ஜீவன் (உயிர்), ஈஸ்வரன் (இறை) என்று வைணவம் குறிப்பிடுவது போலவே, சைவ சித்தாந்தமும் பதி, பசு, பாசம் என்று இறை, உயிர், உலகினைக் குறிப்பிடும். வைணவமும், சைவமும் முப்பொருள் உண்மையை ஏற்பினும் உயிர் உலகுகட்கிடையே உள்ள உறவுகள், உயிருக்கும் இறைமைக்கும் உள்ள தொடர்புகள் குறித்துச் சிற்சில கருத்து முரண்பாடுகள் உள்ளன. தலைமையான முரண்பாடு முழு முதற் பொருளைப் பற்றியதுதான். முழு முதற்பொருள் நிலை பேறா? மாற்றமா? என்ற தத்துவப் பிரச்சினையே அது. நிலைபேற்றின் குறியீடாகிய விஷ்ணு என்னும் காத்தல் கடவுளின் பெயரிலிருந்து வைணவம் என்ற சொல் தோன்றியுள்ளது. மாற்றத்தின் குறியீடாகிய சிவன் எனும் அழித்தற் கடவுளின் பெயரிலிருந்து சைவம் என்ற சொல் தோன்றியுள்ளது. ''பிரபவதி' 4.3.83, தக்க'ச்சதி பதி தூத யோ'' 4.8.84 என்னும் பாணினீய சூத்திரப்படி இகரம் ஐகாரமாகத் திரியும். விஷ்ணு சம்பந்தமானவை வைஷ்ணவம் ஆகும். சிவனோடு தொடர்புடையவை சைவம் ஆகும். இவ்விரு வடமொழிச் சொற்களும், ருக் வேதத்திலேயே காணப்படும் சொற்களாகும். விஷ்ணு, சிவன் (ருத்ரன்) எனும் தெய்வங்களும் ருக்வேதத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. தத்துவ நிலையில் ஒன்றுபட்டாலும், சமய நிலையில் முரண்பட்டுள்ள சைவ, வைணவ பேதங்கட்கு மூல காரணம் யாது என்று ஆராய்தல் வேண்டும். சிவன் செம்மை நிறமுடைய ஆரியக் கடவுள் என்றும் விஷ்ணு (திருமால்) கருநிற முடைய திராவிடக் கடவுள் என்றும், இந்திய நாட்டில் மிகப் பழமையான காலத்தில் ஏற்பட்ட இன உறவுகளில் விளைவாக ஏற்பட்ட இந்த இரு தெய்வங்களும், முதன்மை நிலை பெற்றன, என்றும் இரு முரண் சமயங்களாக மக்கட் குழுவினரால் ஏற்றம் பெற்றன என்றும் சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சமண, பவுத்த மதங்களை எதிர்ப்பதில் இவ்விரு சமயங்களும் ஒன்றுபட முயற் சித்தும், தமக்குள் உட்பூசல்கள் நிகழ்த்தி வந்த வரலாற்றை நமது இலக்கியங்கள் தெளிவாகச் சான்று பகர்கின்றன. முப்பொருள் உண்மையை ஏற்கும் சமயங்களில் சில இறைமைத் தத்துவத்துக்கும் அதிக ஏற்றமும், சில உலகு (பொருள்) தத்துவத்துக்கு ஏற்றம் தந்தும், சில உயிர்த் தத்துவத்துக்கு ஏற்றம் தந்தும் சிறப்பிக்கும், வைணவத்

தத்துவம் முப்பொருளுக்குமே சமநிலையில் ஏற்றம் தந்து சிறப்புறு வதைக் காணலாம்.

வைணவத்தின் மற்றொறு தனிச்சிறப்பு பிரபத்தி மார்க்கம் எனும் சரணாகதித் தத்துவமாகும். இக்கருத்து பிற சமயங்களிலும் இருந்தாலும் கூட வைணவத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ளது. தன்னை முழுமையாக இறைவனிடம் ஒப்படைத்து பற்றற்றுப் பணிபுரியும் உயர்நிலைப் பாங்கே பிரபத்தியாகும். இத் தத்துவமானது தனி மனிதனது தன்னலத்தை மறுத்து, அடக்கம் எனும் நற்பண்பினை மிகுவித்து, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதும் விருப்பு வெறுப்பற்ற மன அமைதியைத் தோற்றுவிக்கிறது. இந்த அடக்கம் வைணவ ஆசாரியர்கள் ஆழ்வார்களது வாழ்விலும், பாசுரங்களிலும் அருளிச் செயல்களிலும் சிறப்பாகக் காணப்படுகிறது.

வைணவம் இன்றும் இந்திய நாட்டில் நடைமுறைச் சமயமாக பெரும்பாலோரால் பின்பற்றக் கூடியதாக உள்ளது. தற்காலத்தில் ''ஹரே கிருஷ்ணா'' இயக்கம் முதலிய சில இயக்கங்கள் பரவி அமெரிக்கா முதலிய மேனாடுகளிலும் பின்பற்றப்பட்டு வரும் சமயமாகப் பரவி வருகிறது. வைணவத்தில் அத்வைதம், விஸிஷ் டாத்வைதம், துவைதம் எனும் மூன்று தத்துவ நெறிகட்கும் இடமுண்டு. எனினும் இராமானுசரின் விஸிஷ்டாத்துவிதமும் மத்துவரின் துவைதமும், நிம்பார்க்கரின் துவைதாத்வைதம், வல்ல பாச்சாரியரின் சுத்தாத்வைதம், சைதன்யரின் அசிந்தய பேதாபேதம் எனும் தத்துவ நெறிகளே வைணவ நெறிகளாகக் கொள்ளப்படுகிறது. சங்கரர் வைணவமும், சைவமாகிய இரு நெறிகளையும் சனாதன மதத்தின் இரு கண்களெனக் கருதிய பொது நெறியாளராகக் கருதப்படுகிறார்.

இந்தியத் தத்துவ ஞானத்தில் வைணவம் மிகச் சிறந்த நிலையில் வாழ்நெறித் தத்துவமாகவும், வேத காலத்திலிருந்து இன்றுவரை தொடர்ந்து பேராற்றலுடன் இயங்கும் சமயமாகவும் இயங்கிச் சிறப்புற்றுள்ளது.

வைணவத் தத்துவத்தை விளக்கும் மூல நூல்கள் வேத உபநிடதங்களும், ஆழ்வார்களின் அருளிச் செயல்களும், ஆச்சாரியார்களின் வியாக்கியானங்களும், பிரம்ம சூத்திரம், கீதை, அஷ்டாதசரஹஸ்யங்கள் முதலிய தத்துவ நூல்களும் ஆகும். இவைகளில் ஓரளவாவது பயிற்சியில்லாதவர் வைணவ தத்து

வத்தைப் புரிந்து கொள்ள இயலாது. மேலும் சாங்கியம், யோகம், வேதாந்தம் முதலிய ஆறு தரிசனங்களிலும் சமண பவுத்தக் கோட்பாடு களையும் உணர்த்திருப்பது இன்றியமையாதது. நமது சான்றோர்கள் தம் மதம் நிறுவ முயன்றதோடு பிற மதம் மறுக்க வேண்டி பிற மதத் தத்துவங்களையும் நன்கறிந்திருந்தனர். பிற மதக் கோட்பாடுகளை எடுத்துக் காட்டி தருக்க நெறி மூலம் மறுத்துரைத்துப் பின் தம் கோட்பாடுகளை விளக்க முயன்றனர். இந்தியத் தத்துவம் மரபு வழிப்பட்ட உரையளவை மட்டுமேயன்றி வலிவான தருக்க அடிப்படையிலும் நிறுவப்பட்டதாகும். அந்த முறையில் வைணவத் தத்துவமும் சிறந்த சிந்தனைச் செல்வர்கள் ஆயந்து கண்ட முடிவினை உடையதாகும். அதன் அடிப்படையிலேயே வைணவ சமயமும் மறுமலர்ச்சியுற்றிருந்தது.

பிற சமயங்கள் துறவினைப் பெரிதும் பாராட்டி இல்ல றத்தைச் சிறப்பித்துச் சில இடங்களில் பேசினும், துறவு நெறியே உயர் நெறி எனக் கொண்டன. வைணவம் இல்லறத்தையும் பாராட்டி, இரண்டுக்கும் சமநிலையே தந்துள்ளது. இத்தகு தனிச் சிறப்பு வைணவத் தத்துவத்தில் பார்க்க முடிகிறது. இறைவனோடு இறைவியையும் இணைத்துப் பார்த்து துறவு நெறி போன்றே இல்லற நெறியும் மாண்புடையதே என்று வற்புறுத்திக் கூறுகிறது.

இத்தகு தனிச் சிறப்புக்களுடைய வைணவத் தத்துவமும், சமயமும் தருக்க நெறியால் நிறுவப்பட்ட வாழ்வாங்கு வாழ வழிகாட்டும் நெறியாகும் என்பது தெளிவு.

## 1.ஆ. வைணவத் தத்துவம்

வைணவம் முப்பொருள் உண்மையை ஏற்றுக்கொண்டு முப்பொருளின் தன்மைகளும் தொடர்புகளும் விளக்கமாக எடுத்து ரைக்கும் பாங்கு தனிச் சிறப்புடையதாகும். ஒவ்வொரு தத்துவ தரிசனமும் தனக்கென சில சொல்லாட்சிகளும், கலைச் சொற்களும் (Technic words) கொண்டுள்ளன. தம் கருத்தை விளக்கும் பாங்கிலும் தனித் தன்மையைக் காணலாம். அவ்விதம் வைணவத் தத்துவத்தை மூன்று மந்திரங்களில் அடக்கிக் கூறுவர். சமணம் ''சம்யக்ஞானம், சம்யத் தரிசனம், சம்யத் சாரித்திரம்'' என்ற நல்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் எனும் மும்மணிகளைத் தன் தத்துவத்தின் அடிப்படைத் தாரகமாகக் கொண்டிலங்குகிறது. பவுத்தமும், புத்தம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி, தம்மம் சரணம் கச்சாமி என்று மும்மணிகளை முழங்குகிறது. அவை அச்சமய வாழ்நெறிப்

போக்கையும் தத்துவக் குறியீட்டை விளக்குவதாகவும் அமைகிறது. அது போலவே வைணவம் ரஹஸ்யத்திரயம் (மும்மறைகள்) எனும் மூன்று மறைபொருள் கருத்துக்களை சிறப்பித்துப் பாராட்டுகிறது.

*"ஓம் நமோ நாராயணா"* என்பது திருமந்திரம்.

*"ஸ்ரீமந் நாராயண சரணென சரணம் ப்ரபத்யே*
*ஸ்ரீமதே நாராயணா நம:"* என்பது துவயம்.

*"ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் ஸரணம் வ்ரஜ*
*அஹம் த்வா சர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமா சுச:"*

என்பது சரம சுலோகம்.

இம்மூன்று மந்திரங்களை விளக்கும் முறையிலேயே பிள்ளை லோகாச்சாரியார் தம் அஷ்டாதசரகஸ்யங்கள் எனும் பதினெட்டு மறைநூல்களில் வைணவத் தத்துவத்தை எளிய முறையில் அரிய நடையில் விளக்கியிருக்கிறார். திருமந்திரம் எட்டெழுத்தினுடைய மூன்று சொற்களைக் கொண்டது. முதலில் வரும் 'பிரணவம் ஓம்' என்ற சொல் அகர உகர மகரங்களின் கூட்டாகும். 'ஓம்' என்ற சொற் பொருளை உபநிடதங்கள் பல விளக்க உரைகள் மூலம் வெளியிட்டுள்ளார்கள். வைணவ ஆச்சாரியார்களும் விளக்கி யுள்ளனர். இது இறைமைத் தத்துவத்தின் குறியீடாகக் கொள்ள வேண்டும். அகரம் இறைவனைக் குறிக்கும். மகரம் வடமொழி நெடுங்கணக்கில் இருபத்தைந்தாவது எழுத்தாதலின் சாங்கியத் தத்துவத்திலிருந்து பெற்ற இருபத்தைந்தாவது தத்துவமான ஆன்மா என்றும் பிள்ளை லோகாச்சாரியார்★ கூறுவார். 'நமோ' என்ற சொல், ந,ம: என்ற இரு வடமொழி எழுத்துக்களாம். நகரம் இம்மைப் பொருளை உணர்த்தும். ம: என்ற எழுத்து எனக்கு என்ற பொருள் தரும். இரண்டும் கூடி, "எனக்கன்று" எனப் பொருள் தரும் என்றும், அதாவது எனக்கென ஒன்றும் செயவில்லை எல்லாம் இறையருளே என்பது குறிப்பாகும் என்றும் ஆசாரியார் விளக்கம் தருவார். நம: என்ற சொல் வணக்கம் என்ற பொருளைத் தரும் என்றும் ஆச்சாரியார் சிறப்புப் பொருள் கொள்வதும் பொருந்துமாறு அமைகிறது.

மூன்றாவது சொல்லான 'நாராயணா' என்பது

---

★ யாத்ருச்சிகப்படி திருமந்திரப் பிரகரணம்.

நாராயணனுக்கு என்ற பொருள் தரும் நார அயன எனப் பிரித்து பத்து விதமாகப் பொருள் கூறுவதுண்டு. நாரம் என்பது தண்ணீர் என்றும் அதில் உறைபவன் நாராயணன் என்றும், நரன் (மனிதன்) சம்பந்தப் பட்டவன். நாராயணன் என்றும், புருசோத்தமன் என்ற பொருளில் அமைவது என்றும், இவ்விதம் பலவாறாகக் கூறுவர். இச்சொல் வேத காலத்திலேயே பயன்படுத்தி வந்த சொல்லுமாகும். ஸ்ரீ பிள்ளை லோகாச்சாரியர் தம் நூல்களில் அளித்துள்ள விளக்க உரையே சிறப்புடையதாகக் காணப்படுகிறது. ''நாராயணன் என்றது நாரங் களுக்கயனம் என்றபடி நாரங்களாவன. நசியாத வஸ்துக்களினுடைய திரள் அவையாவன திவ்யாத்ம ஸ்வரூபத்தை யொழிந்த சர்வஸ்துக் களும் அயனம் என்றது இவற்றுக் காசிரயம் என்றபடி''★ என்று சொல்கிறார். அழியாத உள்பொருள்களான உலகு, உயிர் இரண்டை யும் தன் பால் பற்றுக் கோடாகவும் கொண்டிலங்குமாறு அமைந்த பரம்பொருள் என்பது கருத்தாகும்.

இரண்டாவதான, ''ஸ்ரீ மந்நாராயண சரணௌ ஸரணம்ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணாயநம'' என்ற இரு சொற்றொடர் அமைந்துள்ளதால் இம் மந்திரத்தை 'த்வயம்' (இரண்டு) என்று அழைப்பர். முதல் சொற்றொடர் மூன்று சொற்களும், இரண்டாவது சொற்றொடர் மூன்று சொற்களுமாக அமைந்துள்ளன. இதில் முதற் சொல் ''ஸ்ரீமந்'' என்பது திருமகளின் கருணையையும், இறைவ னோடிணைந்திருக்கும் தன்மையையும் காட்டுகிறது. இறையருளை யும், இறைவனது எழிலுருவினையும் குறிக்கிறது இச்சொல். ஸ்ரீ என்ற சொல் ஸ்ரீயதே, ஸ்ரயதே என்ற வினையடியாகப் பிறப்பது. இச்சொல் பற்றுக் கோடாக இருப்பது என்ற பொருள் தரும். நாராயண என்ற சொல் இறைவனது அருள், இறைமை, எளிமை, நல்லொழுக்கங் களைக் குறிக்கும். சரணம் என்பது திருவடிகள், இறைவனது உருவ வெளிப்பாட்டைக் குறிக்கும். ஸரணம் என்பது உபாயம். உபாயம் என்பது விரும்புதலைப் பெறவும் வெறுப்பன தவிர்க்கவும் செய்வதாகும். ப்ரபத்யே என்பது பற்றுகிறேன் என்று பொருள் தரும்.

''திருவுடன் கூடிய இறைவன் திருத்தாளைச் சரணம் அடைகிறேன்'' என்பதே துவயத்தின் சொற்பொருள். வைணவ சமயத்தின் முதன்மைக் கோட்பாடான பிரபத்தியை இது விளக்குகிறது.

மூன்றாவது மந்திரமானது பகவத் கீதையில் கண்ணன்

---

★ யாத்ருச்சிகப்படி திருமந்திரப் பிரகரணம்.

அருச்சுனனுக்கு அருளிச் செய்த அடைக்கலச் செய்தியாகும். இதனைச் சரம சுலோகம் என்பர். சரமம் என்பது இறுதி என்ற பொருள் தரும். இச்சுலோகத்துக்கு சரமம் என்று ஏன் பெயர் வந்தது என்பதைப் பிள்ளை லோகாச்சாரியர் அருமையாக விளக்கம் தருகிறார்.

"பிரதம சுலோகம் என்று கீழ் ஒன்றுண்டாய், அத்தைப் பற்ற சரம சுலோகம் என்கிறதோ என்னில் அதன்று சரமார்த்தத்தைச் சொல்லுகையாலே சரமம் என்னில், சக்றாதே வேதயாதிகளிலும் சரம ஸ்லோகத்துவப்ரசங்கமுண்டாம். இங்கு கர்மாதி உபாயங்களைச் சொல்லி அனந்தரமித்தைச் சொல்லுகையாலே, இதுக்கனிவருகு ஓர் உபாயமில்லாதபடியான உபாய விசேஷத்தைச் சொல்லுகையாலே இத்தை சரம சுலோகமென்று ஆச்சார்யர்கள் சொல்லுவார்கள்."★

சரம சுலோகம் என்ற பெயர்க் காரணம் அச்சுலோகம் (செய்யுள்) இருக்கும் இடத்தைக் குறித்ததன்று என்றும், அதன் பொருளைக் கொண்டுமன்று. அது கூறும் நெறி கருமம், பக்தி, யோகம் முதலிய இறைவனை அடையும் நெறிகளில் இது இறுதியானதும், சிறப்புமுடையதென்பதாலே இதனைச் சரம சுலோகம் என்று முன்னைய ஆச்சாரியர்கள் வழங்கினர் என்று தெரிகிறது. ஸர்வதர்மான் பரத்யஜ்ய = எல்லா அறங்களையும் விட்டு; மாமேகம் = என்னேயே சரணம், வ்ரஜ = அடைக்கலம் புகுக, அஹம் = நான், த்வா = உன்னை, சர்வ பாபேப்ய: = எல்லாத் துன்பங்களிலிருந்தும், மோக்ஷயிஷ்யாமி -= விடுவிக்கிறேன். மாசுச = கவலைப்படாதே என்றும் இக்கீதைச் செய்யுள் வைணவ மூலமந்திரங்களில் ஒன்றாக மதிக்கப்படுகிறது. வைணவத் தத்துவத்தில் பிரபத்தி மார்க்கம் எல்லோரும் பின்பற்றத் தகுந்த எளியதும், பாதுகாப்பானதுமான நெறி. ஆதலினால் அதனை இறைவனே அருளிச் செய்திருப்பதாலும் அறநெறியின் சாரத்தைச் சொல்லும் இச்சுலோகம் மந்திரமாகவே மதிக்கப்படுகிறது. வைணவ ஆச்சாரியார்கள் இம்மந்திரத்துக்கு அருமையான சுவை மிகுந்த விளக்கங்கள் தந்திருக்கின்றனர். சிறப்பாக பிள்ளை லோகாச்சாரியார் தமது தத்துவ நூல்களில் சுருக்கமாக சில இடத்தும், விரிவாகச் சில இடத்தும், தனி நூலாகவும், இச்சரம சுலோகத்துக்கு அருளிய வியாக்கியானங்கள் கற்றறிந்தின்புறத்தக்கன. வைணவ தத்துவ முப்பொருளைப் பற்றியும், ஆச்சாரியார்கள் அரிய சிந்தனைகள்

★ தனிசரமம், பிள்ளை லோகாச்சாரியார்.

மூலம் விளக்கங்கள் தந்துள்ளனர். முப்பொருளாவன: சித் (உயிர்), அசித் (பொருள்), ஈஸ்வரன் (இறை) என்று மூன்றுமாம். சித் என்பது ஆன்மாவைக் (உயிர்) குறிக்கும் உடலினின்றும் வேறுபட்டதால், பொறி, புலன்களுக்கு அப்பாற்பட்ட தனித் தத்துவமாகவும் பொருண்மை (உரு) அற்றதாய், இன்ப வடிவினதாகி என்றும் அழியாத நித்தியமாய், அணுவாய், உணர அரியதாக, சிந்தனைக் கெட்டாததாக, உறுப்புகள் அற்றதாய், மாற்றமில்லாததாய், அறிவுக் குறைவிடமாய், இறைவனுக்குடமையாக ஆன்மா இருக்கும்.★ உடல், மனம் முதலியன என்னுடையது என்று தோன்றுவதாலும், ஆன்மா 'நான்' என்ற உணர்வோடு கூடியிருத்தலாலும், எப்போதும் 'நான்' என்ற உணர்வு இருத்தலாலும் ஆன்மா உடலினின்றும் வேறுபட்டதாகும். தன்னைத் தானே தோற்றுவித்தலால், உருவற்றதாலும் அஜடம் எனப்படும் இன்பத்தையே வேட்டு, இன்பத்தை உணர்வதில் நிறைவெய்துவதால், ஆனந்தமயன் என்று சொல்லப்படும்.

நித்தியம் என்பது எப்போதும் இருப்பது. பிறப்பிறப்புகள் உடலுக்கேயன்றி உயிர்க்கன்று. ஆதலில் உயிர் அழிவற்றதாகும். குடம், விளக்கு முதலிய பொருள்கள் போல புலன்களால் அறியொனாததாக இருப்பதால் அவ்யியத்தம் (வெளிப்படாதது) எனப்படும். மரம் முதலிய பொருட்களுக்கு இலை, பூ, காய் முதலிய உறுப்புக்கள் இருப்பதுபோல உயிர்க்கு உறுப்புகள் இன்மையின் நிரவயவம் எனப்படும். விதை முளையாய், செடியாய், மரமாய், விறகாய் மாறுபாடுறுவது போலன்றி என்றும் ஒரே படித்தாய் இருப்பதால் உயிர் மாறுபாடற்றது (நீர்விகாரம்) எனப்படும். இப்படி இருப்பதால் வாள், தீ, நீர், காற்று, வெயில் முதலானவற்றால் துண்டுபடுத்தல், எதிர்த்தல், நனைத்தல், உலர்த்தல், காய்தல் முதலிய செய்கைக்கு இடனின்றி ஒரே படித்தாய் இருக்கும்.

ஆன்மாவின் இவ்விலக்கணங்கள் சமணம் முதலிய பிற மதங்களும் ஏற்கும் கருத்தே. எனினும், வைணவம், அத்வைதம் முதலிய வேத மதங்களில் ஆன்மா அணுரூபமாய் இருக்கும் என்ற கருத்து காணப்படுகிறது. இருதய மத்தியில் அணுவாய் இருக்கும் என்றும், அங்குஷ்ட பிரமானம் (பெருவிரலளவு) என்றும், சில உபநிடதங்கள் கூறுகின்றன. எப்படி விளக்குச் சுடர் ஓரளவினதாக இருந்து அதன் ஒளி அறை முழுவதும் பரவி நிற்குமோ அதுபோலவே

★ *தத்துவத்திரயம், பிள்ளை லோகாச்சாரியார்.*

ஆன்மா இதயத்தில் அணுவாய் இருந்து உடல் முழுவதும் தன்னாற்றலால், அறிவு பெற்று உடல் முழுவதும் பரவியிருக்கும் என்பர்.

சமணரின் உடல் அளவினதாக உயிர் இருக்கும் என்ற கருத்தினை வைணவம் ஏற்பதில்லை. நீர் தான் தாங்கும் பாத்திரத்தின் அளவாகப் பரவி நிற்பதுபோல உடலளவாக உயிர் பரவியிருக்கும் என்றும், எறும்பாயினும், யானையாயினும் ஒரே உயிர்தான் உடம்புக்கேற்ப பரவி நிற்கிறது என்றும் சமணத் தத்துவம் கூறும். வைணவம் இக்கருத்தை ஏற்காமல் உபநிடதக் கருத்தான உயிர் அணுவாக இருக்கும் கருத்தினையே ஏற்கிறது.

உயிர் ஞான (அறிவு) மயமாக இருக்கும் என்பதால் இன்ப துன்பங்களை அனுபவிப்பதும் வினையாற்றலும் அறிவின் இயல்பாகக் கொள்வர். இத்தகு இயல்புகளையுடைய ஆத்மாக்களை மூன்று வகையாகப் பிரிப்பர். பத்தர், முத்தர், நித்தியர் என உயிர்களை மூன்று வகைப்படுத்திக் கூறுவர். 'பத்தர்' என்பது உடலோடு கூடி இவ்வுலகில் பிறப்பெடுத்து உழலுகின்ற உயிர்களைக் குறிக்கும். 'முத்தர்' பிறவி நீங்கிப் பேரின்பத்தோடிணைந்தவர்களைக் குறிக்கும். 'நித்தர்' பிறவி எய்தாத என்றும் தூய ஆன்மா வடிவானவர்களைக் குறிக்கும். ஆன்மா அசித்தாகிய உலகோடு தொடர்புற்று அறியாமையும் வினையாற்றலும், வினைப் பயன்துய்த்தலும் உண்டாகி பிறவிச் சூழலில் அகப்பட்டுக் கொள்கிறது. நீர் நெருப்பின் தொடர்பால் சூடாக மாறுகிறது போல ஆன்மா உலகு (அசித்) தொடர்பால் பந்தமுறுகிறது. அத்தொடர்பு கழிந்ததும் அறியாமை அழிந்து தூய நன்னிலையை (மோட்சம்) அடைகிறது. ''ஆத்மபேதமில்லை. ஏகாத்மாவே உள்ளது'' என்ற மாயாவாதிகள் (அத்வைதிகளின்) கொள்கையை வைணவம் ஏற்பதில்லை. இவ்விடத்தில் பிள்ளை லோகாசிரியரின் விளக்கம் சிந்தனைக்குரியது.

''சிலர் ஆத்மபேதமில்லை ஏகாத்மாவே உள்ளது'' என்றார்கள். அந்த பக்ஷத்தில் ஒருவன் சுகிக்கிற காலத்திலே வேறேயொருவன் துக்கிக்கக் கூடாது. அது தேக பேதத்தால் என்னில் ஸௌபரி சரீரத்திலும் அது காணவேணும். ஒருவன் சம்சரிக்கையும் ஒருவன் முக்தன் ஆகையும், ஒருவன் சிஷ்யனாகயும், ஒருவன் ஆச்சார்யனாகையும் கூடாது. விஷம சிருஷ்டியும் கூடாது. ஆத்ம பேதம் சொல்லுகிற சுருதியோடும் விரோதிக்கும் சுருதி ஔபாகிக பேதத்தைச் சொல்லுகிறதென்ன ஒண்ணாது. மோக்ஷ தசையிலும்

பேத முண்டாகையாலே. அப்போது தேவ மனுஷ்யாதி பேதமும் காமக்ரோதாதி பேதமும் கழிந்து ஆத்மாக்கள் ஸ்வரூபம் அத்யந்தம் சமமாய் ஒருபடியாலும் பேதம் சொல்ல வொண்ணாதபடி இருந்ததே யாகிலும் பரிமாணமும், ஊடையும், ஆகாரமும் ஒத்திருக்கிற பொற்குடங்கள், ரத்னங்கள், வ்ரீகிகள், துடக்கமானவற்றுக்கு பேதமுண்டாகிறாப் போலே ஸ்வரூபதேமும் சித்தம் ஆகையால் ஆத்ம பேதம் கொள்ள வேணும்.★ ஒருவன் துன்புறும்போதும் இன்புறும்போதும் மற்றவனும் துன்புறலோ இன்புறலோ அல்லாத தாலும், ஒருவன் பிறவியில் உழல மற்றொருவன் மோட்சமடைத லாலும், குரு சிஷ்யன் முதலிய பல முரண்பாடுகளுடன் மனிதர்கள் வாழ்வதாலும், கல்வி, ஆற்றல் முதலிய வேறுபாடுகளாலும், பொற்குடங்கள் ஒன்யாயினும் அதனுட் பெய்த மணியாலும், நெல்லாலும் வேறுபாடுறுவது போல ஆத்மாக்களும் வேறுபாடுறும் என்பது வைணவ தத்துவக் கருத்தாகும். சங்கரரின் அத்வைத தத்துவத்தில் கூறும் ஏகான்ம வாதம் வைணவத்திற்கு உடன் பாடன்று. சைவ சித்தாந்தமும், சமணமும் கூட ஆன்மாவில் பேதம் உண்டு என்றும் கொள்கை உடையனவேயாகும்.

பிள்ளை லோகாச்சாரியார் தமது அர்த்த பஞ்சகம் எனும் நூலில் ஆன்மாக்களை நித்தியர், முத்தர், பத்தர், கேவலர், முமுட்சு என்று ஐந்து விதமாகப் பகுத்துள்ளார்.❏ முமுட்சு என்பது மோட்சத்தை விரும்புபவர் (விடுதலையை விரும்புபவன்) என்று பொருள். கேவலர் என்பது தனிப்பட்டவர் என்று பொருள்தரும். உடல் இழிபென உணர்ந்து ஆன்மாவின் ஆனந்தத்தில் ஈடுபட்டுப் பின்னர் சம்சார சம்பந்தமும் பகவத் பிராப்தியும் அற்று தனித்தன்மை யுடன் திரிபவர் ஆகும். முமுட்சு, கேவலர் எனும்பிரிவுகள் பத்தர் எனும் பிரிவிலேயே அடக்கலாம். பத்தருக்கும் முத்தருக்கும் இடைப்பட்ட நிலையினையே இப்பிரிவுகள் குறிக்கின்றன.

சித் (உயிர்)தாகிய ஆன்மா அசித்(உலகு)தின் தொடர்பைத் தவிர்த்து ஈஸ்வரன் (கடவுள்) நிலையுடன் இரண்டறக் கலப்பதே வாழ்வின் லட்சியம் என்று வைணவம் கூறுகிறது. சித் என்பது உணர்வு என்ற பொருள்படும். ஆன்மாவின் முக்கிய இலக்கணம் உணர்வாதலின் சித் எனப்பட்டது. இதற்கு மறுதலையானது அசித் ஆகும். உணர்வற்றது என்று பொருள்படும். அது உலகு என்றும்

---

★ *தத்வத்ரயம் பிள்ளை லோகாச்சாரியார்.*

❏ *அர்த்த பஞ்சகம் - ஜீவஸ்வரூப நிருபண பிரகரணம்.*

மாயை என்றும், பொருள் (Matter) என்றும் கூறப்படும். சமணத் தத்துவத்தில் புத்கலம் என்று கூறப்படுவதும் இதுவே. நம்முன் விரிந்து பரந்து கிடக்கும் பிரபஞ்சமே அசித் ஆகும். அசித் என்பதை சைவ சித்தாந்தம் பாசம் என்று வழங்கும், சித் என்பதை பசு என்ற சொல்லால் சைவம் குறிப்பிடும். சொல் வேறுபடினும் பொருள் ஒன்றே. அசித் உணர்வு (அறிவு) அற்றதாய், மாற்றங்களை யுடையதாய் இருக்கும். இது சுத்த சத்துவம் என்றும் மிசிரசத்துவம் என்றும் சத்துவ சூனியம் என்றும் மூன்று வகைப்படும்.★ சுத்த சத்துவம் என்பது ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் கலவாத தூய சத்துவ குணமுடையதாய், அறிவின்பங்கள் உண்டாக்குவதாய், வினைகளின்றி இறைவன் இச்சையாலே தோற்றக் கடவதாய் ஒளியுருவுடன் அமைந்த மூலப் பிரகிருதி தத்துவமாகும். இதனைச் சிலர் ஜடம் என்பர். ஆன்மாவினின்றும் வேறுபடுவதற்குக் காரணம் இது உணர்வு (ஞானம்) இன்மையாலும் நான் என்று தோன்றாமை யாலும் உடல்களாகப் (புல், புள், விலங்கு, மனிதர்களாக) பரிண மித்தலாலும், புலன்களோடு தொடர்பின்றி தானே தோற்றுகை யாலும், ஒளி, தொடுகை முதலியவை உண்டாக்குதலாலும் வேறு பட்டதாகும். மிசிரசத்துவமானது சத்வ, ரஜஸ், தமஸ் எனும் சாங்கியர் கூறும் முக்குண தத்துவத்துடன் கூடி, உயிர்களின் அறிவின்பங்களை மறைப்பதாக, மயக்க அறிவு தருவதாய், நித்தியமாக இருந்து, இறைவனுக்கு விளையாட்டுக் கருவியாக அமைந்து, இடவேறு பாட்டாலும், கால வேறுபாட்டாலும் ஒப்புமையோடு ஒப்புமை யின்றியும் அமைந்த மாற்றங்களை உண்டாக்கக் கடவதான பிரகிருதி தத்துவம் ஆகும். பிரகிருதி, அவித்யை, மாயை என்று பெயரிட்டழைப்பர்.

பிரகிருதி என்பது மாற்றங்களை உருவாக்குவதால் ஏற்பட்ட பெயர். 'முன்பே செய்யப்பட்டது' என்ற பொருள் தரும். அவித்யை என்பது அறிவுக்கு முரண்பட்டது என்ற தன்மையால் வந்த பெயர். மாயை என்பது விசித்திரமான சிருஷ்டி (படைப்பு) உண்டு பண்ணுகையால் பெற்ற பெயர். மாயை என்ற சொல் அத்வைதத்தில் சிறப்பாகப் பேசப்படும் தத்துவமாகும். மாயை உள்பொருளா? இல்பொருளா? என்ற தத்துவ விசாரம் உண்டு. மாயையை உள்பொருள் என்றோ, இல்பொருள் என்றோ தெளிவாக விளக்க முடியாது என்பது அத்வைதிகளின் கொள்கை. அனிர்வசனீயம் என்ற சொல்லால் இதனைக் குறிப்பிடுவர். இச்சொல் சியாத் வாத (சமண)

---

★ தத்துவத்திரயம் - அசித் பிரகரணம்.

தரிசனத்தில் வரும். ஸ்யாத் அவ்யக்தம் என்ற கருத்து நிலைக்கு ஒப்ப அமைந்துள்ளது. மாயை விவயகாரி நிலையில் உள்பொருளாகவும் பாரமார்த்திக நிலையில் இல் பொருளாகவும் கருதப்படும் என்பது அத்துவித தத்துவஞானிகளின் கருத்தாகும். ஆனால், வைணவம் மாயையை உள்பொருளாகவே கருதுகின்றது. மாயை எனப்படும் இப்பிரகிருதி சாங்கியர் கூறும் பிரகிருதியேயாகும். இப்பிரகிருதியை இருபத்து நாலு தத்துவமாக விளக்குவர் சாங்கியர். அதனைப் பிற அகச் சமயச் சிந்தனையாளர்களும் ஏற்றுள்ளனர். சமண, பவுத்தர்கள் மட்டும் முரண் கருத்துடையவராவர். பிரகிருதியிலிருந்து சத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்கள் உருவாகின்றன.

| | | |
|---|---|---|
| சத்துவம் | - | அறிவும் இன்பினையும் தருவது. |
| ரஜஸ் | - | விருப்பு, வேட்கை, வினையாற்றல்களை உருவாக்குவது. |
| தமஸ் | - | மயக்க அறிவினையும், சோம்பரையும் துயில் முதலியனவும் தரும்பான்மையது. |

இம் முக்குணமும் தம்முட் கலப்பதால் பல்வேறு குணபேதங்கள் சிருஷ்டியில் உருவாகிறது. இதிலிருந்து நான் எனும் அஹங்காரத் தத்துவமும், ஐம்பொறி, ஐம்புலன், ஐம்பெரும் பூதங்கள் ஆகிய தத்துவங்கள் விரிகின்றன. இச்சாங்கிய நூற்கொள்கையையே வேதப் பிரமாணமுடைய வைணவம், சைவம் முதலிய சமயங்கள் ஏற்றுக் கொண்டுள்ளன.

மூலப் பொருளான பிரகிருதி ஐந்துபெரும் பூதங்களாக அமைந்துள்ளன. நீர், நெருப்பு, காற்று, மண், விண் என்னும் ஐம்பூதச் சேர்க்கையே உலகமாகும். இவற்றின் கலப்பாலேயே உடல்கள் தோன்றுகின்றன. பிரபஞ்சமும், அதன் சிருஷ்டி விசித்திரங்களும் நிகழ்கின்றன. விண் (ஆகாயம்) ஒரு பூதமன்று. அது இடம் தரும் ஒரு தத்துவம் என்றும் அதற்குப் பண்புகள் இல்லை என்றும் சமண, பவுத்த தத்துவங்கள் கூறும். ஆகாயம் ஒளிப்பண்பினது என்பது வைணவம் உள்ளிட்ட வேதநூற் கொள்கையாகும். வானொலி கண்ட விஞ்ஞானச் சிந்தனையாளர்களின் தத்துவமும் இதற்கிசைய உள்ளதாகச் சிலர் கருதுவர். ஒளி புத்கலத்தின் (பொருளின்) பண்பேயன்றி ஆகாயத்தின் பண்பல்ல என்று சமணம் விளக்கும். இன்றைய விஞ்ஞானம் ஐம்பூதக் கொள்கையை ஏற்காது. நீரும், நெருப்பும் தனி மூலங்கள் அல்ல என்றும், அணுக்களே அடிப்படைப் பொருள் என்றும், அவை நூற்றுக்கும் மேற்பட்ட தனி மூலகங்கள் (Molecules)

ஆக அமைந்துள்ளன என்றும் இவற்றின் கலப்பே பிரபஞ்ச சிருஷ்டி என்றும் விளக்குகிறது. அணுக்களால் உருவான பிரகிருதியை வைணவம் ஐந்து பூதச் சேர்க்கையாகக் கருதுகிறது. இந்த அசித் சிருஷ்டியாக பரிணமிக்க நிமித்த காரணமாக அமைவது ஈஸ்வரத் தத்துவமாகும். சிருஷ்டியைப் பற்றி பிள்ளை லோகாச்சாரியார் கூறுகிற கருத்து சிந்தனைக்குரியதாகும்.

பூதங்கள் ஆப்யாயங்களித்தவை இவை கூடினாலல்லாது கார்ய கரமல்லாமையாலே, மண்ணையும் மணலையும், நீரையும் சேர்த்து ஒரு திரவியமாக்கி, சுவரிடுவாரைப் போலே, ஈஸ்வரன் இவற்றையெல்லாம் தன்னிலே சேர்த்து ஒரு திரவியமாக்கி, ஓரண்டம் ஆக்கி அதுக்குள் சதுர்முகனை சிருஷ்டித்தருளும் என்று மூலப் பிரகிருதியான அசித் உலகமாக படைக்கப்படுவதற்குக் காரணனு மாக ஈஸ்வரனைக் குறிப்பிட்டுள்ளார். சைவமும் இதே கருத்தையே கொண்டுள்ளது.

சத்துவ சூனியம் என்பது காலம் ஆகும். இது பிரகிருதியும் அதன் சம்பந்தப்பட்டவற்றின்றும் பரிணாமங்களுக்குக் காரணமாய் நித்தியமாய் அமையும். காலம் என்பதொன்றில்லை என்ற பிற சமயவாதிகள் கருத்தை மறுத்து, காலம் பிரத்தியட்சத்தாலும், ஆகமத்தாலும் சித்திக் கையாலே உண்டு என்று வைணவத் தத்துவம் கருதுகிறது.

ஈசுவரன் (இறை) - எல்லாத் துயரங்களையும் களையும், பற்றுக்கோடாக நிற்கும் பரம புருஷன் என்றும் எல்லையற்ற ஆற்றலும், நித்தியத்துவமும் ஆனந்த மயனுமானவன் என்றும், சித் அசித்துக்களில் உட்கரந்துறையும் (அந்தர்யாமி) பேரருளாளன் என்றும் கூறப்படும். உட்கரந்துறைபவனானில் குற்றங்கள் பற்றாதோ எனின் உடலில் ஏற்படும் இளமை, முதுமை, நரைதிரைகள் உயிரைப் பற்றாதவாறு போல சித் அசித்துக்களின் குற்றங் குறைகள் ஈசுவரனைப் பற்றாது.

ஈசுவரனுடைய பண்புகள் யாவும் உயிர்கட்கு அருளும் பான்மையதாகும். ஞானம் அஞ்ஞானிகளுக்கும், ஆற்றல் ஆற்ற லிலார்க்கும், பொறுமை குற்றவாளிகளுக்கும், கிருபை துன்புற் றோர்க்கும், வாத்சல்யம் (அருள்) குறைபாடுடையார்க்கும், சீலம் மந்தர்கட்கும், ஆர்ஜவம் வஞ்சகர்கட்கும், சௌஹார்தம் (நன்மனத்த

னாதல்) தீய உள்ளத்தினர்க்கும், மார்தவம் (மென்மை) அஞ்சியவர் கட்கும், சௌலப்யம் (எளிமை) காண விரும்பியவர்கட்கும் அருள்கின்றான்.

ஈசுவரன் இத்தகு கல்யாண (மங்களகரமான) நற்பண்பு களுடன் கூடி இருப்பதால் பிறர் (உயிர்) துன்பங்கள் கண்டு இரங்கி அருள்கிறான். நிலா, தென்றல், சந்தனம், தண்ணீர் போல பிறருக் காகவே இன்புறுத்தும் இயல்பினனாக, தன்னையடைந்தாரைக் காப்பாற்றுபவனாக இறைவன் உள்ளான். மனைவி, மக்களின் குற்றங்களைக் கண்டு கொள்ளாத கணவனைப் போலவும், காமினி (காதலி) யினுடைய அழுக்குக்கும் காமுகனைப் போல அண்டிய பக்தர்களின் குற்றங்களை ஏற்றுக்கொண்டு அருள் புரிவான். இவனே சகல உலகுக்கும் காரணமானவன். பரமாணுக்களே காரணம் எனும் வைசேடிக்கரை மறுத்து உலகுக்கு இறைவனே காரணம் என்று வைணவம் கருதும். சாங்கியர்கள் பிரதானம் (பிரகிருதி)யே காரணம் என்பதையும் மறுப்பர். பிரகிருதி அசேதனம் (உணர்வற்றது) ஆதலால் ஈஸ்வரன் அதிட்டிக்காத போது பரிணமிக்க இயலாததாகையாலும், படைப்பு, அழிப்புக்களைச் செய்ய இயலாததாலும் பிரகிருதி காரணமன்று. சேதனன் (உயிர்) காரணமாகுமோ என்னில் அதுவும் கூடாது. உயிர்கள் கரும (வினை) வயப்பட்டிருந்தலினாலும் தயருறுவதனாலும் காரணமாகாது. ஈஸ்வரனே உலகுக்குக் காரணம் ஆகும்.

உலக சிருஷ்டிக்குப் பயன் யாது என்னில் கேவல லீலை (விளையாட்டு மட்டுமே) என்பது வைணவக் கோட்பாடாகும். கவிச் சக்கரவர்த்தி கம்பனும் கடவுள் வாழ்த்துப் பாவில்,

*"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்*
*நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா*
*அலகிலா விளையாட்டுடையார் அவர்*
*தலைவர் அன்னவர்க்கே சரண்நாங்களே"*

என்று கூறுவதும் இக்கோட்பாட்டைத் தெளிவுறுத்தும். சிலந்தி தன்னிலிருந்து நூலிழைகளை உற்பத்தி செய்தாலும், தான் விகாரமின்றி இருப்பதுபோலவே இறைவனும் உலக சிருஷ்டி செய்தாலும், தான் விகாரமுறமாட்டான் என்றும் கூறுவர்.

சிலர் துயருறவும், சிலர் இன்புறவும், உயிர்களைப்

படைத்தல் இறைவனுக்குக் குறைபாடாகாதா என்னில் வினைக் கீடாக உயிர்கள் இன்ப துன்பங்களை உறுவதாலும், குழந்தைக்கு துன்புறுத்தி மருந்தூட்டும் தாய் போல உயிர்களின் நலம் வேண்டியே செய்யப்படுவதாலும் இறைவன்பால் குறையில்லையாம். இறைவனை சகுணமாகவும், நிர்க்குணமாகவும் வழிபாடு செய்தல் வேதநூற் கோட்பாட்டின்படி அமைந்ததாகும். தூய பிரம்ம சொரூபமாகவும், உருவுடைய கடவுளாகவும் இறைவனை ஐந்து உருவில் காணலாம் என்பது வைணவக் கோட்பாடு. பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்னும் ஐந்து விதமாக இறைநிலை அமையும். பரத்துவம் என்பது நித்திய சூரி கட்குத் துய்க்கும்படியாக எழுந்தருளி, நலமந்தமில்லாதோர் நாடான வைகுந்தத்தில் இருக்கும் இறையாகும். வியூகம் என்பது சிருஷ்டி (படைப்பு), ஸ்திதி (இருப்பு), சம்ஹாரம் (அழிப்பு) ஆகிய முத்தொழில் புரியும் சங்கருஷன, பிரத்தியும்ன, அநிருத்த ரூபமாக நிற்கும் நிலையாகும். பாற்கடலில் பையத் துயின்ற பரமன் இவன். விபவம், தீயோரை அழித்தும், நல்லோரைப் புரந்தும் அறத்தை நிலைநாட்ட கால தேசங்களுக்கேற்ப எடுக்கும் இராமன், கிருஷ்ணன் முதலிய அவதார மூர்த்திகளாகும். அந்தர்யாமித்துவம் என்பது சேதனா சேதனங்களான (சித், அசித் ரூபமான) பிரபஞ்சம் முழுவதும் உட்கரந்துறைந்து உள்ளும் புறமும் பரவி நிற்கும் நிலையாகும். இதயத்துறையும் இறைநிலையுமாம். அர்ச்சாவதாரம் என்பது "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம்" ★ தானாகி, எல்லோரும் வணங்குதற்குரிய எளிமையுடன், கோயில்களிலும் இல்லங்களிலும் விக்கிரக ரூபமாக எழுந்தருளும் நிலை.

இறைவனை இந்த ஐந்து வித மூர்த்தி நிலைகளில் வழிபடுவது வைணவத்தின் தனிச்சிறப்புக்களில் ஒன்றாகும்.

"பூகத ஜலம் போலே அந்தர்யாமித்வம். ஆவரண ஜலம்போலே பரத்வம், பாற்கடல் போலே வியூகம். பெருக்காறு போலே விபவங்கள் அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்" என்று அழகிய உவமை மூலம் பிள்ளை லோகாச்சாரியார் ஸ்ரீ வசன பூஷணத்தில் விளக்குவார். நீர் ஒன்றேயாயினும் வான் கரந்துறையும் நீர் (ஆவி) பரத்துவம் போலாம். கடலில் இருப்பது போன்றது வியூகம். காட்டாற்று வெள்ளம் போன்றது அவதார மூர்த்திகளான விபவங்கள். தேங்கிய

★ முதல் திருவந்தாதி 44

மடுக்கள் போன்றது அர்ச்சாவதாரம். நிலத்தடி நீர் போன்றது அந்தர்யாமித்துவம் என்று கூறுகிறார். எளிதில் அடைந்துவிடாய் தீர்த்துக் கொள்ள உதவுவது தேங்கிய மடுப் போலவே எளிதில் கண்டின்புறற்குரியது அர்ச்சாவதாரமே என்பது குறிப்பு.

அசித்தாகிய உடலினைக் கொண்டு உயிர் (சித்) விளக்க முறுவது போல, உயிருட்கரந்துறைவது இறைவனாகும் என்பதும் வைணவத்தின் சிறப்புக் கொள்கையாகும். உயிர்கள் அனைத்தும் இறைவனது சரீரங்களாம் என்று 'சேஷ சேஷீபாவம்' விளக்குகிறது.

இறைவனை மனித உரிவில் காண்பது எல்லாச் சமயத்துக்கும் உரிய ஒன்று. ஜெபனோன் (Zephonon) என்ற கிரேக்கத் தத்துவ ஞானி, ''விலங்குகள் தம் கடவுளை விலங்குருவமாகவே தரிசிக்கும்'' ★ என்றார். பன்னிரண்டாம் இரவு (Twelth Night) என்ற நாடகத்தில் உயிர்கள் பல்வேறு பிறவிகள் எடுக்கும் என்ற இந்தியக் கருத்தினை கிரேக்க அறிஞர் தத்துவக் கருத்தாக மேற்கோள் காட்டுகிறார் ஷேக்ஸ்பியர். இவ்விரு கருத்துக்களும் இணைவித்த பாங்கில் வைணவம் இறைவனின் அவதாரங்களைப் பற்றிச் சிறப்பித்துப் பேசுகிறது. விஷ்ணு (திருமால்) மீன், ஆமை, பன்றி, சிங்கம் முதலிய விலங்குருவங்களிலும் இறைவனாகத் திகழ்கின்றார். ஒரே கடவுளே விலங்குருவங்களாகப் பிறவி எடுக்கிறார். இப் புராணக் கற்பனைகளிலும் ஓர் அடிப்படைத் தத்துவம் மிளிர்வதைக் காணலாம். எல்லா உயிர்களையும் (புல், விலங்கு கூட) இறைவ னுடைய உடல்களாகக் கொள்ளும் வைணவச் சிறப்புக் கோட் பாட்டை விளக்குவதாகவே இந்த அவதாரங்கள் அமைந்துள்ளன.

சிந்தனைக்கெட்டாத பரம்பொருளான இறைவனைச் சிந்தித்துணர உருவ வழிபாடு தேவை என்பது வேதமரபினர் கருத்தாகும். இறைவனை ஒலி வடிவாகவும், ஒளி வடிவாகவும், இயற்கையின் வடிவாகவும் தரிசித்தனர். அச்சமூட்டும் கடவுளை (பேமுதிர் கடவுள்) அருட் கடவுளாகத் தரிசித்தனர். அவ்விறைவனோடு தொடர்பு கொள்ள ஆர்வம் கொண்டதன் விளைவாக உருவ வழிபாடு தோன்றியது. தீர்த்தங்கரர்களையும், போதி சத்துவர்களையும் சமண, பவுத்த மதங்கள் உருவங்களாக வழிபட்டனர். அதுபோன்றே வைணவம் இறைவனின் அவதார மூர்த்திகளை உருவ வழிபாட்டின் மூலம் வணங்கும் முறையினை

★ ஆதி கிரேக்க மெய்ப்பொருளியல் - இலங்கை அரசு வெளியீடு.

ஏற்றுக் கொண்டது. கோயில்களை நிறுவி இறைவனை வழிபடும் முறை தோன்றியது. இன்றும் உருவ வழிபாடு வைணவத்தில் மிக முக்கியமாகப் பங்கு வகிக்கிறது.

வைணவ தத்துவத்தில் புலன் கடந்த பொருளியலில் (Meta physics) காணும் பரம்பொருளும், சமய உலகில் கண்ட ஈஸ்வரன் எனும் சகுணப் பிரமமும் ஒன்றேயாகும். நிர்க்குணபிரமம், சகுணப் பிரமம் இரண்டும் வேறுவேறானதல்ல ★ ஒன்றேயாகும்.

பிறவிச் (சம்சார) சூழலில் உழலும் உயிர்கள் (சித்), அசித் (உலக) சம்பந்தத்தை விட்டு ஈஸ்வரனை அடைய வேண்டும். அவனோடு இரண்டறக் கலந்து பேரின்பம் துய்த்து நிலைத்திருக்க வேண்டும் என்பதுவே மனித லட்சியமாகும். அந்த லட்சியத்தையடைய வைணவ தத்துவம் சில சிறப்பு நெறிகளைக் கொண்டிருக்கிறது.

ஸ்ரீ பிள்ளை லோகாச்சாரியார் 'அர்த்தபஞ்சகம்' எனும் தம் நூலில் இந்நெறியைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

சுயசொரூபம், பரசொரூபம், புருஷார்த்த சொரூபம், உபாய சொரூபம், விரோதி சொரூபம் என்ற ஐந்தும் அறிந்து கடைத்தேறல் வேண்டும்.

**சுய சொரூபம்**

சுயசொரூபம் என்பது ஆன்ம சொரூபத்தை அறிதல். நித்தர், பத்தர், முத்தர், கேவலர், முமுட்சு என்று ஆன்மாக்களை ஐவகையாகப் பிரிப்பர்.

**பரசொரூபம்**

பரசொரூபம் என்பது ஈசுவர சொரூபத்தை, ஈசுவர சொரூபம், பரத்துவம், விபவம், வியூகம், அந்தர் யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்ற ஐந்தாம்.

**புருஷார்த்த சொரூபம்**

புருஷார்த்த சொரூபம் என்பது அறம், பொருள், இன்பம், ஆத்மானுபவம், பகவதனுபவம் என்ற ஐந்து.

---

★ *கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருளியல்* - [illegible]

## உபாய சொரூபம்

ஆன்மா இறைவனை அடையும் வழிகள் அறிதல். அவை கரும, ஞான, பக்தி யோகங்களும் பிரபத்தி, ஆச்சாரியாபிமானம் என ஐந்தாம். பின்னிரண்டும் வைணவத்தில் தனிச்சிறப்புடன் பாராட்டப்படும்.

## விரோதி சொரூபம்

சொரூப விரோதி, பரத்வவிரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்தி விரோதி என்ற ஐந்து.

புருஷார்த்த சொரூபத்தில் ஆத்மானுபவம் என்பது மோட்சத்தைக் குறிக்கும். பகவதனுபவம் என்பது இறைவனோடினையும் நிலை. இது வைணவச் சிறப்புக் கொள்கைகளில் ஒன்று.

விரோதி சொரூபத்தில், சொரூப விரோதி என்பது தன்னை உடலாக அபிமானித்தலும், அகங்காரத்துடன் சுதந்திரமாக செயற்படத் தூண்டுதலும் ஆன குணவிஷேசம்.

பரசொரூப விரோதி என்பது புலனின்பங்களில் வேட்கையும், அறத்துக்கு மாறுபட்ட விருப்பங்களும்.

உபாய விரோதி என்பது உபாயங்களான பக்தியோகாதிகளில் ஈடுபடாது பிறவற்றில் ஈடுபடுதல்.

பிராப்தி விரோதி என்பது கிடைத்த உடல் முதலியவற்றை மன நிறைவுடன் பயன்படுத்தாமல், குறைநெறிகளில் புகுதல்.

விரோதி சொரூபம் அறிந்து அந்த முரண்பாடுகளைத் தவிர்த்து உபாய சொரூபத்தின்படி முயன்று புருஷார்த்த சொரூப லட்சியத்தின் மூலம் பரசொரூபத்தை அடைய சுயசொரூபம் அறிந்து முயல்தல் பக்தனின் கடனாகும்.

இறைவனை அடைய வழிகளான கருமயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகிய மூன்றும் இந்தியச் சமயங்கள் அனைத்தும் ஏற்கின்றன. வேத சமயங்களில் கருமயோகத்தை மீமாம்சகரும், ஞானயோகத்தை அத்வைதிகளும், பக்தி யோகத்தை விசிஷ்டாத்வைதி (வைணவம்)களும் பெரிதும் பாராட்டுவர். இம்

மூன்றைப் பற்றியும் பகவத் கீதையில் விரிவாக உபதேசிக்கப் பட்டுள்ளது. கீதைக்கு சங்கரர், இராமானுஜர், மத்துவம் மூவரும் சிறந்த பேருரைகள் வழங்கியுள்ளனர். ஞானேசுவரர் மராத்திய மொழியிலும், பெத திருமலாச்சாரியார் தெலுங்கிலும் நல்லுரைகள் வழங்கியுள்ளனர். பாலகங்காதர திலகர், காந்தியடிகள், வினோபா, அரவிந்தர் முதலிய பல அறிஞர்கள் விளக்கவுரைகள் தந்துள்ளனர். நம் நாட்டின் மிக உயர்ந்த மறை நூலாக மதிக்கப்படும் கீதை வைணவச் சார்புடையதுவே. இந்தியப் பண்பாட்டின் மூல நூல்களாக மதிக்கப்பெறும் இராமாயண, மகாபாரதங்களும் வைணவத் தொடர்புடையன. சிறந்த தத்துவ நூலான பிரம்ம சூத்திரமும், உபநிடதங்களும், கீதையும் நமது தத்துவ வரலாற்றில் சிறப்பிடம் பெற்ற நூல்கள். இந்நூல்கள் மனிதன் வாழ்வாங்கு வாழ வழிகாட்டி, இறைவனோடினைதலை (மோட்சத்தை)யே லட்சியமாகக் கொண்டிலங்குகின்றன.

பக்தி (இறையன்பு), பிரபத்தி (அடைக்கலம்) ஆகிய இரண்டும் வைணவத் தத்துவத்தில் சிறப்பிக்கப்படுகின்றன. இவ்விரண்டும் மனிதனது தற்செருக்கினை நீக்குகின்றன. அகங்காரம் அழிந்தாலே பக்தி உதயமாகும். அகங்காரம் சமுதாய வாழ்வில் ஏற்படும் பல துன்பங்களுக்கு மூல காரணமாகும். யான், எனது என்னும் செருக்கினை அறுத்தலே எல்லாச் சமயங்களின் நோக்கமாகும். தற்செருக்கையும், தன்னலவெறியையும் நீக்கிப் பொது நெறியில் மனிதனைப் பக்குவப்படுத்தவே ஆதியில் வேள்விகள் (யக்ஞங்கள்) உண்டாயின. தியாக உணர்வை மிகுவிப்பதற்காகவே அறநூல்கள், தத்துவச் சிந்தனைகள் பயன்படுத்தப்பட்டன. தியாகம் சமுதாயப் பொறுப்புணர்ச்சியோடு தொடர்புடைய நற்பண்பாகும். தான் பிறரோடு இணைந்து வாழ்வது அதனுடைய அடிப்படைக் கோட்பாடாகும். இப்பண்பினைப் பெறுவதற்கு இறையன்பு (பக்தி) சிறந்த கருவியாகும். பக்தி என்பது பஜனைப் பாடல்களும், சடங்குகளும் அன்று. அது அடக்கத்தின் வெளிப்பாடு. மானுட நேயத்தின் குறியீடு, அறத்தின் காப்பீடு.

பக்தி தன்னை இழக்கச் செய்து தான் நயந்த பொருளோடு இரண்டற இணைவித்து இன்பம் தரும் ஆற்றல் வாய்ந்த மன உணர்ச்சியாகும்.

*''யல் லய்த்வா புமான் சித்தோ' பவதி அம்ருதோ*
*பவதி, த்ருப்தோ பவதி'' ★*

என்று நாரத முனி கூறுவது போல பக்தியின் மூலம் அழியாத பேரின்பமும், மன நிறைவும், பேறும் பெற்றவனாகின்றான். ஆழ்வார்களின் பாசுரங்களும், பக்தியின் மேன்மையைப் பறை சாற்றுகின்றன. பக்திக்கும், இறையுணர்வுக்கும் நெருங்கிய தொடர்பினைக் காண்கின்றோம்.

பக்தி இயக்கம் இந்நாட்டின் தனிச்சிறப்பாகக் கருதப் படுகிறது. அவ்வியக்கத்தின் பரவுதலுக்கும் கீதைக்கும் ஒரு சிறப்பிடம் உண்டு. பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகளில் துகாராம், கபீர், ராமானந்தர், ஞானேஸ்வரர் போன்ற வட இந்திய அருளாளர்கள் பக்தி இயக்கத்தை இந்திய நாடு முழுவதும் பரவ வழிவகுத்தவர்கள். மூடநம்பிக்கைகளைக் கண்டித்தும், ஜாதி பேதங்களைச் சாடியும், எல்லா உயிர்களையும் நேசிக்கும் உயர் பண்பாட்டு நெறியாக பக்தி இயக்கம் பரவியது. இதற்கு மூல ஊற்றாகத் திகழ்ந்தது ஆழ்வார்களும், ஆச்சாரியர்களும் - குறிப்பாக இராமானுசரும் வடிவமைத்துத் தந்த தமிழக வைணவமே என்பது வரலாற்றில் கண்ட முடிவாகும்.

வைணவத்தின் மற்றொரு சிறப்பு நெறி பிரபத்தி மார்க்கம் எனும் சரணாகதி தத்துவம் ஆகும். இயல்பாகவே ஆற்றலில் குறைந்த மனிதன், பேராற்றலும், எழிலும், முழுமையும், பேரின்பமும் உடைய இறைவனை நேசிப்பதோடு மட்டுமின்றி தன்னையே அவனுக்கு அடைக்கலப் பொருளாக்கி விட வேண்டும் என்பது இந்தக் கோட்பாட்டின் சாரம் ஆகும். இத்தகு பிரபத்தி நெறியில் அமைந்தால்தான் கீதை கூறுகிற ஸ்திதப்ரக்ஞ நிலையும் பற்றற்று வினையாற்றும் பண்பாடும் உருவாக முடியும். தான் எனும் அகங்காரம் இல்லாத பக்தன்; வீண் கவலைகளிலிருந்தும், மனக் குழப்பத்திலிருந்தும் விடுபட்டு ''நடப்பது நடக்கட்டும், இறையருள் எதுவோ அதுவே நானும் ஏற்றுக் கொள்வேன் என்னும் மனப்போக்கு உடையவனாக மாற்றமுறுகிறான். நான் செயல் புரிந்தாலும், அச்செயலின் லாப நட்டங்களைப் பற்றிக் கவலைப்படாத உள்ளம் உடையவனாகிறான். முதலை வாய்ப்பட்ட யானை ''ஆதிமூலமே'' என்று சரணுற்றதும், கௌரவர்களால் அவமானப்படுத்தப்பட்ட

★ நாரத பக்தி சூத்திரம் 1 - 4.

பாஞ்சாலி ''கோவிந்தா'' என்று சரணமுற்றதும், இராமபிரானிடம், காகமும், விபீஷணனும் சரணமுற்றதும் வைணவச் சான்றோர்களால் சிறப்பிக்கப்பட்டு பாராட்டப்பட்டுள்ளன. அவர்களைப் போல் நாமும் இறைவனிடம் அடைக்கலமுறவேண்டும்'' என்று உபதேசிக்கிறார்.

வைணவச் சிறப்புக் கோட்பாடுகளில் ஒன்று புருஷகாரத் துவம் ஆகும். இறைவனிடம் உயிர்கள் செய்யும் பிழையைப் பொறுத்து நல்லருள் கூறுமாறு இறைவி கூறும் பரிந்துரையைப் புருஷகாரம் என்று கூறுவர். பரம புருஷனான இறைவனிடம் கூறி காரியப்படுத்துவதனால் புருஷகாரம் என்று சொல்லப்பட்டது. அங்கு இறைவியைப் பற்றிய குறிப்பில்லை. வைணவத்தில் இறைவனுக்குத் தான் ஏற்றம் ஆயினும் இறைவிக்கும் அருள் செய்விதல் பங்குண்டு. இறைவியின் இறையாண்மை குறித்து வடகலையார்க்கும், தென்கலையார்க்கும் கருத்து முரண்பாடுகள் உண்டு.

உலகம் முழுவதும் உள்ள உயிர்கள் ஆண், பெண் என இரு நிலைப்பட்டுப் புணர்ச்சி மகிழ்தலும், மரபை வளர்த்தலும் காண்கிறோம். அப்பாங்கு இறைவன் தொடர்பின்றி ஏற்படா தென்னும் கருத்தால் இறைவனையும், இணைந்த தலைவன் தலைவியராகவே வைணவம் கருதுகிறது. பெண்மைக்கு மதிப் பளிக்கும் பண்பாடும் இக்கருத்தில் தொனிக்கிறது. இப்புருஷகாரம் இறைவனும், இறைவியும் உயிர்களின்பால் கொண்டுள்ள அருளை வெளிக்காட்டுகிறது. ஆதலினால்தான் மந்திரங்கட்கு முன்பு ஸ்ரீ (திரு) என்ற சொல் சேர்க்கப்படுகிறது. பிரிவின்றி என்றும் கூடியிருக்கும் திருமகளையும், திருமாலையும் இணைந்து காண்பதே வைணவ மரபாகும்.

புருஷகாரத்தைப் பற்றி பிள்ளை லோகாச்சாரியார் 'தன் துவயம்' என்னும் நூலில் அழகாக விளக்கியுள்ளார்.

''பிற பிறப்புக்களிடையே காம மோகங்களில் சிக்குண்டு அலையும் உயிர்கள் ஆற்றலற்றவர்கள் ஆதலின் குற்றங்குறைகள் இருப்பது இயல்பு. அவர்களைக் காப்பதுவே தங்கள் அருளுக்கழகாகும்'' என்று திருமகள் கூறுவாள்.

''குற்றத்தைத் தண்டிப்பது இறைவன் கடமையல்லவா? வேதநெறி அதுவல்லவா?'' என்று திருமால் கூறுவான்.

''உமது அறநெறி விளங்குவது சரிதான்; ஆனால், தங்கள் பேரருள் விளங்குதல் வேண்டாமா?'' என்பாள் இறைவி.

''அதற்காக அறநெறி விட முடியுமா?'' என்னும் இறைவன்.

''அப்படியானால், உம்முடைய அறநெறியும் விளங்கி, அருள் நெறியும் விளங்க ஒரு வழி காட்டுகிறேன்'' என்னும் இறைவி.

''சொல்லிக் காட்டுக'' என்பான் இறைவன்.

''உம்மை மதியாமல், உலக பந்தத்தில் ஈடுபட்டிருப்போரை அறநெறிப்படி தண்டியும்; உம்மை அடைக்கலம் புகுந்து என்னை புருஷகாரமாகக் கொண்டு உம்மைப் பற்றியவர்களை அருள் செய்வீர்களாக'' என்று இறைவி சொல்வாள். இவ்விதம் அவர்கள் இணைந்து அருள் செய்வார்கள்.

சமண, பவுத்த மதங்களில் இறைமைக் கொள்கை இன்மையாலும், ஊழ்வினை சிறப்பித்துப் பேசப்படுவதாலும், நன்மை செய்தார் நலம் பெறலும், தீமை செய்தார் தீமை எய்துவதும் நியதிப்படி நடந்தே தீரும் என்பர். வைணவ, சைவ சமயங்களில் தீமை புரிந்தாரும் இறைவன் தலையீட்டால் அருள் பெற்று நன்மை பெற முடியும் என்ற கருத்து எடுப்பாகக் காணப்படுகிறது. இதன் காரணமாக குற்றங்கட்கு மன்னிப்பு உண்டு என்ற கருத்தால் குற்றம் புரியத் துணைபோகிறது என்றும், இந்தியப் பண்பாட்டின் அறவீழ்ச்சிக்கு இதுவும் ஒரு காரணம் என்றும் சிலர் கருதுகின்றனர்.★ எனினும் குற்றம் புரிந்தவர் திருந்தி மீண்டும் புனர் வாழ்வுறுவதற்கு இக்கொள்கை பயன்படும் என்றும் கிறிஸ்துவம் இக்கொள்கையைச் சிறப்பித்துப் பரப்பியுள்ளது என்றும் சில அறிஞர்கள் கருதுகின்றனர்.

சிற்றறிவினரான மனிதர்கள் தவறிழைத்தல் இயல்பு. தவறினைத் தவறு என்றுணர்ந்த பின், கழுவாய் தேடிப் பின் அறநெறிப்படியே ஒழுகுதல் வேண்டும். மேலும், குற்றங்கட்கு சமுதாயப் புறச் சூழ்நிலையும் ஒரு காரணம் என்றும், புறச்

---

★ குரஜாடா அப்பாராவ் - மாட்டாமன்றி.

சூழ்நிலையை முதலில் திருத்தப்பட வேண்டும் என்றும், தனி மனிதனை அருள் நோக்கோடு குற்றங்களை மன்னித்து, மேற்கொண்டு செய்யாதபடி திருத்த வேண்டும் என்று சமூகவிய லறிஞர்கள் கருதுகின்றனர்.

இக்கருத்திற்கேற்ப, குற்றங்களை மன்னித்து இறைவன் அருள் செய்து உய்விப்பான் என்றும் வைணவம் கூறுகிறது.

வைணவ தத்துவ, சமயாச்சாரங்களை இறைவனே உபதேசித்தான் என்றும், அஃது ஓரான் வழியே வந்ததென்றும் கூறுவர். ஓரான்வழி என்பது இறைவன் தொட்டு மணவாள மாமுனி முதலிய ஆச்சாரியார்கள் வரை குரு பரம்பரையாக ஒருவருக் கொருவர் இரகசியார்த்தங்களைச் சொல்லி வந்த மரபாகும். முன்னாட்களில் அரசு தலைமகனுக்கென அமைந்து மரபுரிமைப் பட்டது போல், சீடர்களில் பலர் இருந்தும் ஒருவரைத் தேர்ந்து தரிசனப் பிரவர்த்தகராக அமைத்து வந்தனர். ஓரான்வழி மரபாவது வடகலைக்கும், தென்கலைக்கும், இராமானுசருக்குப் பின்னர் மாறுபடும்.

வைணவத் தத்துவம் குறித்து எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் போன்றோர் ஆங்கிலத்தில் சிறந்த நூல்கள் இயற்றியுள்ளனர். தமிழிலும் அண்ணங்கராச்சாரியர், புத்தூர் கிருஷ்ணசாமி அய்யங்கார் போன்றோர் பல நூல்கள் வெளியிட்டுள்ளனர். இந்தியத் தத்துவ ஞானத்தை உணர விரும்பும் அனைவருமே இது போன்ற நூல்களை வாசித்தறிந்து தமது ஆன்மீக ஞானத்தைப் பெருக்கிக் கொள்வது நல்லது.

தத்துவ நூல்களில் வரும், வடமொழிச் சொற்களில் வரும் பரிபாடைகளை முதலில் நன்கு புரிந்துகொள்ள வேண்டும். அச்சொற்கள் தரும் பொருளையும், அது சிறப்பாக உணர்த்தும் பொருளையும், தெளிவாகத் தெரிந்திருத்தல் வேண்டும். அதுமட்டு மின்றி அதே பரிபாடைக்குரிய பொருளை பிற சமயத்தவரின் பரிபாடைச் சொல் யாதென்றும் தெரிந்திருக்க வேண்டும். இரு வேறு சமய பரிபாடைகளின் மூலம் கூறப்படும் பொருளின் மெய்ப்பொருள் தன்மையை உணர வேண்டும். அப்போதுதான் இந்திய தத்துவ ஞானக் கூறுகளைப் புரிந்து கொள்ள முடியும்.

வைணவ சமயத்தின் தனிச் சிறப்புக்களில் மற்றொன்று ஆச்சாரியாபிமானம் ஆகும். ஒரு சீடன் எப்படிப் பரிவுடனும்,

பக்தியுடனும் ஆசிரியனிடம் நடந்து கொள்ள வேண்டும்? அறிவைத் தேட எத்துனைச் சிரமங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்? குருவை தன் தெய்வமாக மதித்து வழிபட வேண்டும் என்பதற்கு ஆச்சாரியார்கள் வாழ்க்கை சிறந்த சான்றாகத் திகழ்கின்றன. ஸ்ரீநாத முனிகள் தொட்டு மணவாள மாமுனிகள் ஈறாக வந்த ஆச்சாரிய பரம்பரை, வடகலை, தென்கலை சம்பிரதாயங்களில் சிறிது வேறு படினும், அவர்கள் அனைவரும் மிக உயர்ந்த வழிகாட்டிகளாகத் திகழ்ந்தனர் எனலாம். 'ஆச்சாரிய தேவோ பவ' என்று தைத்திரி யோபநிஷத் கூறியதுபோல தேவர்களாகவே பாவித்து இறைவனை விட ஆச்சாரியனே உயர்ந்தவன் என்னும் அளவிற்கு அவர்களது நிஷ்டை (ஈடுபாடு) இருந்ததைக் காணலாம். மணக்கால் நம்பி, இராமானுசர், வடுக நம்பி, நஞ்சியர், நம்பிள்ளை முதலாயினோர் தம் ஆச்சாரிய பக்தி பிரசித்தமானது. இன்றைய கல்வி முறையில் மாணவர்க்கும் ஆசிரியர்க்கும் உள்ள தொடர்பு அறிவு வேட்கை யிலும், அன்பின் ஈடுபாட்டிலும் அமையவில்லை. வைணவ ஆச்சாரியர்களின் கல்வி முறை அறிவின்பால் அவர்கட்குள்ள ஈடுபாடும், அடக்கமும், ஒழுக்கமும், பக்தியும் மிக்கதாக அமைந்துள்ளது.

# 2. வைணவ சமய வரலாறு

வேதம் இந்தியப் பண்பாட்டின் மூல ஊற்றாகும். உலகின் முதல் இலக்கியம் ருக்வேதமேயாகும். மாக்ஸ் முல்லர் கி.மு. 2000 என்றும், பால கங்காதர திலகர் கி.மு. 4000 என்றும், இன்னும் சிலர் கி.மு. 7000 என்றும் கால நிர்ணயம் செய்துள்ளனர். வேதம் அனாதி என்றும், இறைவனால் அருளப்பட்டதென்றும், மகரிஷிகளால் காணப்பட்டதென்றும், மனிதர்களால் செய்யப்பட்டதன்று என்றும் நம் நாட்டினர் கருதுவர்.

வேதாங்கங்கள் ஆறு. சிட்சை, வியாகரணம், சந்தஸ்நிருக்தம், ஜோதிஷம், கல்பம் என்பன அவை. பழமையான வேத மொழியையும், அதன் பொருட் சிறப்பையும் உணர வேதாங்கங்களில் பயிற்சி வேண்டும். வேதத்திற்கு பேருரை கண்டவர்கள் பலர். யாஸ்கரின் நிருத்தம் வேதச் சொற் பொருளை விளக்க எழுந்த நூல், ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்கந்தஸ்வாமி என்பவர் எழுதிய ருக்வேத உரையே மிகப் பழமையானது. நாராயணாச்சாரியர், உத்கீதாசாரியர் என்னும் இருவர் ஏழாம் நூற்றாண்டில் ருக்வேத உரை வகுத்துள்ளவர்கள் ஆவர். எட்டாம் நூற்றாண்டில் ஹஸ்தாமலகர் உரை எழுதியுள்ளார். எனினும் அவ்வுரை இப்போது கிடைக்கவில்லை. காவேரிக் கரையைச் சார்ந்த வெங்கடமாதவர் 'ருகர்த்த தீபிக' என்னும் உரை எழுதியுள்ளார். இவர் பத்தாம் நூற்றாண்டினர். பதின்மூன்றாம் நூற்றாண்டில் மத்துவாச்சாரியர் (1198-1270) ருக் வேதத்தின் முதல் மண்டலத்தில் 40 சூக்தங்கட்கு விஷ்ணுவே பரதெய்வம் எனும் கொள்கையோடு உரை செய்துள்ளார். பதினொன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த உவடர்

அவந்தி நகரில் போஜராஜன் அவையிலிருந்தவர். சுக்லயஜுர்வேதம் முழுமைக்கும் உரை வகுத்துள்ளார். யஜுர் வேதத்திற்கு பட்டசாமி, பட்டபாஸ்கரன், துர்காச்சாரியர், மகீதரர் முதலியவர்கள் உரை வகுத்துள்ளனர். சாம வேதத்திற்கு மாதவர், பரதசாமி, குணவிஷ்ணு எனும் மூவர் உரை வகுத்துள்ளனர்.

வேத உரைகளில் சிறந்ததாகக் கருதப்படுவது சாயண பாஷ்யம் ஆகும். சாயணர் (1315-1387) பரத்வாஜ கோத்திரம் போதாயண சூத்திரம் கிருஷ்ண யஜுர்வேதியாகிய ஆந்திர பிராம்மணர் ஆவர். மாயணர் தந்தை பெயர் ஆகும். ஸ்ரீமதி தாயார். விஜயநகர சாம்ராஜ்யத்தை நிறுவிய மாதவ வித்யாரண்யர் சாயணரின் தமையனார் ஆவார். புக்கராயர் மாதவரை வேத உரை வரைய வேண்டும் என்று வேண்டிக் கொள்ள அதற்கு சாயணரே தகுந்தவர் என்று கூறி தமையனை உரை வரையுமாறு ஏற்பாடு செய்தார். இவ்வுரை இன்றும் சிறப்பிக்கப்பட்டு பாராட்டப்படுகிறது. வேதத்தில் வரும் மந்திரங்கட்கு யக்ஞார்த்தம், லௌகிகார்த்தம், அத்யாத்மிகார்த்தம் என்று மூன்று வகையில் பொருள் கூறும் மரபு உண்டு. தொன்மையான வேதங்களில் தத்துவக் கூறுகள், சமூகப் பொருளாதார அமைப்புகள், சரித்திரக் கூறுகள், சமயச் சடங்குகள், கலைகள், எல்லாமே உட்பொதித்து நமது பண்பாட்டின் மேன்மையை நிலைநாட்டிக் கொண்டிருக்கின்றன.

வசிட்டன், பரத்வாசர், விசுவாமித்திரர், வாமதேவர், அகத்தியர், கௌதமர் முதலிய மகரிஷிகள் வேத மந்திரங்களைக் கண்ட தீர்க்கதரிசிகள். இந்திரன், அக்னி சந்திரன் (சோமன்), அசுவினி தேவதைகள் மருத்துக்கள், வருணன், உஷஸ், சூரியன், விஷ்ணு, பிருஹஸ்பதி, ருத்ரன், யமன் முதலிய தேவதைகளைத் துதிக்கும் பாடங்கள் வேதங்களில் உள்ளன. மூல நூலான வேதத்திலேயே விஷ்ணுவைப் பற்றிய துதிகள் வருகின்றன. அதனால் வைணவம் வேத காலத்திலிருந்து தொடர்ந்து வரும் சமயம் என்பதில் ஐயமில்லை. ருக்வேத சம்ஹிதையில் விஷ்ணுவைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள வருணனைகள் காண்போம். ★

''சூரியனே தன் பரந்த தன்மையால் விஷ்ணுவாகப் புகழப்பட்டான். இவன் ஐந்தாறு ஆக்தங்களில் மட்டுமே வருணிக்கப்பட்டாலும், தேவதைகள் அனைவரிலும் மிகப் பெரியவன். இவன் தன் மூன்றடிகளால் மண், விண், சுவர்க்கம்

★ ஆர்ஷ விஞ்ஞான சர்வஸ்வம் (தெலுங்கு)

மூன்றையும் அளந்த ஆற்றலை சிறப்பிக்கப்பட்டுள்ளது (1-155). இவன் மூன்று அடிகளில் இரண்டடிகளே மனிதர்கள் காண்பர். மூன்றாமடி வானத்திலிருப்பதால் காணமாட்டார்கள்.

அம்மூன்றாம் அடி சுவர்க்கத்தின் கண் என்றும், அதனாலேதான் சுவர்க்கத்தை விஷ்ணுபதம் என்பார்கள். அதில் முக்தர்கள், தேவதைகள் இன்பத்தை அனுபவிக்கின்றனர். (8-29). இவனே ருதுசக்கரத்தை (பருவ காலத்தை) திருப்புகிறான். இந்திரனுக்குப் போரில் துணை நிற்கிறான் (6-69), இந்திரன் மருத்துக்களோடு இணைந்து இவன் துதிக்கப்படுகிறான்.''

## கிருஷ்ணயஜுர் வேதத்தில் வருணிக்கப்பட்டவை

ஏழு அத்தியாயங்களில் குறிப்பிடப்பட்ட தேவதையாக விஷ்ணு திகழ்கிறான்.

''விஷ்ணு விஞ்ஞானத்தைக் காப்பாற்றி (1-4)
யக்ஞங்களைக் காத்து, யஜமானனையும் காப்பாற்றுகிறான்.
பூமி, அந்தரிட்சம், சூரியன் என்னும் மூவுலகும்
படைத்து காப்பாற்றுகிறான்.''

## சுக்ல யஜுர் வேதத்தில் வருணிக்கப்பட்டவை

யக்ஞத்தின் அதிஷ்டான தேவதை விஷ்ணு (6-4). யக்ஞமே விஷ்ணுவாக புகழப்பட்டுள்ளது. மூவுலகும் படைத்தவன் இவனே (5-18). இவனே வான் உலகைப் பகுத்து நிலை நிறுத்தினான். மண்ணுலகை தன் ஒளியால் தாங்கினான் (5-16). வராக ரூபம் கொண்டு இவன் மண்ணுலகைக் காத்தான் (37-5), வான் நடுவில் திகழும் சூரிய மண்டலமே பரமபதம். அது விஷ்ணுவினுடைய அறிவும், இன்பமும் நிறைந்த பரமபதம் ஆகும். பிரம்ம லட்சணமான இவனுடைய பரம பதத்தை ஞான கருமங்களைப் பின்பற்றுவோர் அடைய முடியும் (34-44). தன்மேல் அன்பு செலுத்துவோரைக் காப்பாற்றுவான் (8-55).

## சாம வேதத்தில் வருணிக்கப்பட்டவை

விஷ்ணுவின் இடம் அந்தரிட்சம் (வான்வெளி).

எங்கும் பரந்துள்ளவனாகவும், திரிவிக்கிரமன் ஆகவும் உலகப் பேராற்றலாகவும் வருணிக்கப்பட்டுள்ளான்.

1. விஷ்ணு பிரபஞ்சம் முழுவதும் மூன்றடிகளால் கவர்ந்தான். தூண்படிந்த அவன் பாதத்தில்தான் உலகம் முழுவதும் அடங்கியுள்ளது.

2. விஷ்ணுவை யாரும் துன்புறுத்த முடியாது. அவன் எல்லாவற்றையும் காப்பாற்றுவான். தன் மூன்றடியால் பிரபஞ்சத்தைக் கவர்ந்தவன்.

3. ருக்விக்குகளே! விஷ்ணுவினுடைய உலகு காக்கும் செயலைப் பரிசீலியுங்கள். அவனைப் பார்த்து நீங்களும் செயற்பாட்டில் ஊக்கம் பெறுங்கள். விஷ்ணு இந்திரனுக்கு நல்ல நண்பன்.

4. வானிற் பரந்த பார்வை விசாலமாகக் காண்பது போல அறிஞர்கள் விஷ்ணுவினுடைய இடக்கை எப்போதும் ஒரே சிந்தனையுடன் காண வல்லவராவார்.

5. துதிகள் செய்து, தவறுகள் இன்றி, மேதாவிகள் விஷ்ணுவின் பரமபதத்தை ஒளிரச் செய்கின்றனர். விவரித்துக் கூறுகிறார்கள்.

6. விஷ்ணு பூமியிலிருந்து ஆகாயம் வரை வியாபித்து இருக்கிறான். ஆதலின் பூமி மீதுள்ள உங்களை விஷ்ணு முதலிய தேவர்கள் காப்பாற்றுவார்களாக!

அதர்வ வேதத்தில் சூரியன், கருடன் பற்றிய மந்திரங்கள் உள்ளன. வேதகாலத்தில் இந்திரனோடு ஒத்த தெய்வமாகவே விஷ்ணு வழிபாடிருந்தது. பின்னர் விஷ்ணு பரதெய்வம் என்று மேன்மை பெற்று வைணவமாகக் கொண்டாடப்பெற்றது. இயற்கையையே இறைவழிபாடாகக் கருதிய வேத காலத்தில் பல்வேறு தெய்வங்களைப் பற்றிக் குறிப்பிடினும், 'ஏகோ தேவ' விப்ரா பஹு"தா வதந்தி என்ற வேதப்படி ஒரு கடவுட் கொள்கையே நிலவி வந்தது. அக்கடவுளை தத்தம் வழிபாடு கடவுளாகவே பாவித்தனர். ஒரே பொருளை நான்கு கோணங்களிலிருந்து பார்த்தாலும், பொருள் ஒன்றே யாமாறு போல ஒரே இறைவனை பல்வேறு தெய்வ உருவங்களில் வழிபடலாயினர். எனினும் இறைவன் ஒருவனே என்ற கருத்தில் தெளிவு இருந்தது.

விஷ்ணுவையே பரம் பொருளாகக் கண்டவர்கள் வைணவ சமயம் உருவாகக் காரணமானார்கள்.

இயற்கைத் தெய்வமாகிய சூரிய வழிபாடும், விஷ்ணு வழிபாடும் முதலில் இணைந்ததாகக் கருதலாம்.

'இந்திய விக்கிரகம்' என்ற நூலில் டி.ஏ. கோபிநாதராவ் பின்வருமாறு எழுதியுள்ளார். ★

''திருமால் அல்லது மகாவிஷ்ணு நான்கு மறைகளிலும் கூறப்பட்ட வேத காலக் கடவுளே''. அவனைச் சூரியனாகவும், மூவுலகையும் ஈரடியால் அளந்தவன் என்றும் நூல்கள் பகரும். சதபத பிராம்மணத்தில் அவன் பன்னிரண்டு ஆதித்தர்களில் ஒருவனாகக் கூறப்பட்டுள்ளான்.

மகாபாரதமும், பதினோரு ஆதித்தனைக் கூறிப் பன்னிரண்டாவதாக விஷ்ணுவைக் குறிக்கின்றது. இதனால் ஆதித்தனே விஷ்ணுவாக மாறியிருத்தல் கூடும், என்று ஊகிக்க இடமுண்டு.

பேராசிரியர் எஸ் இராதாகிருஷ்ணன் கூறுவதாவது. ❒

''விஷ்ணு வடிவில் சூரியன் உலகனைத்தும் தாங்குகின்றார். அவர் மூவுலகினையும் மூன்றடியால் அளந்தவர். ருக்வேதத்தில் விஷ்ணு முக்கியமான தெய்வமாகக் கருதப்படவில்லை. ஆயினும் அந்த ஆதி வேதத்திலேயே விஷ்ணு பேருடலம் உடையவராகவும், அன்பர் வேண்டுகோட்கிணங்க அவ்வப்போது அவதரிப்பார் என்றும் கூறப்படுவதலின் வைணவ சமயத்தின் அடிப்படையை அங்கேயே காணலாம்.''

''இருக்கு வேத காலத்தில் கிருஷ்ணன் என்ற ஒரு பெரிய எதிரி இந்திரனுக்கிருந்தான். இந்திரனுக்கும் கிருஷ்ணனுக்கும் உள்ள பகைமையைப் பற்றிப் புராணங்களும் கூறுகின்றன. ஆயினும் பகவத் கீதை எழுதப்பட்ட காலத்தில் கிருஷ்ணன் தெய்வீகப் பெருமை கொண்டு விளங்கினான். இந்நிலையில் வைணவர்கள் அவனை விஷ்ணுவென்றும், பாகவதர்கள் வாசுதேவன் என்றும்

★ ❒ தமிழ் இலக்கிய வரலாறு - வைணவமும், தமிழும்,
ஈ.எஸ். வரதராஜ அய்யர்.

கொண்டாடினர்.'' வேதகால சூரியன் வழிபாடு, விஷ்ணு வழிபாடாக இணைந்து பிற்காலத்தில் கண்ணன் வழிபாடாக மாறியமை காணலாம்.

பாகவத மதம் என்பது புத்தர் காலத்துக்கு முன்பே உண்டாக்கப்பட்டதென்றும் சமண மத தொடக்கக் காலத்தில் கிருஷ்ணன் பலரும் கொண்டாடும் தெய்வமாகவும் இருந்ததாகவும் அறிஞர்கள் கூறுவர்.

பேரறிஞர் ஆர்.ஜி. பண்டாரகர் தமது, ''வைணவம், சைவம் மற்றும் சிறு மதங்கள்'' "Vaisnavism, Saivism and Minor Religious Systems" என்ற ஆராய்ச்சி நூலில் வைணவ சமயம் உருவாகிய வரலாறும், அது பரவிய வரலாறும் தக்க சான்றுகளுடன் கூறியுள்ளார்.★ அவர் கூறும் கருத்துக்களாவன.

''இராஜபுதனத்தில் கோசண்டி என்னும் இடத்தில் கிடைத்த கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டிலிருந்து சங்கருஷண வாசுதேவ வணக்கமும், கோயில்களும் இருந்தன. பாகவத மதத்தில் வாசுதேவ வணக்கம் இருந்தது. கிரேக்கர்கள் கூட பாகவத மதத்தை ஏற்றிருந்தனர்.''

பாணினியத்தின் பதஞ்சலி மாபாடியத்தில் வாசுதேவ வணக்கம் குறிப்பிடப்பட்டுள்ளது. ''நாநாகாட் என்னும் ஊரில் உள்ள ஒரு குகையில் இருக்கும் ஒரு துதிப்பாடலில் சங்கருஷன, வாசுதேவர்கள் பெயர்கள் காணப்படுகின்றன. பெஸ்நகர்(Bes Nagar) என்ற ஊரில் உள்ள கல்வெட்டின்படி ஹெலியோடோரஸ் (Heliodorus) என்பவர் வாசுதேவனுக்கு ஒரு கருடக்கொடி அமைத்தான். வாசுதேவனை வழிபடுவோர் பாகவதர் என்றும் கூறுவர்.''

பாரதத்தில் சங்கருஷணன், வாசுதேவன், பிரத்யும்னன் ஆகியவர்கள் விஷ்ணு அம்சங்களாகக் குறிப்பிடும் பல சுலோகங்கள் உள்ளன. கீதை தோன்றுவதற்கு முன்பே வாசுதேவ வணக்கம் இருந்திருக்கிறது. வாசுதேவனும், நாராயணனும் ஒன்றென பின்வந்த புராணங்கள் கூறுகின்றன.

---

★ ***Collected works of Sir R.G. Bhandarkar Vol. IV***
***Bhandarkar Oriental Research Institute, Poona 1929.***

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பாகவத மதம் சிறப்புற்றிருந்தது. காளிதாசனின் மேகதூதத்தில் வானவில்லுடன் கூடிய மேகத்தை கண்ணனுக்கு உவமை கூறப்பட்டுள்ளது. ★ காளிதாசன் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டென்பாரும் உண்டு. சந்திரகுப்தன் முதலான குப்த அரசர்கள் தம் நாணயங்களில் தம்மை பரம பாகவதர்களாகக் குறிப்பிட்டுக் கொண்டுள்ளார்கள். கி.பி. நான்காம் நூற்றாண்டில் நான்கு கரங்கள் கொண்ட விஷ்ணு உருவம் ஒன்று இருந்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. நான்காம் நூற்றாண்டிலிருந்து பதினொன்றாம் நூற்றாண்டு வரை பாகவத மதமும், அவதாரக் கொள்கையும் சிறப்புற்றிருந்தன. பின்னரே இராமன் வணக்கம் தோன்றியது. பாகவத மதம், பாஞ்சராத்திரம் என்றும் குறிப்பிடப்பட்டது. சாத்துவதர்களும் அவர்களது வாசுதேவ வழிபாடும் கி.மு. நான்காம் நூற்றாண்டில் சந்திரகுப்த மௌரிய மன்னன் காலத்தில் கிரேக்கிய தூதுவன் மெகஸ்தனீஸ் என்பாராலும் குறிக்கப்பட்டுள்ளன.

இந்த ஆய்வுக் குறிப்புகளிலிருந்து வேத காலந்தொட்டு வந்த விஷ்ணு வழிபாடு நாராயண, வாசுதேவ வழிபாடாக, பாகவத சாத்துவத, பாஞ்சராத்திர சமயங்களாகக் கருதப்பட்டு, கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு முதல் சிறப்புற்றிலங்கி வருகின்றது என்பது தெளிவாகும். கல்வெட்டுக்கள், இலக்கிய சான்றுகள் மூலம் வைணவம் தொன்மைக் காலத்திலேயே ஒரு சமய வடிவமுற்று, மக்களால் பின்பற்றப்பட்டு வந்ததாகக் காணலாம்.

---

★ *கி.பி. முதலாம் நூற்றாண்டில் முக்கியமான பாகத மொழியிலுள்ள காதாசப்தசதியில் கண்ணனைப் பற்றிய பல கவிதைகள் உள்ளன. எனவே, முதல் நூற்றாண்டிலேயே கண்ணன் வணக்கம் உண்டு என்பது தெளிவு.*

# 3. தமிழகத்தில் வைணவம்

வேதமும் உபநிடதங்களும், இதிகாசங்களும் வடநாட்டில் உருவாயின. எனினும் அதன் விளக்கப் பேருரைகள், சமயமாக மலர்வித்தச் சான்றோர்கள் தோன்றியது தென் நாடேயாகும். சிறப்பாகத் தமிழகத்திற்குப் பெரும் பங்குண்டு. வைணவம் வலிவான சமயமாகத் திகழ்வதற்கு காரணமாக அமைந்தது ஆழ்வார்களும், இராமானுசர் முதலான ஆசாரியர்களும் தான் என்பதில் ஐயமில்லை. இவர்கள் அனைவரும் தமிழகத்தினரே. ஆதலின் வைணவத்துக்கும், தமிழுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. தமிழர் நாகரிகத்தின் தனிச்சிறப்பினை எடுத்துக் காட்டும் கருவூலமாகத் திகழும் 'தொல்காப்பியம்' கி.மு. மூன்றாம் நூற்றாண்டெனக் கருதப்படுகிறது. தொல்காப்பியம் இலக்கண நூலாக மட்டுமன்றி வரலாற்றுப் பெட்டகமாகவும், பண்பாட்டுக் கருவூலமாகவும் தமிழின் மாண்பினை உணர்த்தும் தனிச்சிறப்புமிக்க நூலாகவும் கருதப்படுகிறது.

*"மாயோன் மேய காடுறை யுலகமும்"*

*-(தொல் - அகம் - 5)*

*மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பிற்*
*றாவா விழுப் புகழ்ப் பூவை நிலையும்*

*- (தொல் - புறத் - 60)*

என்று, மாயோன் என்று திருமாலைக் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பிய காலத்திலே திருமால் வழிபாடு இருந்தமையால் தமிழகத்தில் மிகப் பழமையான காலந்தொட்டே திருமால் வழிபாடிருந்தது என்பதில் ஐயமில்லை.

*"தண் கயத் தமன்ற வண்டுபடு துணைமலர்ப்*
*பெருந் தகை இழந்த கண்ணினை - வடா அது*
*வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை*
*அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்*
*மரம் செல மிதித்த மாஅல் போல"*

**- அகம் - 59**

*"மாயோன் அன்ன மால்வரைக் கவா அன்*
*வாலியோன் அன்ன வயங்குவெள் ளருவி"*

**- நன்றிணை - 32.**

*முறம் செவி மறைப்பாய்வு முரண் செய்த புலிசெற்று*
*மறம் தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்*
*குறங்கூறுத் திடுவான் போல் கூர்துதி மடுத்து அதன்*
*நிறம் காடி முரண் தீர்ந்த நீள்மருப்பு எழில்யானை*
*மல்லரை மறம் சாய்ந்த மால்போல் தன்கிளை நாப்பண்*
*கல்லுயர் நனஞ் சாரல் கலந்தியலும் நாட! கேள்.*

**- கலித்தொகை 52**

*மேவார் விடுதந்த கூந்தற் குதிரையை*
*வாய் பகுத்திட்டு புடைத்த ஞான்று இன்னன்கொல்*
*மாயோன் என்று உட்கிற்று என் நெஞ்சு.*

**-கலித்தொகை - 103**

*மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர*
*ஞாயிற்று முன்னர் இருள்போல மாய்ந்தது என்*
*ஆயிழை உற்ற துயர்.*

**- கலித்தொகை - 145**

*வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்*
*போர்ப்புறு முரசம் கறங்க*
*ஆர்பெழுந்தன்றால் விசும்பினானே*

**- புறம் 241**

*ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை*
*மாற்றருங் கணிச்சி மணி மிடற் றோனும்,*
*கடல்வளர் புரிவளை புரையும் மேனி*
*அடல் வெந் நாஞ்சில் பனைக் கொடி யோனும்,*
*மண்ணுறு திருமணி புரையும் மேனி*
*விண்ணுயர் புட், கொடி விறல் வெய்யோனும்*
*மணிமயில் உயரிய மாற வென்றி*
*பிணிமுக ஊர்தி ஒன்செய் யோனும் என*
*ஞாலம் காக்கும் கால முன்பின்*
*தோலா நல்இசை நால்வர்*

*- புறம் 56*

*கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்*
*மாயோன் மேய ஓண நன்னாள்.*

*- மதுரைக்காஞ்சி*

*பாம்பு படப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்*
*புள் அணி நீள் கொடிச் செல்வனும்.*

*- திருமுருகாற்றுப்படை*

*இருநிலங் கடந்த திருமறு மார்பின்*
*முந்நீர் வண்ணன் பிறங்கடை.*

*- பெரும்பாணாற்றுப்படை*

*நாடுபல் கழிந்த பின்றை, நீடுகுலைக்*
*காந்தளஞ் சிலம்பில் களிறு படித்தாங்கு*
*பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னாங்கன்*
*வெயில்நுழை பறியாக் குயில்நுழை பொதும்பர்*

*- பெரும்பாணாற்றுப்படை*

*நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்*
*நான்முக ஒருவற் பயந்த பல் இதழ்த்*
*தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றி*

*- பெரும்பாணாற்றுப்படை*

சங்கச் சான்றோர் செய்யுட்களாக எட்டுத் தொகை, பத்துப்பாட்டு ஆகிய மேற்கணக்கு நூல்கள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை சில. சில கி.பி. இரண்டாம்

நூற்றாண்டினைச் சார்ந்தவை. கி.பி. மூன்று நான்காம் நூற்றாண்டெனக் கருதத் தகும் பரிபாடல், திருக்குறள் போன்ற நூல்களிலும் திருமால் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ள செய்யுட்களைக் காண்கிறோம்.

*யாம்வீழ்வார் மென்றோட் துயிலின் இனிதுகொல்*
*தாமரைக் கண்ணான் உலகு.*

***- குறள் 113***

*மடியிலா மன்னவன் எய்தும் அடி அளந்தான்*
*தாஇய தெல்லாம் ஒருங்கு.*

***- குறள் 610***

என்ற குறள்கள் திருமாலைக் குறிப்பிடும் என்பது அறிஞர்கள் துணிபு.

*கண்ணகன் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்*
*தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம் - நண்ணிய*
*மாயச் சகட முதைத்ததூஉம் இம்மூன்றும்*
*பூ வைப்பூ வண்ண னடி.*

என்று திரிகடுகம் திருமாலைக் கண்ணனாகக் கண்டு வணங்கும் பாங்கோடு திகழ்கின்றது.

*மாநிலம் சேவடி யாக தூநீர்*
*வளைநரல் பௌவம் உடுக்கை ஆக*
*விசும்பு மெய்யாக திசை கையாக*
*பசுங்கதிர் மதிய மொடு சுடர் கண் ஆக*
*இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய*
*வேத முதல்வன் என்ப*
*தீதற விளங்கிய திகிரி யோனே*

என்று பாரதம் பாடிய பெருந்தேவனாரின் நற்றிணை கடவுள் வாழ்த்தில் திருமாலின் விசுவரூபம் பாராட்டப்பட்டுள்ளது.

*வென்வேற் கவுரியர் தொன்முது கோடி*
*முழங்கிரும் பௌவம் இரங்கு முன்துறை*
*வெல்போர் இராமன் அரு மறைக்குவித்த*

பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந்தன்றிவ் வழுங்கலூரே

- அகம் 70

மன்மருங் கறுத்த மழவாள் நெடியோன்
முன்முயன் றரிதின் முடித்த வேள்வி
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்ததூண் போல

- அகம் 220

தாதை ஏவலின் மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந்திலையோ நெடுமொழி யன்றோ.

- சிலப்பதிகாரம் - ஊர்காண் காதை

நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று
குரங்கு கொணர்ந்தெறிந்த நெடுமலை எல்லாம்
அணங்குடை யளக்கர் வயிறு புக்காங்கு
இட்ட தாற்றாக் கட்டழற் கடும்பசி.

- மணிமேகலை - உலக வறவி புக்க காதை.

சங்க இலக்கியத்திலும், இரட்டைக் காப்பியங்களிலும் திருமால் வழிபாடும், இராமாயண, பாரதச் செய்திகளும் சிறப்பித்துக் காணப்படுவதால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழகத்தில் வைணவம் முதன்மைச் சமயங்களில் ஒன்றாகத் திகழ்ந்தது என்று காண்கிறோம். பரிபாடலில் ''திருமாற் கிருநான்கு'' என எட்டுப் பாடல்கள் இருந்தன. தற்போது ஆறு பாடல்கள் கிட்டியுள்ளன.

விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்
அறனும் ஆர்வலர்க்கு அருளும் நீ.
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் கொள்கை
மறனும் மாற்றலர்க்கு அணங்கும் நீ.
அங்கண் வானத்து அணிநிலாத் திகழ்தரும்
திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ.

- பரி - 1.

கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு
ஊழி யாவரும் உணரா
ஆழி முதல்வ! நிற் பேணுதும் தொழுது.

- பரி - 2.

மாஅ யோயே! மா அ யோயே!
மறுபிறப்பிபறுக்கும் மாசில் சேவடி
மணிதிகழ் உருபின் மா அ யோயே!

- பரி - 3.

நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின் தண்மையும் சாயலும் திங்களுள.
நின் சுரத்தலும் வண்மையும் மாரி உள.
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள.
நின் நாற்றமும் ஒண்மையும் பூவை உள.
நின் தோற்றமும் அகலமும் நீரின் உள.
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின் வருதலும் ஒடுக்கமும் மருந்தினுள.

- பரி - 4

முதலிய பாடல்களில் திருமால் வழிபாடும், அவதாரக் கதைகளும், அருட் தெய்வமாகிய பாங்கும் புலப்படுகின்றன. பரிபாடலில் ''இருந்தையூர் அமர்ந்த செல்வ'' என்ற திருமாலை விளிக்கும் சொற்றொடர் கொண்டு இருந்தவளமுடையார் கோயில் என்று மதுரை அருகில் இருந்த கோயில் என்றும் கூறுவர். ★

ஆயர் முதுமகள் ஆடிய சாயலாள்
பூவும் புகையும் புனைசாந்தும் கண்ணியும்
நீடுநீர் வையை நெடுமால் அடியேத்தத்
தூவித் துறைபடியப் போயினாள்.

என்ற சிலப்பதிகார துன்பமாலை வரிகளில் வரும் நெடுமால் கோயில் இதுவென்றும் கூறுப. இருந்தையூர்க்கருங்கோழி மோகியார், இருந்தையூர்க் கொற்றப்புலவன் எனும் இரு புதல்வர்கள்

★ தமிழ் இலக்கிய வரலாறு, ஈ.எஸ். வரதராஜ ஐயர், பி.ஏ.,

இங்கிருந்தவர்கள் என்று டாக்டர் உ.வே. சாமிநாதையர் குறிப்பிடுள்ளார்.

பதிற்றுப்பத்திலும் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலை காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய நான்காவது பத்துள் திருவனந்தபுரத்துக் கோயில் கொண்டுள்ள திருமாலின் வழிபாடு குறிப்பிட்டுள்ளது. ★

*கண்பொரு திகிரி கமழ் குரற் துழா அய்*
*அலங்கல் செல்வன் சேவடி பரவி*

என்னும் செய்யுள் அடிகள் பதிற்றுப்பத்தில் காணப்படுகிறது. சிலப்பதிகாரத்திலும் திருமாலின் கிடந்த கோலமும், நின்ற கோலமும் காடுகாண் காதையில் இளங்கோவடிகள் அழகாக வருணித்துள்ளார்.

*நீல மேகம் நெடும் பொற் குன்றத்துப்*
*பால் விரிந் தகலாது படிந்தது போல*
*ஆயிரம் விரித்தெழு தலைய;டையருந்திறற்*
*பாயற் பள்ளிப் பலம் தொழு தேத்த*
*விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தித்*
*திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்*
*வீங்குநீ ரருவி வேங்கடம் என்னும்*
*ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை*
*விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி*
*இருமருங் கோங்கிய இடை நிலைத்தானத்து*
*மின்னுக் கோடியுடுத்து விளங்குவிற் பூண்டு*
*நன்னிற மேகம் நின்றது போலப்*
*பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்*
*தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி*
*நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு*
*பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்.*

*- சிலப்பதிகாரம்*

என்ற வருணனைகள் அந்நாட்களில் திருமாலுக்குரிய கோயில்கள் சிறப்புடன் இலங்கின என்பதைத் தெற்றென எடுத்துக்காட்டு

★ *தமிழ் இலக்கிய வரலாறு, ஈ.எஸ். வரதராஜ ஐயர், பி.ஏ.,*

கின்றன. சிலப்பதிகாரத்துள் ஆய்ச்சியர் குரவையில் வரும் இன்னிசைப் பாடல்கள் மக்கள் திருமாலை வழிபட்டு பாடிப் பரவிய செய்தியை நன்குணர்த்துகின்றன. கண்ணன் திருவிளையாடல்களை இப்பாடல்களில் சிறப்பிக்கப்படுவதையும் காண்கிறோம்.

*கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்*
*இன்று நம் ஆனுள் வருமேல் அவன்வாயில்*
*கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி!*

*பாம்பு கயிறாக் கடல் கடைந்த மாயவன்*
*ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன் வாயில்*
*ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி!*

*கொல்லையஞ் சாரற் குருத்தொசித்த மாயவன்*
*எல்லைநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்*
*முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி!*

*தொழுனைத் துறைவனோ டாடியபின்னை*
*அணிநிறம் பாடுகேம் யாம்.*

*இறுமென் காயல் நுடங்க நுடங்கி*
*அறுவை யொளித்தான் வடிவென் கோயாம்*
*அறுவை யொளித்தான் அயர அயரும்*
*நறுமென் சாயல் முகமென் கோயாம்.*

*வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்*
*கடல்வண்ணன் பண்டொரு நாள் கடல்வயிறு கலக்கினையே*
*கலக்கிய கை அசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை*
*மலர்க்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே.*

*மூவுலகம் ஈரடியான் முறை நிரம்பா வகைமுடியத்*
*தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங் கான்போந்து*
*சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த*
*சேவகன் சீர் கேளாத செவியென்ன செவியே*
*திருமால் சீர் கேளாத செவியென்ன செவியே*

*பெரியவனை மாயவனைப் பேருலகம் எல்லாம்*
*விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்*

*திருவடியும் கையும் திருவாயும் செய்ய*
*கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே*
*கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே.*

*மடந்தொழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்*
*கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்*
*படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது*
*நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே*
*நாராயணா வென்னா நாவென்ன நாவே.*

இந்தச் சிலப்பதிகார இன்னிசைப்பாக்கள் காலம் கடந்து நிற்கும் சிறந்த கவிதைச் சித்திரங்களாக நின்று வைணவத்தின் பழமையையும், பெருமையையும் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. திருவேங்கடமலை குறித்தும், திருவரங்கம் குறித்தும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. திருவேங்கடம் குறித்து பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் குறிப்பிடப்பட்டிருப்பினும் திருவரங்கம் சிலப்பதிகாரத்திலேயே முதன் முதலில் குறிப்பிடப்பட்டுள்ளது. திருமால் குன்றம் எனும் அழகர் மலையையும் சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளதும் காண்கின்றோம். மணிமேகலையில் வைணவ தத்துவம் குறித்து மிகச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

*''காதல் கொண்டு கடல்வணன் புராணம்*
*ஓதினன் நாரணன் காப்பென் றுரைத்தனன்''*

என்று சமயக் கணக்கர் தந்திறங் கேட்ட காதையில் வரும் குறிப்பால் விஷ்ணு புராண நூலில் நாராயணனாகிய காப்புக் கடவுளே பரதத்துவம் என்றிருப்பதை மேற்கோளாக எடுத்துக்காட்டி வாதித்ததாகத் தோன்றுகிறது.

''தேவிற் திருமால்'' என்று திருவள்ளுவ மாலையில் வரும் சொற்றொடர் திருமால் வழிபாடு சிறப்புற்றிருந்ததையே சுட்டிக் காட்டுகிறது.

பண்டைத் தமிழ் மன்னர்களும் திருமாலிடம் பக்தி பூண்டிருந்தனர் என்பதற்குச் சான்றுகள் உண்டு. செல்வக் கடுங்கோ வாழியாதன் பதிற்றுப் பத்தில் பாடல் பெற்ற மன்னன். அவனை ''மாய வண்ணனை மனனுறப் பெற்றவன்'' என்று புலவர்

பாராட்டியுள்ளார். கோச் செங்கண்ணன் என்ற சோழ மன்னன் திருநறையூர்த் திருமாலிடம் அன்பு பூண்டவன். இவ்வண்ணம் சங்க காலத்தே கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரையும் தமிழகத்தில் வைணவம் நன்கு மதிக்கப்பட்ட சமயமாக தழைத்திருந்தது. எனினும் அதே சமயம் சைவமும் தழைத்திருந்தோங்கி வந்தது என்பதில் ஐயமில்லை. மற்றொரு பக்கம் சமண, பவுத்த மதங்களும் சிறப்புற்றிலங்கின. அவற்றிடையே சமயச் சண்டைகள் அவ்வளவாக இல்லை. தத்துவப் போர்கள் நடந்தனவே தவிர சமூக அளவில் மதம் குறுக்கிட்டு முரண்பாடுகளை உருவாக்கவில்லை.

இளங்கோ அடிகள் சமணர். அவரது தமையன் சேரன் செங்குட்டுவனோ சைவன். இவரது நெருங்கிய நண்பராகிய கூல வாணிகன் சாத்தனோ பௌத்த மதத்தினர். இவ்விதம் மூன்று மதத்தினராக இருப்பினும் நெருங்கிய உறவுடன் மனங்கலந்து நட்புறவாடி வாழ்ந்தனர். இது அன்றைய சமுதாயத்தில் மத சுதந்திரம் இருந்தது என்பதும், மதங்கள் சமூக உறவுக்குத் தடையாயிருக்க வில்லை என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

கி.பி. ஐந்தாம், ஆறாம் நூற்றாண்டுகளில், சமண, பௌத்த மதங்கள் தமிழ்நாட்டில் அதிகச் செல்வாக்கு பெறத் தொடங்கின. சமணர்கள் கல்வி கற்பிக்கும் பள்ளிகள், மருத்துவ இல்லங்கள் வைத்து சமுதாயத் தொண்டு செய்து மக்களைத் தம் பக்கம் ஈர்த்தனர். பவுத்தமும், சங்கம் வைத்து சமுதாயக் கூட்டுறவை வற்புறுத்தி ஏற்றத் தாழ்வுகளை நீக்கி, எல்லோரும் சமம் என்ற உணர்வும், பசிப்பிணி போக்க வேண்டும் என்னும் பேரறத்தை முன் வைத்தும் மக்களைக் கவர்ந்தது. இதனால் வைதீக மதங்கட்குச் சிறிது சிரமம் ஏற்பட்டது. பின்னர் கருத்துப் போர்கள் தீவிரமாகப் பரவின. ஒவ்வொரு மதத்தாரும் ஆளும் மன்னனைத் தம் பக்கம் ஈர்க்க முனைந்தனர். அதனால் மதம் (சமயம்) அரசியலில் பங்கு பெறத் தொடங்கியது. ஒரு சமயம் (மதம்) நீடித்து வாழவும், பரவலாகப் பின்பற்றப்படுவதற்கும் அரசின் ஆதரவு தேவைப்பட்டது. ஆதலினால் ஒவ்வொரு மதமும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள கருத்துப் போர் மட்டுமன்றி, சமூகப் போர்களையும் உருவாக்கத் தயங்கவில்லை. கி.பி. 600 - 625ல் ஆட்சி புரிந்த மகேந்திரவர்மன் என்னும் பல்லவ மன்னனும், அதே காலத்தில் மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனாகிய நின்ற சீர் நெடுமாறனும்சமண மதத்தைத் தழுவியிருந்தனர். வைதீக சமயங்களான சைவமும், வைணவமும் செல்வாக்கிழந்து வந்தது.

மூடத்தனமான நம்பிக்கைகளை எதிர்த்து தருக்க வாதம் புரிவோர் மிகுந்தனர். பழைய நம்பிக்கைகள் சீர்குலைந்தன. புதிய கருத்துகட்குச் செல்வாக்கு ஏற்பட்டன. வேதம் கற்பித்த கரும நெறியும், உபநிடதம் கற்பித்த ஞான நெறியும், கீதை கற்பித்த பக்தி நெறியும் மீண்டும் மறுமலர்ச்சியுறச் செய்யும் முயற்சியில் குமாரிலபட்டர், சங்கரர், நாயன்மார், ஆழ்வாராதியர் முயன்றனர். இவர்கள் அனைவரும் தென்னாட்டவரே என்பது குறிப்பிடத்தக்கது. சமண, பவுத்த மதங்களை அகற்றி மீண்டும் வேத மதங்களின் செல்வாக்கு ஏற்பட வேண்டி அருளாளர்கள் முயன்றனர்.

சமண, பௌத்த மதங்களில் கூறப்பட்ட இறை மறுப்புக் கொள்கையும், துறவு மனப்பான்மையும், இறுகிய ஒழுக்கக் கோட்பாடுகளும், தனிமனித இன்பத்திற்கும், விடுதலை யுணர்வுக்கும் சிரமமாக அமைந்தன. இயல்பாகவே புலனின்ப வேட்கையுடைய மனித மனம், அது பாவச் செயல் என்றும், ஒழுக்க நெறிகள் சிறிது மீறப்பட்டாலும் அவனுக்கு உய்தி இல்லை என்றும் கூறும் மதங்களைத் தவிர்த்தது. இறைவனைச் சரண் அடைந்தால் ப்ாவங்கள் தீர்க்கப்படும். உய்தி உண்டு என்றும், ''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'' என்றும் கூறி ஒரு புதிய மறுமலர்ச்சிக் கருத்தினை நாயன்மாரும், ஆழ்வார்களும் கூறினார்கள். பண்ணார் தமிழிசைப் பாடலும், கலையும், அவர்தம் தத்துவக் கோட்பாட்டை எளிதில் மக்கட்கு எடுத்தியம்பின. தமது தூய அருள் வாழ்க்கை யாலும், நெறி காட்டுதலாலும் புதிய விழிப்பினை ஏற்படுத் தினார்கள். மக்கள் இந்தப் புதிய மறுமலர்ச்சியினை ஏற்றுக் கொண்டார்கள். வருணாசிரம தருமத்தை சமண, பௌத்த மதங்கள் கண்டித்தது போல புது மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்களான வைணவப் பெரியோர்களும் குலத்தில் ஏற்றத் தாழ்வில்லை என்றும், எல்லோரும் இறைவனடியார்களே என்றும் கூறினார்கள். இதனாலும் புது நெறியில் மீண்டும் புகுந்தனர். சமூக உறவிலும், ஒழுக்கக் கோட்பாட்டிலும் ஒரு நீக்குப் போக்கான தன்மையும் ஏற்பட்டதும் இம் மனமாற்றத்திற்குக் காரணமாகும்.

தொடக்கக் காலத்தில் சைவமும், வைணவமும் இணைந்து பௌத்த, சமண மதங்களை எதிர்த்ததால் தம்முள் அதிகம் வேறுபாடு காட்டவில்லை. அரியும் அரனும் ஒரே மூலப்பொருளே என்ற கருத்தும் நிலவி வந்தது. சமண, பௌத்த மதங்கள் இந்நாட்டில் செல்வாக்கிழந்தும், மறைந்தும் போன பிறகே சைவமும், வைணவமும் தம்முள் எது பெரிதெனப் பூசல் நிகழ்த்தின. எனினும்

அவை இணைந்தே சென்றன. சமணரைக் கழுவேற்றிய கதை போல வைணவ, சைவ முரண்பாட்டினை விளக்கும் கதைகள் இல்லை. இம்முரண்பாடுகள் சிற்றளவினதாகவே கருதப்பட்டது. திருமலையில் உள்ள இறைவன் முருகனா, திருமாலா என்ற சச்சரவு வெறும் கருத்துப் போராகவே இருந்தது. இராமானுசர் அதைத் தீர்த்து வைத்து விஷ்ணுமூர்த்தியே என்று நிலைநாட்டினார். கிருமிகண்டன் எனும் சைவ மன்னன் பெரியநம்பி, கூரத்தாழ்வார்களது கண்களைப் பறித்த செய்தி சைவ, வைணவ முரண்பாட்டை விளக்கினும், அங்கு மன்னனின் ஆதிக்க வெறியே காரணம் அன்றி கருத்து முரண் பாடன்று. பின் வந்த சைவ மன்னர்கள் வைணவத்திற்கு இடையூறு செய்யவில்லை. கிருஷ்ணதேவராயரும், வைணவத் தலங்களுக்கு மட்டுமன்றி சைவத் தலங்களையும் வழிபட்டு இறையிலி நிலங்கள் அளித்தும், கோயில் கோபுரங்கள் கட்டுவித்த செய்திகள் கல்வெட்டுக்களிலும், ராய வாசகத்தாலும் தெரிகிறது.★ சைவ, வைணவ முன்பாடு கருத்து முரண்பாடே. சமண, பௌத்த மதங்களைப் போல புறமதமாகக் கருதப்படாமல் வேத மதமாகவே கருதியதாலும் மூல தத்துவக் கருத்தில் முரண்பாடின்மையாலும் ஒத்திணைந்து வளர்ந்தன என்றும் காண்கிறோம். ஆதலின் கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையும் தமிழகத்தில் சைவமும், வைணவமும் தத்தம் போக்கில் இணைந்து வளர்ச்சி பெற்றன.

## ஆழ்வார்கள்

தமிழகத்தில் பழங்காலந்தொட்டே வைணவ அடியார்கள் வாழ்ந்து வந்தனர். திருமால் வழிபாட்டிற் சிறந்திருந்த அவர்களை பாகவதர் என்று அழைத்தனர். இல்லறத்திற் சிறந்தாரை அடியார் என்றும், துறவறத்தில் அமைந்தவரை பகவர் என்றும் வழங்கியதாகத் தெரிகிறது. ❑

மேவித்தொழும் அடியாரும் பகவரும் மிக்க துலகே
(திருவாய்மொழி 5 - 2 - 9)

பக்தர்களும் பகவர்களும் தொழுதிறைஞ்ச
(பெரியாழ்வார் - திருமொழி 9 - 6)

---

★ ராய வாசகம் - கிருஷ்ணதேவராயருடைய வாழ்க்கை வரலாற்றை விளக்கிக் கூறும் தெலுங்கு வசன நூல் ஆகும். 1590-1602 இடைப்பட்ட காலத்தில் இயற்றப்பட்டது.

❑ ஆழ்வார்களின் கால நிலை, மு. இராகவையங்கார்.



என்ற மொழிகளும் இதனை வற்புறுத்தும்.

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய
-தொல். மரபியல் 70

என்றும் தொல்காப்பியச் சூத்திரத்தால் கூறப்படுவது திரிதண்ட சன்னியாசிகளாகிய வைணவ அடியார்களே என்று மு. ராகவையங்கார் கருதுகிறார்.

புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்காரும் தம் ''சங்க காலச் சமயம்'' என்ற நூலில் சான்றுகளுடன் வைணவ சமயமே தமிழர் தம் பழமையான சமயம் என்று நிறுவுகிறார்.

பழமையான வைணவ சமய அடியார்களில் சிறப்புற்றிருந்தவர்களின் வரலாறு நமக்குத் தெரியவில்லை. குரு பரம்பரா பிரவாவம் கூறும் முதலாழ்வார்கள் மூவரும் தான் நமக்குக் கிட்டிய வரலாற்றில் முதன்மையான வைணவ அடியார்களாகத் தோன்றுகின்றனர். அடியார்கள் மரபு ஆழ்வார்கள் என்றும் ஆசாரியார்கள் என்றும் இரு பகுப்பாகக் கருதப்படுகிறது. ஆசாரிய பரம்பரை வரலாற்றுச் சான்றுகளுடன் கால வரையறை செய்யப்பட்டுள்ளது.

ஆழ்வார்கட்கு குரு பரம்பரையிற் கூறப்படும் காலவரையறை புனைந்துரையாகவே உள்ளன. எனினும் மு. ராகவையங்கார் அவர்கள் அரிதின் முயன்று தம் பேரறிவின் திறத்தால் கல்வெட்டுக்கள், வடமொழி, தென்மொழி இலக்கியச் சான்றுகளுடன் ''ஆழ்வார்கள் காலநிலை'' என்ற நூலை இயற்றியுள்ளார். இராமானுசரின் சம காலத்தவரான கருடவாஹன பண்டிதர் இயற்றிய வடமொழி ''திவ்ய சூரி சரிதம்'' ★ - ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம், பிரபன்னாம்ருதம், கோயிலொழுகு முதலிய நூல்களை நன்காய்ந்து வெளியிட்ட அவரது காலவரையறை ஏற்புடையதாகவே அறிஞர் பெருமக்களால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது.

---

★ திவ்ய சூரி சரிதம் - நாகர லிபியில் மூலமும், இந்தி உரையுடன் பம்பாய் அனந்தாச்சார்யா இண்டோலாஜிகல் ரிசர்ச் இன்ஸ்டிட்யூட் சார்பில் கே.கே.ஏ. வெங்கடாச்சாரி அவர்கள் பதிப்பித்துள்ளார்.

முதலாழ்வார்களான பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் மூவரும் சமகாலத்தவர்கள் ஆவர். பொய்கையார் காஞ்சியிலும், பூதத்தார் மாமல்லபுரத்திலும், பேயாழ்வார் மயிலாப்பூரிலும் அவதரித்தனர். இம்மூவரும் சஞ்சாரம் செய்து கொண்டு போகும் போது திருக்கோவிலூரில் ஒரு வீட்டின் இடைகழியில் மழைக்கு ஒதுங்கினர் என்றும் இம்மூவரோடும் கூட திருமாலும் இடைபுகுந்து நெருங்கினனாக. இருட்டில் நெருக்குவது யார்? மூவரன்றியும் வேறு யார் உளர் என்று அறிய விரும்பினர் என்றும் தம் ஞானத்தால் ஞான விளக்கேற்றிப் பார்த்தனர் என்றும் குரு பரம்பரை கூறும்.

*வையம் தகளியா வார் கடலே நெய்யாக*
*வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய*
*சுடரொழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை*
*இடராழி நீங்குகவே என்று.*

*- பொய்கையார்*

*அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி*
*ஞானச் சுடர்விளக்கேற்றினேன் நாரணற்கு*
*ஞானத் தமிழ்புரிந்த நான்.*

*- பூதத்தார்*

*திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்*
*அருக்கன் அணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்*
*பொன்னாழி கண்டேன் புரிசங்கைக் கண்டேன்*
*என்னாழி வண்ணன் பால் இன்று.*

*- பேயாழ்வார்*

என்று அம்மூவரும் பாடிய ஞான விளக்கின் ஒளியால் வைணவம் சிறப்புடன் பரவியது.

இம்மூவரில் பொய்கையாழ்வாரே பொய்கையார் என்ற சங்கப் புலவர் ஆகலாம். நச்சினார்க்கினியர், பேராசிரியர் முதலிய உரைகாரர்களும், 'பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுள்' என்று கூறுவதால் இவ்வந்தாதிகளின் பழமை புலப்படுகிறது. இம்மூவரும் திருமழிசையாழ்வார் காலத்தவர் என்று தெரிகிறது. திருமழிசை வரலாற்றில் இம்மூவரும் இடம் பெறுவது காணலாம். திருமழிசையாழ்வார் ஒரு குகையில் யோகத்திலிருக்க

அப்பேரொளி கண்டு வந்த முதலாழ்வார்கள் மூவரும் இவரைத் தரிசித்து மகிழ்ந்தனர் என்ப. திருமழிசையாழ்வார் காலமே இவர்களது காலமுமாகும்.

திருமழிசை ஆழ்வார் வரலாற்றில் பல புனைந்துரைகள் உள்ளன. இஃது இவர் தம் காலத்தின் பழைமையை எடுத்துக் காட்டுகிறது.

திருமழிசை என்னும் தொண்டை நாட்டுப் பதியில் பிறந்த ஆழ்வார், இளமையிலேயே ஞானங் கைவரப் பெற்றவர். இவருக்கு கணிகண்ணர் என்பவர் இணைபிரியாத் தொண்டராயிருந்தார். பிற சமய தத்துவங்களைக் கற்றறிந்து முடிவில் திருமாலே பர தெய்வம் என்று தெளிந்து திருவல்லிக்கேணியில் நெடுங்காலம் யோகத்தில் எழுந்தருளி இருந்தார். முதலாழ்வார் மூவரும் அப்போது இவரைத் தரிசித்தனர். பார்க்கவ முனிவரின் தவம் கலைக்க வந்த கனகாங்கி எனும் அழகிய நங்கைக்குப் பிறந்த பிண்ட ரூபமான குழந்தையை பிரப்பம் புதரில் திருவாளன் என்பான் கண்டெடுத்து தன் மனைவி பங்கயச் செல்வியிடம் தந்து வளர்த்தான் என்றும், அக்குழந்தையே திருமழிசை என்பதும் மரபு.

பேயாழ்வார் உபதேசங் கொண்டு இவர் வைணவரானார் என்று வரலாறு கூறும். இவரது யோக மகிமை கண்டு பாராட்ட வந்த சிவன் ஏதேனும் வரம் கேட்குமாறு பணித்தாராம். ஆழ்வார் மோட்சம் வேண்ட அது இயலாதென சிவன் மறுத்து, வேறு வரம் வேண்டுமாறு கூற ''நான் துணி தைக்கும் ஊசி வழியே நூல் வர வரம் தாரும்'' என்று நகையாட அதுகண்டு சினந்த சிவன் நெற்றிக்கண்ணைத் திறந்துவிட, இதுகண்ட திருமழிசை ''இந்திரன்போல் உடல் முழுதும் கண் காட்டினும் அஞ்சுகிலேன்'' என்று கூறி தமது வலது திருவடியில் பெருவிரலில் உள்ள ஒரு கண்ணைத் திறந்துவிட அதிலிருந்து கிளம்பிய தீ நெற்றித் தீயினும் பெரிதாய் சிவனையும் சுட்டது. சிவன் கங்கையைப் பெய்வித்துப் பெருவெள்ளம் உண்டாக்க அதில் அசையாமல் திருமாலை தியானித்தவாறு வீற்றிருந்தார். இவரது பெருமையைக் கண்டு சிவனும் பாராட்டினான்.

பிதிரு மனமிலேன் பிஞ்ஞகன் தன்னோடு
எதிர்வன் அவன் எனக்கு நேரான்

-நான்முகன் திருவந்தாதி 84

*மற்றுத் தொழுவார் ஒருவரையும் யானின்மை*
*கற்றைச் சடையான் கரிகண்டாய்*

***-நான்முகன் திருவந்தாதி 26***

என்னும் பாசுரங்கள் இக்கதையினை விளக்கும் என்பர். இக்கதை புனைந்துரையாயினும் இவ்வாழ்வாரின் பேராற்றலை விளக்குவதாகும். கொங்கண சித்தன் என்னும் ரசவாதியும், சுக்திகாரன் என்னும் சித்த புருஷனும் இவர் மகிமையில் தோற்ற கதைகளும் இவர் தம் ஆற்றலை விளக்குபவையாகும். இவர் கச்சித் திருவெஃகாவில் தங்கியிருந்தபோது தமக்கு கைங்கரியம் செய்து வந்த கிழவி ஒருத்திக்கு இளமையளித்த செய்தியறிந்து பல்லவராயன் தனக்கும் இளமை தருமாறு வேண்டி நின்றான். அன்புக்கிரங்கி அதிகாரத்திற்குப் பணியாத ஆழ்வார் அரசனுக்கு இளமை தர மறுத்தார்.

கணிகண்ணன் மூலம் அரசன் பாடப் பெற விரும்பியும், ''நாக்கொண்டு மானுடம் பாடேன்'' என்று உறுதியாக அரசனைப் பாராட்டிப் பாடவும் மறுத்துவிட்டார். இதனால் சினமுற்ற வேந்தன் தன் நகர எல்லையைவிட்டுப் போகுமாறு கட்டளையிட்டான். கணிகண்ணன் ஆழ்வாரிடம் கூறி ஊரினின்றும் வெளியேற கூட ஆழ்வாரும் வெளியேறி கச்சித் திருக்கோயிலில் சென்று எம்பெருமானிடம்,

***கணிகண்ணன் போகின்றான் காமரு பூங்கச்சி***
***மணிவண்ணா நீ கிடக்க வேண்டா - துணிவுடைய***
***செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்***
***பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்.***

என்று வேண்டியவுடன் அப்பெருமானும் இவர்களுடன் நகர் விட்டு நீங்கினான். இதுகண்டு நகர் பொலிவற்று இருளுற்றது போலானது. மன்னனும் மந்திரிகளும் மதி கலங்கி மன்னிப்புப் பெற விரைந்து சென்று கணி கண்ணரையும் ஆழ்வாரையும் பணிந்து மீண்டும் கச்சிநகருக்கு எழுந்தருளினார்.

***கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி***
***மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் - துணிவுடைய***
***செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்***
***பைந்நாகப் பாய் படுத்துக் கொள்.***

என்று வேண்ட இறைவனும் எழுந்தருளினான். கச்சிநகர் முன்போல பொலிவுடன் திகழ்ந்தது. இப்பாடல்களில் 'செந்நாப் புலவன்' என்று கூறிக் கொள்வதால் இவரது புலமை புலப்படுகிறது. ஆழ்வார் திருக் குடந்தைக்குப் போகும் வழியில் பெரும்புலியூர் என்னும் சிற்றூரில் ஓர் அந்தணர் வீட்டுத் திண்ணையில் சிறிது பொழுது களைப்பாறி இருக்கையில், அவ்வில்லத்தில் வேதமோதிக் கொண்டிருந்த அந்தணர்கள் இவரை சாதாரணமானவர் எனக் கருதி அவர் காதில் வேதச்சொல் படக்கூடாது என்று ஓதுவதை நிறுத்தி விட்டனர். அக்குறிப்பை அறிந்த திருமழிசை ஆழ்வாரும் அவ் விடத்தை விட்டு எழுந்திருந்து செல்லத் தொடங்கினார். மறுபடியும் வேதம் ஓதத் தொடங்கிய அந்தணர்கள் தாம் விட்ட இடம் தோன்றாமல் திகைத்து நிற்க, ஆழ்வார் தாம் வாயால் வேதம் ஓதல் கூடாதென்று கருதி அவர்கள் விட்ட இடத்தைக் குறிப்பால் நினைவூட்டுவதற்காக அங்கிருந்த கருப்பு நெல்லை நகத்தாலே பிளந்து காட்டினார். ''கிருஷ்ணா நாம்வ்ரீஹிணாம் நகநிர்பின்னம்'' - யஜுர் வேதம் (1-8-9) மந்திரம் (நகத்தால் உரிக்கப் பெற்ற கருப்பு நெல்லரிசி) அவர்கள் குறிப்பால் நினைவுற்று அவர் தம் பெரும் புலமைத்திறம் உணர்ந்து பாராட்டித் தண்டனிட்டனர். இஃது இவர் புலமைக்குச் சான்றாகும். இவர் தம் அருளிச் செயல்களான பாசுரங்களை எல்லாம் காவிரி வெள்ளத்தில் விடச் சென்றவை போக இவர் திருவடிக்கு எதிர் வந்தவை மட்டும் நான்முகன் திருவந்தாதியும், திருச்சந்த விருத்தமும் ஆகும் என்பர். கருத்தாழமும் அழகிய செஞ்சொல்லினிமை மிக்கதுமான திருவந்தாதியும், பண்ணிசை கொழிக்கும் பாடல்களான திருச்சந்த விருத்தமும் மிகச் சிறந்த பாசுரங்களாகத் திகழ்கின்றன.

*இன்றாக நாளையே யாக இனிச் சிறிது*
*நின்றாக நின்னருள் என் பாலதே - நன்றாக*
*நானுன்னை யன்றியிலேன் கண்டாய்! நாரணனே*
*நீ என்னை யன்றி யிலை.*

**-நான்முகன் திருவந்தாதி 7**

*விரைந்தடைமின் மேலொருநாள் வெள்ளம் பரக்க*
*கரந்துலகம் காத்தளித்த கண்ணன் - பரந்துலகம்*
*பாடின ஆடின கேட்டு படுநரகம்*
*வீடின வாசற் கதவு.*

**-நான்முகன் 80**

*காரொ டொத்த மேனி நங்கள் கண்ண! விண்ணின் நாதனே*
*நீரிடத் தராவணைக் கிடத்தி என்பர் அன்றியும்*
*ஓரிடத் தையல்லை எல்லை இல்லை என்பர் ஆதலால்*
*சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சு மாசொலே.*

***- திருச்சந்த விருத்தம் 47***

*ஊனில்மேய ஆவி நீ உறக்கமோடுணர்ச்சி நீ*
*ஆனில்மேய ஐந்தும் நீ அவற்றுள் நின்ற தூய்மை நீ*
*வானினோடு மண்ணும் நீ வளங்கடற்பயணம் நீ*
*யானும் நீ! அதன்றி எம்பிரானும் நீ! இராமனே.*

***- திருச்சந்த விருத்தம் 94***

இவர் வரலாற்றில் பல்லவராயனைப் பற்றிய செய்தி வருவதால் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்கு முன்னர் பல்லவர்கள் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டதாக எவ்வகையாதாரமும் இல்லை என்பது சரித்திரவறிஞர் துணிபாதலின் அதற்குப் பின்பே இவ்வாழ்வார் இருந்தனர். முதல் மகேந்திரவர்மனுக்குரிய பட்டமான குணப்பரன் என்பதனை ஆழ்வார் குறிப்பிடப்பட்டுள்ளார்.

*காப்பு மறந்தறியேன் கண்ணனே என்றிருப்பன்*
*ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும் – ஆக்கை*
*கொடுத்தளித்த கோனே குணப்பரனே யுன்னை*
*விடத்துணியார் மெய் தெளிந்தார் தாம்.*

***- நான்முகன் திருவந்தாதி 93***

என்னும் பாசுரத்தில் பிற ஆழ்வார்கள் யாரும் திருமாலைக் குறிப்பிடாத பெயரான குணப்பரன் என்று குறிப்பிடுவது கொண்டும், பல்லவ மன்னர்களை திருமால் அம்சமாக கருதும் மரபு கொண்டும், ''திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேன் என்னும்'' என்று நம்மாழ்வார் கூறியது போல கூறியதென்றோ, அல்லது அப்பெயர் திருமாலுக்கே ஏற்றது. மன்னர்க்கேற்றதன்று என்னும் குறிப்புத் தோன்றப் பாடியதென்றோ கொண்டும் இவர் பல்லவ மன்னன் காலத்தவர் என்று நிறுவலாம் என்பர் மு. இராகவையங்கார். மாணிக்கவாசகரும்,

*''மலைநாடுடைய மன்னே போற்றி*
*கலையா ரரிகே சரியாய் போற்றி''*

என்று அரிகேசரி என்று பாண்டியர் கொண்டுள்ள சிறப்புப் பெயர் சிவபெருமானுக்கே ஏற்றது என்று குறிப்புத் தோன்ற பாடியது போலவே இவரும் குணப்பரன் என்ற பல்லவ மன்னன் பெயரையும் குறிப்பால் உணர்த்தினர் என்பர். பல்லவ மன்னன் ஆட்சிபுரிந்தது ஏழாம் நூற்றாண்டின் தொடக்கமாதலின் ஆழ்வார் வாழ்ந்த காலம் ஆறாம் நூற்றாண்டின் இறுதியிலும், ஏழாம் நூற்றாண்டின் தொடக்கமுமாம். முதலாழ்வார்கள் ஆறாம் நூற்றாண்டினராகக் கருதலாம்.

## பெரியாழ்வார்

பாண்டிய நாட்டில் திருவில்லிப்புத்தூரில் பிறந்தவர் விஷ்ணுசித்தர் என்னும் பெரியாழ்வார். இவர் திருநந்தவன முண்டாக்கித் திருமாலை கட்டி இறைவனுக்குச் சூடி மகிழ்ந்து கைங்கரியம் செய்து வந்தார். இவர் வணங்கி வழிபட்ட இறைவன் வடபத்திரசாயி என்னும் ஆலிலைத் துயின்ற எம்பெருமான் ஆகும். பாண்டிய மன்னன் ஸ்ரீ வல்லபன் என்பான் ஒருநாள் இரவு நகர் சோதனை செய்து வரும்போது ஒரு வீட்டுத் திண்ணையின் மேல் ஓர் அந்தணர் இருந்து ஒரு வடமொழிச் சுலோகத்தைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

*வர்ஷார்த்த மஷ்டௌப்ரயதேத மாஸான்*
*நிஸார்த்தம் அர்த்தம் தில்ஸம் யதேத*
*வார்த்திக்ய ஹேதோர் வயஸா நவேன*
*பரத்ர ஹேதோரிஹ ஜன்மனாச.*

''மழைக்காலத்துக்கு வேண்டிய பொருள்களை மற்ற எட்டு மாதங்களிலும் முயன்று சேமித்துக் கொள்க. இரவில் வேண்டிய பொருளை பகலிலேயே முயன்று சேர்த்துக் கொள்க. முதுமைக் காலத்துக்கான பொருளை இளமையிலே சேர்த்து வைத்துக் கொள்க. மறுமைக்கான பொருளை இம்மையிலேயே முயல்க'' என்ற அச்சுலோகம் கேட்ட பாண்டியன், மறுமைக்காக தான் ஒன்றும் முயலவில்லை என்று வருந்தினான். பின் மறுமையின்பம் அளிக்கும் வழி எதுவென்று ஆராய்ந்து முரண்பட்ட சமய வாதங்கள், பல்வேறு வகை நெறிகளைக் கூறுகின்றதால் நாடெங்கும் பறையறிவித்து பரதத்துவ நிர்ணயம் பண்ணுகிறவர் இப்பொற்கிழியைப் பரிசாகப் பெறலாம் என்று அறிவித்தான்.

வடபெருங்கோயிலுடையான் ஆழ்வாரிடம், ''நீர் போய் கிழியை அறுத்துக்கொண்டு வாரும்'' என்ன ''நந்தவனத்தில் களைக் கொட்டைப் பிடித்து கைங்கரியம் செய்து தழும்பேறிய இக்கைகளால் கிழியறுக்க முடியுமோ?'' என்று கேட்க, ''அதைப் பற்றி உமக்கென்ன கவலை. உம்மைக்கொண்டு பரதத்துவ நிர்ணயம் செய்வது நானன்றோ?'' என்று எம்பெருமான் விடைகூறி அனுப்பி வைத்தார். பட்டர்பிரான் ஆகிய பெரியாழ்வார் மதுரைக்குச் சென்று பாண்டியன் முன்னிலையில் சமய வாதிகளுடன் தருக்கித்து வைணவமே மெய்ப்பொருட் சமயமென நிறுவி கிழியறுத்தார்.

பொற்கிழிச் செல்வத்தைக் கொணர்ந்து திருவில்லி புத்தூருக்கு வந்து வடபெருங்கோயிலுடையானுக்கு திருப்பணிகள் செய்துகொண்டு வந்தார். இவருக்கு ஒரு குமாரர் உண்டென்று தெரிகிறது. அவர் ஸ்ரீரங்கத்தில் இருந்துகொண்டு கோயில் நிர்வாகம் செய்து வந்தார் என்றும், அவரது மரபினரே உத்தமநம்பிகள் மரபு என்றும் உத்தமநம்பி வைபவம் என்னும் நூல் கூறுகிறது. இவருடைய வளர்ப்பு மகள் ஆண்டாள் எனப்படும் சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய கோதாதேவியாகும். பெரியாழ்வார் ஒருநாள் நந்தவனத்தில் துளசிச் செடியருகே பெண் மகவொன்றைக் கண்டெடுத்தார். அக்குழந்தையை வளர்த்து கல்வி கேள்விகளில் சிறப்பிக்கும்படி அருமையாக வளர்த்து வந்தார். ஆண்டாள் பருவம் அடைந்ததும், திருமாலையே காதலனாக வரித்து ''மானுடவர்க் கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்'' என்று கூறி இறைவன் மேல் காதலுற்று கசிந்துருகினாள். காமதேவனை வழிபட்டுத் தன்னை ஆய்ப்பாடிச் சிறுமியாக உருவகித்துக் கொண்டு பாடிய 'திருப்பாவை'யும், காதலால் கசிந்து பாடிய 'நாச்சியார் திருமொழி'யும் இவரது கவித்திறனும், பக்தியும் புலப்படுத்தும் அரிய பாசுரங்களாக வெளிப்பட்டுள்ளன என்பதைப் புலப்படுத்தும். பெரியாழ்வார் கட்டிய பூமாலைகளை அவரறியாமல் தான் சூடிக்கொண்டு ''என் அழகு எம்பெருமானுக்கு ஏற்கக் கூடியதோ'' என்று கண்ணாடியில் அழகு பார்த்துவிட்டு மீண்டும் மாலையைச் சுருட்டிக் குடலையில் வைத்து விடுவார். ஆழ்வார் ஒருநாள் பூமாலையில் நீண்ட மயிர் ஒன்றிருத்தல் கண்டு அதைத் தவிர்த்து மாலை சாத்தாதிருந்தார். அன்றிரவு கனவில் எம்பெருமான் வந்து தனக்கு ஆண்டாள் சூடிக் கொடுத்த பூமாலைகளே மிகவும் விருப்பம் என்றும், இனித் தினந்தோறும் அவள் சூடிக் கொடுத்த மாலைகளே கொண்டு வருமாறும் பணித்தான். திருவரங்கநாதன் கனவில் வந்து ஆண்டாளை திருவரங்கத்துக்கு அழைத்து வருமாறு பணிக்க

அவ்விதமே பல்லக்கில் அழைத்துச் சென்று அரங்கன் திரு முன்பே செல்ல ஆண்டாளும் அரங்கனோடிணைந்து மறைந்தனள்.

அரங்கனும் பெரியாழ்வாரைப் பார்த்து, ''நீர் எனக்கு மாமனானீர்'' என்று பாராட்டி திருவில்லிபுத்தூருக்கே சென்று கைங்கர்யம் செய்து வருமாறு பணித்தான். அவ்வண்ணமே ஆழ்வாரும் திருவில்லிபுத்தூரில் உறையலானார். ஆழ்வாரின் பாசுரங்கள் அவரது வேதநூல் அறிவும், அனுபவமும், பக்தியும் புலப்படுத்தும். கண்ணனைக் குழந்தையாகக் கண்டு தான் தாயாகப் பாவித்துப் பாடிய இவரது பாசுரங்கள் தான் 'பிள்ளைத்தமிழ்' என்னும் பிரபந்தம் தோன்றக் காரணமாயிற்று.

''வன்மையாவதுன் கோவிலுள் வாழும்
வயிட்டணவன் எனும் வன்மைகண்டாயே''
- *பெரியாழ்வார் திருமொழி 5-1-3*

உண்ணாநாள் பசியாவ தொன்றில்லை
ஓவாதே நமோ நாராயணா என்று
எண்ணா நாளும் இருக்கு எசுர் சாம
வேத நான்மலர் கொண்டுன பாதம்
நண்ணா நாள் அவை தத்துறு மாகில்
அன்றெனக் கவை பட்டினி நாளே

என்று கூறும் பாடல்களில் அவரது பக்தியும், கோயிலில் கைங்கர்யம் செய்து வந்த நிலையும் புலப்படுத்துபவையாகும். வேத நூலில் பயிற்சி மிக்கவர் என்பதும் தெளிவாக்குகின்றது.

கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்
எடுத்துக்கொள்ளில் மருங்கை இறுத்திடும்
ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான் மெலிந்தேன் நங்காய்
*(1-1-9)*

சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்துணை செய்யினும் என் மகன் முகம் நேரொவ்வாய்
வித்தகன் வேங்கடவாணன் உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்புலி கடிதோடி வா
*(1-4-3)*

என்றும் பாசுரங்கள் பெரியாழ்வாரின் தாய்மையுள்ளத்தை அழகாகச் சித்தரித்துக் காட்டுகின்றன. இவரது பிள்ளைத்தமிழ் அள்ள அள்ளக் குறைவிலாத அமுதமாக இனிக்கும் தகையது. கற்றுக் கற்று மகிழும் கனிவுடையது.

*சோர்வினால் பொருள் வைத்த துண்டாகில்*
*சொல்லு சொல்லென்று சுற்றமிருந்து*
*ஆர்வினவிலும் வாய் திறவாதே*
*அந்த காலம் அடைவதன் முன்னம்*
*மார்வம் என்பதோர் கோயி லமைத்து*
*மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி*
*ஆர்வம் என்பதோர் பூவிட வல்லார்க்கு*
*அரவ தண்டத்தில் உய்யலுமாமே*

*(4-5-3)*

*துப்புடையாரை அடைவ தெல்லாம்*
*சோர்விடத்துத் துணை யாவர் என்றே,*
*ஒப்பிலேன் ஆகினும் நின்னடைந்தேன்*
*ஆனைக்கு நீ அருள் செய்தமையால்*
*எய்ப் பெண்ணை வந்து நலியும் போது அங்கு*
*ஏதும் நான் உன்னை நினைக்க மாட்டேன்*
*அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்*
*அரங்கத் தரவணைப் பள்ளியானே.*

*(4-10-1)*

என்னும் பாசுரங்களை நெஞ்சத்திருத்தி நெறிப்படத் தக்கனவாகும். பெரியாழ்வார் காலத்தை ஆய்ந்த மு. இராகவையங்கார் தம் ஆழ்வார்கள் கால நிலை என்ற நூலில் உத்தேசமாக கி.பி. 690-775 ஆண்டில் வாழ்ந்ததாகக் கூறுவார். வேள்விக்குடி, சிம்மனூர் செப்பேடுகளை ஆராய்ந்து அக்காலத்தில் பல்லவர்கள் வைணவத்தையும், பாண்டியர்கள் சைவத்தையும் ஆதரித்தனர் என்றும் ஸ்ரீமாறன் ஸ்ரீ வல்லபன் காலத்தில் அவனை வைணவனாக்கினார் என்றும் அவர் கூறுகிறார். ஸ்ரீ வல்லபனுக்கு முன்பிருந்த பராந்தகன் நெடுஞ்சடையான் என்பவனே ஸ்ரீ வல்லபன் என்பது டி.ஏ. கோபிநாதராயர் கருத்து. மேலும் ஹரிவம்சம் என்ற ஜைன நூலில் அதன் ஆசிரியர் ஜினசேனர் இந்திராயுதன் என்ற இரட்ட வேர் ன் வடநாட்டையும், ஸ்ரீ வல்லபன் தென்னாட்டையும் ஆண்ட காலத்தே சகாப்தம் 705 (கி.பி.783)ல் தாம் நூலை எழுதி முடித்ததாக

குறிப்புள்ளது. அந்த மன்னன் நெடுஞ்சடையனே என்றும், அவர் காலத்தே தான் பெரியாழ்வார் இருந்திருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. பெரியாழ்வாரின் திருமொழியில்,

*முன்னர் மறுக மைத்துனன் மார்க்கொருதேரின் மேல்*
*முன்னங்குச் சென்று மோழை எழுவித் தவன்மலை*
*கொன்னவில் கூர்வேற்கோ நெடுமாறன் தென்கூடற்கோன்*
*தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ்சோலையே*
*(பெரியாழ்வார் திருமொழி 4 - 2)*

என்ற பாசுரமும் இவ்வாய்வுக்கு ஆதாரமாகின்றது. அவர் குறிப்பிட்ட கோ நெடுமாறன் சாசனம் கூறும் நெடுஞ்சடையனே என்பது இராகவையங்கார் கருத்தாகும். இஃது ஏற்புடைத்தே.

இக்காலத்தை உறுதி செய்வதுபோல ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவை 13-ம் பாசுரத்தில் ஒரு செய்தி கிடைத்திருக்கின்றது.

*புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்*
*கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்*
*பிள்ளைகள் எல்லோரும் பாவைக் களம் புக்கார்*
*வெள்ளி யெழுந்து வியாழம் உறங்கிற்றுப்*
*புள்ளும் சிலம்பின காண்! போதரிக் கண்ணினாய்*
*குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே!*
*பள்ளிக் கிடத்தியோ பாவாய் நீ நன்னாளால்*
*கள்ளந் தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய்*
*- திருப்பாவை - 13*

என்ற பாசுரத்தில் வரும் நன்னாளாகிய 'வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிய' நாள் கி.பி. 731-ம் ஆண்டு மார்கழிப் பௌர்ணமியன்று அதிகாலை 3-50-4 மணிக்கு வெள்ளி எழுச்சியும், வியாழன் வீழ்ச்சியும் ஒப்ப நிகழ்ந்ததாக ஒளி நூற் புலவர்கள் கணித்தறிந்துள்ளதாக மு. இராகவையங்கார் தம் நூலில் கூறியதும் ஏற்புடையதாகவே காணப்படுகிறது.

மேலும், கருடவாஹன பண்டிதரின் 'திவ்ய சூரி சரிதத்தில்' ஆண்டாள் திருமணம் நடந்தபோது சடகோபர் (நம்மாழ்வார்) இருந்ததாகக் குறிப்பிடுகின்றார். சடகோபர், பொய்கையார்

பூதத்தார், பேயார், பக்திசாரர், தொண்டரடிப் பொடியாழ்வார், குலசேகரர், மதுரகவிகள் முதலியவர்களும் ஆண்டாளின் பிரபந்தங்களைக் கேட்டானந்தித்ததாகவும் குறிப்புண்டு. ஆதலின் நம்மாழ்வார், திருமங்கை ஆழ்வார் ஆகியோரும் இக்காலத்தவரே என்று அறிஞர்கள் கருதுவர்.

ஆண்டாளின் திருப்பாவை தமிழகம் மட்டுமன்றி பிற மாநிலங்களிலும் நம்நாட்டில் அந்தந்த மாநில மொழி எழுத்துக்களில் எழுதப் பெற்றுப் பாராயணம் செய்யப்படுகின்றன. தெலுங்கு எழுத்தில் எழுதப்பட்ட தமிழ் பாசுரங்கள் ஆன திருப்பாவை திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரும் அவ்வப்போது வெளியிட்டு விநியோகித்து வருகின்றனர். தேவநாகர லிபி, கன்னடம், குஜராத்தி முதலிய எழுத்துக்களில் எழுதப்பட்டும் படிக்கின்றனர். இந்தியாவில் மட்டுமன்றி சயாம், தாய்லாந்து, இந்தோனேஷியா முதலிய கீழை நாடுகளிலும் திருப்பாவை தமிழ் பாசுரங்கள் வழங்கி வருவதாக பன்மொழிப்புலவர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் தமது 'தமிழும் பிற பண்பாடுகளும்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். கோதை தமிழ் குவலயமெங்கும் முழங்குவது பெருமைக்குரிய செய்தியாகும். திருப்பாவை அண்மைக் காலத்தில் தமிழ் நாடெங்கும் மிகப் பரவியுள்ளது. மார்கழி மாதம் முழுவதும் திருப்பாவை வியாக்கியானங்கள், மாநாடுகள் தமிழகத்தில் ஆங்காங்கே நடைபெறுகின்றன. வானொலியிலும் திருப்பாவை விளக்கவுரைகள் ஒலிபரப்பப்படுகின்றன.

திருப்பாவையைப் போலவே ஆண்டாளின் பிற பாசுரங்களான நாச்சியார் திருமொழியும் உயர்ந்த கவிதை எழில் மிக்க பாடல்களாகும். உணர்ச்சி மிக்க கவிதைகளாகவும், பக்தி ரசம் மிக்க பாசுரங்களாகவும் அவை திகழ்கின்றன.

*கார்க்கோடற் பூக்காள் கார்க்கடல் வண்ணன் என்மேலும் மைப்*
*போர்க் கோலம் செய்து போரவிடுத்தவன் எங்குற்றான்?*
*ஆர்க்கோ இனி நாம் பூசலிடுவது? அணிதுழாய்த்*
*தார்கோடும் நெஞ்சம் தன்னைப் படைக்க வல்லேனந்தோ*
*- நாச்சியார் திருமொழி 10 - 1*

*கண்ணன் என்னும் கருந்தெய்வம் காட்சி பழகிக் கிடப்பேனைப்*
*புண்ணிற் புளிப் பெய்தாற் போலப்புறம் நின்றழகு பேசாதே*

*பெண்ணின் வருத்தம் அறியாத பெருமான் அரையிற் பீதக*
*வண்ண ஆடை கொண்டென்னை வாட்டந் தணிய வீசீரே*
*- நாச்சியார் திருமொழி 13 - 1*

*உள்ளே உருகி நைவேனை உளலோ இலளோ என்னாத*
*கொள்ளை கொள்ளிக் குறும்பனை கோவர்த்தனனைக் கண்டக்கால்*
*கொள்ளும் பயன் ஒன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும்*
*அள்ளிப் பறித்திட்டவன் மார்வில் எறிந்தென் அழலைத் தீர்வேனே.*
*- நாச்சியார் திருமொழி 13 - 8*

### திருமங்கை ஆழ்வார்

திருமங்கை ஆழ்வார் சோழ மண்டலத்தில் திருமங்கை என்னும் நாட்டில் திருவாலி திருநகரி என்ற ஊருக்கருகில் திருக் குறையலூரில் கள்ளர் குடியில் சேனைத் தலைவர் ஒருவருக்குக் குமாரராய் அவதரித்தார். இவர் கருநிறமுடையவராய் இருந்தமையால் நீலன் என்று பெயரிட்டனர். இவர் வீரம் மிக்க படைத்தலைவரானதால் ஒரு சிற்றரசாகி திருமங்கை மன்னன் என்று பெயர் பெற்றார். பரகாலன், கலியன் என்ற பட்டப் பெயர்களையும் ஏற்ற பெருவீரர். இவர் திருவெள்ளக்குளம் என்னும் ஊரில் வளர்ந்து வந்த குமுதவல்லி எனும் நங்கையை காதலித்தார். அப்பெண் வைணவர்க்கே மணம் செய்வேன் என்று கூறியமையின் இவரும் வைணவ தீட்சை பெற்று அவளை மணந்து கொண்டார். தினந்தோறும் ஆயிரத்தெட்டு வைணவர்கட்கு அமுது செய்விக்கும் விரதம் மேற்கொண்டு குமுதவல்லியாருடன் வாழ்ந்து வரும் நாளில், அரசனுக்குத் தரவேண்டிய திறை தர இயலாமல் செலவழித்து விட்டார். திறை கேட்ட அரசனுக்கும், இவருக்கும் சினமூண்டு போரிட்டுச் சிறைப்பட்டார். கச்சி எம்பெருமானார் இவர் கனவில் தோன்றி, ''காஞ்சிபுரம் வந்தால் வேண்டிய பொருள் தருவோம்'' என்ன, ஆழ்வார் காஞ்சியில் கப்பப் பொருள் கட்டுவதாகக் கூறினார். அரசனும், ''காஞ்சியிற் பொருள் தந்தால் சிறைவீடு செய்'' என்று பணித்தான். அவ்வண்ணமே வேகவதி நதிக்கரையில் நிதி கிடைக்கப் பெற்று அரசனுக்குரிய திறை செலுத்தினார். அரசனும் இவரது பெருமையுணர்ந்து வெகுவாகப் பாராட்டிப் பணிந்தான். அப்பொருளை இவரிடமே தந்து பாகவதர்கட்குத் தருமாறு பணித்தான். அப்பொருள் அனைத்தும் அன்னதானத்திலே செலவழித்தார். சில காலஞ் சென்றதும் பொருளின்மையால் வழிப்பறி செய்தாவது விரதத்தை நிறைவேற்ற வேண்டி வழிப்பறி செய்யலானார். நீர் மேல் நடப்பான், நிழலில் ஒதுங்குவான் (ஒருவன்

நிழலில் அவனறியாதவாறே ஒதுங்குபவன்), தாள் ஊதுவான் (பூட்டை ஊதியே திறப்பவன்), தோலாவழக்கன் (வழக்கில் தோற்காதவன்) என்னும் நால்வருடன் வர, காட்டு வழியில் பதுங்கியிருந்து கொள்ளையடித்து வைணவ அடியார்களுக்கு அன்னதானம் அளித்து வருவாராயினார். இறைவன் இவரை தடுத்தாட்கொள்ள அந்தணர் தம்பதிகளாக வேடம் புனைந்து வர, திருமங்கைமன்னன் அவர் ஆடையாபரணங்களைப் பறித்துக் கொண்டு, அவன் காலில் அணிந்திருந்த கணையாழி மோதிரத்தைக் கழற்ற முடியாமல், அதைவிட மனமின்றி பற்களால் கடித்து வாங்க, எம்பெருமான் அவரை நோக்கி 'கலியனோ?' (வலிவுடையவனோ) என்று அழைத்தருளினார். அதனால் அவர்க்கு கலியன் என்றும் பெயர் பெறலானார். அந்தணரிடம் அபகரித்த பொருட்சுமையைக் கட்டித் தூக்கும்போது தூக்க முடியாமல் மிகவும் கனத்து மலையைப் போலக் கிடக்க, ''நீ என்ன மந்திரம் போட்டாய்? அம் மந்திரத்தை எனக்குச் சொல்லு'' என்று கேட்க எம்பெருமானும், நாராயண மந்திரத்தை உபதேசிக்கப் பெற்றார். அன்று தொட்டு திருமாலடியாராதி மயர் வற மதி நலம் அருளப் பெற்றவரானார். அன்று முதல் திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைக் பாடவல்லவரானார். இந்திய நாடு முழுவதும் திரிந்து திவ்ய தேசங்களைத் தரிசித்து வந்தார். ஆந்திர நாட்டில் உள்ளே சென்று காண்பரிய சிங்கவேள் குன்றம் எனும் அகோபிலத்தையும் தரிசித்தார். பின்னர் நாகப்பட்டினத்து புத்த விகாரத்தை அழித்து அங்குள்ள பொற்பிரதிமையைக் கவர்ந்து திருவரங்கத்தில் மதில் கட்ட எண்ணினார். தம் பரிவாரங்களுடன் புறப்பட்டு நாகப்பட்டினம் அடைந்தார். அற்புதச் சிற்ப வேலைப்பாடுடைய அந்த விகாரத்தின் நுழைவாசல் காணாமல் தேடி ஆராய்ந்து, அதன் சிகரத்தில் சக்கரவடிவில் ஒரு இயந்திரம் சுற்றிச் சுழன்று கொண்டிருப்பதைக் கண்டார். அதை நிறுத்துவதற்காக வாழைத் தண்டுகளைக் கொணர்ந்து சிறுசிறு துண்டுகளாக்கி அச்சக்கரத்தின் இடையே இடைவிடாது கொடுத்து வர, அந்த வாழைத் தண்டின் நூல்கள் சுற்றிக்கொண்டு சக்கரம் நின்று போனது. ★

குருப்ரம்பரா பிரபாவத்தில் மற்றொரு கதை காணப்படு கிறது. புத்த விக்கிரகம் செய்த சிற்பி ஒரு தீவில் இருக்கிறான் என்று அறிந்து அந்த தீவிற்குச் சென்று ஆழ்வாரும், பரிசனங்களும் அவனிடம், ''நீர் இங்கே இருக்கிறீர் உம் சிற்பத்தைதுருக்கர் கொண்டு சென்று விட்டனர்'' என்று பொய் கூற அவன் வருந்தி யாரோ ஒரு

★ ஸ்ரீரங்கம் ஸ்ரீ வைஷ்ணவ சபா பொன்விழா மலர் - 1978.

துரோகி இரகசியத்தைச் சொல்லிவிட்டான். நான் மிக அற்புதமாக சிகரத்தின் மேலிருந்து ஒருவருக்கும் தெரியாதவாறு கோமுகை விழுகிற ஜலதாரையின் கீழே கல்லுக்குள் ஒரு இரும்பாணியிலே சங்கிலி சூத்திரம் பண்ணினேன். அதை எப்படி அறிந்து கொண்டு போனார்களோ என்று புலம்ப, அதன் இரகசியம் அறிந்து கொண்ட திருமங்கையாழ்வார் மரக்கலம் ஏறி, கப்பல் வணிகனிடம் ஒரு சிறு வஞ்சகம் செய்து பணம்பெற்றுக்கொண்டு வந்தார். வந்து புத்த பிரதிமையை எடுத்தார் என்று கூறுவார். பின் அந்த விக்கிரகத்தை ஒரு வயலில் சேற்றில் ஒளித்து வைத்து இருக்கும் போது வயலுக்குச் சொந்தக்காரரான உழவன் மறுநாள்காலை உழ வரவும், ஆழ்வார் இது என் பாட்டனுக்குச் சொந்தமான நிலம் என்று வழக்காட, உழவன் நான் பத்திரங்களை எடுத்துக்கொண்டு நாளை வருகிறேன் என்று சொல்லவும், அன்றிரவே விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு திருவரங்கம் வந்து அடைந்தார்கள். அந்த விக்கிரத்தை உருக்கி விற்று திருவரங்கச் சுற்று, மதில், விமானம் முதலியன எடுத்தார். இச்செய்தி 'கோயிலொழுகு' என்ற நூலிலும் உள்ளது.

திருமங்கைமன்னன் திருஞான சம்பந்தரைச் சந்தித்ததாக திவ்ய சூரி சரிதத்தில் காணப்படுகிறது. ★ இவரது படைப்புக்களான பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல் என்பன திவ்ய பிரபந்தத்தில் சிறப்புற்றிலங்குகின்றன. திருமங்கையாழ்வார் தமது திருநெடுந் தாண்டகத்தை தேவகானத்தில் இசைத்துப் பாடியதாகவும், அதற்குகந்த எம்பெருமான், ''உமக்கு வேண்டிய வரம் பெற்றுக்கொள்ளும். என்ன தேவரீர் மார்கழி மாதத்தில் கண்டருளுகிற அத்யயன உற்சவத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த திராவிட வேதத்தைத் திருச்செவி சாத்தியருள வேண்டும்'' எனப் பிரார்த்திக்க அவ்வண்ணமே அருள் புரிந்தார். அவ்வாணையின்படி ஆழ்வார் திருநகரியிலிருந்து அர்ச்சாரூபியான நம்மாழ்வாரை வருடந்தோறும் திருவரங்கத்திற்கு எழுந்தருளப் பண்ணினார். இதுவே பிற்காலத்தில் பகல் பத்து உற்சவமாக அமைந்தது. இராப்பத்து உற்சவமும், இயற்பா உற்சவமாக நடந்து பட்டர் காலத்தில் பகற்பத்துக்கு முந்தின நாள் திருநெடுந்தாண்டகம் உற்சவமும் நடந்தன. திருமங்கையாழ்வார் இறுதிக் காலத்தில் திருக்குறுங்குடிக்கு வந்து சில காலம் தங்கியிருந்து திருநாட்டுக் கெழுந்தருளினார்.

---

★ ஆழ்வார்கள் கால நிலை. மு. இராகவையங்கார்.

ஆழ்வார் பாசுரங்களில் அவரது வரலாற்றுச் சான்றுகளையும், கால வரலாறும் நன்கு புலப்படுகின்றன.

*கூர் அணிந்த வேல்வலவன் ஆலிநாடன் கொடிமாட*
*மங்கையர்கோன்.*

*- பெரிய திருமொழி 4.4.10*

*வாட்டிறற்றானை மங்கையர் தலைவன்.*

*- 10.9.10*

*மருவலர்தம் முடல் துணிய வாள்வீசும் பரகாலன்.*

*-3.9.10*

*கற்றார்பரவும் மங்கையர் கோன்*
*காரார்புயற்கைக் கலிகன்றி*

*-5.1.10*

என்னும் சொற்றொடர்கள் இவர் திருமங்கை நாடாண்ட மன்னன் என்பதை மெய்ப்பிக்கும். இவரது காலம் எட்டாம் நூற்றாண்டாகும்.

*மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும்*
*நீண்முடி மாலை வயிர மேகன்*
*தன்வலி தன்புகழ் சூழ்ந்த கச்சி*
*அட்டபுய கரத் தாதி தன்னை*
*கன்னிநன் மா மதிள் மங்கை வேந்தன்*
*காமருசீர்க் கலிகன்றி குன்றா*
*இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை*
*ஏத்தவல்லார்க்கிடம் வைகுந்தமே.*

*- பெரிய திருமொழி 2.8.10*

என்ற பாசுரத்தில் வரும் வயிரமேகன் என்னும் பெருவேந்தன் கி.பி. 754ல் கச்சியில் படையெடுத்து வந்த இரட்ட வேந்தனாவான் என்றும், அவனது சமகாலத்தவரே ஆழ்வார் என்பதும் மு. இராகவையங்கார் நன்கு ஆராய்ந்து கூறியுள்ளார்.

சம்பந்தரால் சைன சமயத்திலிருந்து சைவ சமயத்துக்குத் திருப்பப்பட்ட பாண்டியன் 'நின்ற சீர் நெடுமாறன்' காலமும், சம்பந்தர்க்குச் சமகாலத்தவராகக் கருதப்படும் சிறுத்தொண்டர்

என்னும் பரஞ்சோதி மன்னவர்க்குத் தண்டு போய் வடபுலத்து வாதாவித் தொன்னகரம் துகளாக்கியது கி.பி. 710-ம் ஆண்டில் இருக்க வேண்டும் என்றும், திருஞான சம்பந்தரின் சம காலத்தவரான திருநாவுக்கரசர் சமண மதத்திலிருந்து சைவ மதத்திற்குத் திருப்பிய பல்லவ அரசன் மகேந்திரவர்மன் என்றும், அவன் கி.பி. 600-640 வரை அரசாட்சி செய்தான் என்றும், இக்கால எல்லையில் திருமங்கை மன்னன் வாழ்ந்தார் என்றும், உத்தேசமாக கி.பி. 660ல் அவதரித்து ஒரு நூற்றாண்டுக் காலம் வாழ்ந்தவராகக் கொள்ளலாம் என்றும் மு. இராகவையங்கார் கூறுகிறார்.

சேரமான் பெருமாள் நாயனாரும், சுந்தரமூர்த்திகளும் கயிலை சென்ற காலமே கொல்லம் ஆண்டு தொடக்கம் என்று ஒரு சாரார் கூறுவர். ஆயின் அது கொல்லம் எனும் நகரம் உண்டான காலத்தைக் குறிக்கும் என்று ஸ்ரீ கோபிநாதராயர் விளக்கியுள்ளார். இரண்டாம் நரசிம்மவர்மன் என்றும், இராஜசிம்ம பல்லவனால் மாமல்லபுரத்தில் திருமால் கோயில் ஒன்று கட்டப்பட்டதாகவும், அப்பல்லவ மன்னனின் அவைப் புலவரான தண்டியாசிரியர் தாம் இயற்றிய 'அவந்தி சுந்தரி' கதையின் தொடக்கத்தில் ''மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலில் பள்ளி கொண்டருளிய திருமால் மூர்த்தியின் மணிக்கட்டொன்று பின்னமுற்றதைச் செப்பனிட்ட சிற்பியின் விருப்பப்படி அவனுடன் அங்கு சென்று தரிசித்தபோது பெருமானது திருவடிகளைக் கடலலைகள் மோதியலம்பும்படி மூர்த்தியிருந்த நிலையைச் சிறப்பித்து'' எழுதியிருக்கிறார். இக்கோயிலை திருமங்கை மன்னனும் கண்டு பரவியிருக்கிறார் எனத் தெரிகிறது. இன்ன பிற சான்றுகள் கொண்டு இவ்வாழ்வார் ஏழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அவதரித்து எட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் திருநாடலங்கரித்தவர் என்பது ஆய்வாளர்கள் துணிபு. ஆழ்வார் திருப்பாசுரங்களின் அருமை பெருமைகளை உலகுக்கு வியாக்கியான ரூபமாக வெளியிட்ட ஸ்ரீபராசர பட்டர், ஸ்ரீ பெரியவாச்சான் பிள்ளை ★ முதலிய உரைகாரர்கள் இவ்வாழ்வாரிடம் பெரிதும் ஈடுபாடுடையவர்கள் ஆவர். பட்டரின் தந்தையாரும் இராமானுசரின் முதன்மைச் சீடருமான கூரத்தாழ்வார் தனியன் ஒன்று இவரது சிறப்பை எடுத்துக் காட்டும்.

---

★ *பெரிய திருமொழி - பெரியவாச்சான் பிள்ளை. மணிப்பிரவாள உரையை திரு தெ. ஞானசுந்தரம் அவர்கள் தமிழாக்கம் செய்து, தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சார்பில் வெளியிடப்பட்டுள்ளது.*

*நெஞ்சக்கிருள்கடி தீபம் அடங்கா நெடும் பிறவி*
*நஞ்சுக்கு நல்ல அமுதம், தமிழ் நன்னூற்றுறைகள்*
*அஞ்சுக்கிலக்கிய மாரணசாரம் பரசமயப்*
*பஞ்சுக் கனலின் பொறி பரகாலன் பனுவல்களே.*

**- தனியன்**

### தொண்டரடிப்பொடி

சோழவள நாட்டில் புள்ளம் பூதங்குடிக்கு அருகிலுள்ள மண்டங்குடி எனும் ஊரில் தொண்டரடிப்பொடி ஆழ்வார் என்னும் விப்ரநாராயணர் அவதரித்தார். அந்தண குலத்தில் அவதரித்த இவர் வேதம், வேதாங்கங்கள் யாவும் கற்றறிந்தவராக இருந்து திருமாலடியார்ராய்த் திகழ்ந்தார். திருவரங்கம் வந்திருந்து திருநந்தவனம் சமைத்துப் பல்வகைப் பூமாலைகளும், திருத்துழாய் மாலையும் கட்டி எம்பெருமானுக்குச் சாத்தி வழிபட்டு வந்தார்.

காவிரியின் வடகரையில் திருக்கரம்பனூரில் தேவாம்சமாகப் பிறந்த தேவதேவி என்னும் கணிகை, உறையூருக்குச் சென்று சோழ மன்னனிடம் ஆடல் பாடல்களில் மகிழ்வித்துப் பரிசுகள் பெற்றுத் திரும்பி வந்தாள். தன் தமக்கையுடன் கூட வந்த தேவதேவி வழியில் விப்ரநாராயணரது நந்தவன மர நிழலில் இளைப்பாற அமர்ந்தாள். ஆழ்வார் இவர்களை ஏறெடுத்துப் பார்க்காமல் தம் கடமையில் மூழ்கியிருக்கக் கண்ட தேவதேவி தன் தமக்கையிடம், ''இவன் அலியோ? பித்தனோ? நம்மைக் காணாது இருக்கின்றானே?'' என்ன, அதற்கவள் ''இவர் திருமாலடியார். நம் போன்றோர் வடிவழகைப் பொருட்படுத்தாத வைராக்கியமுடையவர். நீ இவரை மயக்கி உன் வயப்படுத்தினால் நான் உனக்கு ஆறு மாதம் அடிமையாவேன்'' என்று ஆணையிட்டாள். ''நான் இவரை மயக்காவிட்டால் நான் உனக்கு ஆறு மாதம் அடிமையாவேன்'' என்று பதிலுக்குச் சூளுரைத்தாள் தேவதேவி. பின்னர் தன் தமக்கையிடம் அணிகளைத் தந்து அவர்களை அனுப்பி விட்டு, விப்ரநாராயணரை அணுகி அடிபணிந்தாள். அவர், ''நீ யார்? ஏன் வந்தாய்?'' என்று உசாவ, அவள், ''சுவாமி! நான் கணிகையர் குலத்தில் பிறந்தவள். அத்தொழிலில் ஈடுபட மனமின்றி திருமால் கைங்கரியம் புரியும் தங்களை அடைக்கலம் புகுந்து கழுவாய் தேட வந்தேன். தாங்கள் கோயிலுக்குப் போகும்போதும், பிச்சைக்குப் போகும்போதும் நான் தங்கள் நந்தவனத்தைக் காத்துக்கொண்டு, ஏவல் செய்து கொண்டு வாழ்வேன்'' என்றாள். விப்ரநாராயணரும் மனமிரங்கி இசைந்தார்.

தேவதேவி பூச்செடிகளுக்குப் பாத்தி கட்டுதல், நீர் வார்த்தல் முதலிய தொண்டுகள் செய்து வருநாளில், ஒருநாள் பெருமழை பொழிய அதில் நனைந்த ஆடையோடு அவள் வெளியே இருக்கக் கண்ட விப்ரநாராயணர் தம் குடிலுக்குள் வந்து இருக்கும்படியும், ஈரப் புடவை களைந்து தம் உத்தரீயத்தைக் கட்டிக் கொள்ளுமாறும் தரவே, அவளும் தரித்துக் கொண்டு வந்து நின்றாள். அவள் அழகில் மனம் பறிகொடுத்து நெருப்பிலிட்ட நெய் போல மனமுருகி நின்ற ஆழ்வாரை மயக்கித் தன்வயமாக்கி சில காலம் இன்புற்றிருந்தனர்.

தன் சூளுரை நிறைவேறிவிட்டதால் தேவதேவி அவரைப் பிரிந்து திருக்கரம்பலூர் சென்றுவிட்டாள். அவள் பிரிவாற்றாத விப்ரநாராயணரும் அவள் இல்லம் சென்று அவளைக் காண விரும்ப, அவள் கதவை அடைத்து, 'பொருள் அற்ற இவரைப் புறமே கிடக்கச் செய்தனள்.' இவரும் வருந்தி அவள் வீட்டுத் திண்ணையில் முடங்கிக் கிடந்தார். எம்பெருமான் இவரைத் திருத்திப் பணிகொள்ள விரும்பி ஒரு பொன்வட்டில் கொண்டு வந்து தேவதேவியிடம் தந்து, 'விப்ரநாராயணனின் தூதன் நான். அவர் தந்தனுப்பினார்' என்று கூறிச் செல்லவும், தேவதேவி அவரை மீண்டும் அருகழைத்துக் கொண்டாள். திருவரங்கக் கோயிலில் பொன்வட்டில் காணாமற் போகவே, உறையூர்ச் சோழ மன்னன் விசாரித்து தேவதேவியின் தோழியின் வாக்கால் அறிந்து அவ்வட்டில் விப்ரநாராயணரே திருடியிருக்க வேண்டும் எனக் கருதி சிறையிலிட்டான். திருவரங்கநாதன் மன்னன் கனவில் தோன்றி அடியார் பிழை செய்யவில்லை என்று கூறித் தாமே தந்ததாகச் சொல்லி சிறையிலிருந்து விடுவிக்குப்படி அருளினார். சிறையிலிருந்து விடுதலை பெற்ற விப்ரநாராயணர் தொண்டர் அடிப்பொடியாகத் திருமால் பக்தியும், வைராக்கியமும் மிக்கவரானார்.

இவர் காலம் எட்டாம் நூற்றாண்டேயாகும். திருமங்கை மன்னன் மதில் கட்டும்போது இவரது நந்தவனத்தை ஒதுக்கிக் கட்டுவித்ததாகவும், இவர் மகிழ்ந்து தம் பூக்கொய்யும் கருவிக்கு 'அருள்மாரி' என்று திருமங்கைமன்னன் பெயரை வைத்துச் சிறப்பித்தார் என்றும், ஆதலின் இருவரும் சமகாலத்தவர்களே என்பது உறுதியாகும். இவரது திருமாலை, திருப்பள்ளி எழுச்சி எனும் இரு பிரபந்தங்களும், செஞ்சொல் இனிமையும் கருத்தாழமும் உடையவையாகும்.

*வேதநூற் பிராயம் நூறுமனிசர்தாம் புகுவ ரேனும்*
*பாதியும் உறங்கிப் போகும் நின்றதிற் பதினையாண்டு*
*பேதை பாலகன தாகும் பிணி பசி மூப்புத் துன்பம்*
*ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே.*
*-(திருமாலை 3)*

*உள்ளத்தே உறையும் மாலை உள்ளுவான் உணர்வொன்றில்லாக்*
*கள்ளத்தேன் நானும் தொண்டாய் தொண்டுக்கே கோலம் பூண்டு*
*உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்று*
*வெள்கிப் போய் என்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே.*
*- (திருமாலை 34)*

*பச்சைமாமலை போல் மேனி பவளவாய்க்கமலச் செங்கண்*
*அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்*
*இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகம் ஆகும்*
*அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே*
*- (திருமாலை 2)*

*கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்*
*கணையிரு ளகன்றது காலையம் பொழுதாய்*
*மதுவிரிந் தொழுகின மாமலர் எல்லாம்*
*வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி*
*எதிர்திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த*
*இருங்களிற்றீட்டமும் பிடியொடு முரசும்*
*அதிர்தலில் அலைகடல் போன்றுளதெங்கும்*
*அரங்கத் தம்மா! பள்ளி எழுந்தருளாயே.*
*- (திருப்பள்ளி எழுச்சி 1 )*

இவரது பாசுரங்கள் கற்பனை நயமும், சிந்தனையைக் கிளரும் சீரிய கருத்துக்களும் செறிந்திலங்குகின்றன.

### திருப்பாணாழ்வார்

உறையூரில் பாணர் குலத்தில் அவதரித்தவர் திருப்பாணாழ்வார். சாதியில் இழிந்த தாம் புனிதமான திருவரங்கத்தை மிதிக்கத் தகுதியில்லை எனக் கருதி காவிரியின் தென்கரையில் நின்று கொண்டு கல்லும் கசிந்துருகும் கானமிசைத்து வருவார். ஒரு நாள் கண்ணை மூடிக் கொண்டு பெரிய பெருமானை

நினைத்து மனமுருகிப் பாடிக் கொண்டிருக்கும்போது, அங்கு எம் பெருமானுக்குத் தீர்த்தம் கொண்டு வருவதற்காக வந்த லோக சாரங்க முனிவர் என்னும் அந்தணர் திருமஞ்சனக் குடத்தை எடுத்துக் கொண்டு வந்து இவரைக் கண்டு ''தூர விலகிப் போ'' என்று சொல்ல, இசையில் ஈடுபட்டு மெய் மறந்திருந்த ஆழ்வார் அச்சொல் காதில் விழாததாலே அங்கேயே நிற்க, அம்முனிவர் ஒரு சிறு கல்லை வீசி எறிய அது இவர் முகத்தில் பட்டு இரத்தம் வரவும் கண்கள் விழித்துப் பார்த்து, ''பாகவதனிடம் அபசாரப் பட்டோமே!'' என வருந்தி தூர விலகிச் சென்றார்.

முனிவர் திருமஞ்சனக்குடம் கொண்டு செல்ல பெரிய பெருமாளும், திருக்காப்பு நீக்காமல் சினமுற்று, 'எம் பக்தனை இவ்விதம் செய்யலாமோ?' என்று கூறி, முனிவர் வருந்தவும், 'நீர் அவரை நம் கோயிலுக்குத் தோளிலேற்றி அழைத்து வாரும்' என்று ஆணையிட முனிவரும் திருப்பாணாழ்வாரை நோக்கி எம்பெருமான் சன்னதிக்கு வருமாறு கூற ஆழ்வார், ''திருவரங்கப் புனித பூமியை மிதியேன்'' என்று கூற தம் தோளில் ஏற்றிக் கொண்டு கோயிலில் எழுந்தருளச் செய்தார். அவர் 'அமலனாதிபிரான்' எனும் திவ்யபிரபந்தப் பத்துப் பாசுரங்களும் அருளி இறைவனுடன் இரண்டறக் கலந்தார். இவரது பாசுரங்கள் உருக்கமும், உணர்ச்சி மிக்க கவிதை நயமும் கொண்டவை. பத்துப் பாசுரங்களே எனினும் பண்பிற் சிறந்தவையாக திவ்ய பிரபந்தத்தில் அணி செய்கின்றன. குலத்தில் ஏற்றத் தாழ்வுகளைக் கருதலாகாது எனும் வைணவ சம்பிரதாயத்திற்குச் சான்றாக இவ்வாழ்வார் திகழ்வதும் காணலாம். ஆயிரம் பாசுரங்கள் பாடினாலும், பத்துப் பாசுரங்கள் பாடினாலும், ஆழ்வார்கள் அனைவரும் போற்றற்குரியவர்கள் என்ற கருத்தும் விளங்கக் காணலாம்.

*அமலனாதி பிரான் அடியார்க் கென்னை ஆட்படுத்த*
*விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்*
*நிமலன் நின்மலன் நீதி வானவன் நீள்மதில் அரங்கத் தம்மான் திருக்*
*கமலபாதம் வந்து என் கண்ணில் உள்ளன ஒக்கின்றதே.*

*கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்*
*உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை*
*அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்*
*கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே.*

அமலனாதிபிரான் பத்துப் பாடல்களே எனினும், அவை கவிச்சுவை நிரம்பியவை. இறையுணர்வு மிக்க அருட்பாடல்கள் நித்தியானு சந்தானத்துக்குரியன.

அமலனாதி பிரான் பல்வேறு ஆசாரியார்கள் உரை எழுதிய சிறப்புடையது. தெலுங்கு மொழியில் வியாக்கியானத்துடன் வெளியிடப்பட்டுள்ளது. வேதாந்த தேசிகரின் வியாக்கியானத்தை ஏ.வி.ஸ்ரீ சீனிவாசார்யர் தெலுங்கு மொழி பெயர்ப்பு ஒன்றும், திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிட்டுள்ளனர்.

குலசேகரர்

சேரநாட்டில் கொல்லிநகர் எனும் தலைநகரில் அரசாண்ட மன்னன் மகனாக அவதரித்தார் குலசேகராழ்வார். 'கொல்லி காவலன் கூடல் நாயகன், கோழிக்கோன் குலசேகரன்' (பெருமாள் திருமொழி 2.10) என்று கூறுகிறபடி இவர் சேரநாட்டை சிறப்புடன் ஆண்டு வந்தார். திருமாலடியார்களுக்கு ஆதரவளித்தும், தாமும் திருமாலடியாராகத் திகழ்ந்து வரும் நாளில் இவர் அமைச்சர்கள், இவர் வைணவ அடியார்கட்கு ஆட்பட்டு அரசியலை வெறுப்பது கண்டு மனம் பொறாது இவரைத் திருத்தக் கருதினர். விலையுயர்ந்த முத்து மாலையொன்றை ஒளித்து வைத்து விட்டு அதை வைணவ அடியார்கள் தான் திருடினர் என்று கூறினர். அதற்கு குலசேகரர், 'எம்பெருமான் அடியார்கள் ஒருநாளும் இச்செயலை நினைக்கவும் மாட்டார்கள்' என்று கூறி பாம்பை உள்ளிட்டதொரு குடத்தில் கையை விட்டு ''வைணவ அடியார் யாரேனும் திருடியிருந்தால் இப்பாம்பு என்னைக் கடிக்கட்டும். அவர்கள் பரிசுத்தராயின் என்னைத் தீண்டாது'' என்று கூறிப் பரிசோதிக்க அப்பாம்பு தீண்டவில்லை. அமைச்சர்களும் தங்கள் தவறை ஒப்புக் கொண்டனர்.

> ஆரங்கெடப் பரன் அன்பர் கொள்ளாரென்றவர்களுக்கே
> வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
> வீரங்கெடுத்த செங்கோற் கொல்லி காவலன் வில்லவர் கோன்
> சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே.

என்ற மணக்கால் நம்பிகள் திருவாக்கும் இச்செய்தியை விளக்கிக் கூறும்.

இவர் இராமாயணம் காலட்சேபம் கேட்டு வருகையில், ஆரணிய காண்டக் கதையில் கரதூடணர்கள் அரக்கர் படையுடன் போர் புரிய வந்த போது இராமன் தனித்து நின்று போர் புரிந்தார் என்ற வரலாறு கூறவும், ஆழ்வார் தமக்குள்ள இராமன் மேல் ஏற்பட்ட ஈடுபாட்டால் அதை கதை என்று கருதாது அப்போதே நடப்பதாகப் பாவித்து, தம் படையைத் திரட்டி போருக்குப் புறப்பட சித்தமானார். அமைச்சர்கள் சாதுரியமாக இராமன் அனைவரையும் அழித்து வெற்றி கொண்டான் என்ற சுலோகத்தைச் சொல்ல, அவரும் மகிழ்ந்து படை எடுப்பது தவிர்த்தார். இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற செய்தியறிந்ததும் இராவணனை வதம் செய்யப் படை திரட்டிச் செல்ல முனைய இறைவனே எதிர் வந்து, ''நான் சீதையை மீட்டு, இராவணனை வதம் செய்து மீண்டேன்'' என்று கூற சமாதானமடைந்தார் என்பர்.

இவரது பாசுரங்கள் உள்ளத்தை உருக்கும் தகையன. செஞ்சொற் கவியின்பம் பயக்கும் செம்மாந்த நடையில் இவரது பாடல்கள் அமைந்துள்ளன.

சேரநாட்டின் தலைநகராக வஞ்சி எனப்படுவது கருவூராகும் என்பர். மு. இராகவையங்கார் அவர்களும், ரா. இராகவையங்காரும் இது கொங்கு நாட்டைச் சேர்ந்தது. இன்றைய கோவை, சேலம், தருமபுரி மாவட்டங்கள் சேர நாட்டினைச் சேர்ந்தவையாக இருந்தன. மலைநாட்டுத் திருப்பதிகளை எல்லாம் பாடிய நம்மாழ்வார் அறியாததும், குலசேகரார் புகழ்ந்து பாடப்பட்டதுமான வித்துவக்கோடு என்பது கருவூருக்கருகில் ஆன் பொருநை நதிக்கரையில் திருமால் கோயிலுள்ள பகுதி வித்துவக்கோடு என்ற பெயருடன் விளங்கிற்று என்றும், அங்குள்ள அந்தணர் வாழும் அக்கிரகாரம் இன்னும் வித்துவக் கோட்டக்கிரகாரம் என்று வழங்குவதாகவும், மு. இராகவையங்கார் கூறுவார்.

குலசேகரர் ஆண்ட இடம் கருவூர் என்றும், சேரநாட்டின் தலைநகரான இவ்வூரிலிருந்து கொண்டே மலைநாட்டுப் பகுதியையும் ஆண்டனர் என்றும் தெரிகிறது. இவர் அரச பதவியில் பற்றின்றி வைணவ அடியாராகத் திகழ்ந்தார்.

*மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்*
*வையம் தன்னொடும் கூடுவதில்லையான்*

*ஐயனே! அரங்கா! என்றழைக்கின்றேன்*
*மையல் கொண்டொழிந்தேன் என் மாலுக்கே*
*- (பெருமாள் திருமொழி 3.1)*

*ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ*
*வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்*
*தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்*
*மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவனே*
*- (பெருமாள் திருமொழி 4.2)*

முதலிய பாசுரங்கள் இவரது பற்றற்ற தன்மையைத் தெற்றெனக் காட்டும்.

இவரது காலம் கி.பி. 780க்கும், கி.பி. 890க்கும் இடைப்பட்ட காலம் என்பது எம். சீனிவாசய்யங்கார் தமது நூலில் கூறுகிறார். கி.பி. ஆறாம் நூற்றாண்டாகலாம் என்று டாக்டர் என். கிருஷ்ணசாமி ஐயங்கார் கருத்து. எட்டாம் நூற்றாண்டு என்பதே ரா. ராகவையங்கார் கருத்தாகும்.

ஆழ்வார் வடமொழியில், 'முகுந்தமாலை' என்றொரு துதி நூலையும் இயற்றியதாகக் கூறப்படுகிறது. அக்குலசேகரர் வேறு என்றும் கருத்து வேறுபாடுண்டு. முகுந்தமாலை ஆழ்வார் அருளிச் செயலாயின், திவ்ய சூரி சரிதையில் கூறப்பட்டிருக்கும் என்றும், அப்படிக் கூறாததாலும், பட்டர், பெரிய வாச்சான் பிள்ளை முதலியோர் வியாக்கானங்களில் மேற்கோளாகக் காட்டப்படாத தாலும், கோயில் சந்நதியில் விசேட காலத்திலேனும் ஓதப்படாத தாலும், இது சம்பிரதாய நூல்களோடு சேராததாலும், இது ஆழ்வார் அருளிச் செயலன்று என்று கருதுவர். பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரும், இக்கருத்துக்குடன்படுவது போல முகுந்த மாலை வியாக்கியான பீடிகையில் கூறுவார்.

கி.பி. 1216ல் திருநெல்வேலி மாவட்டம், அம்பாசமுத்திரம் வட்டத்தில் குலசேகராழ்வார் கோவில் இருந்ததாகக் கல்வெட்டுக் குறிப்புகள் கிடைக்கின்றன. இது மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக் காலத்தென்பர். ★

---

★ *தமிழ் இலக்கிய வரலாறு - ஈ.எஸ். வரதராஜ அய்யங்கார் 1957.*

இவரது பாசுரங்கள் இவரது வைணவ பக்தியையும், வைராக்கியத்தையும், மெய்ப்பொருள் நாட்டத்தையும் புலப்படுத்தும் கவிதைக் கனிகளாகும்.

*பேயரே எனக்கு யாவரும் யானுமோர்*
*பேயனே எவர்க்கும் இது பேசி என்?*
*ஆயனே அரங்கா என்றழைக்கின்றேன்*
*பேயனாய் ஒழிந்தேன் எம் பிரானுக்கே.*
*- (பெருமாள் திருமொழி - 3.8)*

*தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை*
*விரைகுழுவும் மலர்ப்பொழில் சூழ் வித்துவக் கோட்டம்மானே*
*அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன்*
*அருள்நினைந்தே அழுங்குழவி யதுவே போ லிருந்தேனே*
*- (பெருமாள் திருமொழி 5.1)*

*வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்*
*மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்*
*மீளாத் துயர் தரினும் வித்துவக் கோட்டம்மா நீ*
*ஆளா உனதருளே பார்ப்பன் அடியேனே.*
*- (பெருமாள் திருமொழி 5.4)*

*வெங்கண் திண் களி றடர்த்தாய் வித்துவக் கோட்டம்மானே*
*எங்குப் போய் உய்கேன் உன் இணையடியே யடையல் அல்லால்*
*எங்கும் போய் கரைகாணாது எறிகடல்வாய் மீண்டேயும்*
*வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே.*
*- (பெருமாள் திருமொழி 5.5)*

இந்தப் பாசுரங்கள் நமது நெஞ்சத்தில் இருத்தி தினந்தோறும் பாராயணம் செய்து மகிழ்தற்குரியனவாகும். இராமனைத் தாலாட்டும் கோசலையாகவும், இராமனைப் பிரிந்த தயரதனாகவும், இராமசரிதம் கூறும் ஆதிகவியாகவும், இவர் தம்மைப் பாவித்துப் பாடிய பாடல்கள் இராமாயணத்தில் இவர்க்குள்ள ஈடுபாட்டை விளக்கும். இராமனுக்கிடையூறென்று கேள்விப்பட்டு படை திரட்டப் போந்த அதீத மனோதத்துவமுடைய இவரது கவிதைகள் கற்பனைக் களஞ்சியமாகத் திகழ்வதில் அற்புதமில்லை. கற்பனையன்றோ கவிதையின் உயிர் நாடியாகத் திகழ்வது?

நவில்தோறும் நயம் பயக்கும் நற் கவிதைகளாகும். பாசுரங்கள் பாடிய கவியரசே இப்புவியரசராவார்.

## நம்மாழ்வார்

வேளாளர் குலத்தைச் சார்ந்தவராகிய நம்மாழ்வார் எனும் சடகோபர், திருநெல்வேலி மாவட்டம், திருநகரி என்னும் குருகூரில் காரி என்பவர்க்கும், மலைநாட்டுத் திருவன்பரிகாரத்திலிருந்த திருவாழ்மார்பன் என்பவர் மகளான உடைய நங்கைக்கும் திருக்குமாரராய் அவதரித்தார். குழந்தை பிறந்ததுமே உலக நடைக்கு முற்றும் மாறாக பாலுண்ணாமலும், அழாமலும் சடம்போல் இருந்தது. அக்குழந்தை உறங்காப் புளிமரத்தடியிலே யோக நிலையில் பேசாமல் அமர்ந்திருந்தது.

திருக்கோளூர் அந்தணரான மதுரகவியாழ்வார் அச்சமயம் வடபுலத் தீர்த்த யாத்திரை சென்றவர் அயோத்தியில் இருக்கும்போது இரவில் தென் திசையில் ஒரு ஜோதி தெரிய, வியப்புற்று அதை நோக்கி வரலானார். கிறிஸ்து பிறந்த சோதி கண்ட வான சாத்திரிகள் விசாரித்து வந்தது போல, இவரும் ஆழ்வார் திருநகரிக்கு வந்து சேர்ந்த அளவில் அச்சோதி மறைந்தது. இங்கு என்ன விசேஷம் என்று விசாரித்த அளவில் அங்குள்ளார் அக்குழந்தையைப் பற்றிக் கூற அங்கே வந்து சேர்ந்தார். ''இவருக்கு செவி கேட்குமோ?'' என்று பரிசோதிக்க ஒரு குண்டுக்கல்லை எடுத்து அவர் முன்னே போட, ஆழ்வார் கண்கள் மலர விழித்துப் பார்த்தருள, மதுரகவிகளும் ''இவர்க்கு வாக்கு உண்டோ?'' என்று பரிசோதிக்க வேண்டி, ''செத்ததின் வயிற்றிலே சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?'' என்ன ஆழ்வார் ★ ''அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'' என மதுரகவிகளும், இவர் சர்வக்ஞராயிருந்தார்.

இவருக்குட்பட்டு நாம் உய்ய வேண்டும் என்று வணங்கி அவருக்குப் பணிவிடை செய்யலானார். நம்மாழ்வார் நான்மறையின் சாரமாக திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி எனும் நான்கு பிரபந்தங்களை அருளிச் செய்தார். மதுரகவிகள் இவருடைய சீடராக அமர்ந்து இப்பிரபந்தங்களை எழுதி வைத்தும், தொண்டு செய்து கொண்டும் இருந்தார்.

---

★ கருத்து: சடம் (மாயை) சிறியது; உயிர் (ஆன்மா) உடலாகிய சடத்தோடு கூடிய ஆன்மா பிறவியில் உடல் தரு இன்ப துன்பங்களை அனுபவித்திருக்கும் என்பது கருத்து.

*நாவினால் நவிற்றின்பம் எய்தினேன்*
*மேவினேன் அவன் பொன்னடி மெய்மையே*
*தேவுமற்றறியேன். குருகூர் நம்பி*
*பாவின் இன்னிசைப் பாடித் திரிவனே.*

என்று, "கண்ணிநுண் சிறுத்தாம்பில் கட்டப்பட்ட மாயவனை விட நம்மாழ்வாரே எனக்குத் தெய்வம்" என்று கூறிய மதுர கவியாழ்வார் குருபக்திக்கு ஓர் உதாரணமாக அமைந்து ஆழ்வார்களுடன் இணைந்து பெருஞ் சிறப்புற்றார்.

மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரின் பாசுரங்களை உலகில் பரவச் செய்தார்.

*ஈயாடுவதோ கருடற் கெதிரே? இரவிக்கெதிர்*
*மின்மினி யாடுவதோ*
*நாயாடுவதோ வுறுமிப் புலிமுன்?*
*நரி கேசரி முன் நடையாடுவதோ?*
*பேயாடுவதோ அழகூர் வசிமுன்? பெருமாள்*
*வகுளா பரணன் அருள் கூர்ந்*
*தோவா துரை யாயிரம் மாமறையின்*
*ஒருசொற் பொருமோ உலகிற் கவியே?*

என்ற பிற புலவர்கள் வியந்து பாராட்டுமாறு திருவாய் மொழியின் பெருமையை உலகுக்குணர்த்தினார்.

இவ்வாழ்வார்கள் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டே என்பர். கி.பி. 770ல் ஆண்ட மாறன் நெடுஞ்சடையன் காலத்திற்குப் பின் உண்டான சீவரமங்கை என்னும் ஸ்தலத்தை நம்மாழ்வார் பாடியிருத்தலும், பிற ஆழ்வார்கள் பாடாத மலைநாட்டுத் திருப்பதிகளைப் பாடியிருத்தலும், "இலிங்கத் திட்ட புராணத் தீரும் சமணரும் சாக்கியரும்" என்ற பிற்கால லிங்க புராணத்தைக் குறிப்பிட்டதாலும், திருக்கண்ணபுரம் சவுரிராசப்பெருமாள் கோயில் சுற்றுச் சுவரில் 'சடகோபன்' என்ற பெயர் காணப்படுவதாலும், இச்சாசனம் கி.பி. 908ஆம் ஆண்டு ஆதலாலும், நம்மாழ்வார் எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தார் எனலாம்.

திருமங்கைமன்னன் திருவாய்மொழி அனுசந்தானம் செய்வித்தலாலும் திருவில்லிப்புத்தூரை திருமங்கை மன்னனும்

நம்மாழ்வாரும் பாடியதாலும் ஆசாரியர் பரம்பரைக்கும், ஆழ்வார் பரம்பரைக்கும் நேரடித் தொடர்பின்மையால் ஸ்ரீநாத முனிகள் ஒன்பதாம் நூற்றாண்டினர் ஆதலாலும், எட்டாம் நூற்றாண்டே பொருந்தும் என்பது பி.டி. ஸ்ரீனிவாசய்யங்கார் முதலியோர் கருத்து. டாக்டர் என். கிருஷ்ணசாமி அய்யங்கார், கி.பி. ஆறாம் நூற்றாண்டின் நடுப்பகுதி என்று கருதுவார். நம்மாழ்வார் மற்ற ஆழ்வார்களிலும் சிறப்பித்து அவயவியாகக் கருதும் மரபும் இவரது சிறப்பையுணர்த்தும். இவரது திருவாய்மொழியின் பெருமையை உலகு நன்கறியும். சைவ உலகுக்குத் திருவாசகமும் வைணவ உலகுக்கு திருவாய்மொழியும் மறைகள் எனத் திகழ்கின்றன. நம்மாழ்வாரின் பாசுரங்கட்குப் பண்ணடைவுண்டு. இவர் சங்க அக இலக்கியங்களை நன்கு கற்றறிந்தார் என்பதற்கு இவரது பல பாசுரங்கள் சான்று பகர்கின்றன.

*மேகங்களே உரையீர். திருமால் திருமேனி யொக்கும்*
*யோகங்கள் உங்களுக்கெவ்வாறு பெற்றீர் உயிரளிப்பான்*
*மாகங்களெல்லாம் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்தம்*
*ஆகங்கள் நோவ வருத்தும் தவமாம் அருள் பெற்றதே.*

*- (திருவிருத்தம் 32)*

*வாராயின முலையாளிவள் வானோர் தலைமகனாம்*
*சீராயின தெய்வ நன் னோயிது தெய்வத் தண்ணந்துழாய்த்*
*தாராயினும் தழையாயினும் தண்கொம்பதாயினும் கீழ்*
*வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே.*

*- (திருவிருத்தம் 53)*

*ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது உன்னடியார்க்கு*
*என் செய்வ தென்றே இருத்தி நீ - நின்புகழில்*
*வைகும் தஞ் சிந்தையிலும் மற்றினிதோ நீயவர்க்கு*
*வைகுந்த மென்றருளும் வான்*

*- (பெரிய திருவந்தாதி 53)*

*கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்*
*புல்லென்றொழிந்தன கொல் ஏபாவம் வெல்ல*
*நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான்*
*அடியேன துள்ளத் தகம்.*

*- (பெரிய திருவந்தாதி 68)*

*மின்னின் நிலையில மன்னுயி ராக்கைகள்*
*என்னு மிடத் திறை யுன்னுமின் நீரே.*
*- (திருவாய்மொழி 1.2.2)*

*அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்*
*செற்றது மன்னுறில் அற்றிறைபற்றே*
*- (திருவாய்மொழி 1.2.5)*

*பிணக்கற வறுவகைச் சமயமும் நெறியுள்ளி யுரைத்த*
*கணக்கறு நலத்தனன் அந்தமிலாதியம் பகவன்*
*வணக்குடைத் தவநெறி வழிநின்று புறநெறிகளை கட்டு*
*உணக்குமின் பசையற அவனுடையுணர்வு கொண்டுணர்ந்தே*
*- (திருவாய்மொழி 1.3.5)*

*நீயலையே சிறுபூவாய் நெடுமாலார்க் கென் தூதாய்*
*நோயெனது நுவலென்ன நுவலாதே யிருந்தொழிந்தாய்!*
*சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான் இனியுனது*
*வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே*
*- (திருவாய்மொழி 1.4.8)*

*காமுற்ற கையற வோடு எல்லே இராப்பகல்*
*நீமுற்றக் கண்துயிலாய் நெஞ்சுருகியேங்குதியால்*
*தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினான் தாள் நயந்த*
*யாமுற்ற துற்றாயோ வாழி கனைகடலே!*
*- (திருவாய்மொழி 2.1.3)*

*தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்*
*சேர்த்தி யவையே சிவன் முடிமேல் தான் கண்டு*
*பார்த்தன் தெளித் தொழிந்த பைந்துழா யான் பெருமை*
*பேர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே.*
*- (திருவாய்மொழி 2.8.6)*

*நிழல் வெய்யில் சிறுமை பெருமை குறுமை நெடுமை யுமாய்*
*சுழல் வன நிற்பன மற்றுமாய் அவை யல்லனுமாய்*
*மழலை வாய் வண்டுவாழ் திருவிண்ணகர் மன்னுபிரான்*
*கழல்க ளன்றி மற்றோர் களைகணிலம் காண்மின்களே.*
*- (திருவாய்மொழி 6.3.10)*

*மனப்பரிப்போடு அழுக்குமானிட சாதியில் தான் பிறந்து*
*தனக்கு வேண்டுருக் கொண்டு தான் தன் சீற்றத்தினை முடிக்கும்*
*புனத்துழாய் முடிமாலை மார்பன் என்னப்பன் தன் மாயங்களே*
*நினைக்கும் நெஞ்சுடையேன் எனக்கினி யார் நிகர் நீணிலத்தே.*
*- (திருவாய்மொழி 6.4.7)*

முதலாழ்வார்கள் மூவர், திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், சூடிக் கொடுத்த சுடர்க்கொடியான நாச்சியார், குலசேகரர், தொண்டரடிப் பொடிகள், திருப்பாணாழ்வார், திருமங்கை மன்னன், மதுரகவிகள், நம்மாழ்வார் ஆகிய பன்னிரு ஆழ்வார்களுடைய பாசுரங்களையும், திருவரங்கத்தமுதனார் பாடிய இராமானுச நூற்றந்தாதியுடன் சேர்த்து, 'நாலாயிர திவ்யப் பிரபந்தம்' தொகுக்கப்பட்டுள்ளது. பக்திச்சுவையும், எழிலார்ந்த கவிச்சுவையும் மிக்க இப்பனுவல், தமிழ் இலக்கியச் செல்வங்களுள் ஒன்றாகும். நாலாயிரத் திவ்யபிரபந்தம் வைணவத் தலங்களில் இன்றும் நித்தியானு சந்தானமாகப் பாடிப் பரவப்பட்டு வருகிறது. ஆந்திர நாட்டு வைணவத் தலங்களிலும் இத்தமிழ்ப் பாடல்கள் தெலுங்கில் எழுதப்பெற்று மரபு நெறிப்படி பாடி வருகின்றனர். மலையாளத்தில் திருவாய்மொழி மூலம் மட்டும் வட்டெழுத்தில் உள்ளது என்று பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை கூறுகிறார். திருவரங்கம், காஞ்சி, ஆழ்வார் திருநகரி, திருவில்லிப்புத்தூர் முதலிய பல திவ்ய தேசங்களிலும் வைணவர்கள் கூடி பிரபந்தத்தை சேவிக்கும் வழக்கம் இன்றுமுள்ளது. திவ்யபிரபந்தத்தை முதன் முதலில் அச்சிட்டது சென்னை ஸ்ரீ ஆழ்வார் சபா பிரசங்கியும், பரசமய கோளரியுமாகிய ஸ்ரீமான் முடிச்சூர் அப்பாவு முதலியார் அவர்கள் 1865ம் ஆண்டில் வெளியிட்ட நூலாகும். 1934-ல் ஸ்ரீ வி.கே. இராமானுஜதாசன் அவர்கள் முதன் முதலில் திருவாய் மொழியை சீர் பிரித்து வெளியிட்டவர். 1952-ல் சென்னை இரத்தின நாயகர் சன்ஸார் ஒரு பதிப்பு வெளியிட்டனர். மயிலை மாதவ தாசன், தண். கி.வெங்கிடாசலம், மர்ரே கம்பெனி எஸ். ராஜம் ஆகியோரும், பிறரும் அண்மைக்காலங்களில் சிறந்த பதிப்புக்களை வெளியிட்டுள்ளார்கள். திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் பி.ஆர். புருஷோத்தமநாயுடு அவர்களால் சென்னைப் பல்கலைக் கழகத்தார் வெளியிட்டுள்ளார்கள். இவை தமிழகத்தில் திவ்யபிரபந்தம் பரவுவதற்கு மிகவும் துணை செய்தவை ஆகும்.

கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல், எட்டாம் நூற்றாண்டு இறுதி வரையில் தமிழகமெங்கும் வைணவத்தை ஆழ்வார்கள் பரப்பி

பக்தி வெள்ளம் பாய்ச்சி பண்பாட்டை வளர்த்தார்கள். தமிழகத்தில் வைணவத்தைப் பரப்பி பண்பாட்டு மறுமலர்ச்சியுறச் செய்தவர்கள் ஆழ்வார்கள் ஆவார்கள். சமண, பௌத்த மதத் தாக்கத்தால் குற்றுயிராகக் கிடந்த வேத மதத்தை மீண்டும் தளிர்த்துச் செழித்தோங்கச் செய்வதில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் வெற்றி பெற்றனர். இறை நம்பிக்கை, இவ்வுலக வாழ்வில் ஈடுபாடு கொள்தல், புலன்களை ஒறுக்காமல் இவ்வுலகில் அறநெறி நின்று வாழ்தல் முதலிய கொள்கைகள் புதிய பண்பாட்டு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தது. அதனால் வைணவம் செழிப்புற்றோங்கியது. ஆழ்வார்களின் பண்ணார் தமிழ்ப் பாசுரங்களாகிய அருளிச் செயல்களும், உபநிடதம், கீதை, பிரம்மசூத்திரம், இராமாயண, பாரத இதிகாசங்கள், பாகவதம் முதலிய வடமொழி இலக்கியத் தத்துவங்களும், வைணவ ஆசாரியர்கள் நன்கு போற்றிப் பாதுகாத்து வந்ததோடு சிறந்த வியாக்கியானங்களையும் வெளியிட்டு வைணவத்தைப் பரப்பினார்கள்.

*லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ ஸடரிபு ஜலத'*
*ப்ராப்ய காருண்ய நீரம்*
*நாதாத்' ராவப் யஷிஞ்சத் ததானு*
*ரகு'வராம்போ' ஜசக்ஷுர்ஜராப்' யாம்*
*க'த்வா தாம் யாமுநாக்யாம் ஸரிதமத*
*யதீந்த்ராக்ய பத்'மாக ரேந்த்'ரம்*
*ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி*
*ப'ஹுத'ா தேஸிகேந்த்' ரப்ர மௌகை':*

என்று பட்டர் அருளிச் செய்தது போல திருமகள் கேள்வனாகிய பெருங்கடலில் படிந்த நம்மாழ்வார் என்றும் முகில், கருணை நீரைப் பருகி, நாதமுனிகள் என்னும் மலையில் பொழிந்தது. அவ்வெள்ளம், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி என்னும் பேராற்றினை அடைந்தது. அவ்வாற்று வெள்ளம் இராமானுஜர் என்னும் ஏரியில் நிறைந்தது. அவ் ஏரியிலிருந்து ஆச்சாரியார்கள் எனும் மதகுகள் மூலம் உயிர்களாகிய பயிர்கள் தழைத்தோங்கப் பாய்ந்து பரவுகிறது.

ஆழ்வார்கள் இன்னிசைப் பாக்கள் மூலம் மூலத் தத்துவக் கருத்துக்களையும், தங்களது சுயானுபவத்தையும் வெளியிட்டு வைணவத்தைப் பரப்பினார்கள். வேத வேதாந்தங்களின் சாரமான கருத்துக்களை விளக்கமாக எடுத்துரைத்தார்கள்.

"தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே"

என்று வேதாந்த தேசிகர் கூறியபடி மறை பொருளாகப் புலப்பாடதிருந்த வேதங்களின் ஆன்மீகக் கருத்துக்களை அழகு தமிழில் எளிதில் உணரும் வண்ணம் அருளிச் செய்தவர்கள் ஆழ்வார்கள்.

ஆழ்வார்களின் பாசுரங்களைக் கண்டெடுத்து தமிழகமெங்கும் பரவச் செய்து, அதிலுள்ள நுட்பமான கருத்துக்களையும், கவிநயத்தையும், தத்துவ விளக்கத்தையும் எடுத்தியம்பி, வைணவத்தைக் கட்டிக்காத்து, பிற சமயத் தாக்கத்திலிருந்து பாதுகாத்து, மரபுநெறிப்பட்ட பண்பாட்டினைப் பேணி வந்தவர்கள் ஆச்சாரியர்கள் ஆவர்.

வடமொழி, தென்மொழி ஆகிய இரு கடலையும் கரைகண்ட பெரும் புலமையும், தூய நல்லொழுக்கமும், எளிமையும், கற்பதிலும், கற்பிப்பதிலும் தணியாத ஆர்வமும் உடைய ஆசாரியர்கள், தமக்கெனத் தனிநடையை உருவாக்கி மணிப்பிரவாளத்தில் வியாக்கியானங்கள் வெளியிட்டருளினார்கள். இவ்வியாக்கியானங்கள் ஆழ்வார்களின் இதயத்தை நன்குணரத் துணை புரிவதோடு சரித்திரச் சான்றுகட்கும், தமிழ் மரபுகளை உணர்தற்கும், தமிழ்மொழி வளத்துக்கும் உறைவிடமாகத் திகழ்கின்றன. நாலாயிர திவ்யபிரபந்தத்துக்கும், குறிப்பாக திருவாய்மொழிக்கும், பிரம்ம சூத்திரம், கீதை, உபநிடதங்கட்கும் வகுத்த, தமிழ், வடமொழிப் பேருரைகள் இந்திய தத்துவ ஞானத்தின் செழுமையை முழுமையாக விவரிக்கும் கருத்துக் கருவூலங்களாகத் திகழ்கின்றன.

### ஆசாரியர்கள்

ஆச்சாரிய பரம்பரைக்கு முதல்வராகக் கருதப்படுபவர் ஸ்ரீமந் நாத முனிகள் ஆவார். இவர் சோழ நாட்டில் வீர நாராயணபுரம் என்னும் காட்டுமன்னார்கோவில் என்னும் ஊரில் கி.பி. 823ம் ஆண்டில் ஈஸ்வரபட்டாழ்வார் திருக்குமாரராக அவதரித்தார். இவர் பெயர் ஸ்ரீரங்கநாதன் என்பது. அதுவே நாத முனிகள் என சுருக்கமாக அழைக்கப்பட்டது. இவர் வடநாட்டில் தீர்த்த யாத்திரை செய்து விட்டு தமது ஊருக்குத் திரும்பி வந்து திருமாலடியாராகக் கோவிலில் திருத்தொண்டு செய்து வந்தார். ஒருநாள் அக்கோவிலுக்கு வழிபட

வந்த வைணவர் 'ஆராவமுதே' என்ற திருவாய்மொழியை அனுசந்தித்து உருக்கமுடன் பாடினார். அதைக் கேட்ட நாதமுனிகள் மிகவும் மகிழ்ந்து 'திருவாய் மொழியில் ஈற்றுப் பாட்டிலே ஓராயிரத்துள் இவை பத்தும் என்று வருகிறதே. அந்த ஆயிரம் பாடலும் தங்கட்கு வருமா?' என்று கேட்டார். அந்த அடியார் தமக்கு ''இந்தப் பத்துப் பாட்டுக்கள் மட்டுமே தெரியும்'' என்று கூறி மீதிப் பாட்டுக்கள் கிடைக்கவில்லை என்றும் கூறிச் சென்றார்.

நாதமுனிகள் ஆர்வம் மீதூர அப்பாடல்களையும் தேடிப் பெறுவான் வேண்டி நம்மாழ்வார் அவதரித்த ஆழ்வார் திருநகரிக்கு வந்து ஆராய்ந்து மதுரகவிகளின் சிஷ்ய பரம்பரையினரான ஸ்ரீபராங்குச தாசரை விசாரித்தார். அவரும், ''திருவாய் மொழியும் மற்ற திவ்யபிரபந்தங்களும் நீண்ட காலத்துக்கு முன்பே மறைந்து விட்டன. எங்கள் ஆசாரியர் மதுரகவிகளின் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பாசுரத்தை ஆழ்வார் திருமுன்பு தியானித்து பன்னீராயிரம் உரு அனுசந்தித்தால் ஆழ்வார் பிரசன்னராய் அருள்வா என்று கூறுவார்கள்'' என்று சொன்னார். நாத முனிகள் அதுகேட்டு மகிழ்ந்து அவ்வண்ணமே 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' உருப்போட்டு, நம்மாழ்வார் அருள் பெற்று, மறைந்திருந்த நாலாயிர திவ்யப் பிரபந்தங்களையும் கிடைக்கப் பெற்றார்.

வேதங்களை வியாச பகவான் தொகுத்து பரவச் செய்தது போன்றே நாதமுனிகளும் நாலாயிரத் திவ்ய பிரபந்தம் என்னும் தமிழ் வேதத்தைத் தொகுத்து உலகில் பரவச் செய்தார். பண்ணடைவு செய்து பாசுரங்களைப் பரவச் செய்த முதலாசாரியராகப் புகழ் பெற்றார்.

இவர் திருவடிகள் சார்ந்திருந்த சிஷ்யர்கள் எண்மர்.

1. உய்யக்கொண்டார்
2. குருகை காவலப்பன்
3. நம்பி கருணாகரதாசர்
4. ஏறுதிருவுடையார்
5. திருக்கண்ணமங்கையாண்டான்
6. வானமாமலை தேவியாண்டான்
7. உருப்புட்டூர் ஆச்சான் பிள்ளை
8. சோகத்தூராழ்வான்

ஒரு சமயம் சோழமன்னன் வேட்டையாட வந்து திரும்பிப் போகையில், நாதமுனிகளின் பெண் பிள்ளைகள் கண்டு, ''ஐயோ, நம் வீட்டிற்கு ஒரு குரங்கும், இரண்டு வில்லேந்திய ஆடவரும், ஒரு பெண் பிள்ளையுமாக வந்து ''நாத முனிகள் எங்கே?'' என்று தேடினார்கள்'' என்று கூற - அது கேட்ட நாதமுனிகள், அது சக்கரவர்த்தித் திருமகனும், பிராட்டியும், இளைய பெருமாளும், அனுமனும்தான் என்று பாவித்து அவர்களைத் தேடிச் சென்று எங்கும் காணாது வழியில் கங்கை கொண்ட சோழபுரத்திலே திருநாட்டுக் கெழுந்தருளினார். ★ இவர் ''ந்யாயதத்வம்'' என்ற வடமொழி நூலை இயற்றினார் என்றும், அது தற்போது கிடைக்கவில்லை என்றும் அறிஞர் கூறுவர். ''யோக ரஹஸ்யம்'', ''புருஷ நிர்ணயம்'' என்னும் நூல்களும் வடமொழியில் இயற்றியதாகவும், அவையும் இப்போது கிட்டவில்லை என்று கூறுவர். ''ந்யாயதத்வம்'' நூலின் முதல் சுலோகம் மட்டும் கிடைத்துள்ளது. இந்நூலைப் பற்றி இராமானுஜர் சுருத பிரதாசிகா பட்டர், வேதாந்த தேசிகர் முதலானோர் குறிப்பிட்டுள்ளனர். இவருடைய முக்கிய சீடர்களான உய்யக் கொண்டார், குருகைக் காவலப்பன் மூலமாக திவ்விய பிரபந்தத்தையும், யோக ரகசியத்தையும் பிரச்சாரம் செய்து தமக்குப் பின் தம் பேரராகப் பிறக்க உள்ள யமுனைத் துறைவர் என்னும் ஆளவந்தாரிடம் இந்தத் தரிசனத்தைத் தருமாறு பணித்தார். இவர் மறைந்தது கி.பி. 917 என்பர்.

இவருக்கு நம்மாழ்வார் காட்சி தந்து எதிர்கால தரிசன பிரவர்த்தகரான எம்பெருமானின் உருவச் சிற்பத்தை, நாதமுனிகள் வேண்டுகோட்கிணங்கி படைத்துத் தந்தார் என்று ஒரு செய்தி 'சரமோபாயம்' எனும் நூலில் நாயனாராச்சான் பிள்ளை கூறியுள்ளார்.

நாதமுனிகளின் சீடர்களில் சிறந்தவரான உய்யக் கொண்டார் ஸ்ரீரங்கத்துக்கு வடக்கேயுள்ள 'திருவெள்ளறை' என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தில் பூர்வசிகை வைணவ அந்தணர் குலத்தில் கி.பி. 886ல் அவதரித்தார். சோழ தேசத்திற்கு ஆதியில் வந்த பிராமணர்கள் பூர்வ சிகையார். இவர்களை முன்குடுமிச் சோழியர் என்றும் அழைப்பர். ஆழ்வார்களில் அந்தணர்களாகிய பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், மதுரகவிகள் மூவரும் பூர்வசிகை பிராமணரே. இவரது பிள்ளைத் திருநாமம் புண்டரீகாட்சர் (தாமரைக் கண்ணன்) என்பதாகும். இவர் நாதமுனிகளை அணுகி பக்தியுடன் தொண்டாற்றி

★ பூர்வாசார்ய வைபவம்: பி.ப. அண்ணங்கராசாரியார் 1950.

நன்மாணாக்கராக இருந்தார். நாதமுனிகள் ஒருநாள் தம் முக்கிய சீடர்களாகிய குருகைக் காவலப்பனையும், உய்யக் கொண்டாரையும் அழைத்து, ''மோட்சத்தைத் தரவல்ல யோக தரிசனம் (பக்தியோகம்) வேண்டுமா? உலகினை உய்விக்க வல்ல திவ்ய பிரபந்தங்கள் வேண்டுமா?'' என்று கேட்டார். குருகை காவலப்பன் மோட்சம் தரவல்ல பக்தி யோகம் வேண்டும் என்று விரும்பி அதைப் பெற்றுத் தாம் உய்தியடைந்தார். உய்யக்கொண்டாரை வினவியபோது அவர், ''பிணம் கிடக்க மணம் புணர்வாருண்டோ?'' உலகமே ஆத்ம நாசமடைந்து பிணக் காடாகக் கிடக்கும்போது, நான் மட்டும் எம்பெருமானுக்கு, எம்பெருமானோடு ஆத்ம விவாகம் செய்து கொண்டு மோட்சமடைவது சரியாகுமோ? அடியேன் எப்படியானாலும் பரவாயில்லை. உலகம் உய்யும்படி திவ்யப் பிரபந்தங்களை அருள வேண்டும் என்று விண்ணப்பித்தார். நாதமுனிகளும் மிகவும் மகிழ்ந்து, ''நீரே உலகையும் உடையவனையும் உயர் அருளிச் செயல்களையும், என்னையும் உய்விக்க வந்தவர்'' என்று பாராட்டி ''உய்யக்கொண்டார்'' என்று பெயரிட்டு அவருக்கு திவ்யப் பிரபந்தங்களை அருளினார்.

உய்யக் கொண்டார் திவ்யப் பிரபந்தங்களைப் பரவச் செய்து தன்னலமின்றி இறையன்புடன் தொண்டாற்றி வந்தார். இவருடைய சீடர்கள் மணக்கால் நம்பி, திருவல்லிக்கேணி பாண் பெருமாளரையர், சேட்டலூர் செண்டலங்காரர், புண்டரீகதாசர், உலகப் பெருமாள் நங்கை முதலியோர் ஆவர். இவர்களில் மணக்கால் நம்பி சிறந்த அறிஞராகவும், பக்தி மிக்கவராகவும் திகழ்ந்தார். உய்யக்கொண்டார் சீரமதசையில் மணக்கால் நம்பியை அழைத்து, ''நீரே தரிசன பிரவர்த்தகராக இருக்கக் கடவீர். நாதமுனிகளின் திருக்குமாரரான ஈஸ்வர முனிகளுக்கு ஒரு குமாரர் அவதரிப்பார். அவருக்கு 'யமுனைத்துறைவர்' என்று திருநாமம் சாத்தச் செய்து, பவிஷ்யதாசார்ய விக்கிரகத்தையும் கொடுத்து, அந்த பவிஷ்யதாசார்யரைக் (எதிர்கால ஆசாரியர்) கண்டுபிடித்து அவரிடம் தரிசன நிருவாகத்தைத் தருமாறு ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்று கூறிவிட்டு திருநாடலங்கரித்தார். உய்யக்கொண்டார் இயற்றிய நூல் ஒன்றும் கிட்டவில்லை.

மணக்கால் நம்பி என்னும் ஸ்ரீராமமிசிரர் திருச்சி மாவட்டம், லால்குடி அருகில் மணக்கால் என்னும் இவர் பெயரால் வழங்கும் ஊரில் கி.பி. 929ல் அந்தணர் குலத்தில் அவதரித்தார். இவர் உய்யக் கொண்டாரிடம் சீடராக இருந்தார். ஒருசமயம் உய்யக்

கொண்டாரிடம் உய்யக்கொண்டாரின் இளஞ்சிறுமிகளான பெண் பிள்ளைகள் இருவரையும் நீராட்டி அழைத்துக் கொண்டு வருகிற வழியிலே வாய்க்கால் சேறாயிருக்கக் கண்டு, அச்சிறுமிகள் தாண்ட இயலாததறிந்து தாமே நெடுஞ்சாண்கிடையாகப் படியாய் அமைய அச்சிறுமிகள் அவர் முதுகிலே அடியிட்டு நடந்து சென்றார்கள். அதனாலே 'மணற்கால்' என்ற பெயர் பெற்றார் என்பர். இவர் நூலேதும் அருளியதாகத் தெரியவில்லை.

சோழவள நாட்டில் வீரநாராயணபுரத்தில் நாதமுனிகளின் குமாரரான ஈஸ்வர முனிகளுக்குத் திருக்குமாரராக யமுனைத் துறைவர் என்னும் ஆளவந்தார் கி.பி. 976-ல் அவதரித்தார். மகாபாஷ்ய பட்டர் என்பவரிடத்தில் சாத்திரங்களைக் கற்றார். ஆக்கியாழ்வான் என்னும் அரசவைப் பண்டிதன் கல்விச் செருக்கினால் தனக்குக் கப்பம் கட்டுமாறு மகாபாஷ்ய பட்டருக்கு ஓலை அனுப்ப, பட்டர் கப்பம் கட்ட வழியில்லாது திகைத்து நிற்க, ஆளவந்தார் அந்த ஓலையைக் கிழித்துப் போட்டார். அதறிந்த பண்டிதன், ''ஓலையைக் கிழித்தவன் கவிஞனா? சாஸ்திர ஞானியா?'' என்று கேட்டனுப்ப,

*நாவயம் கவயஸ்து கேவலம் நவயம் கேவல தந்த்ரபாரகா:*
*அபிதுப்ரதிவாதி வாரணப்ரகடாடோப விபாடநக்ஷமா:*

நாம் வெறும் கவியுமல்லோம். வெறும் சாஸ்திர வித்வானுமல்லோம். பிரதிவாதிகளான யானைகளின் செருக்கை அடக்கவல்ல சிங்கம் என்று கொள்க என்னும் சுலோகம் எழுதியனுப்பினார். அது கண்ட ஆக்கியாழ்வானும், வாதத்துக்கழைத்தான். அரசன் முன்னிலையில் வாதம் நடந்தது. அரசன் வாதத்தில் வென்றவர்க்கு பாதியரசு தருவதாக அறிவித்தான். அரசி, ''ஆளவந்தாரே வெற்றி பெறுவார்'' என்று உறுதியாகக் கூறினாள். இந்நிலையில் ஆக்கியாழ்வான் முதலில் உலக வழக்கில் வாதம் செய்வோம் நான் இல்லை என்பதை நீர் ஆம் என்றும், நான் ஆம் என்பதனை நீர் இல்லை என்றும் மறுத்து வாதிட வேண்டும். வென்றவர் தோற்றவர் தலையில் அடியிடக் கடவது என்று கூறினான். ஆளவந்தாரும் சம்மதித்து வாதத்தைத் தொடங்கினார். ''நின்தாய் மலடியல்லள்'', ''அரசன் நியாயவான்'', ''அரசி கற்புடையவள்'' என்று மூன்று வாக்கியங்களைச் சொல்லி மறுக்குமாறு சொன்னார். ஆக்கியாழ்வான் பதில் கூற முடியாது திகைத்து, மறுத்தால் அரசன் சீற்றத்துக்காளாக நேருமென அஞ்சி வாய் பேசாதிருந்தான். அரசன் ஆளவந்தாரை நோக்கி நீர் இதனை மறுக்க முடியுமோ என்று கேட்க

அவரும் "ஒரு மரம் தோப்பல்ல; ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல; ஒரு பிள்ளை பெற்றவள் இப்பிள்ளை தக்கவேணுமே என்று கலங்கிக் கொண்டிருப்பாள் ஆதலின் அவள் மலடிக்குச் சமமே."

"குடிமக்கள் செய்யும் பாவங்களுக்கும் அரசனே பொறுப்பாகையாலே தார்மீகனான அரசனும் பாவத்தில் பங்கு பெறுவதால் இவ்வரசன் நியாயவான் அல்ல."

*"ஸோம: ப்ரதமோ விவிதே, க'ந்தர்வோ விவித' உத்தர:*
*த்ருதீயோ அக்னிஷ்டே பதி:, துரியாஸ்தே மனுஷ்யஜா:"*

"சோமன் முதல்நாள் புணர்கிறான். கந்தர்வன் அடுத்த நாள் புணர்கிறான். மூன்றாம் நாள் அக்னியானவன் புணர்கிறான். நான்காம் நாளே கைப்பிடித்த மனிதன் கணவனாகிறான் என்ற வேத மந்திரப்படி, வைதிக முறையில் மணந்து கொண்ட எல்லாப் பெண்டிரும் முதல் மூன்று நாட்கள் தேவதைகட்கு தொடர்பிருப்பதாகக் கற்பிக்கப்பட்டிருப்பதால் கற்பினள் அன்று", என்று தம் வாக்கியங்களை மறுதலித்து வெற்றி வாகை சூடினார். ஆக்கியாழ்வான் தன் தோல்வியை ஒப்புக்கொண்டான். எனினும் ஆளவந்தார் அவரை மன்னித்து தலையில் அடியிடாமல் அனுப்பி வைத்தார். அரசி இவரைப் பாராட்டி, "எம்மை ஆளவந்தீரோ" என்று கூறியதால் ஆளவந்தார் என்று பெயர் ஏற்பட்டது. அரசனும் தன் சூளுரையின்படியே பாதி அரசு தந்தான். ஆளவந்தாரும் அரச போகத்தில் ஆழ்ந்திருந்தார். மணக்கால் நம்பி, ஆளவந்தாரை வைணவ தரிசனப் பிரவர்த்தகராக ஆக்க வேண்டும் என்று தம் ஆசிரியரின் கட்டளைக்கிணங்க ஆளவந்தாரைக் காண வந்தார். ஆனால், அரசனைக் காண்பது எளிதான காரியமில்லை. ஆதலினால், அவரை உள்ளே புகவிட மறுத்தனர். எப்படியும் ஆளவந்தாரைக் காணும் நோக்கினில், அரசனுக்கு அமுது செய்விக்கும் அந்தணரின் நட்பைப் பெற்று தினந்தோறும் அரசன் (ஆளவந்தார்) பிரியமாகச் சாப்பிடும் 'தூதுளை'க் கீரையை ஆறு மாத காலம் கொடுத்து வந்தார். அரசரின் தரிசனம் கிடைக்கவில்லை. பின் சில நாள் தூதுளை கீரையை அனுப்பாமல் இருந்தார். அரசரான ஆளவந்தார் அடிசிலிரிக்கும் அந்தணரிடம், "ஏன் தூதுளைக் கறி சமைக்கவில்லை" என்று வினவ, அவரும் தினந்தோறும் கீரை கொண்டு வந்து தந்த அந்தணர் சில நாளாக வரவில்லை, என்ன, அரசன் வியப்புற்று அவர் மீண்டும் வந்ததும் தம்மைக் காணும்படி ஏற்பாடு செய்யுமாறு பணித்தார். மீண்டும் வந்த மணக்கால் நம்பியை அரசனைக் காணும் வண்ணம்

ஏற்பாடு செய்யவே ஆளவந்தாரைக் கண்டார். ஆளவந்தார், ''உமக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். அதற்கு மணக்கால் நம்பி, ''நான் எதையும் யாரிடமும் யாசிப்பவனல்ல. நான் தங்களுக்கு உங்கள் முன்னோர் கொடுத்த நிதியை ஒப்பிக்கவே வந்தேன். நான் தங்களைக் காண இடையூறின்றி எளிதில் வரச் செல்ல உத்தரவாக வேண்டும்'' என்று கேட்டார். அப்படியே உத்தரவாயிற்று. பின் மணக்கால் நம்பி, கீதை, திவ்யப் பிரபந்தங்களை ஓதுவித்து, ஆளவந்தாரிடம் பக்தி மிகுவித்து திருமாலடியாராக மாற்றினார். பின் திருவரங்கத்துக்கழைத்துச் சென்று, ''உங்கள் முன்னோரின் நிதி இதுதான்'' என்று பெரிய பெருமானைக் காட்ட அவரும் அரசபோகம் நீத்து துறவு நெறி மேற்கொண்டு கோவில் நிர்வாகமும், தரிசன நிருவாகமும் செய்து வரலானார்.

குருகைக் காவலப்பன் சன்னதி சென்று யோக ரகசியங்களையும் அறிந்து கொண்டார். திருவனந்தபுரம் தரிசிக்கச் சென்று மீண்டும் கோவிலில் இருந்தார். தமக்குப் பிறகு சிறந்த தரிசன பிரவர்த்தகரைத் தேடிக் கொண்டிருந்தார். இவரது சீடர்களாக பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருக்கஞ்சி நம்பி, திருமாலையாண்டான், வானமலையாண்டான், தெய்வ வாரியாண்டான் முதலாக இருபது முதலிகள் அமைந்திருந்தனர்.

ஆளவந்தார் அருளிச் செய்த நூல்கள் எட்டு.

1. ஆத்ம சித்தி
2. சம்ஷுத் சித்தி
3. ஈஸ்வர சித்தி
4. கீதார்த்த சங்கிரகம்
5. ஆகம பிராமணியம்
6. மகாபுருஷ நிர்ணயம்
7. ஸ்தோத்ர ரத்னம்
8. சதுஸ்லோகீ.

மகாபுருஷ நிர்ணயம் இப்போது கிடைக்கவில்லை. இவர் இராமானுசரை தரிசனப் பிரவர்த்தகராக ஆக்க வேண்டும் என்று தம் சீடர்களிடம் கூறிவிட்டு திருநாடலங்கரித்தார். இவரது பூதவுடல் பள்ளிப்படுத்தும்போது இராமானுசர் வந்து சேர்ந்தார். எனினும் ஆளவந்தாரின் மரபுவழிச் சீடராகவே இராமானுசர் கருதப்பட்டார்.

**இராமானுசர்**

''குருப் பரம்பரையிலே இடையிடப்பட்டாரிறே உடையவர் ஒரு முத்தாஹாரத்தின் நடுவே ஒளியுடைய மாணிக்கத்தை அழுக்கி வைத்தால் இருதலையும் நிறம் பெற்று வருமிறே. அப்படியே உடையவரும் இருதலை நாயகமாகக் கொண்டு உபய சம்பந்திகளுக்கும் பிரகாசகராவார்'' என்று சரமோபாய நிர்ணயம் எனும் நூலில் நாயகராச்சார் பிள்ளை அருளிச் செய்தாற்போல இராமானுசர் தம் முன்பிருந்த ஆச்சாரியர்கட்கும், தமக்குப் பின் வந்த ஆச்சாரியர்கட்கும் புகழ் ஒளி தந்த பொன் மாணிக்கமாகத் திகழ்ந்தார்.

ஆதிசேடன் அவதாரமாகக் கருதப்படும் இராமானுசர் தொண்டை மண்டலத்தில் (சென்னைக்கு அருகே) ஸ்ரீபெரும்புதூரில் ஆசூரி கேசவப் பெருமான் எனும் அந்தணர் திருக்குமாரராக கி.பி. 1017ல் பிங்கள ஆண்டு சித்திரை மாதம் பதிமூன்றாம் நாள் அவதரித்தார். இவருடைய தாயார் ஆளவந்தாரின் சீடராகிய பெரிய திருமலைநம்பியின் உடன் பிறந்தவராகிய ஸ்ரீபூமிப் பிராட்டியார் ஆவார். இவரது தங்கையே பெரியபிராட்டியார் என்னும் கமலநம்ப பட்டரின் மனைவியார் ஆவார். இவரது குமாரரே கோவிந்த பட்டர் எனும் எம்பார் ஆவார். காஞ்சிக்கருகில் திருப்புட்குழி என்னும் ஊரில் யாதவப் பிரகாசர் என்னும் அத்வைத சித்தாந்தி பெரும் பண்டிதராகத் திகழ்ந்து வந்தார். இவரிடம் சீடராக இராமானுசரும், இவரது சிறிய தாயின் குமாரரான கோவிந்தபட்டரும் சேர்ந்து வேத வேதாங்கங்களைக் கற்று வந்தார்கள். யாதவப் பிரகாசரிடம் கற்று வருநாளில் ஒருநாள் வேதத்தில் வரும், ''ஜ்ஜ்யம், ஞான மனந்தம் த்'ரஹ்ம'' எனும் சுருதி வாக்கியத்திற்கு அத்வைதமான பொருள் கூற இவர் வேறு பொருள் கூற குருவுக்குச் சினமுண்டாயிற்று. பின்பொருநாள்,

ஏ ஷோந்த ராதித் யே ஹிரஜ்மய புருஷோ
த்ருஹ்ய தே
ஹிரஜ்யஜ்மத்ருர் ஹிரஜ்யகேச
ஆஜ்ரணாகத் ஸஜ்வஏவஸ"வத்ண
தஜ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவமஹினி

(சூரியனுக்கு நடுவே தங்கம்போல அழகிய உருவுடைய எந்த, பரமபுருஷன் காணப்படுகிறானோ அவன் பொன் போன்று, மீசை, கேசம், நகம் முதலிய எல்லா அவயங்களையும் உடையவர்.

அவனுக்கு சூரியனால் மலரும் தாமரை போன்ற இரு கண்கள் உள்ளன.)

என்ற வேதமந்திரத்துக்கு கப்யாசம் என்ற சொல்குக்கு ''குரங்கின் பின்புறம் போன்ற சிவந்த தாமரைக் கண்கள்'' என்று இழிந்த பொருளைக் கூற, அதுகேட்ட இராமானுசர் வருந்தி, சோகத்தால் கண் கலங்கி கண்ணீர்த்துளிகள் உகுக்க, அச்சுடும் கண்ணீர்த்துளிகள் யாதவப் பிரகாசர் தொடையில் விழவே, அது சுட்டதால் அவரும் பதறி இவர் முகத்தைப் பார்த்து, ''ஏன் துக்கிக்கிறீர்?'' என்று கேட்டார். இராமானுசர், ''கம் பிப'தீதி கபி'இ'' என்று சூரியன் எனும் பொருள் இருக்க, கபி' எனும் குரங்கு என்னும் பொருள் கொண்டு இழிபொருள் கூற வேண்டியதென்ன? இந்த அபார்த்தம் கேட்டு துக்கமுண்டாயிற்று என்று கூறினார். இதைக் கேட்டதும் யாதவர் சினந்து நான் சொன்னபடி கேட்பதாய் இருந்தால் வாசிக்கவும், இல்லாவிடில் என்னை விட்டுச் செல்லும் என்று கடிந்துரைத்தார். இராமானுசரின் தனித்திறமையுடைய அறிவாற்றலைக் கண்டு பொறாமை கொண்ட யாதவப் பிரகாசர் இவரை மாய்க்க எண்ணினார். கங்கா யாத்திரை போவதாகச் சொல்லி வழியில் இவரை மாய்க்க எண்ணம் கொண்டார். இதையறிந்த கோவிந்த பட்டர் எச்சரிக்கைச் செய்து நடுவழியில் இவரை திரும்பிப் போகச் செய்தார். ஆதலால் உயிர் தப்பி மீண்டும் காஞ்சிக்கு வந்து சேர்ந்தார். யாதவப் பிரகாசர் இராமானுசரைத் தேடித்தேடிக் காணாது காட்டில் என்ன தீங்கு நேர்ந்ததோ? என்று கருதி, மேலே நடந்து கங்கைக் கரையை அடைந்தார். கோவிந்தப் பட்டரும் யாதவருடன் கூடச் சென்றார். கங்கையில் நீராடுகையில் கோவிந்தப் பட்டர் கையில் ஒரு சிவலிங்கம் அகப்படவே அவர் வியப்புற்றார். கங்காதரரான சிவனே உம்மை நாடி வந்தார் என்று, 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார்' எனப் பெயரிட்டு அழைத்தனர். பின்னர் யாத்திரை முடிந்து திரும்பினர். கோவிந்தப்பட்டர் காளஹஸ்தியில் அமர்ந்து சிவ பூஜை செய்து கொண்டிருந்தார். யாதவர் திரும்பி வந்த பின் காஞ்சியில் இராமானுசரைக் கண்டு, ''நீர் விந்திய மலைக் காட்டில் காணாமற் போய்விட்டதால் தேடித் தேடி வருந்தினோம். எப்படியும் நலமுடன் வந்து சேர்ந்தீரே'' என்று கூறி தன் கருத்தை மாற்றிக்கொண்டு தன் குழுவில் சேர்த்துக் கொண்டார்.

இந்நிலையில் ஆளவந்தார் இவரது பெருமையையும், அறிவாற்றலையும் கேள்விப்பட்டு, காஞ்சிபுரம் வந்து பெருமாள் கோயிலைச் சேவிக்க வந்தார். ஒருநாள் யாதவப் பிரகாசரும் தன்

சீடர்களுடன் கோவிலில் வணங்குவதற்காக வந்திருந்தார். ஆளவந்தார் திருக்கச்சி நம்பிகளிடம், ''இராமானுசர் யார்'' என்று கேட்க அவர் அடையாளம் காட்ட, கண்டு மகிழ்ந்து இவரே நம் தரிசன நிர்வாகத்துக்குரியவர் என்று தீர்மானித்துக் கொண்டு அவரோடு அளவளாவும் வாய்ப்பு கிட்டாமல் இருந்ததால் இறைவனிடம் முறையிட்டு, 'இவரை நம் தரிசன நிர்வாகியாக்க வேண்டும்' என்று விண்ணப்பித்து திருவரங்கம் சென்றார். காஞ்சி மன்னன் மகளுக்கு பிரம்மராக்ஷம் பிடித்தாட்ட யாதவப் பிரகாசரால் முடியாமலிருந்தும், இராமானுசர் அந்தப் பேயை ஓட்டிப் புகழ் பெற்றார்.

பின்னர் யாதவருக்கும் இராமானுசருக்கும் கருத்து வேறுபாடுகள் மிகவே இராமானுசர் அவரை விட்டு நீங்கி திருக்கச்சி நம்பிகளைச் சார்ந்து வரலானார். ஆளவந்தார் உடல் நலம் இல்லாது தமக்குப் பிறகு தரிசன நிர்வாகியாக இராமானுசரை நியமிக்க எண்ணிக்கொண்டு பெரிய நம்பிகளை அனுப்பி அழைத்து வருமாறு பணித்தார். பெரிய நம்பிகள் காஞ்சிபுரம் வந்து இராமானுசர் கோயிலுக்கு வரும் வழியில் சில சுலோகங்களைச் சொல்லிக் கொண்டே இருந்தார். அதன் பொருள் நயத்திலீடுபட்ட இராமானுசர் ''இது யாருடைய சுலோகங்கள்'' என்று நம்பியிடம் கேட்க, அதற்கு அவர் இது எமது குருவான ஆளவந்தாரின் திவ்ய பிரபந்தங்கள் என்று கூறினார். இராமானுசர் 'அப்பெரியவரைத் தரிசிக்க வேண்டும்' என்று விரும்ப, அவரும் தம்கூட திருவரங்கம் வருமாறு கூறினார். திருக்கச்சி நம்பிகளிடம் விடை கொண்டு திருவரங்கம் புறப்பட்டனர். இராமானுசர் திருவரங்கம் அடைந்த அன்று ஆளவந்தார் நோய் முற்றி திருநாட்டுக்கெழுந்தருளினார். இராமானுசர் தாம் இவ்வளவு தூரம் வந்தும், ''அவரைக் காணக் கிடைக்காமல் மறைந்தாரே'' என்று அழுது புலம்பி ஆளவந்தாரின் உடல் அடக்கமாகும் இடத்துக்கு விரைந்து வந்தார். வந்து அவரது உயிரற்ற உடலைக் கண்டு மனமுருகி வருந்தியவாறே பார்த்தபோது ஆளவந்தார் திருக்கையில் மூன்று விரல்கள் முடங்கிக் கிடக்க, ''முன்னும் இப்படியுண்டோ? இப்போதுதானோ?'' என்று வினவ, அங்குள்ளோர், ''பிரம்ம சூத்திரத்துக்கு வியாக்கியானம் செய்தல் வேண்டும். நம்மாழ்வார் திருவாய்மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்தல் வேண்டும். வியாச பராசரங்கள் இடத்தில் நன்றியுடன் பயிலுதல் வேண்டும் என்றும் மூன்று கோரிக்கைகள் உண்டெனக் கூறினர்.'' இராமானுசர், ''நான் இம்மூன்று கோரிக்கைகளையும் நிறைவேற்றக் கடவேன்'' என்று கூறவும் முடங்கிய மூன்று விரல்களும் நிமிர்ந்தன. அது கண்ட

அனைவரும், ''நீயே இவருடைய அன்புக்குரிய சீடன் ஆவீர். அவருக்குப் பின் தரிசன நிர்வாகம் புரிதல் வேண்டும்'' என்று கூறினர். பின் இராமானுசர் திருவரங்கக் கோயிலுக்குப் போகாமல் மனம் வெதும்பி காஞ்சிபுரம் வந்து சேர்ந்தார். ''ஆளவந்தாரோடு கூடியிருக்கப் பெற்றிருந்தால் பரமபதத்துக்குப் படி கட்டியிருப்பேன்'' என்று இளையாழ்வார் (இராமானுசர்) அடிக்கடிக் கூறி வருந்துவதுண்டு. பின் காஞ்சியில் திருக்கச்சி நம்பிகளிடம் சேர்ந்து வைணவத் தத்துவங்களையும், வேதங்களையும், திவ்யப் பிரபந்தங்களையும் கற்று வரலானார்.

திருக்கச்சி நம்பி சென்னைக்கு அருகிலுள்ள பூவிருந்த வல்லியில் வைசிய குலத்தில் வீரராகவருக்கும், கமலைக்கும் நான்காவது குமாரராக கி.பி. 1009ல் அவதரித்தார். காஞ்சியில் வரத இராஜப் பெருமாள் கோவிலில் ஆலவட்டம் வீசித் தொண்டு புரிந்து வந்தார். இராமானுசர் இவரிடம் சீடராக இருக்க விரும்பினார். தான் கீழ்க் குலத்தவர் என்ற காரணத்தால் மறுத்து விட்டார். ஒரு சமயம் இராமானுசர் திருக்கச்சி நம்பிகளைத் தம் இல்லத்தில் உணவுண்டு செல்ல வேண்டும் என்று விரும்பியழைத்தார். அவரும் இசைந்தார். அறுசுவை அடிசில் சமைத்து ஆயத்தமாக இருந்தும் நம்பி வரவில்லை. அவரை நேரில் அழைத்து வர இராமானுசர் தெற்கு திருவீதி வழியே மேற்கே செல்ல, நம்பியோ வடக்குத் திருவீதி வழியே வந்து இராமானுசர் வீட்டை அடைந்து தமக்கு, கோயில் திருப்பணிக்கு நேரமில்லை என்று கூறி இராமானுசர் மனைவியிடம் தமக்கு உணவு பரிமாறும்படியும், தான் உண்டு செல்ல வேண்டு மென்றும் கூறினார். தேவிகள் இவரை ஒரு மூலையில் உட்கார வைத்து அமுதளித்து அனுப்பி வைத்து, சாப்பிட்ட இடத்தை கோமயத்தால் மெழுகி சுத்தம் செய்து, தாமும் குளித்து விட்டு வந்து நிற்கும்போது இராமானுசர் வீடு வந்து சேர்ந்தார். நம்பியைக் காணாமல் மனைவி நீராடியிருப்பதறிந்து என்னவென்று விசாரிக்க, ''அந்த ஸ்ரீவைஷ்ணவன் வந்து விரைந்து செல்ல வேண்டும் என்றதால் அமுது செய்வித்தனுப்பினேன். அவர் கீழ்க்குலத்தவராவதாலே இலையைக் கோலால் தள்ளி, இடத்தை மெழுகி, நீராடி வந்தேன்'' என்றாள். இதுகேட்டு இராமானுசர் மிகவும் வருந்தி அவர் உண்ட இலையில் தான் உண்ண விரும்பியும் அப்போது கிட்டவில்லை என்றும், பாகவதரை குலம் பார்த்து தாழ்வு செய்ததற்காக மனைவியைக் கடிந்து கொண்டார். திருக்கச்சி நம்பிகள் 'தேவராஜாஷ்டகம்' எனும் துதி நூல் அருளிச் சென்றுள்ளார். பெரிய நம்பி என்னும் ஸ்ரீபராங்குசதாசர் இராமானுசரின் ஆசாரியாருள்

ஒருவர். இவர் கி.பி. 997ல் அந்தணர் குலத்தில் திருவரங்கத்தில் அவதரித்தார். இவர் இராமானுசரை காஞ்சியிலிருந்து திருவரங்கத்துக்கு அழைத்து வந்தபோது ஆளவந்தாரின் சரமதசையில் இருந்தார். மீண்டும் இராமானுசரை அழைத்து வந்து திருவரங்கத்தின் தரிசன நிர்வாகம் செய்விக்க வேண்டுமென்று விரும்பிக் காஞ்சியை நோக்கிப் புறப்பட்டு மதுராந்தகம் ஏறி காந்த கோவிலில் இருக்கும்போது, இராமானுசரும் திருவரங்கத்தை நோக்கி புறப்பட்டு மதுராந்தகம் கோவிலில் வந்து ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டார்கள். தேடிச் சென்ற மூலிகை காலிற்பட்டதுபோல இருவரும் மகிழ்ச்சியுற்றனர். திருக்கச்சி நம்பிகள் சொற்படி பெரிய நம்பியைச் சேர்ந்து, சீடராக வந்த இராமானுசர் பெரிய நம்பியைக் கண்டதுமே தம் பேறு சிறந்ததென மகிழ்ந்து தமக்கு திருவச்சிலை (ஸமாஸ்ரயம்) சாதித்து தம்மை உய்விக்குமாறு வேண்ட பெரிய நம்பிகளும் பஞ்ச ஸம்ஸ்காரங்களும் செய்வித்து, ''ஆளவந்தார் திருவடிகளே தஞ்சம்'' என்றிரும் என அருளினார். பின் இருவரும் திருவரங்கம் சென்றனர்.

திருவரங்கத்தில் இருக்கும்போது பெரிய நம்பியின் தேவியாருக்கும், இராமானுசரின் தேவியாருக்கும் கிணற்றில் தண்ணீர் இறைக்கும்போது தோண்டி (குடத்தின்) பொருட்டாகச் சண்டையிட்டுக் கொண்டார்கள். அதனால் பெரிய நம்பி தம் மனைவியைக் கோபித்து இராமானுசரிடம் சொல்லாமல் கோவிலில் குடிபுகுந்துவிட்டார். இராமானுசருக்குச் செய்தி தெரிந்ததும் தம் மனைவியைக் கடிந்து கொண்டார்.

ஒரு தடவை ஒரு வைணவர் பசியால் வாடி வரவும், பழைய சோறு இருந்தால் போடும்படி இராமானுசர் வேண்டி மனைவியார், ''சோறு தீர்ந்து விட்டது, இல்லை'' என்று கூறினார். சிறிது நேரம் கழித்து சமையலறையில் சென்று பார்த்தபோது சோறு நிறைய இருந்தது. இருந்தும் கருமித்தனத்தாலோ இல்லை என்று வைணவத்திற்கு அபசாரப்பட்டதற்காகவும், தம் மனைவியைக் கடிந்து கொண்டார். இம்மூன்று நிழ்ச்சிகளும் இராமானுசர் உள்ளத்தை மிகவும் வருத்தியது. தமது குறிக்கோளுக்கு இசைந்து வராத இல்லக்கிழத்தியாரை மனம் வெறுத்தது. தான் சன்னியாசம் பெற வேண்டுமெனத் தீர்மானித்தார். மனைவியை பிறந்தகத்துக்கு வேண்டிய தனமும், பொருள்களும் கொடுத்து அனுப்பி வைத்து விட்டார். பின் துறவியாகி திரிகண்ட கஷாய வஸ்திரம் அணிந்து, மடத்திலிருந்து தரிசன நிர்வாகம் செய்யலானார்.

பாண்டிய நாட்டின் மதுரை காரைக்குடிகட்கிடையே உள்ள திருக்கோட்டியூர் என்னும் திவ்விய ஸ்தலத்தில் அந்தணர் குலத்தில் குருசேகர் என்னும் நாமம் உடைய திருக்கோட்டியூர் நம்பி கி.பி. 987ம் ஆண்டில் திருக்கோட்டியூர் நம்பி அவதரித்தார். ஆளவந்தாரின் தலைமைச் சீடராக புகழ் பெற்றவர். இராமானுசர் இவரிடம் சில விசேடார்த்தங்களை அறிந்து கொள்ள பதினெட்டு முறை நடந்து வந்தார். பிற வேறெவர்க்கும் உபதேசிக்கக் கூடாது என்று சூளுரைத்த பின்னர் சரம சுலோகார்த்தத்தை வெளியிட்டருளினார். ஆனால், உடையவர் சேதனர்களை உய்விக்க வேண்டி அந்த ரகசியார்த்தத்தை கோயிலில் தென்கோபுரத்தில் ஏறி நின்று எல்லோரும் அறிய உபன்யாசித்தார். அதுகண்டு நம்பி இராமானுசரிடம் ''நீர் மட்டும் தெரிந்து கொள்ளச் சொன்ன மந்திரார்த்தத்தை சகலரும் அறியச் சொன்னீரே! குருவார்த்தை மீறியதற்கு நரகமன்றோ உமக்குக் கிடைப்பது'' என்று கூற இராமானுசரும், ''நான் மட்டும் நரகம் புகுவேன்! தங்கள் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொல்லுகையாலே கேட்ட எல்லா ஆத்மகோடிகளும் உய்தி பெற்று வைகுண்டம் பெறுவர் அன்றே'' என்று கூறினார்.

இவரது கருணையுள்ளத்தைக் கண்ட நம்பி அன்று முதல் வைணவத்தை, ''எம்பெருமானார் தரிசனம்'' என்று வழங்குமாறு செய்தார். இவர் குமாரத்தி தேவகிப் பிராட்டியார். குமாரர் தெற்காழ்வார். இருவரும் எம்பெருமானாரை ஆஸ்ரயித்தவர்கள் ஆவார்கள். மதுரைக்கடுத்துள்ள அழகர் கோவில் என்னும் திருமாலிருஞ் சோலையில் அந்தணர் குலத்தில் ஞானபூரணர் என்னும் திருமாலையாண்டார் கி.பி. 988-ல் அவதரித்தார். அழகர் கோவிலில் தொண்டு செய்து வந்தார். மலையாள மாந்திரீகர்கள் சிலர் அழகரின் தேஜஸைக் கவர அஞ்சனமையிட்டுக் கண்ணுக்குத் தோன்றாமல் வந்து அங்குள்ள பணி பிரசாதம் உண்டு மறைந்திருந்தனராம். திருமாலை யாண்டார் அது உணர்ந்து பிரசாதத்தில் மிளகு அதிகம் சேர்த்து வைத்தாராம். மிளகு காரம் மிகவே, அதையுண்ட மாந்திரீகர்கள் கண்களில் நீர் வந்து அஞ்சனம் (மை) அழிந்து போகவே அவர்கள் கோலம் வெளிப்பட்டு பிடிபட்டு தண்டிக்கப்பட்டார்கள் என்று ஒரு செய்தி வழங்கி வருகிறது.

திருக்கோட்டியூர் நம்பி நியமனத்தால் திருமலையாண்டாவர் இராமானுசருக்கு திருவாய்மொழியை காலாட்சேபம் செய்து வந்தார். ஒருநாள், ''அறியாக் காலத்துள்ளே'' (திருவாய் 2.3.3) என்ற

பாசுரத்துக்கு ஆளவந்தார் கூறிய பொருளை திருமலையாண்டார் கூற, இராமானுசர் அதை மறுத்து வேறுரை கூற ஆண்டான் சினந்து திருவாய் மொழிப்பாடல் சொன்னதும் தவிர்த்தார். திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டாரிடம் வந்தபோது பாடம் நடக்கிறதா என்று கேட்க, ''இல்லை. இராமானுசர் தாமே சில புத்துரைகள் கூறுகிறார்'' என்று தவிர்த்தேன் என்ன - நம்பி, ''அதென்ன?'' என்று வினவினார். ஆண்டானும் அந்தப் புதிய உரையைக் கூறினார். அது கேட்க நம்பி இந்த உரையை ஆளவந்தார் கூற நாமே கேட்டதுண்டு? இராமானுசர் கூறும் உரைகள் ஆளவந்தார்க்குடன்பாடானதே ஆகும். அவர் கற்றுணர்ந்த ஞானி. ஆதலின் தாங்கள் மீண்டும் பாடம் தொடங்குக என்று பணித்தார். அவ்விதமே மீண்டும் திருவாய்மொழி அனுசந்தானம் நடைபெற்றது.

இவர் குமாரர் சுந்தரத்தோளுடையார், இராமானுசரின் திருவடிகளில் சேர்ந்து உய்தி பெற்றவராவார். திருமலையாண்டார் மரபில் வாதிகேசர் அழகிய மணவாள சீயர் சீடரான யாமுதூர்யர் பரமேய ரத்னம், தத்வபூஷணம் எனும் நூல்களை பதிமூன்றாம் நூற்றாண்டில் இயற்றிய பெரியவராவார். சித்ரா பௌர்ணமி அன்று வைகையில் அழகர் எழுந்தருளும்போது ஆண்டான் மரபினர் பல்லக்கில் முதலில் எழுந்தருள்வார்கள். 'ஆண்டான் பல்லக்கு முன்னே அழகர் பல்லக்கு பின்னே' என்று பொதுமக்கள் வழங்குவது இன்றும் உண்டு. இராமானுசரின் மாதுலரான பெரிய திருமலை நம்பி என்னும் ஸ்ரீசைலேசபூரணர் திருப்பதியில் இராமானுசருக்கு ஓராண்டு இராமாயணம் பாடம் சொன்ன ஆசாரியர் ஆவார். இவரது சகோதரிகளில் மூத்தவர் பூதேவி என்னும் காந்திமதி குமாரர் இராமானுசர். இளையவர் ஸ்ரீதேவி குமாரர் என்பார் என்னும் கோவிந்தர். உடையவர் (இராமானுசர்) திருமலை சென்று வெங்கடத்துறையும் இறைவன் திருமாலே என்று நிர்ணயம் செய்து அங்கு நந்தவனம் அமைத்து தொண்டாற்ற ஆலத்தாழ்வானை நியமித்தருளினார். பின் அதைக்காணச் சென்றபோது திருமலைநம்பி எம்பார் என்னும் கோவிந்தரை சைவ மதத்திலிருந்து திருப்பி வைணவராக மாற்றியதோடன்றி அவரை இராமானுசரிடம் அடைக்கலமாக்கி தாரை வார்த்துக் கொடுத்தார்.

ஒரு சமயம் எம்பார் இவரைக் காண வந்தார். நம்பி அவரைப் பாராமுகமாக நடத்தி, ''விற்ற பசுவுக்கு புல்லிடுவாருண்டோ'' என்று கூறி உடையவர் ஸ்ரீபாதமே கதியென இருக்குமாறு பணித்தார்.

ஒரு தடவை இராமானுசர் திருப்பதியில் தங்கி இருந்தார். அவருக்கு திருமலையிலிருந்து பிரசாதமும், ஸ்ரீகோசமும் கொண்டு வந்து தர நம்பி தாமே நடந்து வந்தார். வயது முதிர்ந்த பெரியவரும் சிறந்த அறிஞருமான அவரைப் பார்த்து ''தாங்கள் இவ்வளவு சிரமப்பட்டு வரவேண்டுமோ? சிறியார் ஒருவரிடம் கொடுத்தனுப்பக் கூடாதோ?'' என்று கேட்க, ''என்னினும் சிறியாரைக் கண்டிலேனே'' என்று விடை கூறிய அடக்கமே உருவான உத்தமர்.

ஒரு தடவை திருமலையிலிருந்து திருப்பதிக்கு கட்டுச் சோற்றுடன் இறங்கி வந்து நடுவழியில் உணவுண்ண கட்டுச் சோற்றை அவிழ்த்தார். கட்டுச் சோற்றில் கட்டெறும்புகள் மொய்த்திருந்தன. அதைக் கண்ணுற்ற நம்பி, ''இந்த எறும்புகள் திருமலையில் இருந்தனவே

*கோனேரி வாழும் குருவாய்ப் பிறப்பேனே*
*மீனாய் பிறக்கும் விதிமுடையேன் ஆவேனே*
*படியாய் கிடந்துன் பவளவாய் காண்பேனே*
*எம்பெருமான் பொன் மலையில் ஏதேனும் ஆவேனே*

என்று குலசேகரர் முதலிய அடியார்கள் பாடியதுபோல அடியார்கள் இந்த உயிர்களாக அவதரித்திருக்கக் கூடும். அவர்களைக் கீழே கொணர்ந்த அபச்சாரம் ஆயிற்றே'' என்று வருந்தி மீண்டும் மலைமேல் ஏறி அந்த எறும்புகளை திருமலையிலே விட்டனர். இத்தகைய அருளாளரும், அறிஞருமான திருமலைநம்பி இராமானுசரின் மாணவராக மட்டுமன்றி ஆசாரியராகவும் அமையும் பேறு பெற்றார். தம் குமாரர்களான பிள்ளை திருமலை நம்பி, பிள்ளான் ஆகிய இருவரையும் குமாரத்திகளையும் இராமானுசரிடம் சேர்த்து உய்விக்கும்படி அருளினார்.

ஆளவந்தாரின் குமாரரும், மணக்கால் நம்பியிடம் கற்றுத் தெளிந்தவருமான திருவரங்கப் பெருமாள் அரையர் கி.பி. 1017-ல் திருவரங்கத்தில் அவதரித்தார். காஞ்சியில் தேவப்பெருமாளை இசையால் மயக்கி வரப்பெற்று இராமானுசரை திருவரங்கத்துக்கு அழைத்து வந்தவராவர். இவருக்கு பாலமுது காய்ச்சி, சமர்ப்பித்தும், மஞ்சட்காப்பு அரைத்து சமர்ப்பித்தும் தொண்டு செய்தார் இராமானுசர். ஒருநாள் மஞ்சள்காப்பு அரைத்தது அரையர் திருமேனிக்கு உகப்பில்லாதபடியை அவர் முகக் குறிப்பால் உணர்ந்த

உடையவர், உடனே வேறு மஞ்சள் காப்பரைத்து கொணர்ந்தாராம். இவரிடம் சருமபுஷார்த்தஞ் சொல்லி தேவு மற்றறியாத ஸ்ரீமதுர கவிகளைப் போலே நீரும் குருவினை உறங்கும் பெருமாள் தானே உலாவும் பெருமாளாய் வந்தார் எந்திரும் என்று கூறி ஆசாரிய நிஷ்டையில் அருமை பெருமைகளை உபதேசித்தருளினார். அரையருக்கு சந்ததியின்மையால் தமது உடன் பிறந்தார்களை உடையவர் ஸ்ரீபாதத்தில் அடைக்கலப்படுத்தினார். இராமானுசர் பலரிடத்திலும் உபதேசங் கேட்கைக்கு காரணமென்ன? அவர்களும் இவருக்கு வலிந்து வந்து உபதேசம் செய்ததும் ஏன்? என்னில் ஒரு மன்னன் வயது வராத தன் 'குமாரனுக்காக தனது பல மந்திரிகளிடமும் நிதிகளை வைத்து தன்மகன் பக்குவமடைந்த பின் அவனிடம் ஒப்பிவியுங்கள் என்று சொல்லிப் போவது போல ஆளவந்தாரும் தம் சீடர்கள் பலரிடத்தும் ஒவ்வொருவரிடமும் ஒரு விசேஷார்த்தங்களைத் தந்து இராமானுசரிடம் அதைத் தருமாறு பணித்தார். ஆளவந்தாரிடம் நேரிடையாகப் பெற இயலாத இழப்புத்தீர அவர் சீடர்களிடம் பெற்றுக்கொண்டு உந்தி பெற்றார் இராமானுசர். ★

இராமானுசர் ஐந்து பேராசான்களிடம் கற்றுத் தெளிந்த பேரறிவும், சிந்தனை வளமும் நிறைந்தவராகவும், தாழ்ந்தார் உயர்ந்தார் என்ற பேதம் பாராட்டாமல் எல்லோரையும் நேசிக்கும் மானுட நேயமும் மிக்க தத்துவ ஞானியாகத் திகழ்ந்தார். திருவரங்கத்தில் இவர் தரிசன நிர்வாகம் பண்ணுகையில் பல சீடர்கள் இவரையடைந்து உந்தி பெற்றனர்.

கூரத்தாழ்வார், முதலியாண்டான், திருக்குருகைப் பிரான் பின்னான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், சோமாசியாண்டான், நடாதூராழ்வான், வடுக நம்பி திருவரங்கத் தமுதனார், எங்களாழ்வான் முதலிய பல சீடர்கள் இவரைச் சேர்ந்து வைணவ தருமத்தைப் பரப்பினர்.

'ஸ்ரீபாஷ்யம்' எனப்படும் அந்நூல் விசிஷ்டாத் வைத சித்தாந்தத்தை நிலை நிறுத்திய பெருநூல் ஆகும். இந்நூலை காஷ்மீர சாரதாபீடத்திற் சென்று ஆங்குள புலவர்கட்கு மெய்ப்பித்து பாராட்டைப் பெற்றார். சரசுவதி தேவியே வந்து இந்நூலைப் பாராட்டியதாகவும், 'கப்யாசம்' என்ற சொற் பொருளைப் பாராட்டிய

★ ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம்.

தாகவும், மரபு நூல்கள் சிறப்பித்துப் பேசும். அக்கால மரபுப்படி தம் மதம் நிறுவ பாரத தேச யாத்திரை மேற்கொண்டு ஆங்காங்கே வாதிட்டுப் புறமதத்தினரை வென்று தம் மதம் நிறுவி செல்வாக்கோடு திரிந்து வந்தார். ஸ்ரீபாஷ்யம், வேதார்த்த சங்கிரகம், வேதாந்த தீபம், வேதாந்த சாரம், கீதா பாஷ்யம், சரணாகத் தத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம் எனும் கத்மத்ரயம், நித்யஜ் எனும் நவரத்தினங்கள் போல ஒன்பது நூல்கள் இராமானுசர் அருளிச் சென்றார். நூல்கள் இயற்றியும், யாத்திரைகள் செய்து பிரசங்கங்கள் மூலம் மக்களைத் தம் மதத்தில் ஈர்த்து வைணவ தருமத்தை சீருறச் செய்து வந்தார். இது கண்டு பொறாத பிற மதத்தினர் சோழ மன்னனிடம் கோள் கூறி இவரைத் தண்டித்து மதப் பிரச்சாரம் செய்யாது தடுக்குமாறு கூறினார்கள். 'கிரிமிகண்டன்' என்று மரபு நூல்களில் கூறப்படும் இராஜேந்திர சோழபுரத்தில் அரசாண்டு வந்த குலோத்துங்க சோழ மன்னன் சைவ மதத்தில் பற்று மிக்கவராகவே தன் நாட்டிலுள்ள வித்வான்களை எல்லாம், 'சிவாத் பரதரம் நாஸ்தி' (சிவனை விட மேலான பொருள் இல்லை) என்று எழுதிக் கையெழுத்திடச் செய்தார். நாலூரான் என்னும் ஒரு ஸ்ரீவைஷ்ணவர், ''எங்கள் தரிசனத் தலைவர் இராமானுசர் எழுத்திட்டாலன்றோ எழுத்திட்டதாகும். மற்றையோர் இட்டாலென்ன? இடாவிட்டால் என்ன?'' என்று கூறவே அம்மன்னன் இராமானுசரை அழைத்து வருமாறு ஆட்களை அனுப்பினான்.

ஆட்கள் திருவரங்க மடத்திற்கு வந்து செய்தி சொன்னபோது கூரத்தாழ்வார் இருந்தமையால் இராமானுசருக்கு தீங்கு நேரலாமெனக் கருதி தாமே காவியுடையுடுத்தி பெரிய நம்பிகளுடன் புறப்பட்டுச் சென்றார். பின் மடத்திற்கு வந்த இராமானுசரிடம் பிற சீடர்கள் தங்கட்கு தீங்கு நேரலாம் என்று கூறி மைசூரை அடைந்து சிலகாலம் தஞ்சம் புகுந்து அங்கு தரிசனத்தை விருத்தி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். இராமானுசர் இதுவே உசிதமென்று கருதி கூரத்தாழ்வானின் வெண்குடைகளைத் தாம் தரித்துக்கொண்டு மைசூருக்கு அடுத்துள்ள மேல்கோட்டை எனப்படும் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினார். சோழமன்னன் அவைக்குச் சென்ற கூரத்தாழ்வராரும், பெரிய நம்பிகளும் எழுத்திட வேண்டப்பட்டார்கள். கூரத்தாழ்வார், 'சிவாத் பரதரம் நாஸ்தி', 'த்ரோணம் அஸ்தி தத்பரம்' என்று சிலேடையாக சிவாஜ் (உடுக்கை விட) மேலான பொருள் இல்லையா? த்ரோணம் (மரக்கால்) அதைவிடப் பெரியதாக இருக்கிறது என்று எழுதிக்

கையெழுத்திட்டார். பெரிய நம்பிகள் ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்றெழுதிக் கையெழுத்திட அதனால் மன்னன் சினந்து கண்களைப் பறிக்குமாறு கட்டளையிட்டான்.

கூரத்தாழ்வார் தரிசன (த்துவ)த்துக்காக தரிசனம் (பார்வை) இழக்கப்பெற்றோமே என மகிழ்ச்சியுடன் தம் நகத்தாலேயே, ''நீ மாவீர சைவனாதலாலே உன்னைக் கண்ட கண்களை இழப்பதே நன்று'' என்று கூறிக் கண்களைக் கீண்டு கொண்டார். பெரிய நம்பி கண்களைப் பறித்தனர். முதியவரான பெரிய நம்பி நோய் பொறுக்க மாட்டாமல் கூரத்தாழ்வார் மடியில் தலை சாய்த்தவாறு பரம பதத்துக்கு எழுந்தருளினார். இந்தச் செய்தியறிந்த இராமானுசர் மிகவும் வருத்தமுற்று திரு நாராயணபுரத்திறைவனிடம் முறையிட்டு ஆழ்வார் நயனங்க ர் மீண்டும் பெற அருள வேண்டி நின்றார்.

மேல்கோட்டை எனும் நாராயணபுரத்தில் இருந்த எம்பெருமான் அருளால் திரு நாராயணபுரம் பிரதிஷ்டை செய்து கோயிலையும் நிர்மானித்தார். அக்கோயில் உற்சவ மூர்த்தியான ஸ்ரீராம பிரியர் என்னும் செல்வப் பிள்ளை எனும் மூர்த்தியை டில்லி அரசன் (அலாவுதீன் கில்ஜி?) கொண்டு சென்றதை அறிந்து இராமானுசர் அதைப் பெறுவதற்காகவும், தம் மதம் நிறுவுவதற்காகவும், வடபுலயாத்திரை மேற்கொண்டார். டில்லி அரசர் தன்னிடமிருந்த விக்கிரகங்களில் தாம் தேடி வந்த விக்கிரகத்தை எடுத்துச் செல்ல அனுமதித்தார். அந்த மூர்த்தி சுல்தான் மகள் அந்தப்புரத்திலிருந்தது. அவர் அறியாமல் அதைப் பெற்றுக் கொண்டு மீண்டும் தென்னகம் புறப்பட்டார். சுல்தான் மகள் தாம் நேசித்த அந்த மூர்த்தியைப் பிரிய மனமின்றி தானும் பின் தொடர்ந்து வந்து வீர நாராயணபுரத்திறைவனுடன் இரண்டறக் கலந்தார்.

வடுக நம்பியின் யதிராஜ வைபவத்தில் கூறப்படும் இவ்வரலாறு கோயிலொழுகு எனும் பிற்கால நூலின் திருவரங்க மூர்த்தியைக் கொண்டு சென்றதாகவும், டில்லி அரசன் மகள் சுதராணி அதைத் தேடி வந்து திருவரங்கத்திறைவனுடன் ஒன்றிவிட்டதாகவும் கூறுகிறது. இதேபோன்று ஸ்ரீவைஷ்ணத்திலும் இச் செய்தி பேசப்படுகிறது. இச்செய்திகள் விக்கிரக ஆராதனையை வெறுத்த மகம்மதியரிடத்திலும் கூட ஒருசிலர் இந்து தெய்வ வழிபாட்டில் நம்பிக்கையும், பற்றும் கொண்டிருந்தனர் என்ற சமரச மனோபாவத்தையே சுட்டிக் காட்டுகிறது.

சோழமன்னன் (கிருமிகண்டன்) கழுத்தில் புண் உண்டாகி இறந்த பிறகு தம் பகை தீர்ந்ததென மகிழ்ந்த இராமானுசர் மீண்டும் திருவரங்கம் வந்தார். வரும் வழியில் சோழனால் இடிக்கப்பட்ட திருச்சித்திர கூடத்திலிருந்து மறைவாகக் கொணரப்பட்ட கோவிந்தராஜப் பெருமாள் உற்சவ மூர்த்தியை திருப்பதியில் பிரதிஷ்டை செய்து வைத்தார். திருவரங்கத்தில் மீண்டும் வந்துசேர்ந்த இராமானுசர் மகமதிய மன்னர்களாலும், சைவர்களாலும் சீர்குலைந்த பல கோயில்களைப் புதுப்பித்து, உற்சவங்களையும் சீர்படுத்தி, ஆழ்வார்கள் பிரதிஷ்டையும், திவ்ய பிரபந்த அனுசந்தானமும் நிகழ்வித்து சீர்திருத்தினார். தாழ்த்தப்பட்ட குலத்தினரையும் அரவணைத்துத் தன்னம்பிக்கை உண்டாக்கி, 'திருக்குலத்தார்' என்று பெயரிட்டு ஆலயப் பிரவேசம் செய்வித்து தாசர்களாக்கி அவர்களையும் வைணவ மதத்திற் சேர்த்துக் கொண்டு மேன்மைப்படுத்தி, அதோடன்றி தாமே அவர்களைத் தம் சீடர்களாக்கிக் கொண்டு பெருமைப்படுத்தினார். திருவேங்கட முடையார் திருக்கோயிலும், சமண, பவுத்த மதங்களாலும், சைவ மதத்தாரின் வைணவக் கோயில்கள் சீர்குலைவுற்றது போலவே சீர்குலையுற்றிருந்தது. சைவர்கள் இக்கோயில் மூர்த்தி முருகப் பெருமானுடையதென வாதிட்டனர். இராமானுசரே தம் வாதத் திறமையால் இது விஷ்ணு கோயிலே என்று நிறுவியதன்றி வைணவ சம்பிரதாயப்படி பூசைகள் நடக்க ஏற்பாடு செய்தார். தம் மாமனாராகிய திருமலை நம்பி எனும் தம் ஆசாரியரும், அனந்தாழ்வார் எனும் தம் சீடரும் அங்கிருந்துகொண்டு வைணவம் சிறப்புற்றிலங்கிடச் செய்தார். ஸ்ரீகூர்மத்திலும் சைவர்கள் ஆதிக்கத்திலிருந்த கோவிலை மீட்டு திருமலையில் போலவே திருத்தியருளி சீர்பெறச் செய்தார். தமிழகத்துக்கும், கர்நாடகத்துக்கும், ஆந்திரத்திலும் வைணவ சம்பிரதாயம் வெகு விரைவில் பரவச் செழுமையுற்றது.

கேரளத்திற்கு தம் மதம் நிறுவச் சென்றபோது திருவனந்தபுரத்தில் இறைவனைச் சேவித்த பின் பிற இடங்களில் தம் புதிய தருமத்தை நிறுவ நினைத்திருந்தார். ஆனால், அங்குள்ள நம்பூதிரிகள் சங்கரரின் அத்வைதக் கருத்துக்களில் திளைத்தவர்கள் மட்டுமன்றி இவருடைய புதிய சீர்திருத்தக் கருத்துக்களை ஏற்க மனம் இன்றி, இவரை இங்கிருந்து வெளியேற்றத் திட்டமிட்டனர். இறைவனும் இவர்க்குத் தீங்கு நேராமல் காப்பாற்ற இவரை அப்படியே தூக்கி வந்து திருக்குறுங்குடிக்குக் கொண்டு வந்து குன்றருகே திருவட்டப் பாறையில் வைத்து விட்டார் என்று மரபுக்

கதைகள் கூறுகின்றன. அவ்விடத்தே இராமானுசர் கோயில் இன்றும் நின்று நிறுவுகிறது. இதுபோன்றே ஒரிசா மாநிலத்தில் உள்ள பூரி ஜகந்நாதர் கோயிலுக்குச் சேவிக்க புகும்போது அங்குள்ள பண்டார்கள் எனும் பூசாரிகள் இவரது சீர்திருத்தக் கருத்துக்களை ஏற்க மனம் இன்றி உள்ளே புகவும் மறுத்தார்கள் என்றும், இறைவனும் தான் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீகூர்ம திருத்தலத்தை சைவர்கள் ஆக்கிரமித்துள்ளார்கள், அதை சீர்படுத்தும் என்று ஆணையிட்டு திருப்பி அனுப்பிவிட்டார் என்றும் மற்றொரு மரபுக் கதைகள் கூறும்.

இராமானுசர் இவ்விதம் பலமுறை பாரத தேசம் முழுவதும் கால்நடையாகவே சுற்றித் திரிந்தும், பல்லக்கில் ஊர்ந்து சென்றும் தம் கருத்துக்களை ஆகம முறைப்படி பூசைகளும், திவ்யப் பிரபந்த அனுசந்தானமும் செய்து வரும்படி நியமித்து ஆங்காங்கே ஜீயர்களையும், ஏகாங்கிகளையும் தம் பிரதிநிதிகளாகவும் நியமித்தார். அவர் நியமித்த எழுபத்திரண்டு சிம்மாசனாதிபதிகள், ஜீயர்கள், ஏகாங்கிகள் எல்லோரும் எம்பெருமானார் தரிசனத்தை இந்திய நாடு முழுவதும் சிறப்புறச் செய்தனர். சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாகிய ஆண்டாள் மீது பெண்மையைப் போற்றும் பெருந்தகையான எம்பெருமானார் பாசம் மிக்கவராக இருந்தார். ஆண்டாள் வாய் நேர்ந்தபடியே நூறுதடா வெண்ணெயும், நூறு தடா அக்கார அடிசிலும் திருமாலிருஞ்சோலை அழகர்க்குச் சமர்ப்பித்து, 'கோயிலன்னன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார். ஆண்டாளின் சகோதரராகத் தம்மைப் பாவித்துக் கொண்டு தமக்கு முன்னூறு, நானூறு ஆண்டுகட்கு முன்னர் ஆண்டாள் அருளிய நாச்சியார் திருமொழியில் கண்ட ஒரு சிந்தனையை தாம் முன்வந்து நிறைவேற்றிய பரிவும், பாசமும் அவரது சிந்தனையின் உயர்வைக் காட்டுகிறது. மேலும், எல்லா திவ்ய தேசங்களிலும் ஆண்டாள் சன்னதிகளை உருவாக்கி, விக்கிரப் பிரதிஷ்டை செய்து இறைநிலைக் குயர்த்தினார். தம் காலத்திலேயே ஸ்ரீபெரும்புதூரிலும், ஸ்ரீ ரங்கத் திலும் திரு நாராயணபுரத்திலும் தனது அர்ச்சா விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்ய சீடர்கள் மனம் களிக்க ஒப்புக் கொண்டார்.

இராமானுசரின் வைபவம் மிக விரிவானது. இவர் தம் சீடர்கள் சரிதங்களிலும் காண முடிகிறது. உயர்ந்த சிந்தனை, எளிமைப் பண்பு, அடக்கம், ஆழ்ந்தகன்ற அறிவு, ஆசாரசீலம், குருக்களையும், சீடர்களையும் உள்ளன்போடு தேசித்துறவு கொண்ட பெருந்தன்மை, எல்லோரையும் சமமாக மதித்த மானுட நேயப் பண்பாடு எல்லாம் கலந்து நம்மை மெய் சிலிர்க்க வைக்கும் உயர்

பண்புகளின் உருவமாக இராமானுசர் திகழ்ந்தார். இளகிய மனமும், பிறர் பால் அன்பும் உடைய அவருடைய பூப்போன்ற இதயத்தில் வைணவ சம்பிரதாய அனுஷ்டானங்களில் பற்றுறுதி வைரம் போலத் தூண் கொண்டதாக அமைந்திருந்தது. தமது தருமத்துக்கு ஒத்திசைந்து வராத தருமபத்தினியை, அவர் மனம் நோகாதவாறு வேண்டிய செல்வமும், வசதியும் ஈந்து விலக்கி வைத்து சந்நியாச தருமம் பூணும் போதும், சாஸ்த்திர அத்யனங்களில் யாதவப் பிரகாசரிடத்தாயினும் சரி, சீடர் ஆகிய கூரத்தாழ்வானிடமாயினும் சரி, திருமாலை யாண்டான் முதலிய ஆசார்யர்களிடத்தில் விசேடார்த்தங்களைக் கேட்கும் போதும் சரி தம் கருத்தை நிலை நிறுவுவதில் கண்டிப்புடனே இருந்தார் என்பதையும் காண முடியும். தரிசனப் பிரச்சாரத்துக்காக வட நாட்டுத் திருத்தலங்கட்கும், தென்னாட்டுத் திருத்தலங்கட்கும் இரண்டு மூன்று தடவை அவர் உடல் வருத்தம் பாராது உலாவி வந்துள்ளார். அறிவைச் சேகரிக்க திருக்கோட்டியூர் நம்பிகளிடம் பதினெட்டுத் தடவை அலைந்ததும், காஷ்மீர சாரதாபீட ஸ்ரீகோசங்களைக் கண்டு ஆராய்தற்கு நீண்ட பயணம் செய்ததும், பல ஆசாரியர்களிடம் சென்று விசேடார்த்தங்களைக் கேட்டறிந்ததும், அவருக்குள்ள அறிவைத் தேடுவதிலுள்ள ஆனந்தம் ஈடினையற்ற தாகும். அறிவை விநியோகித்தலும் ஒரு பேரின்பம் என்பதுணர்ந்த அவருக்குச் சீடர்கள் வந்து மொய்த்ததில் வியப்பில்லை. உயர் சிந்தனையும், பண்பாடும் உடைய சீடர்கள் அவருக்குக் கிடைத்தது பெரும் பாக்கியமே.

ஏசுவின் பன்னிரு சீடரில் ஒருவன் காட்டிக் கொடுத்தான். எம்பெருமானுக்கோ தாமே இவர் வேடம் பூண்டு தண்டனை பெற்று அவதியுற்ற (கூரத்தாழ்வான்) சீடரைக் காண்கிறோம். சாக்ரடீசுக்கு ஒரு சீடனைத் தான் (பிளேட்டோ) காண்கிறோம். புத்தனுக்கும், சங்கரருக்கும் நான்கு சீடர்கள் தான் சிறப்புடன் எடுத்தியம்பக் காண்கிறோம். இராமானுசருக்கு பற்பல சீடர்கள். சிறப்பாக பத்துச் சீடர்கள் அறிவாற்றலிலும் பண்பாட்டிலும் சிறந்திருக்கக் காண்கிறோம். இராமானுசர் நூற்றிருபதாண்டுகள் நல்ல உடல் நலமுடன் வாழ்ந்ததும் நற்பேறாகும். வடுக நம்பி, கருடவாஹன பண்டிதர், திருவரங்கதமுதனார் போன்ற சமகாலச் சீடர்கள் இவர் வரலாற்றை எழுதிப் போந்ததும் சிறப்புடைய ஒன்றாகும். 1137ம் ஆண்டில் உடையவர் திருநாட்டுக்கெழுந்தருளினார். தம் இறுதிக் காலத்தில் தம் சீடர்களை அழைத்து மூன்று நாட்கள் இடைவிடாது விசேடார்த்தங்களைச் சொல்லவே அவர்கள், 'இது என்ன?' என்று விண்ணப்பம் செய்யத் தாம் இன்னும் நான்கு நாட்களில் இறலவேண்டி

சேரப் போகிறோம் என்று கூற, சீடர்களும் தாங்களும் கூட வருவோம் என்ன, அவர்களை ஆணையிட்டுத்தடுத்து தரிசனம் பரவச் செய்து வாருங்கள் என்று பணித்தார். பின் எல்லோரையும் அழைத்து, ''பட்டர்க்கு இஷ்டமாயிருங்கள்'' என்று கூறி, ''ஏதாவது பிழை இருந்தால் மன்னியுங்கள்'' என்று கூற எல்லோரும் கண்ணீர் மல்க ''தங்களுக்கு ஒரு பிழை உண்டோ'' என்று கூறி மனமுருக நின்றார்கள்.

உடையவர் அவர்களைப் பார்த்து இறுதியாகச் சில நல்லுரைகள் கூறினார்.

''ஒருவன் இறைவனைச் சரணடைந்தவனானால் அவன் உடல்வாழ்க்கை கடவுளருள். ஆதலினால் அவன் உயிர் பிரிதற்கு அழுவது கூடாது. அழுதால் ஆத்ம சமர்ப்பணம் செய்தது பொய்யாகும். இனி உடலுக்காக அழுதானாகில் உடல் கருமத்திற்கு அதீனம். ஆகையால் அதற்கழுதால் நாத்திகனாவார். உடல் பிரிவிற்கோ, உயிர் பிரிவிற்கோ அழுவது உசிதமல்ல'' என்று கூறித் தேற்றினார்.

''வைணவர்கள் நடக்க வேண்டிய மூவகை நெறியுண்டு. அனுகூலர், பிரதிகூலர், நடுநிலையர் என்பார் மூவர். அனுகூலர் ஸ்ரீ வைஷ்ணவர்கள். பிரதிகூலர் இறைமறுப்புக் கொள்கையாளர்கள். நடுநிற்பார் இவ்விருவகையினரும் அல்லாத சம்சாரிகள் (சாதாரண மக்கள்), இவர்களில் அனுகூலரை(வைணவரை)க் கண்டால் மலர், நிலா, தென்றல்களைக் கண்டாற்போக மகிழ்ந்து இணைதல் வேண்டும். பிரதிகூலரான நாத்திகர் முதலியவர்களைக் கண்டால் பாம்பை, தீயினைக் கண்டாற் போல தூர விலக வேண்டும். இரண்டு மில்லாதவர்களைக் கண்டால் புல், கம்புகளைக் கண்டாற்போல அலட்சியப்படுத்தி நடந்துகொள்ள வேண்டும். இவர்கள் அனுகூல ராகில் ஆத்ம ஞானத்தை உபசேதிக்கவும், அனுகூலரல்லலாராகில், மனதிரங்கி திருத்தும் வழி பார்க்கவும், பொருட்பற்றினால் வைணவர்களை அலட்சியம் செய்வதை இறைவன் விரும்ப மாட்டான்'' என்று அருளிச் செய்தார். பின் நம் பெருமான் சன்னிதிக்குச் சென்று பட்டரை அழைத்துக் கொண்டு போய், தீர்த்த பிரசாதங்களைத் தந்து, ''இவரை இனி வரும் தரிசனப் பிரவர்த்தகர்'' என்று கூறி, பின் மடத்துக்கு வந்து எல்லாரையும் அழைத்து அவரவர் கட்கு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவுரைகள் கூறினார். பின் அமைதியாக பரமபத பிராப்தியடைந்தார். எல்லாச்

சீடர்களும் வந்திருந்து குழுமினார்கள். கந்தாடையாண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், எம்பார், வடுக நம்பி முதலான முதலிகள் கண்ணீர் மல்கக் கரைந்தார்கள். திருக்குருகைப் பிரான்பிள்ளான் அமைத்த திவ்ய விமானத்திலே ஏறியருளப் பண்ணி ஊர்வலமாக வந்து, திருவரங்கப் பெருமாளரையர் முதலானோர் திருவாய்மொழி பாடி வர திருவரங்கத்தமுதனார் நூற்றந்தாதி பாடல்கள் பாடி வரை, வடுக நம்பி, கோமடத்துச் சீறியாழ்வான் முதலானோர் பூவும், பொரியும் சிதறி வர திருவீதிகள் வலம் வரச் செய்து பின் பள்ளி படுத்தருளினார்கள்.

### இராமானுசரின் சீடர்கள்

இராமானுசரின் பெருந்தன்மை மிக்க வரலாறு அவர் தம் சீடர்கள் வரலாற்றிலும் பிணைந்துள்ளது. அவர்தம் சீடர்கள் அறிவிற் சிறந்த பண்பாடுள்ள பெருமக்கள் ஆவர். ஆச்சார்ய பக்தியிலும், ஆசார நிஷ்டையிலும் சிறந்திருந்தனர். அவருட் சிறந்த கூரத்தாழ்வார் வைபவம் முன்னோர் பாராட்டிப் பரவியதொன்றாகும்.

கூரத்தாழ்வார் காஞ்சிக்கருகில் உள்ள கூரம் எனும் ஊரில் கி.பி. 1009ம் ஆண்டில் சௌம்ய வருஷம் தை மாதம் அத்த நட்சத்திரத்தில் அவதரித்தார். இவருக்கு திருமறுமார்பன் என்று தமிழிலும், ஸ்ரீவத்ஸாங்கமிஸ்ரர் என்று வடமொழியிலும் பெயர் வழங்கப் பெற்றது. கூரத்தாழ்வான் இல்லக்கிழத்தி ஆண்டாள் என்னும் பெண் குல திலகம் அறிவாராய்விற் சிறந்தவராக, சகல சாஸ்திரங்களும் கற்றவராக இருந்தார். ஆழ்வாருக்கு ஏதேனும் ஐயப்பாடு தோன்றினால், ஆண்டாளிடம் கேட்டுத் தெளிவாராம். கூரத்தில் செல்வச் செழிப்புடன் வாழ்ந்தார் இவர். மாளிகைக் கதவின் கிண்கிணிகள் ஒரு யோசனை தூரம் ஒலிக்குமாம். நாள்தோறும் காஞ்சி எம்பெருமான் சன்னதி திருவாராதனம் முடிந்து கதவு சாத்தப்பட்ட ஒருநாள் உற்சவ நாளில் கோயில் கதவு இரவில் சாத்தாமல் இருக்கும்போது வழக்கமான நேரப்படி இவர் வீட்டுக் கதவை காவலர்கள் சாத்தினர். அப்போதெழுந்த கிண்கிணி ஓசை திருக்கச்சி நம்பியுடன் கலந்துரையாடும் எம்பெருமான் திருச்செவி படவே, ''இது என் இராத்தி திருவாராதனம் முடியு முன்பே நம் கோயில் கதவு சாத்தப்படுவதேன்? என்று வினவியதாகவும், அதற்கு நம்பி இது கூரத்தில் ஆழ்வான் மாளிகைக் கதவு'' என்று கூற இறைவனே மயங்கினான் என்பர். இச் செய்தி அறிந்த கூரத்தாழ்வார் தம் செல்வம் முழுவதும் வைணவர்கட்கு ஈந்து தமக்குச் சிறிது பொருள் மட்டும் வைத்துக் கொண்டு காஞ்சியில் இருந்த

இராமானுசரிடம் சரண்புகுந்து அன்று முதல் அவருடைய நிழல் போல நீங்காமல் கூட இருந்து சாஸ்திரப்பியாசம் செய்து கொண்டிருந்தார். இராமானுசர் திருவரங்கம் சென்றதும் ஆழ்வானும் கூடச் சென்றார்.

திருவரங்கம் அடைந்த சில நாட்களில் குருவிடம் விடைபெற்று, தம் ஊருக்கு வந்து தன் மனைவி ஆண்டாளை அழைத்துக்கொண்டு மீண்டும் திருவரங்கம் பயணமானார். போகும் வழியில் காட்டுப் பகுதியில் ஆண்டாள் 'இங்கு திருடர் பயமுண்டோ?' என அஞ்ச, ஆழ்வான், ''மடியில் கனமிருந் தாலல்லவா வழியில் பயம் உண்டாகும்? நாம் எல்லாவற்றையும் துறந்துவிட்டோம் அல்லவா?'' என்று கூற ஆண்டாள், ''தாங்கள் அமுது செய்து கொண்டிருந்த பொன் வட்டில் மட்டும் தங்களுக்காகக் கொணர்ந்தேன். தாங்கள் இலையில் சாப்பிடுவது வருத்தம் தருமல்லவா?'' என்ன ஆழ்வான் அதை வாங்கி அக்காட்டில் தூர எறிந்துவிட்டு, ''இனி பயமில்லை வா'' என்றழைத்துக் கொண்டு வந்தார். 'இராமானுச நூற்றந்தாதி' பாடியருளிய திருவரங்கத் தமுதனார் கூரத்தாழ்வாரிடம் சீடராக இருந்து பயிற்சி பெற்றுத் திருந்தி இராமானுசரைச் சரண் அடைந்தார். இராமானுசர் கூரத்தாழ்வான் திருவாய்மொழி வியாக்கியானம் கூறக் கேட்க விரும்பினார்.ஆனால் தமக்கு அவர் பாடம் சொல்ல மறுப்பார் என்றறிந்து மற்றுஞ் சில சீடர்கட்கு பாடம் கூறுமாறு பணித்தாராம். அவர்கள் கேட்டுவந்து அதனை இராமானுசரிடம் கூறக் கேட்டு மகிழ்வாராம். ஒரு சமயம் திருவாய்மொழிப் பாடலைப் பாடி வியாக்கியானம் செய்ய முனைந்த போது உணர்ச்சி வயப்பட்டு மயக்கமுற்றதாகவும், அனைவரும் அஞ்சி இராமானுசரை அழைத்து வர, அவர், அவர் முதுகை நீவி விட கண் விழித்த ஆழ்வான் முன் போல வியாக்கியானம் செய்ய முற்பட்டாராகவும், அப்போது ''ஆழ்வான்'' என்ற பட்டப் பெயர் சூட்டியதாகவும் ★ கூறுவர்.

அமுதனார் தாயார் காலமாகிவிடவே பத்துநாள் விசேடம் கழிந்த பின் பதினோராம் நாள் பிராமணர்கட்கு தானம் தரும் நாள் ஆதலின் அதற்கு யாரையாவது அனுப்புமாறு உடையவரை வேண்ட, அவர் கூரத்தாழ்வானையே செல்லுமாறு பணித்தார். சற்றும் முகம் கோணாமல் ஏற்றுக்கொண்ட ஆழ்வான் அமுதனார் இல்லம் சென்று

---

★ *பூர்வாசார்ய வைபவம், ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம், அண்ணங்கராச்சாரியார் 1950.*

உணவுண்ட பின் அவர் சமர்ப்பித்த மிகுபொருள் அத்தனையும் பெற்றுக் கொண்டு வரும் வழியிலேயே அத்தனையும் வாரி இறைத்துவிட்டு வெறுங் கையராய் உடையவர் சன்னிதிக்கு வந்தார். உடையவர் ''அவர் கொடுத்த அர்த்தம் (பொருள்) எங்கே?'' என்று கேட்க, ''அது அநர்த்தம் (கேடு) ஆதலால் கை கழிந்து போயிற்று'' என்று கூறினாராம். அமுதனாரிடம் இருந்த கோயில் சன்னிதிக் கதவுத் திறவுகோலையும் கூரத்தாழ்வான் பெற்றுக்கொண்டு வந்து இராமானுசரிடம் சமர்ப்பித்ததாகவும், அன்று முதல் இராமானுசர் சன்னிதிக் கைங்கரியங்களைச் சீர்திருத்தம் செய்து வைத்தார் என்றும் கூறுவர்.

இராமானுசர் ஸ்ரீபாஷ்யம் செய்தருள்வதற்காக காஷ்மீரம் சாரதா பீடத்திற்குச் சென்று அங்குள்ள ஸ்ரீகோசங்களைப் பார்வையிட்டார். போதாயன விருத்தி நூலை முதல் அத்யாயம் பார்வையிட்டு முடிந்ததும், அந்நூலை பண்டாரத் தலைவர் மீண்டும் தர மறுத்துவிட்டார். இதனால் மனம் வருந்திய இராமானுசரிடம் கூரத்தாழ்வார் தாம் முழுவதும் பார்வையிட்டு மனத்தில் தேக்கிக் கொண்டதாகவும், கவலைப்பட வேண்டாம் என்றும் கூறினார். சீடரின் ஆற்றலை வியந்து பாராட்டினார் ஆசாரியர். உசாத்துணையாக கூரத்தாழ்வார் இருக்கும்படி நியமித்து திருவரங்கம் வந்த பின் ஸ்ரீ பாஷ்யம் வரைந்தார். ஸ்ரீ பாஷ்யம் வரையும்போது தம் கருத்துக்கு முரண்பாடானவற்றை எடுத்துக் கூறத் தயங்கவில்லை. ஒரு சமயம் இராமானுசருக்கும், கூரத்தாழ்வானுக்கும் கருத்து முரண் ஏற்பட்டு இராமானுசர் சினந்ததாகவும், சிலநாள் பிரிந்திருந்ததாகவும், பின் இராமானுசர் தம் கருத்து தவறென உணர்ந்து மீண்டும் இவரையே உசாத்துணையாக அழைத்ததாகவும், அவரும் எப்போதும் போல வந்து இணைந்தார் என்றும் வரலாறு கூறுகிறது. ஒரு தடவை இராமானுசர் திருக்கோட்டியூர் நம்பியிடம் ஒரு ஐயம் தெளிவு பெற அனுப்பினார். ஆறு மாதம் காலம் பாடு கிடந்தும், அவர் விசேடார்த்தம் கூறாமல் தவிரவே தான் மீண்டும் திருவரங்கம் போவதாகக் கூறிய பின் பொருள் உரைத்தார் என்பர். ஒருநாள் நடுப்பகலில் உச்சி வெயிலில் இராமானுசர் தாமொருவராக திருவரங்கத்தமுதனார் இல்லம் வந்து நின்றார். அமுதனார், ''இதுவென் இப்போது தனியாக வந்தீர்கள்'' என்று வியப்புற்று வினவ, ''பௌராணிக கைங்கரியம் எனக்குத் தரவேணும்'' என்று கேட்க அவரும் மனமிசைந்து தாரை வார்த்துத் தந்தார். உடையவர் அக் கைங்கரியப் பணியை கூரத்தாழ்வானுக்கும் அவர் சந்ததிக்கும் ஈர்ந்தார்.

ஒருநாள் உடையவர் ஓர் ஊமையை அழைத்து மடத்துக்குள்ளே நிறுத்தித் திருவாசற் கதவுகளையடைத்து தம் திருவடிகளை அவன் தலைமேல் வைத்து அருள் பாலிக்க, இதைக் கதவின் புரையாலே கண்ட ஆழ்வான் சாஸ்திரங்களைக் கற்றுக் கெட்டேனே! ஊமையாகப் பிறவாதொழிந்தேனே! என்று கதறியழுதாராம்.

ஒருநாள் ஒரு பாம்பு தவளையைப் பிடிக்க அத்தவளை கூக்குரலிடக் கேட்டு, ''இது யார் அறியக் கூப்பிடுகிறதோ?'' என்று கூறி மயங்கி விழுந்தாராம். மற்றொரு சமயம் தோட்டத்திற்குச் சென்றபோது அங்கே, அப்போதுதான் ஒருவன் வாழைக் குருத்தை அறுத்துக்கொண்டுபோக, அதில் நின்று பெருகும் நீரைக் கண்டு, கண்ணீராக உருவகித்து மயங்கினாராம். திருக்காவேரியில் தண்ணீர்க் குடத்தை இடுப்பிலே வைப்பாரில்லாமல் வருந்தி நின்ற நலிந்த பெண்ணொருத்திக்கு குடம் எடுத்து வைத்து வழி நடத்தி வந்து உதவினார். இவைபோல அவர் கருணை உள்ளத்தைக் காட்டும் நிகழ்ச்சிகள் பற்பலவாகும்.

சோழ மன்னன் வைணவ மத விரோதியாக விஷ்ணு விக்கிரகங்களை அழிப்பதைத் தடுக்க, ''திருவரங்க எல்லையிலே பிரதட்சிணம் வர ஒருவரை என்கூட அனுப்புங்கள். ஒருவர் பின்னே போகிறோம் என்று நினைவில்லாமல் நிழல் போலப் பின்தொடர்பவனான சீடனை அனுப்புக'' என்று பெரிய நம்பி உடையவரைக் கேட்டார். உடையவரோ, ''அத்தகைய சீடன் யாருமில்லை'' என, ''கூரத்தாழ்வான் உண்டு'' என்று கூறி பெரியநம்பி அவர்தம் பெருமையைப் புலப்படுத்தினார். மேலும், சோழன் அவைக்கு பெரியநம்பியுடன் சென்று அவன் ஆணைக்குட்பட மறுத்து கண்ணை இழந்தார். பெரியநம்பி பரமபதமடைந்தார். பின் கூரத்தாழ்வார் திருவரங்கம் வந்தபோது கோயிற் காவலர்கள் மன்னன் ஆணையால், ''இராமானுச சம்பந்தமுடையார் ஒருவரும் புகுந்து சேவிக்க முடியாது'' என்று மறுக்க, சிலர், ''இவர் மற்றவர்கள் போலல்லர். நல்லவர். இவரைப் புக விடுங்கள்'' என்ன அது கேட்டு மனம் நொந்து, ''எனது நல்ல குணம் ஆசாரிய சம்பந்தத்துக்கு விரோதமாக இருந்தது போதும்'' என வருந்தி உள்ளே புகாமல் கோயில் வாசத்தை விட்டு திருமாலிருஞ்சோலைக்குச் சென்று அங்கிருந்தார். அக்காலத்தில் வைகுண்டஸ்தவம், அதிமானுஷஸ்தவம், எனும் இரண்டு வடமொழித் தோத்திர நூல்களை அருளிச் செய்தார்.

மீண்டும் இராமானுசர் திருவரங்கம் வந்தபின் இவரும் வந்தடைந்தார். இராமானுசர் வேண்டுகோளின்படி வரதராஜ்ஸ்தவம் எனும் நூலை இயற்றி இறைவனை வேண்டி இழந்த கண்களில் ஒளி வரப்பெற்றார். காஞ்சி எம்பெருமானிடம் வரதராஜஸ்தவம் பாடிய பின் இறைவன், ''உமக்கு யாது வரம் வேண்டும், கேளும்'' என்ன தன் கண்கள் வேண்டும் என்னாமல், ''நான் பெறும் பேறு நாலூரானும் பெற வேண்டும்'' என்று வேண்டினார். தம் கண்களை இழந்தது, பெரியநம்பி மறைந்தது, இராமானுசர் வெளிநாடு போந்தது எல்லாம் நாலூரான் கூறிய கூற்றினால்தான் என்பதால், அவன் நரகம் எய்தி நலிவுறலுக்கிரங்கிய ஆழ்வான் பகைவரையும் நேசிக்கும் பண்பினராக அவன் உய்தி வேண்டினார். இது அறிந்தோர், ''நாலூரானுக்கு மோட்சமளிக்க வேண்டியது தகுமோ என்று கடிந்துரைக்க இத்தகைய பாவிகட்கன்றோ இரங்க வேண்டியது. மீனுக்குத் தண்ணீர் வார்த்துப் பயனென்?'' என்று கூறினார்.

இத்தகு அருளாளரும், அறிவிற் சிறந்த மேதாவியுமான கூரத்தாழ்வாருக்கு இரண்டு ஆண் மக்கள் பிறந்தனர். ஒருவர் பராசரபட்டர்; மற்றொருவர் சீராமப்பிள்ளை என்னும் வேதவியாத பட்டர். எம்பாரும், கூரத்தாழ்வாரும் இவர்கட்கு ஆசாரியராக அமைந்தனர். இவர்களது திருமண ஏற்பாடுகளை இராமானுசரே முன்னின்று நடத்தினார். ஆழ்வான் ஐந்து ஸ்தவங்கள் (துதிநூல்களை) அருளியுள்ளார். 'யமகரத்நாகரம்' எனும் சொற்சுவை, பொருட்சுவை மிக்க நூலும் இவர் இயற்றியதாக பி.ப. அண்ணங்கராசாரியார் கருதுகிறார். கூரேச விஜயம் என்னும் நூல் இவரைப் பற்றி பின்னோர் எழுதியதாகும். இவர் வரலாற்றை தெலுங்கு மொழியில் சுமார் முன்னூறு ஆண்டுகட்கு முன்னர் யட்சகானமாக திருவெங்கநாதர் எனும் தமிழகக் கவிஞர் இயற்றியுள்ளார்.

*அர்வாஞ்சோ யத்பத ஸரஸிஜ த்'வந்தவ மாஸ்ரிய பூர்வே*
*மூர்த்'நா யஸ்யான்வயமு பக'தா தே'விகா முக்திமாபு:*
*ஸோயம் ராமானுஜ முனிரபிஸ்வீய முக்திம் கரஸ்தாம்*
*யத் ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாத:*

பின்னுள்ள ஆசாரியர்கள் எவருடைய திருவடித் தாமரை யிணையோடு சம்பந்தம் பெற்று வீடு பேறுற்றனரோ, முன்னுள்ள ஆசாரியர்கள் அவருடைய திருமுடியோடு சம்பந்தம் பெற்று வீடு பேறு ற்றனரோ அத்தகைய இராமானுச முனிவரே என்னுடைய

சம்பந்தத்தாலே தனக்கு மோட்சம் கிட்டியதாகக் கருதினாரோ, அத்தகைய கூரத்தாழ்வான் பெருமையை வருணிக்க இயலுமோ?

கூரத்தாழ்வான் தம் சீடர் பிள்ளை பிள்ளான் மடியில் திருமுடியும், இல்லத்தரசி ஆண்டாள் மடியில் திருவடியும் வைத்தவாறு பரமபதமடைந்தார். உடையவர் அவர் குமாரர்களான பட்டர், சீராமப்பிள்ளை இருவரையும் கொண்டு சரமனகங்கரியம் நடத்தி வைத்தார். கூரத்தாழ்வான் 118 ஆண்டுகள் வாழ்ந்து 1127ஆம் ஆண்டில் திருநாடலங்கரித்தார். இராமானுசர் கூரத்தாழ்வார் பிரிவாற்றாது வருந்தினார். இராமானுசரின் மற்றொரு அணுக்கச் சீடர் முதலியாண்டான். கி.பி. 1207ல் சென்னைக்கடுத்துள்ள பூவிருந்த வல்லிக்கருகிலுள்ள வரதராஜபுரத்தில் ஆனந்த தீட்சிதருக்கும், இராமானுசரின் சகோதரி நாய்ச்சியார் அம்மனுக்கும் திருக்குமாரராய் தாசரதி என்ற பெயர் பெற்று அவதரித்தார். எம்பெருமானுக்கு கைங்கரியம் செய்து வந்து அவரால் அபிமானிக்கப்பட்டவர். இவரது குமாரர் கந்தாடையாண்டான். இவரது குமாரரான கந்தாடை தோழப்பர் நம்பிள்ளையின் சீடராக இருந்தவர். 1132ல் நூற்றைந் தாண்டுகள் வாழ்ந்து முதலியாண்டான் பரமபதமடைந்தார். எம்பார் என்னும் கோவிந்தபட்டர் கி.பி. 1021ல் ஸ்ரீபெரும்புதூரையடுத்த மதுரமங்கலத்தில் இராமானுசரின் சிறிய தாயாரின் புத்திரராக கமலநயன பட்டருக்கு அவதரித்தவர். யாதவரின் சதியை அறிவித்து உடையவரைத் தப்புவித்தவர். சைவ மதத்தில் இருந்தவரை திருமலை நம்பி முயற்சியால் வைணவ மதத்தில் சேர்த்து இராமானுசரிடம் தந்து சேர்ந்தார். அவருடைய நிழல் போலக் கூட இருந்து வந்தார். கூரத்தாழ்வான் குமாரர் பட்டருக்கு ஆசாரியராக இருந்தார்.

பெரிய திருமலை நம்பியின் குமாரர்கள், பிள்ளை திருமலை நம்பி, இராமானுசன், பிள்ளான் எனும் மூன்று பேராவார்கள் பிள்ளானை நம்பி இராமானுசரிடம் அபிமான புத்திரராக வைத்துக் கொள்ளும்படி தந்தார். திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்ற திருநாமத்துடன் திகழ்ந்தார். இராமானுசர் இவரை திருவாய் மொழிக்கு வியாக்கியானம் இயற்றச் செய்தார். இவர் இயற்றிய ஆறாயிரப்படி வியாக்கியானத்தை அரங்கேற்றம் செய்வித்தார் உடையவர். இவரிடமே எங்களாழ்வான் இராமானுசருக்குப் பின் திவ்விய பிரபந்தங்கட்கு பொருள் விளக்கம் கேட்டார் என்று சொல்வர். 'யக்ஞமூர்த்தி' என்ற பெயருடைய அருளாளப் பெருமாள் எம்பெருமானார் சிறந்த கல்விமானாகத் திகழ்ந்தவர். இராமானுசர்

இவரை வாதில் வென்று தம் அடியவராக்கிக் கொண்டார். இவருக்கு திருவரங்கத்தில் தனி மடம் அமைத்துக் கொடுத்தார. ''எம்பெருமானார் மடம் எங்கே?'' என்று வெளியூரிலிருந்து வந்தவர்கள் சிலர் கேட்க, ஓர் உள்ளூரார், ''எந்த எம்பெருமானார் மடம்?'' என்று பதில் கேள்வி கேட்டனர். இந்த நிலையை அறிந்த இவர், ''ஐயோ! எம்பெருமானாருக்குப் போட்டியாக வழங்கும்படி ஆகிவிட்டோமே'' என்று மனம் வருந்தி, தமது தனி மடத்தை இடித்துவிட்டு இராமானுசரின் மடத்திலேயே தங்கலானார். இராமானுசர் இவரிடம் அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி ஆகியவர்களை சீடராக அமைத்துக் கற்பிக்கச் செய்தார். இவர் 'ஞானசாரம்', 'பிரமேயசாரம்' என்னும் இரு நூல்கள் இயற்றியுள்ளார். இந் நூல்களுக்கு மணவாள மாமுனிகள் வியாக்கியானம் அருளியுள்ளார்.

*அற்றம் உரைக்கில் அடைந்தவர்பால் அம்புயைகோன்*
*குற்றம் உணர்ந்திகழும் கொள்கையனோ - எற்றே தன்*
*கன்றின் உடம்பின் வழுவன்றோ காதலிப்ப(து)*
*அன்றதனை ஈன்றுகந்த ஆ!*

*- ஞானசரம் - 25*

எனும் வெண்பாவில் வாத்ஸல்ய லட்சணத்தை மிக அழகாக விவரித்துள்ளார்.

ஸ்ரீராமமிசிரர் எனும் சோமாசியாண்டான் மற்றொரு கற்றறிந்த சீடர். இவருடைய நூல்கள் கிடைக்கவில்லை. சுருதபிரகாசிகை, சரமோபாய நிர்ணயம், வேதாந்த தேசிகர் நூல்களில் இவருடைய நூல்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. 'குருகுணாவளி' என்னும் உடையவர் பெருமை கூறும் நூல் ஒன்றும் இயற்றியதாகத் தெரிகிறது.

நடாதூராழ்வான் எனும் வரதவிஷ்ணு என்னும் திருநாமமுடைய உடையவரின் சகோதரியின் குமாரர் காஞ்சியில் பிறந்தவர். மற்றொரு சகோதரி குமாரரே முதலியாண்டான். உடையவர் நியமித்த நாலு ஸ்ரீபாஷ்ய சிம்மாசனாதிகளில் ஒருவர். 'மாந யாதாத்ம்ய நிர்ணயம்' எனும் வடமொழி நூல் ஒன்று இயற்றியுள்ளார். இவரது வாதங்களை வேதாந்த தேசிகர் தம் நூல்களில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்.

எங்களாழ்வான் திருவெள்ளறையில் அவதரித்தவர். ஸ்ரீவிஷ்ணு சித்தர் என்பது இயற்பெயர். கூரத்தாழ்வான் கண்ணிழந்த பிறகு உடையவருக்கு ஸ்ரீபாஷ்யம் எஞ்சிய பகுதிகள் இயற்ற துணை நின்ற அறிஞர். ஒரு சமயம் இவரது மேதா விலாசத்தைக் கண்ட உடையவர், ''எங்கள் ஆழ்வானோ'' என்று கூரத்தாழ்வானுக்கு இணையாகப் பாராட்டினார் என்பர். இவர் ''விஷ்ணு சித்தீயம்'' எனும் விஷ்ணு புராண உரையும், பிரமேய சங்க்ரஹயம் 'சங்கதிமாலா' எனும் நூல்களும் அருளிச் செய்தவர். நாடாதூராழ்வானின் பேரரான நடாதூரம்மான் இவருடைய சீடர்களில் முதன்மையானவர். நடாதூராழ்வான், தம் பேரருக்கு ஸ்ரீபாஷ்யம் கற்பிக்கும்போது 'அகிலபுவன' என்று ஸ்ரீபாஷ்ய முதல் மங்கள சுலோகத்திற்குப் பொருள் கூறும்போது, 'நடாதூரம்மான் 'அகில புவன' என்பவேன்? நிகில புவன என்றோ கைல புவன என்றோ ஏன் சொல்லப்படவில்லை' என்று கேட்டாராம். முதியவரான நடாதூராழ்வான் தினவு கெடச் சொல்லுவன் திருவெள்ளறைச் சோழியன். நீ எங்களாழ்வானிடம் போய் ஸ்ரீபாஷ்ய காலட்சேபம் செய்து வா என்று அனுப்பி வைத்தார்.

நடாதூரம்மான் (வாத்ஸ்யவரதாச்சாரியார்) ஒருநாள் விடியலில் திருவெற்றறைக்கு வந்து எங்களாழ்வான் திருமாளிகைக் கதவைத் தட்டி அழைத்தார். உள்ளிருந்தபடியே எங்களாழ்வான் 'யார்?' என்று கேட்டார். வரதாச்சாரியார், 'நான்தான்' என்றார். கதவைத் திறக்காமலேயே எங்களாழ்வான் 'நான் செத்த பிறகு வாநீ' என்று கூறி திருப்பி அனுப்பிவிட்டார். வரதர் பாட்டனாரிடம் வந்து இந்த விவரத்தைக் கூறினார். நடாதூராழ்வான் அது கேட்டு 'அடியேன்' என்று கூறாமல் நான் என்று அகங்காரத்துடன் கூறினாயல்லவா? நான் என்ற அகங்காரம் செத்த பிறகு வா என்று கூறியுள்ளார். உன் மடமையைச் சுட்டிக் காட்டி தினவு கெடச் சொல்லிவிட்டார், என்று தெளிவுறுத்தி பின் மீண்டும் போய், 'அடியேன்' என்று கூறி அவரருள் பெற்று ஸ்ரீபாஷ்யம் காலட்சேபம் செய்து வா என்று அனுப்பி வைத்தார். நடாதூரம்மானும் எங்களாழ்வானிடம் சென்று, 'அடியேன் வந்துள்ளேன்' என்று கூறி அவரருளுக்குப் பாத்திரராகி ஸ்ரீபாஷ்யம் காலட்சேபம் சொல்லும்படி பிரார்த்தித்து ஸ்ரீபாஷ்யர்த்தங்களைக் கசடறக் கற்றார்.

எங்களாழ்வான் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகில் உள்ள கொல்லங்கொண்டான் எனும் ஊரில் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்ய காலட்சேபம் சாதித்து வந்தார். இந்த கொல்லம் கொண்டான்

இராஜபாளையத்துக்கு தெற்கு ஏழுமைல் தொலைவில் உள்ளது. இவர் ஒரு நூற்றாண்டு வாழ்ந்தார். 1097ல் பிறந்த இவர் 1197ல் பரமபதம் அடைந்தார்.

கிடாம்பியாச்சான் என்னும் பிரணதார்த்தி ஹரர் - பெரிய திருமலை நம்பியின் மைத்துனர் குமாரராவர். எம்பெருமானாருக்கு மடைப்பள்ளி கைங்கரியம் செய்து வந்தார். ஒரு சமயம் பிட்சை அமுதில் நஞ்சிட்டு இராமானுசருக்கு வஞ்சகமாக தந்துவிட்டனர். அதனால் சிறிது நோய் வாய்ப்பட்ட இராமானுசருக்காக மடைப்பள்ளி கைங்கரியத்துக்கு இவரை நியமித்தனர் என்றும் கூறுவர். இவர் சிறந்த புலமையாளரும் ஆவார். நியாய சாஸ்திர நூல்களில் சிறந்த 'குஸுமாஞ்சலி' நூலை இயற்றிய உதயணாச்சாரியர் போன்று சிறப்புடையவர், என்ற கருத்தில், 'வேதாந்தோதயனர்' என்று பட்டம் தந்து இராமானுசர் இவரைப் பாராட்டினார். இவரது நூல்கள் தற்போது கிடைக்கவில்லை.

திருவரங்கத்தமுதனார் சிறந்த அறிஞரும் கவிஞருமாவார். திருவரங்கத்தில் அணியரங்கத்தமுதனார் என்பவரின் குமாரராக அவதரித்தார். கூரத்தாழ்வாரிடம் சாத்திர நூல்களைக் கற்றவர். திருவரங்கக் கோயில் நிர்வாகம் இவரிடமிருந்தது. அதனைக் கூரத்தாழ்வார் மூலமாகப் பெற்றுக்கொண்ட இராமானுசர் அதன் பிறகு கோயில் நிர்வாகங்களைச் சீர்திருத்தினார். இவ்விவரம், 'கோயில் ஒழுகு' நூலிலும் காணப்படுகிறது. பிரபன்ன காயத்திரி எனப் பிரசித்தி பெற்றதும் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் சேர்க்கப்பட்டதுள்ளதுமான, 'இராமானுச நூற்றந்தாதி' எனும் கலித்துறைப் பாடல்கள் அடங்கிய அந்தாதி நூலை இயற்றினார். இந்நூல் எம் பெருமானார் திருமுன்பே அரங்கேற்றப்பட்டது. இந் நூலின் சொல் அழகும், நயமும் அணித் திறனும் சிறப்பாக அமைந்துள்ளன.

பிள்ளையுறங்கா வில்லிதாசர் எனும் தனுர்த்தாசர் இராமானுசரின் மெய்க்காப்பாளராகவும், மடக் காவலதிகாரியாகவும் இருந்த சீடர். நாலாம் வருணத்தில் பிறந்த இவரை மேலாம் நிலைக்கு ஏற்றிவிட்டுப் பரிபாலனம் செய்த பரம காருணிகர் இராமானுசர். ஒரு சமயம் நடுப்பகலில் காவேரி மணலில் தனுர்த்தாசர் தம் மனைவி பொன்னாச்சியார் மீது வெயில் படாமல் குடைபிடித்து அழைத்துச் செல்வதை இராமானுசர் போகும் வழியில் கண்டார். 'மனைவி மேல் இவ்வளவு ஈடுபாடு என்?' என்று வினவ, 'இவர் கண்ணழகுக்குத்

தோற்று ஈடுபடுகிறேன்' என்று தாசர் கூறினாராம். இதைவிடச் சிறந்த கண்ணழகினைக் காட்டுகிறேன் வாரும் என்று கூறி அழைத்துச் சென்று திருவரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமாளின் தாமரை போன்ற கண்களைக் காட்டினாராம் இராமானுசர். அதுகண்ட தாசர் ஊனுடம்பின் அழகு நிலையற்றதென்றும், நிலைபேறுடைய பெரும் பேரழகன் இறைவன் என்பதை உணர்ந்து கொண்டு பெரிய பெருமாளின் அழகில் ஈடுபட்டாராம். உடையவருக்காட்பட்ட சீடரானார். சோழமன்னன் அவையில் மல்லர்கள் தலைவனாக இருந்த இவர், தாம் சம்பாதித்த பணம் எல்லாம் உடையவர் மடத்துக்கே கைங்கரியங்கட்கு தந்து வந்தார். இரவெல்லாம் உறங்காமல் அரண்மனைக் காவல் புரிந்து வரும் இவர் பகல் எல்லாம் உறங்காமல் இராமானுச மடக் காவல் புரிந்து கைங்கரியம் செய்து வந்தமையால் உறங்காவில்லிதாசர் எனும் பெயர் பெற்றார். இராமானுசர் தீர்த்தமாடச் செல்லும்போது முதலியாண்டான் எனும் அந்தணச் சீடரின் கரம் பற்றிச் செல்வாராம். காவேரியில் தீர்த்தம் ஆடிவிட்டுத் திரும்பும்போது வில்லிதாசரின் கரம் பற்றிக் கொண்டு வருவாராம்; பிற வருணத்தார் கரம் பட்டால் தீர்த்தமாடும் வழக்கமுடைய அந்தணர் குலத்தவர்கள் இந்த முரண்பாட்டைக் கண்டு, ''ஏன் இப்படிச் செய்தீர்?'' என்று கேட்டபோது, ''காவேரி தீர்த்தத்தால் ஏற்படும் பரிசுத்தத்தைக் காட்டிலும் இவர் கரம் பற்றுவதால் ஏற்படும் பாவ சுத்தம் மேலானது; வருணாசிரமத்தால் நான் உயர்ந்தவன் என்ற அகங்காரம் ஆகிய இழுக்கை இவருடைய கர பரிசத்தால் நீங்குகிறது. பரிச வேதி இரும்பைப் பொன்னாக்குவது போல இவர் என்னைப் புனிதமுறச் செய்கிறார்'' என்று திருவாய் மலர்ந்தருளினார். இராமானுசரின் மானுட நேயம் எத்தனை உயர்ந்ததென இத்திருவாக்கில் புலப்படுகிறது.

வில்லிதாசரிடம் பொறாமை கொண்ட சில அந்தணர்கள் இவரைக் குறை கூறிக் கொண்டிருந்தனர். இதையறிந்த இராமானுசர் ஒரு சமயம் ஒருவரை ஏவி அந்தணர்களின் உடைகளை ஒரு வைணவன் மூலம் கிழித்துப் போடச் சொன்னார். கிழிந்த உடைகளை எடுத்துக்கொண்டு வந்த அந்த அந்தணர்கள் உடையவரிடம் குறைப்பட்டு மிகவும் வருந்தினர். பின் வில்லிதாசர் வீட்டுக்குச் சில திருடரை அனுப்பி நகைகள் களவாடி வருமாறு பணித்தார். அவர்கள் தாசர் இல்லாதபோது பொன்னாய்ச்சியார் தூங்கும்போது நகைகளைத் திருடியதோடு அவர் உடலில் இருந்த காதணி, தோடு முதலிய நகைகளையும் எடுத்தனர். பொன்னாய்ச்சியார் விழிப்பு வரவே, வைணவர்கள் திருடுவதாகத் தெரிந்தும் உறங்குவதாக

நடித்தார். ஒரு பக்க நகைகளைக் கழற்றிய பிறகு மறுபக்க நகைகளையும் கழற்றிக் கொள்ளட்டும் என்று தூக்கக் கலக்கத்தில் புரண்டு படுப்பவர் போலப் புரண்டு அடுத்த பக்கம் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டார். திருடர்கள் அவர் விழித்துவிட்டார் என அஞ்சி ஓடிவிட்டனர். இச் செய்தியறிந்த வில்லிதாசர் தம் மனைவியை, ''அவர்கள் உன்னைப் புரட்டித் தாமாகவே நகைகளைக் கழற்றிக் கொள்ளும் வகையில் நீ அசேதனம் (ஜடம்) போலக் கிடக்காமல் நீயாக புரண்டதாலல்லவா அவர்கள் பயந்து ஓடினார்கள்! அப்படிச் செய்தது தவறு! என்று நிந்தித்து இதற்குத் தண்டனை தருமாறு இராமானுசரிடம் வேண்டினாராம்.'' இராமானுசர் தம் மற்ற சீடர்களை அழைத்து இவருடைய பெருந்தன்மையை வெளிப்படுத்தியதோடு வைணவர்கள் திருடிய நகைகளைத் திரும்பவும் கொடுத்து அவரைப் பாராட்டி அனுப்பி வைத்தார். வண்டர், சுண்டர் எனும் இரு மருமக்கள் வில்லிதாசருக்கு துணையாக இருப்பர். இவர் பெரிய பெருமாள் திருவுலா வரும் சுவாமி புறப்பாட்டின் போது கத்தியும் கையுமாக பாதுகாவலாகச் செல்வார். ஏதாவது குறை நேரின் முதலில் தன்னை முடித்துக் கொள்வதற்காக கத்தி கொண்டு செல்வாராம். இத்தகைய பக்தியும், பரிவும் உடைய உறங்காவில்லிதாசர் இராமானுசரின் பாதுகாவலராகவும், மெய்ச் சீடராகவும் திகழ்ந்து வந்தார்.

**அநந்தாழ்வான்**

அநந்தாழ்வான் திருமலையில் நந்தவனம் அமைத்து திருமாலை வழிபட்ட சீடராவார். இராமானுசர் ஒரு தடவை திருமலையில் இருந்து நந்தவன கைங்கரியம் செய்ய ஒருவர் செல்ல வேண்டும். யார் போகிறீர்கள்? என்று கேட்க, உடையவரைப் பிரிய மனமின்றி ஒருவரும் பதில் கூறாமலிருக்கவே, அநந்தாழ்வான், ''அடியேன் செல்கிறேன்'' என்று கூறினார். இது கேட்ட உடையவர், ''நீரே ஆண்பிள்ளை'' என்று பாராட்டினாராம். இன்றும் இவரது மரபினர், ''அந்தான்பிள்ளை'' என்ற பெயருடன் திகழ்கின்றனர். எம் பெருமானால் நியமனப்படி, ''இராமானுசப்புத்தேரி'' என்னும் ஏரியை உருவாக்கினார். இவரே ஏரி வெட்டியும், மண் சுமக்கச் செய்வாராம். ஒரு தடவை மனைவியிடம் மண் கூடையை ஒரு சிறுவன் இரக்கம் காட்டி வாங்கிக் கொண்டதைக் கண்ட இவர், ''தெய்வ கைங்கரியத்துக்கு இடையூறு செய்கிறாயா? அவள் கைங்கரியம் செய்து உய்ய வேண்டாமா?'' என்று சினந்தார் என்றும் கூறுவர். ஒரு சமயம் நந்தவனத்தில் பூப்பறிக்கப் புகும்போது பாம்பு ஒன்று கடித்தது. அதைப் பொருட்படுத்தாமல் மருத்துவம்

செய்யாமல் கோயிலுக்குப் புகுந்தார். அங்கிருந்தவர்கள் ஏன் விஷ வைத்தியம் செய்து கொள்ளவில்லை என்று கேட்க, கடியுண்ட பாம்பு வலிதாகில் திருக்கோனேரியில் தீர்த்தமாடி திருவேங்கட முடையானை சேவிக்கிறேன் என்று விண்ணப்பஞ் செய்தாராம். ஒரு முறை இவர் கட்டுச்சோறு கட்டிக்கொண்டு திருமலையை விட்டுக் கீழே இறங்கி வரும்போது நடுவழியில் உணவுண்ண கட்டுச் சோற்றை அவிழ்த்துப் பார்க்க, அச்சோறு நிறைய சிற்றெறும்புகள் மொய்த்திருக்கக் கண்ட அவர் குலசேகரர் கூறியபடி, ''மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன் ஆவேனே! எம் பெருமான் பொன்மலையில் ஏதேனுமாவேனே'' என்ற நிலையில் முமுட்சுகள் சிலர் இவ் வெறும்புகளாகவும் இருக்கக் கூடும் என்று கருதி, இவர்களை திருமலையிலிருந்து பிரித்தல் தவறு என்று எண்ணியபடி மீண்டும் அக் கட்டுச்சோற்றை எடுத்துக்கொண்டு போய் மேலே சென்று திருமலையிலேயே வைத்து விட்டு வந்தாராம். இவர் அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளைச் சேர்ந்து உறைந்து சாத்திரங்கள் கற்றவர். இவர் அருளிய 'ஸ்ரீ வெங்கடேச இதிகாச மாலா' திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிட்டுள்ளனர். 'கோதா சதுஸ்லோ கீ', 'ராமானுஜ சதுஸ்க்லோகீ', என்னும் துதி நூல்கள் இவர் இயற்றியவையாக வழங்கப்படுகிறது.

### வடுக நம்பி

இராமானுசரின் முக்கிய சீடர்களில் தனிச் சிறப்புடையவர். இவர் தற்போது கன்னட நாட்டில் மைசூருக்கடுத்துள்ள மேல் கோட்டை வீரநாராயணபுரத்துக்கு அருகே சாளக்கிராமம் என்னும் ஊரில் அவதரித்தவர். இவர் தெலுங்கர். வடுகு என்பது தெலுங்கு மொழியையே குறிக்கும். வடுகர் என்பதும் தெலுங்கரையே குறித்தது. சங்க இலக்கியத்திலும் வடுகர் பற்றிய குறிப்புகள் உள்ளன. 'வடுகர் வான் கருநாடர்' எனும் தனிப்பாடல் சொற்றொடர் வடுகர், தெலுங்கர் என்றே குறிக்கும். 'வடுகு வரம்பாக' என தமிழகத்தில் வட எல்லை தெலுங்கு என்பதைக் குறித்துள்ளார்.

> *''மழலைத் திருமொழியில் சில தமிழும் சில வடுகும்*
> *குழறித் தரு கருநாடியர் குறுகிக் கடை திறமினோ?''*

எனும் கலிங்கத்துப் பரணி பாடலில் தமிழும், தெலுங்கும் கலந்தது போன்ற நடையிலுள்ள கன்னட மொழியைக் குறிப்பிட்டுள்ளதும், வடுகு என்பது தெலுங்கு மொழிதான் என்பதில் ஐயமில்லை. இலக்கண உரையாசிரியர் வடுகு என்பது தெலுங்கு மொழியென்றே

குறித்தனர். மருத்துவப் பாடல் ஒன்றில், 'வடுகும் தமிழும் குணமாமே' என்ற பரிபாடையாக 'வயிற்றுக்கடுப்பு' எனும் நோயைக் குறிப்பிடுவதில் வடுகு தெலுங்கு மொழி என்பது நிச்சயிக்க முடிகிறது. ஆதலின் இராமானுசர் இவரை, வடுகா என்று பலமுறை அழைத்திருப்பதால், வடுகநம்பி தெலுங்கரே ஆவார். கருடவாஹன பண்டிதர் முதலிய வைணவ மரபு ஆசாரியர்கள் பலரும் இவரை 'ஆந்த்ரபூர்ணர்' என்றே அழைத்தனர். ஆந்திரர் தெலுங்கரே என்பதில் ஐயமில்லை. அசோகன் கல்வெட்டுக்களிலேயே சேர, சோழ, பாண்டிய, ஆந்திர, கர்னாடகர்களைக் குறித்துக் குறிப்பிட்டுள்ள தாலும், ஆந்திரர் தெலுங்கரே என்பது புலப்படும். ஆந்திர பூர்ணர் எனப்படும் வடுக நம்பி தமிழகத்துக்கும், ஆந்திர நாட்டுக்கும் தொடர்புடைய முதல் வைணவ பேரரசனாகக் கொள்ளலாம். இவர் வடமொழியில், 'யதி ராஜவைபவம்' என்னும் 114 சுலோகங்களில் இராமானுசர் தம் சரித்திரத்தைச் சுருக்கமாகக் காட்டியுள்ளார். இந்நூலின் அகச் சான்று கொண்டும் இராமானுசரின் சீடரான தம்மைப் பற்றியும் கூறிக் கொள்வதாலும், இது பிராமாணிமான நூல் என்னத் தடையில்லை. இந்நூலே பிற்கால குருபரம்பராபிரபாவம், பிரபந்நாமிருதம் முதலிய இராமானுசர் சரிதம் கூறும் நூல்கட்கு மூலமாக அமைந்ததெனலாம். இந்நூல் தவிர வேறு நூல் அருளியதாகத் தெரியவில்லை.

கி.பி. 1047-ல் ஸர்வஜித் வருஷம் மாசி மாதம் புனர்பூசத்தில் ஆந்திர பூர்ணர் அவதரித்தார். இராமானுசர் தமிழ் நாட்டினின்றும் அகன்று மேல்கோட்டை திருநாராயணபுரத்தில் தங்கியபோது அவருடைய சீடரானார். அது முதல் தேவு மற்றறியாது தம் குருவையே தெய்வமாகக் கருதி வழிபட்ட ஆச்சாரிய நிஷ்டையுடையவர். உடையவரின் பாதுகைகளையே ஆராதன தெய்வமாகக் கொண்டு பூசித்து வந்தார். அவருக்கு பாலமுது காய்ச்சும் கைங்கர்யம் செய்து வந்தார். அவர் ஒரு சமயம் உடையவர் திருவடி நிலைகளையும், உடையவரின் ஆராதனப் பெருமாளையும் ஒன்றாக எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்தார். உடையவர், ''வடுகா! இப்படிச் செய்துவிட்டாயே?'' என்று வருந்தி உரைத்தபோது, ''உங்கள் பெருமானைக் காட்டிலும், எங்கள் பெருமானுக்கு என்ன குறை?'' என்று கூறினாராம். பெருமாளுடைய வடிவழகை உடையவர் சேவித்துக் கொண்டிருந்தால் உடையவர் வடிவழகையே இவர் சேவித்துக் கொண்டிருப்பாராம். ஒரு சமயம் உடையவர், ''பெரிய பெருமாளுடைய திருக்கண்ணழகினைக்

காணாய்'' என்று கூற, ''என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே'' என்று கூறினாராம்.

இவர் சாளக்கிராமத்தில் உடையவரை ஆச்ரயித்தார் என்று குரும்பரம்பரா பிரபாவம் கூறுகிறது. முதலில் சாளக்கிராமத்தில் உடையவரை அனாதரிக்க முதலியாண்டான் தன் பாதங்களை நீர் முகக்கும் துறையில் நீட்டிக் கொண்டிருக்கப் பணித்தார் என்றும், ஸ்ரீபாத தீர்த்த மகிமையால் அவ்வூரார் அகங்காரம் ஒழிந்து இவரை ஆசிரயித்தனர் என்றும், இன்று முதல் இவ்வூர் ஸ்ரீதுளாக் கிராமம் என்று அருளிச் செய்தார். அங்கே வடுக நம்பியை ஸ்வபாதச் சாயாபந்தராகும்படி விசேஷ கடாட்சம் செய்து அவர்க்கு தர்சனார்த்தம் ப்ராதித்துக் கொண்டு சிங்கர் கோயிலிலே சிறிது நாள் எழுந்தருளியிருந்து என்ற வாக்குகளாலும் தெளியப்படும்.

ஒரு சமயம் இராமானுசர் தளிகை பிரசாதம் தரும்போது இரண்டு திருக்கைகளாலும் ஏற்றி பிரசாதம் சுவீகாரம் பண்ணி தம் திருமுடியிலே தடவிக் கொண்டார். திருமால் பிரசாதம் ஏற்போர் அதை தம் தலைமேற் தடவிக் கொள்வதன்றி நீரில் கழுவார் என்ற மரபினை ஒட்டி உடையவர் தரும் பிரசாதமும், இறைவன் பிரசாதத்துக்குச் சமம் என்ற கருத்தில் வடுகநம்பி இப்படிச் செய்தார். இதை ஒருநாள் உடையவர் கண்டு கோபித்து, கையை நீரில் கழுவிக் கொள்ளும் என்று கூறினார்.

சிலநாள் கழிந்ததும், திருமால் பிரசாதத்தை உடையவர் நம்பிக்குத் தந்தார். அதை சுவீகாரம் செய்து திருக்கைகளைக் கழுவினார். இது கண்டு உடையவர் ஏன் இப்படிச் செய்தாய் என்று கேட்க நீங்கள் சொன்னபடி செய்தேன் என்றாராம். உடையவரும், உமக்குத் தோற்றோம் என்று அருளிச் செய்தாராம்.

ஒருநாள் பெருமாள் திருவீதி எழுந்தருளும்போது, ''வடுகா! பெருமாளைச் சேவிக்க வா!'' என்று இராமானுசர் அழைத்தார். அதற்கு வடுகநம்பி, ''உம்முடைய பெருமாளைச் சேவிக்க வந்தால் என்னுடைய பெருமாளுக்குப் பால் பொங்கிப் போகுமே?'' என்று கூறினாராம்.

வைணவரல்லாத தம் உறவினர் சிலர் தம் இல்லத்திற்கு வந்து சில நாள் தங்கிச் சென்றனர். அவர்கள் சென்ற பிறகு தம் அகத்தை

சுத்திப் பண்ணி, அவர்கள் தொட்ட பாண்டங்களை உடைத்துப் போட்டு, அதற்குப் பதிலாக முதலியாண்டான் அகத்தில் புழைக்கடையில் கழித்துக் கிடந்த பாண்டங்களை எடுத்து வந்து தம்மகத்தில் உபயோகப்படுத்தினார். உடையவர் ஸ்ரீபாத தீர்த்தம் தவிர பிற தீர்த்தங்களை ஏற்பதில்லை என்ற நியதியுடையவராக இருந்தார். நம்மாழ்வாரையே சரண் உற்ற மதுர கவிகள் போல இவரும் இராமானுசரைச் சரண் உற்ற சான்றோராக விளங்கினார். வடுக நம்பி அருளிய யதிராஜவைபவம் புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களால் தமிழாக்கம் வெளியிடப்பட்டுள்ளது.

திருக்கோட்டியூர் நம்பி குமாரத்தியான தேவகி பிராட்டியார், உறங்காவில்லி தாசரின் மனைவியாகிய பொன்னாச்சியார் முதலிய பெண்பாற் சீடர்களும் இராமானுசர் பால் அத்தியந்த பக்தி நிஷ்டைகளுடன் திகழ்ந்தனர். ஒரு சமயம் இராமானுசர் தம் சீடர்களிடம், ''இந்த ஆத்மாவுக்கு ஆச்சார்யன் ஒருவனோ? பலரோ? என்ற கேள்வி எழுந்தபோது, பொன்னாச்சியாரைக் கேளுங்கள்'' என்று கூறினார். அவர்களும் அவரிடம் சென்று கேட்க, நாச்சியார், ''பெண்பிள்ளையான அடியேனுக்கு என்ன தெரியும்? எம் பெருமானாரே அருளிச் செய்ய வேண்டும் என்று அருளி தம் கூந்தலை உதறி ஒன்றாக முடித்து, தரையிலே கிடந்த காவி நூலை எடுத்துத் தலையிலே வைத்துக்கொண்டு உள்ளே சென்றுவிட்டார்.''

சீடர்கள் இச்செயலை எம்பெருமானாரிடம் கூறினர். உடையவர் அதன் தத்துவார்த்தத்தை விளக்கிக் கூறினார். ''அவர் கூந்தலை உதறியதால் இந்த ஆத்மாவுக்கு ஒவ்வோராகாரத்தில் பார்க்கும்போது பலர் ஆச்சார்யரென்றும், ஒன்றாக முடிந்ததால் பேறளிக்கும் ஆச்சார்யன் ஒருவனே என்றும், காவி நூலைத் தலையிலே வைத்துக் கொண்டதாலே காவியுடுத்த யாமே அந்த உத்தாரகனான ஆச்சார்யன் என்றும் உணர்த்தினார்,'' என்று இராமானுசர் விளக்கிய பிறகு அதன் உட்பொருளை உணர்ந்தனர்.

இராமானுசர் தமக்குக் கிடந்த பல ஆச்சார்யர்களாலும், பல சீடர்களாலும், தனிச் சிறப்புக்குரியவராகத் திகழ்கின்றார். தம் தரிசனத்தைப் பரப்புவதற்கும், ஆங்காங்குள்ள வைணவத் திருத்தலங்களில் கோயில் நிர்வாகம் இடையூறின்றி இயங்கவும், ஆழ்வார்களின் திவ்விய பிரபந்தம், வேத வேதாந்தங்கள், ஸ்ரீபாஷ்யம் முதலியன பரவவும் வழி வகுத்தார்.

இராமானுசர் எழுபத்துநாலு சிம்மாசனாதிபதிகளும், சீயர்களும், ஏகாங்கிகளும் நியமித்து தம் தரிசனத்தை தமிழகம் மட்டுமன்றி, வடக்கே இமயம் வரையும் அனுப்பி தம் புகழ்க்கொடி நாட்டினார்.

ஸ்ரீ இராமானுசரை அண்மியிருந்தவர்களில் வடுகநம்பி ஆந்திரர் என்று கண்டோம். ராஜமஹேந்தரப் பெருமாளரையர் என்றும், இவரது ஸ்ரீபாத முதலிகளில் ஒருவருடைய பெயர் குருபரம்பரா பிரபாவத்தில் காணப்படுகிறது. இவரும் ஆந்திரராகலாம். ராஜமண்ட்ரி எனப்படும் ராஜமகேந்திரவரத்தில் இருந்தவராகவும் இருக்கக் கூடும். தமிழகத்தில் சோழ நாட்டில் ராஜமகேந்திரம் எனும் ஊர் இருந்திருக்கலாம். எனினும், தற்போது காணப்படவில்லை. இவர் தமிழகத்திலிருந்து ஆந்திர நாட்டிற்குச் சென்று வைணவம் பரப்பிய மூவர்களில் ஒருவராக இருக்கவும் கூடும்.

இராமானுசருடைய சீடர்களாகத் திகழ்ந்தவர்களும் தரிசன நிர்வாகர்களாகவும் இருந்த எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகள் பெயர்களை ஆறாயிரப்படி குருபரம்பராபிரபாவம் குறிப்பிடுகிறது.

1. ஆளவந்தார் குமாரரான சொட்டை நம்பியின் பேரர் பிள்ளையப்பன்.
2. பெரிய நம்பி குமாரர் புண்டரீகர்.
3. திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான்
4. திருமாலையாண்டான் குமாரர் சுந்தரத்தோளுடையான்
5. பெரிய திருமலைநம்பி குமாரர் ராமானுஜனும் பிள்ளை திருமலை நம்பியும்.
6. கூரத்தாழ்வார் குமாரர் பட்டரும் ஸ்ரீராமப் பிள்ளையும்
7. முதலியாண்டான் குமாரர் கந்தாடையாண்டான்
8. நடுவிலாழ்வான்
9. கோமடத்தாழ்வான்
10. திருக்கேவலூராழ்வான்
11. திருமோகூராழ்வான்
12. பிள்ளைப் பிள்ளையாழ்வான்
13. நடாதூராழ்வான்
14. எங்களாழ்வான்
15. அநந்தாழ்வான்
16. மிளதாழ்வான்

17. நெய்யுண்டாழ்வான்
18. சேட்டலூர்ச் சிறியாழ்வான்
19. வேதாந்தியாழ்வான்
20. கோயிலாழ்வான்
21. உக்கலாழ்வான்
22. அரணபுரத்தாழ்வான்
23. எம்பார்
24. கிடாம்பியாச்சான்
25. அணியலூர்ச் சிறியாச்சான்
26. ஈச்சம்பாடி யாச்சான்
27. கொங்கிலாச்சான்
28. ஈச்சம்பாடி சீயர்
29. திருமலை நல்லான்
30. சட்டம்பள்ளிச் சீயர்
31. திருவெள்ளறைச் சீயர்
32. ஆட்கொண்டவில்லி சீயர்
33. திருநகரிப் பிள்ளான்
34. காராஞ்சி சோமயாஜியார்
35. அலங்கார வேங்கடவர்
36. நம்பி கருந்தேவர்
37. சிறுப்புள்ளி தேவராஜபட்டர்
38. பிள்ளையுறந்தை யுடையார்
39. திருக்குருகைப் பிரான் பிள்ளான்
40. திருக்கண்ணபுரத்தரையர்
41. பெரிய கோயில் வள்ளலார்
42. ஆசூரிப் பெருமாள்
43. முனிப் பெருமாள்
44. அம்மங்கிப் பெருமாள்
45. மாருதி பெரியாண்டான்
46. மானொன்றில்லா மாருதிச் சிறியாண்டான்
47. ஸோமாசியாண்டான்
48. சியராண்டான்
49. ஈஸ்வராண்டான்
50. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்
51. பெரியாண்டான்
52. சிறியாண்டான்
53. குறிஞ்சியூர் சிறியாண்டான்
54. அம்மங்கி யாண்டான்

55. ஆளவந்தாராண்டான்
56. அருளாளப் பெருமாள் எம்பெருமானார்
57. தொண்டனூர் நம்பி
58. மருதூர் நம்பி
59. மழூலூர் நம்பி
60. திருக்குறுங்குடி நம்பி
61. குரவை நம்பி
62. முடும்பை நம்பி
63. வடுக நம்பி
64. வங்கிபுரத்து நம்பி
65. ஸ்ரீபராங்குச நம்பி
66. அம்மங்கியம்மாள்
67. பருத்திக்கொல்லையம்மாள்
68. உக்கலம்மாள்
69. சொட்டையம்மாள்
70. முடும்பையம்மாள்
71. கொமண்டூர்ப் பிள்ளை
72. கொமண்டூர் இளையவல்லி
73. திடாம்பிப் பெருமான்
74. ஆர்க்காட்டுப் பிள்ளான்.

எழுபத்து நான்கு சிம்மாசனாதிபதிகளும் சிறந்த முறையில் வைணவக் கோயில்களைப் பரிபாலித்துக் கொண்டும், இராமானுசரின் கொள்கைகளைப் பரப்பியும் வந்தார்கள். சமுதாயத்தில் தாழ்வுற்றுக் கிடந்த மனிதனுக்குத் தன்னம்பிக்கையைத் தளிர்க்கச் செய்தார்கள். மற வாழ்விற் கிடந்த மனிதர்களை அறவாழ்விற் புகுமாறு அரவணைத்துக் கொணர்ந்தார்கள். பிறரை மதித்துப் பழகும் அடக்க சீலர்களை உருவாக்கினார்கள். குறிக் கோளின்றி தன்னல வெறியோடு வாழ்ந்து வந்த மக்கள் கூட்டத் துக்குப் புதிய குறிக்கோளைக் காட்டினார்கள். பிள்ளை திருவழுதி நாட்டரையர் தம் அந்திமதசையில் தம் சீடர்களைப் பார்த்துச் சொன்னதாக குருபரம்பரா பிரபாவத்தில் கூறப்படுவதாவது. ''வாரிகோள் முதலிகாள்! ஸம்ஸாரிகள் இழவுக்குப் போர நொந்தோங்காணுங்காள். அவர்களுக்கும், நமக்கும் அல்ப வாகியுள்ளது. எங்ஙனே என்னில் நாம் இடுவது ஒரு தண்டம். பண்ணுவது ஒரு பிரபத்தி. இழப்பது ஒரு ஹேயமானஸம் ஸாரம். பெறுவது ஒரு விலக்ஷணமான பரமபதம். இத்தை யறியாதே அத: பதிக்கினார்களே'' என்ற சொற்கள் ஆழ்ந்து சிந்தித்தற்குரியனவாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காரல் மார்க்ஸூம், பிரடரிக் ஏங்கல்சும் கூட்டாகத் தயாரித்த கம்யூனிஸ்ட் அறிக்கை என்ற பிரசித்தமான நூலின் இறுதியில்,

''பாட்டாளிகளுக்கு நமது அடிமைத் தளைகளைத் தவிர இழப்பதற்கு ஒன்றுமிலலை. அவர்கள் வெல்வதற்கு ஒரு புது உலகம் இருக்கிறது'' , என்று கூறிய பொன்மொழிகளின் சாராம்சம் தொனிக்கும் திருவழூதி நாட்டரையரின் நன் மொழிகள் அன்றைய சமுதாய மாற்றக் கருத்துக்களின் பிண்டப் பொழிவாகவே கருதத் தகும்.

காந்தியடிகளின் குருவாக மதிக்கப்பட்ட ஜான்ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' (un to the last) எனும் நூலில் குறிப்பிட்டதுபோல எல்லாருக்கும் நலன் தருவதும், சாதாரண மனிதனையும் கடைத் தேற்றம் நல்குவதுமான, தன்னல மறுப்பும், சுய அடக்கமும் உடைய ஒரு புதிய சிந்தனையை இராமானுசர் எடுத்துக் காட்டினார். சங்கரரின் அத்வைதம் - இறைமையும் உயிர் நிலையும் ஒன்றெனக் கருதியது - எல்லா உயிரினமும் ஒரே மூலப் பொருளின் வெளியீடுதான் என்பதனால் வேற்றுமை நீக்கி ஆன்மநேய ஒருமைப்பாட்டுச் சிந்தனையை உருவாக்க முயன்றது. எனினும் தானே கடவுள் நிலை எனும் தன்னம்பிக்கை ஊட்டுவதற்குப் பதிலாக அதுவே தானே எல்லாம் எனும் தற்செருக்குக்கும் வழி கோலுவதாக அமைந்து விடக் கூடாது என்ற அச்சம் அன்றைய அறிஞர்களிடையே இருந்தது. அந்த அச்சத்தினைப் போக்கும் மருந்தாகவே இராமானுச சித்தாந்தம், உயிர் வேறு, இறைநிலை வேறு என்று கூறி இறைமையின் மகத்துவத்தினைச் சிறப்பித்து விதந்தோதி, உயிரின் ஆற்றாமையை உணர்வித்து, அடக்கத்தின் இன்றியமையாமையை மிகுவித்துக் காட்டியது. சமுதாயப் பொதுமையோடிணைந்து வாழ இந்தப் பிரபத்தி மார்க்கம் எனும் தன்னடக்க நெறி பெரிதும் பயன்படும் என்பது வைணவச் சான்றோர்களின் ஆழ்ந்த நம்பிக்கையாக அமைந்தது.

இராமானுசர் தம் இயக்கத்தின் ஆணிவேராகத் திகழ்ந்தார். தம்மைச் சுற்றிலும் இருந்த சாதாரண மனிதர்களையும் இரும்பைப் பொன்னாக்கும் ரசவாதம் போல மாற்றி மகத்தானவர்களாகச் செய்தார். தம் நெருங்கிய உறவினர்களையும், தம் வழிக்குக் கொணர்ந்து, தம் இயக்கத்தினை கட்டிக் காக்கும்

ஆற்றலுடையவர்களாக மாற்றிவிட்டார். புத்தரும், மகம்மது நபியும் தம்மைச் சார்ந்த உறவினர்களை தம் நெறிக்காட்படுத்தியது போலவே இராமானுசரும் செய்தார்.

சில இயக்கங்கள் தலைவர்கள் மறைந்ததும் தானாகவே மறைந்து விடுவதுண்டு. சில இயக்கங்கள் தலைவனுக்குப் பின் மேலும் பொலிவுடன் திகழ்வதுண்டு. புத்தன், ஏசு, நபி போன்றோரின் இயக்கங்கள் இவ்வாறு மேன் மேலும் பொலிவுற்ற பேரியக்கங்களாகும். அதுபோன்றே இராமானுசர்ன் பேரியக்கமும், அவருக்குப் பின்னரும் சீரும் சிறப்புடனும் ஆச்சாரியார்களால் வளர்க்கப்பட்டு பொலிவுற்றது. எழுபத்திரண்டு சிம்மாசனாதிபதிகள் தமிழகம் மட்டும் இன்றி ஆந்திர நாட்டிலும், கர்நாடகத்திலும் பரவிச் சென்று தம் வைணவக் கருத்துக்களை மக்கள் மன்றத்தின் முன் வைத்து தம் இயக்கத்தைப் பரப்பினார்கள். வைதிக மதம், புத்த, சமண மதம், தாக்குதலிலிருந்து தப்பிப் பிழைத்த சமயம், இசுலாம் நெறி புகுந்து தன் பாதிப்பை ஏற்படுத்திய காலகட்டத்தில் இராமானுசர், தம் புதிய சிந்தனைப் போக்கின் மூலம், குறிப்பாகத் தாழ்ந்த மக்களுக்கும் தன்னம்பிக்கை ஊட்டி மேனிலைக்குக் கொணர்ந்ததன் மூலம் வைதிகக் கோட்பாடுகட்கு மீண்டும் செல்வாக்கை ஏற்படுத்தினார். அவரது புதுநெறியை ஆந்திர நாடும் ஆர்வமுடன் ஏற்றுக் கொண்டது.

# 4. இராமானுசருக்குப் பின் வைணவம்

இராமானுசருக்குப் பின் தரிசன நிர்வாகம் செய்ய வந்தவர் கூரத்தாழ்வார் குமாரரும், எம்பாரின் சீடருமான ஸ்ரீபராசர பட்டர் ஆவார். இவரது சகோதரர் ஸ்ரீ வேத வியாச பட்டர். பராசர பட்டர் சிறப்பிக்கப்பட்டு 'பட்டர்' என்றே அழைக்கப்பட்டார். இவர் சகல சாஸ்திரங்களிலும் அபாரமான திறமை பெற்றவர். திருபுவன வீரதேவராயன் என்னும் அரசன் இவர் திறமையைக் கேள்விப்பட்டு தன் அவைக்கு வருமாறு இவருக்கு அழைப்பு அனுப்பி வைத்தான். பட்டரோ இறைவன் திருவாசலுக்கன்றி வேறெங்கும் செல்ல மாட்டோம் என்று கூறி மறுத்துவிட்டார்.

பட்டர் மேல் நாட்டில் சென்று அங்கே வேதாந்தியாக இருந்த நஞ்சீயரைக் கண்டு தர்க்கத்தில் வென்று அவரை வைணவ தருமத்தில் சேர்த்துக்கொண்டு தம் சீடராகும்படி செய்தார். ஒருநாள் பட்டர் களைத்துப் போய் நஞ்சீயர் மடியிலே திருமுடி வைத்து கண் வளர்ந்தருளினார். ஓரிரவு முழுதும் துடை மாறாடுதல், அசைதல் இல்லாமல் அப்படியே இருந்தாராம். பரசுராமனுக்குப் பணிவிடை செய்த கர்ணனை நினைவூட்டும் வகையில் பட்டருக்கு நஞ்சீயர் பணிவிடை செய்தார். ஒரு தடவை பட்டர் மாலை நேரத்தில் பாதிரி என்ற கிராமத்திற்குச் சென்றபோது, அங்கொரு வேடன் இவரைக் கண்டு சிறப்புச் செய்து ஆசனம் அளித்து தாழ்ந்து பணிந்து நின்று, ஏவல் கொள்ள வேண்டும் என்றான். அவனை நோக்கி, ''இவ்விடத்து விசேடமென்ன?'' என்று கேட்க, அவன் ''ஐயா, நான் காட்டிலே வேட்டைக்குப் போவேன். அங்கே ஒரு முயல் குட்டியைப் பிடித்தேன். அதனுடைய தாய் என்முன் வந்து வழியிலே கிடந்து

கும்பிட்டதுபோல இருந்தது. எனக்குத் தயை பிறந்து அதன் குட்டியை விட்டு விட்டு வந்தேன்'' என்றான். அது கேட்ட பட்டர் நஞ்சீயரிடம், ''இது முயல் குட்டிக்கோ, வேடனுக்கோ யாரும் பிரபத்தி தர்மத்தை உபதேசிக்கவில்லை. இது மனித இயல்பான தருமம் என்பதற்கு இதுவே சான்று'' என்று கூறி தம் பிரபத்தி தருமத்தின் மேன்மையை விளக்கிக் காட்டினார்.

வீரசுந்தர பிரம்மராயன் எனும் அரசன் பெருமாளுக்கு திரு மதில் கட்டும்போது பிள்ளை பிள்ளையாழ்வான் திருமாளிகை இடையே வரவும், அதனை இடிக்கச் சொன்னான். ''பெருமாளுக்குப் பாதுகாப்பு உமது திருமதில் அல்ல. ஆழ்வானின் மங்களாசாசனமே ஆகும். திருமங்கை ஆழ்வார் திருமதில் கட்டும்போது தொண்டரடிப் பொடி ஆழ்வாரின் திருமாலைக் கட்டும் இடத்தைத் தவிர்த்து விலகக் கட்டியது போல நீரும் கட்டவேண்டும்,'' என்று பட்டர் அறிவுறுத்தினார். அரசன் கேளாது இவரை துன்புறுத்தவே, பட்டர் திருக்கோட்டியூர் சென்று சிலகாலம் இருந்தார். இந்த அரசன் இறந்ததும், செய்தி சொல்லி எல்லோரும் மகிழ்ந்தார்கள். ஆனால், பட்டரின் தாயாரும், கூரத்தாழ்வார் இல்லக்கிழத்தியுமான ஆண்டாள் மட்டும் மிகவும் வருந்தினாளாம். ஆண்டாளை ஏன் வருந்துகிறீர் என்று கேட்டபோது, ''கூரத்தாழ்வார் சீடனாக இருந்த இம்மன்னன் பட்டருக்கு அபகாரம் செய்து அதனால் யமகிங்கரர்களால் துன்புறுத்தப்பட்டு அவலம் எய்துகிறான். ஆழ்வாரின் சம்பந்தம் இருந்தும்; இவனுக்கு உய்வு கிட்டவில்லையே என்றே வருந்துகிறேன்'' என்றாராம். பகைவனையும் நல்லவனாக்கும் பண்புள்ளம் உடைய ஆண்டாள் ஆழ்வானைப் போன்றே அமைந்தது விசேஷமாகும்.

ஒரு சமயம் பட்டர் தம் சீடர் ஒருவரை, ''நீர் அனந்தாழ்வான் பக்கலில் சென்று ஸ்ரீ வைஷ்ணவ லட்சணம் இருக்கும்படி எங்ஙனம்'' என்று கேட்டு வாரும் என்று சொல்லி அனுப்பி வைத்தார். அவரும் அனந்தாழ்வான் சன்னதிக்குச் சென்று அங்கே எல்லோரும் அமுது செய்திருக்கக்கண்டார். இடம் இன்மையால் நெடும்போது பேசாதிருந்தார். பின் அனந்தாழ்வான் எல்லோரும் அமுது செய்த பிறகு இவரைக் கண்டு, ''நெடும்பொழுது நின்றீர். அமுது செய்தருளப் பெற்றதில்லையே! இளைப்போடே இருக்கிறதே'' என்று கூறி அவரை உண்பித்து மீந்ததை தாமும், தம் தேவியும் உண்டனர். பின் வந்த காரியம் வினவ பட்டர் அனுப்பினார் என்னை,

அவர், கொடுக்குப் போலே இருக்கும், கோழிபோல இருக்கும், உப்பு போலே இருக்கும் உம்மைப் போலே இருக்கும் என்று அருளினார். அதாவது ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே முற்பாட்டுக்கு ஆசைப் படாமல் பிற்பாட்டுக்கே ஆசைப்பட்டு அதனுடைய மிச்சத்தை பேணுதலே ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் என்று விடை கொடுத்தாராம். கொக்குப்போல் சமயமறிந்தும், நிதானமாகவும், கோழி போல மீந்தது பெறுவதாயும், உப்புப்போல் மிகினும், குறையினும் சுவையறுதல் போல இன்றி சம நிலையிலும் அமைதல் வேண்டும் என்பது கருத்து. ஒரு சமயம் அமுதனார் பட்டரைச் சினந்து கொண்டார். அப்போது, ''பட்டர் ஆழ்வானுடைய வெற்றிலைச் செருக்கிலே பிறந்தவர். நான் ஆழ்வானுடைய ஞானச் செருக்கிலே பிறந்தவனன்றோ'' என்று கூறினாராம். அது கேட்ட பட்டர், ''பாசுரம் அழகிது; எனினும் இதைத் தாமே சொன்னாரே'' என்று கூறி வாளா இருந்தான். ஒரு சமயம் சிலர் இவர் தர்க்கத் திறனை வியந்து, இவரை மடக்க வேண்டி ஒரு குடத்தில் பாம்பை வைத்து மூடி, ''இதற்குள் என்ன இருக்கிறது?'' என்று கேட்க, பட்டர், ''கொற்றக்குடை இருக்கிறது'' என்று சொன்னாராம். பின் அவர்கள் மூடியைத் திறந்து பாம்பை வெளியே விட்டு இது வெண் கொற்றக் குடையோ? என்று வினவ, ''ஆம். சென்றாற் குடையாம்'' என்று ஆழ்வார் பாசுரம் பாடியது இல்லையா? என்று கூற அவர்கள் இவர்தம் திறனை வியந்து பாராட்டினார்கள். பட்டர் இளமைக் காலத்திலேயே சிறந்த மேதாவிலாசமுடன் திகழ்ந்தார். சிறு குழந்தையாய் இருக்கும்போது ஒருவன், 'சர்வக்ஞபட்டன்' என்று பட்டம் சூட்டிக் கொண்டு செருக்கோடு வந்தான். அவனைக் கண்ட பட்டர், ''எம்பார் முதலிய பெரியவர்கள் இருக்குமிடத்தில் இவன் யார்? இப்படிச் செருக்கோடு வருவது?'' என்று கருதி அவன் முன் சென்று தம் திருக்கையிலே புழுதி மண் அள்ளிக் கொண்டு, ''நீர் சர்வக்ஞனன்றோ? இது எத்தனை! சொல்லு'' என்று கேட்க அவன் வெட்கமுற்று ஒன்றும் சொல்லமாட்டாமல் நிற்க, இது ஒரு கைப்புழுதிமண் என்று சொல்லமுடியவில்லையா? உனக்குப் பட்டமெதற்கு? என்று கேட்கவே அவன் வியந்து இவர் யார் என்று கேட்டு கூரத்தாழ்வான் குழந்தை என்றறிந்து மகிழ்ந்து பல்லக்கில் ஏற்றிச் சென்று அவர் வீட்டில் விட்டுச் சென்றானாம். இத்தகு பிறவியிலேயே மேதாவிலாசமுடைய பட்டர் 1122ம் ஆண்டில் அவதரித்து ஐம்பத்திரண்டாண்டுகள் வாழ்ந்து வழிகாட்டி 1174ம் ஆண்டில் திருநாடலங்கரித்தார். இன்னும் சிலநாள் இருந்தால் பரம பதத்துக்கு படிக்கட்டு கட்டுவேன் என்ற மாபெரும் மேதாவியான பட்டர் தம்

சீடர் நஞ்சீயருக்குப் பின்னாள் அருளிச் செய்த ஆறாயிரப் படியை காலாட்சேபம் செய்தார். நஞ்சீயர் அதையே பட்டர் அருளால் இன்னும் விளக்கமாக ஒன்பதாயிரப்படி அருளிச் செய்தார்.

## பட்டர் சீடராகிய நஞ்சீயர்

மேல் நாட்டில் திருநாராயண புரத்திலே 1113ம் ஆண்டில் அவதரித்தார். மாதவர் என்பது இவரது பிள்ளைத் திருநாமம். இவர் சகல சாஸ்திரமும் கற்றறிந்த வித்வானாகவும், வேதாந்தியாகவும் திகழ்ந்தார். பட்டரிடம் தர்க்கத் திறவில் தோற்று அவருடைய சீடரானார். தர்க்க பிட்சை கேட்டு வேதாந்தியுடன் வாதிட்ட பட்டரிடம், பட்டரைப் பார்த்து, ''உறங்கும் பெருமாள் அவர்; உலாவும் பெருமாள் நீர்'' என்று கூறி தண்டனிட்ட வரலாறு பிரசித்தம். வேதாந்தியான நஞ்சீயர் பட்டருக்குத் தொண்டு செய்ய ஆசைப்பட்டு, தம் செல்வத்தை தமது இரு தேவிமாருக்கும் பகிர்ந்தளித்து மீதியை பட்டரிடம் சமர்ப்பித்து துறவறம் பூண்டார். ஒரு சமயம் பட்டரின் பல்லக்கைச் சுமந்தார். அது கண்ட பட்டர், ''உமது வேடத்திற்கு இது பொருத்தமில்லையே'' என்று கூற, ''ஆச்சாரிய கைங்கரியத்துக்கு முரண்படுமாகில் காவியை விடுத்து வெள்ளை உடுப்பேன்'' என்று கூறியருளினார். பட்டர் மறைந்த ஞான்று சம்ஸ்காரங்கள் எல்லாம் முடிந்தபிறகு நஞ்சீயர் தெரு வழிச் செல்லாமல் முட்டாக்கிட்டு முகத்தை மூடிக்கொண்டு புழக்கடை வழியே தமது மடத்துக்குச் செல்லவே, அது கண்ட முதலிகள், ''இது என்ன?'' என வினவ, ''புதுக்க அறுத்த விதவை தெருவிலே வருவாளோ?'' என்று கூறினார். ஆச்சாரியனை இழந்த சீடன் கணவனை இழந்த கைம்பெண் போன்றவள் என்பது கருத்து. இத்தகு ஆச்சார்ய நிஷ்டையும், மேதாவிலாசமும் உடைய நஞ்சீயர் வடமொழியில் நூலொன்றும் இயற்றியதாகத் தெரியவில்லை. ஆருளிச் செயல்கட்கு வியாக்கியானங்கள் அருளியுள்ளார். இவர் பெயரில் வெளிவந்துள்ள ''ஸ்ரீ சூக்த பாஷ்யம்'' இவர் இயற்றியது அல்லவென்று எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கூறுகிறார். நஞ்சீயர் 1208ம் ஆண்டில் பரமபதம் அடைந்தார். பட்டரின் சீடராகிய பிள்ளைப் பெருமாள் அய்யங்காரின் 'அஷ்ட பிரபந்தம்' சிறந்த வைணவ இலக்கியமாகத் திகழ்கின்றது.

## நம்பிள்ளை

பட்டரின் சீடர். சோழ மண்டலத்தில் நம்பூர் என்னும் கிராமத்தில் வரதர் என்னும் நாமம் பெற்றவராக 1147ம் ஆண்டில் அவதரித்தார். பட்டர் தாம் அருளிய ஒன்பதாயிரப் படி

வியாக்கியானத்துக்கு ஏட்டுப் பிரதி எழுதுவதற்காக ஒரு சீடரைத் தேடும் போது இவர் அறிமுகமாகி ஏடெழுதப் பணிக்கப்பட்டார். முத்துப் போன்ற எழுத்துக்களுடன் அழகாக எழுதும் பயிற்சியுடைய இவர் சிறந்த வித்வானாகவும் திகழ்ந்தார். ஒரு சமயம் பட்டர் தம் ஏட்டுப் பிரதி தந்தும், காலட்சேபம் சாதித்தும் பிரதி வாங்கிக் கொண்டு போனார். போகும் வழியில் காவேரியில் வெள்ளம் மிகவே அலை வந்து அடித்து பிரதி நீரில் மூழ்கிப் போய்விட்டது. நீந்தி அக்கரை வந்தடைந்த வரதராசர் தம் அபாரமான ஞாபகசக்தியால் பட்டர் கருத்துரைகள் மாறாமல் அப்படியே எழுதியதோடன்றி சிற்சில இடங்களில் தம் அழகு தமிழ் நடையில் விசேஷார்த்தங்களையும் பெய்து முடித்துத் தந்தார். பிரதி கண்ணுற்ற பட்டர் தாம் கூறாத பல விசேட செய்திகள், நல்ல நடையில் அமைந்திருக்கக் கண்டு இதெப்படி நேர்ந்தது? என வினவி தம் சீடரின் மேதாவிலாசம் தெரிந்து கொண்டு பாராட்டி, 'நம்பிள்ளை' என்று பெயரிட்டழைத்தார்.

நம்பிள்ளைக்கு பல சீடர்கள் வந்து சேர்ந்து பெரிய வித்வத் கோஷ்டி உருவாயிற்று. பெரிய வாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, பின்பழகிய பெருமாள் ஜீயர், ஈயுண்ணி மாதவப் பெருமாள் முதலிய மேதாவிகள் இவர் சீடர்களாக இருந்தனர். ஒரு சமயம் முதலியாண்டான் பேரரும், கந்தாடை ஆண்டான் குமாரருமான கந்தாடை தோழப்பர் நம்பிள்ளையின் வைபவத்தைக் கண்டு பொறுக்கமாட்டாமல் கோவிலிலே கடுமையாக நிந்தித்து விட்டார். அதுகேட்ட தோழப்பரின் தேவியார் தம் கணவர் வரும்போது கைங்கரியம் ஏதும் செய்யாமல் இருக்க தோழப்பர், கைப்பிடித்த அன்றிலிருந்து இது காறும் நான் வந்ததும் உபசரித்து மகிழ்வாய்! இன்று ஏன் முரண்பட்டாய்? என்று கேட்க, ''ஆச்சாரியரான நம்பிள்ளையை நிந்தித்து அபசாரப்பட்ட உம்மோடு எனக்கென்ன தொடர்பு? என் மாதா பிதாக்களும் பெற்று வளர்த்து உம்மிடம் காட்டித் தந்த இந்த சரீரத்தை உமக்கு வேண்டியபடி செய்து கொள்ளும். என் ஆத்மாவை உய்வித்த ஆச்சாரியனை நிந்தித்த உம்மோடு என் உள்ளம் உறவாடாது. நிலம் பிளந்தால் இழைக்கொண்டு தைக்க முடியுமா? அது போன்றதே, பாகவத நிந்தனையினால் வரும் பாவமும் தீர்த்துக் கொள்ள முடியாததே'' என்று வெறுத்துரைத்தார். இது கேட்ட தோழப்பர் தம் பிழையை ஒப்புக் கொண்டு இனி என்ன செய்வது? என்று கேட்க, ''ஆற்றிலே கெடுத்து குளத்திலே தேடுவாருண்டோ? அவரிடமே சென்று பிழை பொறுக்குமாறு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளும்'' என்று சொன்னார்.

தோழப்பர், "நீயும் கூட வந்து அவரில்லம் சென்று மன்னிக்குமாறு கேட்டுக் கொள்" என்று கூறினார். அதன்படி மறுநாள் அதிகாலையில் கணவனும் மனைவியுமாக எழுந்து நம்பிள்ளையின் வீட்டுக்குப் போகப் புறப்பட்ட அளவில் கதவைத் திறந்து பார்க்க வாசல் முற்றத்தில் ஒரு ஆள் படுத்திருக்கக் கண்டு, "இங்கு யார் கிடக்கிறார்?" என்று வினவ, "அடியேன்!" என்று நம்பிள்ளை கூற, திகைத்து தோழப்பர், "உம்மை அவமானப்படுத்திய கோபத்தால் பழிவாங்கக் கிடக்கின்றீரோ?" என்று கேட்க, "அடியேன் அப்படிச் செய்ய வரவில்லை! முதலியாண்டான் பேரரான தேவரீர் திருவுள்ளம் கலங்கும்படி நடந்துகொண்ட மகாபாவியான அடியேனுக்கு தேவரீர் திருமாளிகை வாசலல்லாது புகலிடம் உண்டோ" என்று வருந்த, தோழப்பர் அவரை வாரி அணைத்து, "இதுகாறும் சில பேருக்கு ஆச்சாரியராக இருந்தீர். இனி உலக ஆச்சாரியர் ஆவீர்" என்று கூறிப் பாராட்டிப் பரவி அவரிடம் தோழமை பூண்ட சீடராக அமைந்தார்.

ஒரு சமயம் காவேரியாற்றைப் படகில் கடக்கும்போது வெள்ளப் பெருக்கு மிகவே, படகோட்டி அஞ்சி, படகு மூழ்கி விடலாம்! யாராவது ஒருவர் குதித்துப் படகைக் காப்பாற்ற வேண்டும் என்று கூறினான். நட்டாற்றில் நடு இரவில் யார்தான் தைரியமாகக் குதிக்க முடியும்! எல்லோரும் பேசாதிருந்தனர். அப்போது ஒரு பெண் படகுக் காரனைப் பார்த்து, "நம்பிள்ளையை அக்கரையில் சேர்ப்பிக்கக் கடவாயாக" என்று கூறியவாறு ஆற்றில் குதித்தாள். நம்பிள்ளை தம் பொருட்டு ஒரு பெண் இத்துணைத் தியாகம் செய்வதே என்று வருந்தினார். தெய்வாதீனமாக அப்பெண் குதித்த சிறிது தூரத்தில் ஒரு மணல் மேடிருந்தமையால் தப்பிப் பிழைத்தாள். நம்பிள்ளை மிகவும் வியாகுலப்பட்டு நம் பொருட்டாக ஒரு பெண் ஆற்றில் குதித்தாளே? என்று கூற, இரவானதாலும், கரை அருகிருந்தமையாலும், அது கேட்ட அப்பெண், "ஐயா! நான் உயிரோடிங்கே இருக்கிறேன்" என்று கூற, நம்பிள்ளை அந்தக் குரல் வந்த திசைக்கு படகோட்டியை அனுப்பி அவளை மீட்டுக் கொண்டு வரச் செய்தார். அவளும் நம்பிள்ளை அருளால் பிழைத்ததாக நம்பிக்கை கொண்டு அவரது திருவடிகளே சரணமென்றிருந்தாள். ஒரு வைணவர் நம்பிள்ளையிடம், "திருமேனி அற இளைத்திருந்தது" என்று கூற, அதற்குப் பிள்ளை, "ஒன்று தேய்தல், ஒன்று வளருத லன்றோ?" என்று விடை கூறினார். மற்றொரு சமயம் வைணவ ரொருவர் நம்பிள்ளையிடம், "ஆரோக்கியம் குறைவில்லையே" என்று கேட்க, அதற்கு நம்பிள்ளை, "யுத்தம் பண்ணப் போகிறோமா?

பெருமாளை சேவிப்பதற்குப் போதுமான ஆரோக்கியம் உண்டு. ஒரு குறையுமில்லை'' என்றார்.

நம்பிள்ளை உடல் நாட்டமின்றி அறிவில் நாட்டமும் போதுமென்ற மனநிறைவோடும் வாழ்ந்து நாலாயிர திவ்யப் பிரபந்தங்கட்கு விசேடார்த்தங்களை அருளிச் செய்து, தம் சீடர்கள் மூலம் உரை வகுக்கச் செய்து சிறப்புடன் வைணவத் தரிசனத்தைப் பரப்பி வந்தார். 1252ம் ஆண்டில் நூற்றைந்து ஆண்டுகள் வாழ்ந்து திருநாடலங்கரித்தார். ஆறாயிரப்படி குருப்ரம்பரா ப்ரபாவம் எழுதிய பின் பழகிய பெருமாள் ஜீயர் நம்பிள்ளை வரலாற்றுடன் தம் நூலை முடித்துள்ளார். இவர் நம்பிள்ளையின் சீடராவார். மற்ற சீடர்கள் வடக்குத் திருவீதிப் பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை மிகச் சிறந்த உரைகாரர்களாக திகழ்ந்து அரிய சேவை செய்துள்ளனர்.

நாயனாராச்சான்பிள்ளை இயற்றிய 'சரமோபாயம்' நம்பிள்ளை கால வரலாற்றுடன் அமைகிறது. மணவாள மாமுனிகள் சீடர் கந்தாடயண்ணனின் திருக்குமாரர் கந்தாடை நாயன் அருளிய பெரிய துருமுடியடைவு தம் காலம் வரையுமான பிற ஆச்சார்யர்களைப் பற்றியும் சில குறிப்புகள் தருகிறது. இவை ஆச்சாரியர்கள் வரலாறு பற்றியறிய மிகவும் துணை புரிகின்றன.

பத்தாம் நூற்றாண்டுக்குப் பின், இந்திய இலக்கிய உலகில் பல புதிய சிந்தனைகள் உருவாயின. மாபெரும் உரைகாரர்கள், விமரிசகர்கள், தத்துவத் திறனாய்வாளர்கள், ஞானிகள் உருவாயினர். காஷ்மீரத்தில் இலக்கியத் திறனாய்வு புதிய புதிய சிந்தனைப் போக்குகளை உருவாக்கியது. தர்க்க ஞான வல்லுநர்கள் தோன்றினர். காஷ்மீரத்தில் பிறந்த ஆனந்த வர்த்தனர். அபி நவகுப்தர் இவருடைய தொணி சித்தாந்தம், காவிய மரபுகளைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனைப் போக்குகளை உருவாக்கியது. அதன் தாக்கம் தமிழகத்தில் வடமொழி இலக்கியங்களை நன்குணர்ந்த ஆச்சாரியார்களையும் கவர்ந்தது. கவிதை எழிலும், தத்துவ ஞானச் சிறப்பும் மிக்க திவ்விய பிரபந்தங்களை ஆச்சாரியார்கள், புதிய கவிதை மரபுகட்கேற்ப வியாக்கியானம் செய்தனர். பிரபந்தங்களில் பொதிந்து கிடந்த உட்கிடைப் பொருளை தம் கூர்த்த அறிவின் திறத்தால் வெளிப் படுத்திக் காட்டினர். நம்பிள்ளை அத்தகைய சிறந்த வியாக்கியான கர்த்தா ஆவார். அவரது வாய் மொழியான வியாக்கியானங்களை அவரது சீடர்கள் ஏட்டில் எழுதினர். ஆனாலும், அவர் ஏனோ அதை விரும்பியதாகத் தெரியவில்லை.

கூரத்தாழ்வானின் பேரராகிய நடுவில் திருவீதிப் பிள்ளை எழுதிய வியாக்கியான ஏட்டை நம் பிள்ளை புறக்கணித்து எறிந்து விட்டார் என்றும், பெரியவாச்சான் பிள்ளையை புதிதாக எழுதுமாறு பணித்தார் என்றும் வரலாறு கூறுகிறது. வடக்குத் திருவீதிப் பிள்ளை நம்பிள்ளையிடம் பகலில் கேட்டதை மனதில் தரித்து இரவில் எழுதி வந்து சேர்த்த ஏட்டுப் பிரதியைப் பார்த்து, ''என் அனுமதியின்றி எழுதியதாகையால் ஏட்டினைத் தாரும்'' என்று கூறி, வாங்கி வைத்து வெளியே தராமல் பூட்டி வைத்து விட்டார். பின்னர் நம்பிள்ளை சீடரான ஈயுண்ணி மாதவப் பெருமாள் பெருமுயற்சியில் இறையருளால் அந்த ஏடு காப்பாற்றப்பட்டு, மாதவப் பெருமாள் கையில் கிடைத்தது. இந்த ஈடு முப்பத்தாறாயிரம் மாதவர் தம் குமாரர் பத்மநாபருக்கு உபசேதித்தார். பத்மநாபர் தம் சீடர் நாலூர்ப் பிள்ளைக்கு உபதேசித்தார். அவர் தம் குமாரர் தேவராசர் என்னும் நாலூராச் சான் பிள்ளைக்கு உபதேசித்தார். அவர் திருவாய்மொழிப் பிள்ளை முதலிய பலருக்கு உபதேசித்தார். அதை மணவாள மாமுனிகள் பெற்று பிரச்சாரம் செய்தருளினார். இவ்விதம் நம் பிள்ளையிடமிருந்த பேரறிவு வெளிப்பட இத்தனை சிரமங்களைக் கடந்து வர வேண்டியதாயிற்று. தன்னடக்கத்தாலும், தம் பெயரை வெளியிட விரும்பாமையாலும், நம்பிள்ளை தமது வியாக்கியான உரைகளை வெளியிட விரும்பவில்லை போலத் தெரிகிறது. எனினும் தமிழகத்தின் தவப்பயனாகவே அவை இன்னும் நிலவி வருகிறது. இவ்வுரைகள் இன்றேல் வைணவ தரிசனத்தின் மாண்பு தெரிந்திருக்காது. வைணவத் தரிசனத்தின் உயிர் நாடியாகப் பேணப்படுவது ஸ்ரீராமானுசரின் ஸ்ரீபாஷ்யம் எனும் வடமொழியில் பிரம்ம சூத்திரத்துக்கு எழுதிய பேருரையும், திவ்யப் பிரபந்தத்திற்கு மணிப்பிரவாள நடையில் இயற்றிய இவ்வுரைகளுமேயாம். இவையே, பாராயணம் செய்யப்பட்டு உபந்யாசிக்கப்பட்டு வந்தன. மார்கழி மாதத்தில் பகல் பத்து, இராப்பத்து எனும் உற்சவங்களில் இந்த வியாக்கியானங்கள் மக்களுக்கு விதந்தோதப்பட்டு வைணவத் தருமம் நிலை நிற்கவும், பரப்பவும் ஏற்பாடு செய்யப்பட்டது. இதிலிருந்து இந்த உரைகளின் மேன்மையை நன்கு உணர முடிகிறது. பிரபந்தம் முழுமைக்கும் உரை வரைந்தவர் பெரியவாச்சான் பிள்ளையாவார். திருவாய்மொழி வியாக்கியானங்கட்கு ஈடு என்றும் பகவத் விஷயம் என்றும் பெயருண்டு. ஈடு என்பது இடு என்ற பகுதியினடியாக எழுதப்பட்டது என்ற பொருளிலும் இறையன்பில் ஈடுபடச் செய்வதாதலின் ஈடு என்றும், மூல நூலின் பொருளை ஈடாகத் தருதலின் ஈடு என்றும், வடமொழிப் பேருரைக்கு ஈடாக (சமமாக) இருத்தலின் ஈடு என்றும் பெயர் பெற்றது என்பர்.

*பிள்ளான் நஞ் சீயர் பெரியவாச் சான்பிள்ளை*
*தெள்ளார் வடக்குத் திருவீதிப் - பிள்ளை*
*மணவாள யோகி திருவாய் மொழியைக் காத்த*
*குணவாளர் என்று நெஞ்சே கூறு.*

என்றபடி இராமானுசருடைய காலத்தில் அவருடைய கட்டளைப்படி திருவாய் மொழிக்கு திருக்குருகைப் பிரான் பிள்ளான் ஆறாயிரப்படி என்னும் உரை வகுத்தார். திருமால் பெருமை கூறும் ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஆறாயிரம் கிரந்தம் உடையதாதலின் இவ்வுரையும் அவ்வளவில் செய்யப்பட்டது. கிரந்தம் என்பது ஒற்றொழித்து உயிரும் உயிர்மெய்யும் ஆகிய முப்பத்திரண்டெழுத்துக்கொண்ட எழுத்தளவாகும். யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர் குணசாகரர் (11ம் நூற்றாண்டு) தம் உரையில், ''இந்நூல் எவ்வள வைத்தோ? எனின், ஒத்து வகையில் மூன்றும், காரிகை வகையால் நாப்பத்து நான்கும், கிரந்த வகையால் தொண்ணூறு கிரந்தமும், இருபத்தெட்டெழுத்தும் எனக் கொள்க. அவற்றுள் ஒரு கிரந்தமாவது ஒற்றொழித்து உயிரும், உயிர் மெய்யுமாகிய முப்பத்திரண் டெழுத்தும் எனக் கொள்க'' என்பர். பிற்காலத்தில் நம்பிள்ளை சீடரான பின்பழகிய பெருமாள் சீயரின் குருபரம்பரா பிரபாவமும் ஆறாயிரப்படி உடையதாகும்.

பிள்ளானின் ஈடு மணிப்பிரவாள நடையுடையது. நான்கு வட சொற்களும் இரு தமிழ்ச் சொற்களும் கலந்த நடையாகும். ★ சிறந்த கருத்தாழம் மிக்க உரையாகும். நஞ்சீயர் ஒன்பதாயிரப்படி உரை செய்தருளினார். பிரம்மசூத்திரத்துக்கு இராமானுசர் செய்த ஸ்ரீபாஷ்யம் ஒன்பதாயிரம் கிரந்தமுடையதாலின் இவரும் அதே அளவு கொண்டு செய்தார் என்பர். இவ்வுரையை பட்டோலையில் எழுத வேண்டியே நம்பிள்ளை வந்தார். மூலப்பிரதி காவேரி ஆற்றில் மூழ்கிவிட தம் நினைவாற்றலால் மீண்டும் அப்படியே எழுதி தம் குருவிடம் நம்பிள்ளை தந்து பாராட்டைப் பெற்ற வரலாறு பிரசித்தம்.

இவ்வுரை நூலின் மணிப்பிரவாள நடை எழிலும், விசேடார்த்தங்களை விளக்கும் நயமும், ஆன்றோர் சுவைத்து மகிழ்ந்து பாராட்டுவர்.

---

★ *ஸ்ரீ வைஷ்ணவ மணிப்பிரவாளம் (ஆங்கிலம்) கே.கே.ஏ. வெங்கடாச்சாரி.*

வாதி கேசரி அழகிய மணவாள சீயர் பன்னீராயிரப்படி வியாக்கியானம் அருளினார். இவர் பெரியவாச்சான் பிள்ளையின் சீடராவார். இவர் ஒரு சமயம் ஒரு ஆசிரியரிடம் சில சீடர்கள் கல்வி கற்று வரக்கண்டு, ''நீர் என்ற படிக்கிறீர்?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள் விளையாட்டாக, ''நாங்கள் முசல கிசலயம் (உலக்கை கொழுந்து) படிக்கிறோம்'' என்றார்கள். அழகிய மணவாளர் தம் ஆசாரியர் பெரிய வாச்சான் பிள்ளையிடம் வந்து, ''அப்படியொரு நூலுண்டோ?'' என்று கேட்டார். அதற்கு ஆசாரியர் அப்படி ஒரு நூலில்லை. உலக்கையில் கொழுந்து (தளிர்) உண்டாவதுண்டா? அதுபோல கல்வி வாசனையற்ற உமக்கு இந்த வினா எதற்கு? என்று விளையாட்டுக்குச் சொன்னார்கள் என விளக்கினார். அது கேட்ட மணவாளர் தாம் நன்கு கற்க வேண்டும் என்று சங்கற்பித்துக் கொண்டு, உடனே ஆசாரியர் காலடி வீழ்ந்து பணிந்து தம்மைத் திருத்திப் பணி கொள்ள வேண்டும் என வேண்டினார். அப்படியே அவரருளால் கற்றுத் தேர்ந்து முசலகிசலயம் என்ற பெயரில் ஒரு காவியம் இயற்றி முன் தம்மை எள்ளி நகையாடியவர்களை நாணமுறச் செய்தார். பிற மதக் கருத்துக்களை தம் வாதத்திறமையால் மறுத்து தம் மதம் நிறுவிய மேதையாதலின் வாதிகேசரி என்ற பட்டம் பெற்றார்.

அபிவந்திய சடாசார்யம் ஆச்சார்யாம்ருதம் - ஆகதம்
த்'ராவியோபநிஷத்பா' ஷ்யம் த'ர்ஸயிஷ்யே யதாஸ்ருதம்

என்று பன்னீராயிரப்படி உரை முதற் சுலோகத்தில் அருளியது போல நம்மாழ்வாரை வணங்கி, ஆச்சாரியர்களின் சொல்லமுதத்தை அவர்களிடம் கேட்டறிந்த வண்ணம், திராவிட உபநிடதமாகிய திருவாய்மொழி உரையை எடுத்துக்காட்டி புகழ் பெற்றார் இவர்.

உரைவேந்தராகிய பெரியவாச்சான் பிள்ளை இருபத்து நாலாயிரப்படி உரையருளினார். இராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களை உடையது. அந்த அளவாகச் செய்யப்பட்ட நூல் இது. இவர் சம காலத்தவரான வடக்குத் திருவீதிப் பிள்ளை முப்பத்தாறாயிரப்படி வியாக்கியானம் வகுத்தருளினார். ஸ்ரீபாஷ்யத்துக்கு சுதரிசனப் பட்டர் சுருத பிரகாசிகா என்ற விளக்க உரை எழுதினார். அதன் அளவு முப்பத்தாறாயிரம் கிரந்தம். அது அளவாகவே இந்நூலும் அமைந்தது.

நம்பிள்ளையின் சீடர்களில் சிறந்தவர்களாகிய பெரிய வாச்சான் பிள்ளையும், வடக்குத் திருவீதிப் பிள்ளையும் சிறந்த உரையாசிரியர்களாகத் திகழ்ந்தனர். பெரிய வாச்சான் பிள்ளை 1167ஆம் ஆண்டில் அவதரித்தார். இயற்பெயர் ஸ்ரீகிருஷ்ணர். சோழ வள நாட்டில் திருவெள்ளியங்குடிக்கு அருகே சங்கநல்லூரில் யமுநாச்சாரியருக்கும், நாச்சியாரம்மனுக்கும் திருக்குமரராய் அவதரித்தருளினார்.

ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தைப் பரவச் செய்த ஆச்சாரியர்களில் பெரிய வாச்சான் பிள்ளை மிகப் பிரபலமானவர். வடமொழி, தென்மொழிகளிரண்டிலும் பரிபூரண ஞானம் கைவரப் பெற்ற மாமேதை. நாலாயிர பிரபந்தம் முழுவதுக்கும் உரை வகுத்த நாவலர் இவர். மணிப்பிரவாள நடையில் மாண்புறும் கருத்தாழ மிக்க கனிச்சுரங்கமாயமைந்த வியாக்கியானங்கள் இயற்றினார். நூறு நூல்கள் செய்தவர். தற்போதும் அறுபது நூல்கள் இவர் பெயரில் கிடைக்கின்றன. திருமங்கையாழ்வாரே கலிகன்று தாசராகிய நம்பிள்ளையாகவும், கண்ணனே ஸ்ரீகிருஷ்ணராகிய பெரிய வாச்சான் பிள்ளையாகவும் அவதரித்ததாக பெரியோர் பணிப்பர். திருமலை யாத்திரை சென்று திருவேங்கடமுடையான் திருவிக்கிரகம் பெற்று வந்து தமது ஊரில் நிறுவினார் என்பர். ஸ்ரீரங்கத்தில் இருந்து கொண்டு நம்பிள்ளைக்குப் பிறகு தரிசன நிர்வாகம் செய்து கொண்டிருந்தார். இவரது காலத்தில் அரசராலோ, பிற மதத்தாராலோ தொந்தரவுகள் இல்லாமல் அமைதியாக இருந்தமையால் இவர் தம் வாழ்நாள் முழுவதும் அறிவாராய்ச்சியிலும், வைணவக் கொள்கைகளைப் பரப்புவதிலும், நூல்கள் இயற்றுவதிலும் கழிந்தது. இவருக்குப் புத்திர சந்தானம் இல்லை. எனினும் தமது மருமகனை சுவீகாரப் புத்திரராக எடுத்து அவருக்கு சகலார்த்தங்களையும் கற்பித்தார். அவரே நாயனாராச்சான் பிள்ளை யாவார். இவரிடம் வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர், அகோபிலமட ஸ்தாபகர் ஆதிவன் சடகோப ஜீயரின் குருவான ஸ்ரீரங்காச்சாரியர், பர கால தாசர் முதலிய பலர் சீடர்களாக இருந்தனர்.

வடக்குத் திருவீதிப் பிள்ளையும் இவரிடம் வந்து சில விசேடார்த்தங்களைக் கேட்டதாகக் குறிப்புண்டு. பின் பழகிய பெருமாள் ஜீயரும் நம்பிள்ளை காலத்துக்குப் பின் இவரை நாடியிருந்ததாக, 'திருமுடியடைவு' எனும் நூல் கூறுகிறது.

பெரிய வாச்சான் பிள்ளை வேறு. ஆச்சான் பிள்ளை வேறு என்று உ.வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார்★ கருத்து. பெரிய வாச்சான் பிள்ளையின் பேருரைகள் மிகுந்த சுவையும், இனிமையும், கருத்தாழமும், தெளிவும் மிக்கவை.

பெரிய திருமொழியில் திருநறையூர் பாசுரம் (6-7-4)

மென்மலர் மேல் களியா வண்டு கள்ளுண்ணக்
காமர் தென்றல் அலர் தூற்ற
நளிர் வாய்முல்லை முறுவலிக்கும் நறையூர்

என்ற அடிகளுக்கு பெரியவாச்சான் பிள்ளை உரை காண்போம்.

"கண்டவிடமெங்கும் பரப்பு மாறப் பூத்துக் கிடக்குமிறே. அதிலே மதுபாநார்த்தமாகக் கிட்டின் வண்டுகள் அத்தைக் கிட்டப் பெற்ற ஹர்ஷத்தாலே களித்து நிஷித்த ஸேவை பண்ணுவாரைப் போல மதுபானத்தைப் பண்ணிற்றின. அத்தைக் கண்ட தென்றல் நாட்டிலே பழியைத் தூற்றிற்று. அத்தைக் கண்ட முல்லை, புகுந்த ப்ரமாதத்தை யநு சந்தித்து அதுதான் அப்படி செய்கிறது இதுதான் இப்படி செய்யக் கடவதோ என்று வாய்விட்டுச் சிரிக்க மாட்டாமை ஸ்மிதம் பண்ணிற்று."

அலர் தூற்றுதல் எஃபதற்கு மலர்களை தூவுதல் என்றும், பழி கூறுதல் என்றும் இரு ⁀ பொருள் படுதலின் அதைக் கொண்டு ஒருவன் கள் குடித்து மயங்கி இருந்தான். அது தவறு. எனினும், அதைப் பெரிதுபடுத்தி அவனைப் பழிதூற்றுவதும் சான்றோர் செயலல்ல. அப்படி பழிதூற்றிச் செல்லுமவனைக் கண்டு சான்றோர் மெல்ல நகைப்பர் என்ற குறிப்புப் பொருளையும் புலப்படுத்துகிறார்.

இதுபோல ஆழ்வார் தம் அருளிச் செயல்கட்கு தம் மதிநுட்பம் மிகுந்த விளக்க உரைகள் வரைந்து வடமொழிக்கொரு மல்லிநாத சூரி போல தென்மொழிக்கு பெரிய வாச்சான் பிள்ளையும், வரப்பிரசாதமாக வாய்த்தருளினார்.

இவர் தொண்ணூற்றைந்தாண்டுகள் வரை வாழ்ந்தார். இவர் பிறந்த ஆண்டு 1228 என்றும் சிலர் கூறுவர். இவர் ஸ்தோத்ர ரத்னா

---

★ பூர்வாச் சார்ய வைபவம் - பி.ப. அண்ணங்கராச்சாரியார் 1950.

என்றும், யாமுனாச்சாரியார், சுலோகங்கட்கும், சதுஸ்லோகி எனும் யாமுனர் சுலோகங்கட்கும், ஜிதேந்திர ஸ்தோத்ர முதலிய சுலோகங்கட்கும் உரை வகுத்துள்ளார்.

கத்யத்திரயம், தனி ஸ்லோகம், பரந்த ரகஸ்யம், மாணிக்க மாலை, சகல பிரமாண தாத்பர்யம், ரஹஸ்யத்ரய தீபிகா, ரஹஸ்யத்திரய விவரணம், நிகமனப்படி, உபகார ஸ்மிருதி முதலிய பல நூல்கள் அருளிச் செய்துள்ளார்.

## வடக்குத் திருவீதிப் பிள்ளை

வடம வைஷ்ணவ அந்தணர் குலத்தில் முடும்பைக் குடியில் பெரிய வாச்சான் பிள்ளை பிறந்த அதே ஆண்டில் பிறந்தவர். அவரை விட இரண்டாண்டுகள் அதிகம் வாழ்ந்தவர். தொண்ணூற்றேழு ஆண்டுகள் வாழ்ந்து வைணவத்திற்கு சிறந்த தொண்டாற்றியவர். இவரது இல்லம் திருவரங்கத்தில் வடக்குத் திருவீதியில் இருந்தமையால், இப்பெயர் வந்தது. இவற்பெயர் ஸ்ரீகிருஷ்ணபாதர்.

வைராக்கியத்தினால் திருமணமான பின்பும் முப்பத்தேழு வயது வரை மனைவியோடு தொடர்பு கொள்ளாமலிருந்ததாகவும், நம்பிள்ளை நியமத்தாலே சிறிது காலம் தொடர்புகொண்டு, பிள்ளை லோகாச்சாரியார், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆகிய இரு குமாரர்கள் அவதரித்தனர். இவர் மனைவி பெயர் ஸ்ரீரங்க நாச்சியார்.

இவரது ஈடு முப்பத்தாறாயிரப்படி மிகச் சிறந்த வியாக்கியான நூலாகும். நம்பிள்ளையினால் அனுமதிக்கப்பட்ட விளக்க உரை நூலாகும். இவர்தம் அறிவின் பரப்பும், நுட்பமும் இந்த ஈட்டின் மூலம் ஈட்டிய புகழும் மிகப் பெரியதாகும். இவரைப் போன்றே இவரது இரு குமாரர்களும் சிறப்புடன் மேதா விலாசத்துடன் திகழ்ந்ததும் சிறப்புடைய பெரும் பேறாகும்.

கி.பி. 1167-1264ல் வாழ்ந்ததாகப் புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யர் 1217-1312ல் வாழ்ந்ததாக கே.கே.ஏ. வெங்கடாச்சாரியாரும் குறித்துள்ளனர். இதுபோல காலக் கணக்குகளில் ஐம்பது அறுபது ஆண்டுகள் முரண்படுவது நம் ஆய்வாளர்கட்கு இயல்பே. முதநூல்களில் வரும் ஆண்டுக் குறிப்புகளிலும், காலக் கணித முறைகளிலும் இத்தகு சிக்கல் எழுவதும் உண்டு.

திருவாய்மொழிக்கு ஈடு வியாக்கியானம் செய்தது போல நம்மாழ்வாரின் திருவிருத்தத்துக்கும் உரை வகுத்தார் என்ப. இவர் விளக்க உரையில் உவமை, உருவகங்கள், கற்பனை நயங்களையும் தொனிப் பொருளையும் ஆங்கு எடுத்துக் காட்டி சுவைமிக்க மணிப்பிரவாள நடையைப் பயன்படுத்தி அரிய கருத்துக்களைப் பெய்து சிறப்பித்துள்ளார். திருக்குறள், கம்பராமாயணம், சங்கச் செய்யுட்கள், தமிழ் நூலக்கிணக் குறிப்புகள் ஆகியன தக்காங்கு பயன்படுத்தியுள்ளார். நம்பிள்ளையின் பேரறிவோடு தமது நூலறிவும் பயன்படுத்தி வரைந்த பேருரையாக மிளிர்கின்றது. சென்னைப் பல்கலைக் கழகத்தார் 1957ம் ஆண்டில் பி.ஆர். புருஷோத்தம நாயுடு அவர்களால் இந்த ஈட்டின் தமிழாக்கம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. பத்துத் தொகுதிகளாக வெளியிடப்பட்ட ஈட்டின் தமிழாக்கம், மணிப்பிரவாள நடை புரியாதவர்கட்கு மிகச் சிறந்த விருந்தாகப் பொருந்தியுள்ளது. ஈடு முப்பத்தினாயிரப்படி, சொல்நோக்கும், பொருள்நோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும் கொண்டு எந்நோக்கும் அமைந்தது. கற்பார் மனதைக் கவரும் தன்மையது. புத்தியும், பக்தியும் தோற்றுவிப்பது என்று பாராட்டுவார் புருஷோத்தம நாயுடு.

வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு இரு குமாரர்கள் தோன்றினர். இருவருமே மகா மேதாவிகளாக வைணவத் தத்துவ நூல்கள் அருளிச் செய்தனர். இருவரும் திருமணம் செய்து கொள்ளாமல் பிரம்மச்சாரிகளாகவே இருந்து வைணவத்தைப் பரப்பியவர்கள். முதல்வர் பிள்ளை லோகாச்சாரியார். இரண்டாமவர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். பிள்ளை லோகாச்சாரியார் அஷ்டாதச ரஹஸ்ய கிரந்தங்கள் அருளிய மாமேதை; அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ''ஆசார்ய ஹ்ருதயம்'' எனும் சிறப்புடைய தத்துவ நூலும் திருப்பாவை ஆறாயிரப்படி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு முதலிய வியாக்கியானங்களும் அருளினார்.

பெரிய திருமுடியடைவின்படி புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் கருத்துப்படி இவரது காலம் கி.பி. 1205 முதல் 1311 வரையாகும். சிலர் கணிப்பின்படி கி.பி. 1264 முதல் 1368 வரையாகும். இம்முரண்பாட்டுக்குக் காரணம் அறுபதாண்டுச் சக்கரங்களில் வரும் ஆண்டின் பெயரைக் கொண்டு ஏற்படுவதாகும். பிள்ளை லோகாச்சாரியார் அவதரித்தது திருவரங்கத்தில் குரோதன வருஷம், ஐப்பசி மாதம், திருவோணத்தில் வடமாள் முடும்பைக் குடியில்

ஸ்ரீவத்ச கோத்திரம், யஜுஸ் சாகை, ஆபஸ்தம்ப சூத்திரம், அந்தணர் குலத்திலாகும். இவர் தம் தந்தையாரிடமும், பெரிய வாச்சான் பிள்ளை போன்றோரிடமும் கற்றுத் தெரிந்திருக்க வேண்டும். பெரிய வாச்சான் பிள்ளை போல ரஹஸ்ய கிரந்தங்களை சிறப்பாக அருளிச் செய்துள்ளார். இவருக்குச் சமகாலத்தவர் வேதாந்த தேசிகர் ஆவார்.

பிள்ளை லோகாச்சாரியாரின் தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்கும், வேதாந்த தேசிகருக்கும் கவிதை அரங்குகளில் வாதம் நடைபெற்றதாம். பிள்ளை லோகாச்சாரியார் தமிழ்ப் பிரபந்தங்களில் அதிக ஈடுபாடு கொண்டும், திருக்குலத் தாராகிய மக்களைப் பாராட்டியும் வந்தார் என்றும், வேதாந்த தேசிகர், வடமொழி வேதாந்தத்தில் ஈடுபாடும், பற்றுக் கொண்டார் என்றும், பிள்ளை லோகாச்சாரியரிடம் வேதாந்த தேசிகர் வந்து சிலகாலம் ஆசிரயத்திருந்தார் என்றும், வடகலை, தென்கலைப் பிரிவுகள் உண்டாக மூல காரணமான கருத்து மாறுபாடுகள் இக்காலத்தில் ஏற்பட்டன என்றும் பெரியோர் கூறுவர்.

வேதாந்த தேசிகர், அத்துவித சித்தாந்த ஆச்சாரியரான ஸ்ரீ வித்யாரண்யருக்கும், துவைத ஆசாரியரான ஸ்ரீ அக்ஷோப்ய தீர்த்தருக்கும் நடந்த வாதத்தில் மத்தியஸ்தராக இருந்தார் என்று தெரிய வருகிறது.

*அசினா தத்வமசினா ஜீ வபேத' ப்ரசாதி'னா*
*வித்'யாரண்ய மஹாரண்யம் அக்ஷோப்'ய முனிரச்சினத்*

என்று கூறி அக்ஷோப்ய முனிவர் வித்யாரண்யர் எனும் பெரும் காட்டை அழித்தார் என்று பாராட்டினார் என்றாலும், அப்போது நடந்த வாதத்தில் வித்தியாரண்யரே சிறப்புடன் மிளிர்ந்தார் என்றும் கூறினாராம். வித்யாரண்யர், அக்ஷோப்யர், வேதாந்த தேசிகர், பிள்ளை லோகாச்சாரியர் ஆகியவர்கள் சம காலத்தில் இருந்து இந்திய தத்துவ ஞானத்தின் மிகச் சிறந்த பேரறிஞர் களாக பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திகழ்ந்தனர். வேதாந்தசிகரைக் காட்டிலும் மூத்தவரான பிள்ளை லோகாச்சாரியர், முஸ்லீம் படையெடுப்பு நேர்ந்தபோது பெரிய பெருமாளுக்குத் திருமுன்பே கல்காப்புச் சாத்தி, நம்பெருமாளை எழுந்தருளுவித்துப் பாதுகாத்தார் என்பர். அந்தக் காலகட்டத்தில் 'ஜ்யோதிஷ்குடி' எனும் ஊரில் இருந்து தம் உடமைகள் யாவும் திருமாலுக்கு அர்ப்பணித்து விட்டு ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக வாழ்ந்து பரமபதம் அடைந்தார்.

இவருடைய சீடர்கள் கூரகுலோத்தமதாசர், திருவாய் மொழிப்பிள்ளை, விளாஞ்சோலைப் பிள்ளை, மணற்பாகத்து நம்பியார், திகழக் கிடாந்தாரண்ணன் முதலியவர்கள் ஆவர்.

வைணவத் தத்துவ மூலநூல்களில் மிகச் சிறந்தனவாக மதிக்கப்படுபவை பிள்ளை லோகாச்சாரியரின் அஷ்டாதச ரஹஸ்யங்கள் எனும் பதினெட்டுத் தத்துவ நூல்களாகும். அவையாவன:

1. முமுட்சுப்படி
2. பரந்தபடி
3. ஸ்ரியஃபிதிப்படி
4. யாத்ருச்சிகப்படி
5. தனித்துவயம்
6. தனிசரமம்
7. தனிபிரணவம்
8. தத்துவத் திரயம்
9. தத்துவசேகரம்
10. சாரசங்கிரகம்
11. சம்சாரசாயுஜ்யம்
12. பிரமேய சேகரம்
13. பிரபன்னபரித்ராணம்
14. நவரத்தினமாலை
15. நவவிதசம்பந்தம்
16. ஸ்ரீவசனபூஷணம்
17. அர்த்த பஞ்சகம்
18. அர்ச்சிராதி

இந்நூல்களில் எவை முன் இயற்றியவை என்பதை ஆராய்ந்து பார்த்தால் சில குறிப்புகள் கிடைக்கின்றன. அஷ்டாதசரஹஸ்யங்களை தெலுங்கு எழுத்தில் திருப்பதி தேவஸ்தானத்தார் 1953ல் வெளியிட்ட பதிப்பில் அதைப் பதிப்பித்த தி.கு.வெம்.பி. சுதர்சனாச்சாரியார் கருத்துப்படி வைசணபூஷணத்துக்கு முன்பே பிரமேய சேகரம், அர்ச்சிராதியும், பிரபன்ன பரித்திராணமும், தத்துவ சேகரமும், அர்ச்சிராதியும், பிரபன்ன பரித்திராணமும், தத்துவ சேகரமும், பரந்தபடிக்கு முன்பே த சித்துவயமும் அருளிச் செய்ததாக அகச்சான்றுகள் மூலம் எடுத்துக் காட்டியுள்ளார் பிள்ளை லோகாச்சாரியார்.

ஸ்ரீ வைசனபூஷணத்தில் "அவனுடைய ரக்ஷகத்வம் ப்ரபன்ன பரித்ராணத்திலே சொன்னோம். தேகத்தில் வ் பாவ்ருத்தி தத்வசேகரத்திலே சொன்னோம். இவை இரண்டும் ப்ரபன்ன பரித்ராணத்திலே சொன்னோம்" என்றும், பரந்தபடியில், "பலத்துக்கு வ்யபிசாரமில்லை என்னுமிடம் துவயத்திலே சொன்னோம். துவயத்தில் என்றது தனித்துவயத்திலே" என்றும் கூறியிருப்பதால் ஸ்ரீவசனபூஷணம் முதலிய நூல்களின் கால வரிசை தெளிவாகும்.

பதினெட்டு என்னும் எண் பாரதப் பண்பாட்டு மக்கட்கு தனிச் சிறப்பு மிக்க எண்ணாகும். பதினெட்டில் வரும் ஒன்றும் எட்டும் ஆன இலக்கம் கூட்டினால் ஒன்பதாகும். எழுத்துக்களில் அகரம் போல எண்களில் ஒன்பது தனிச்சிறப்புடைத்து. ஒன்பது என்ற எண்ணினைப் பெருக்கும்போது வரும் எண்ணைக் கூட்டினால் ஒன்பதே வரும்.

| | |
|---|---|
| 9 x 2 = 18 | (1 + 8 = 9) |
| 9 x 3 = 27 | (2 + 7 = 9) |
| 9 x 4 = 36 | (3 + 6 = 9) |
| 9 x 5 = 45 | (4 + 5 = 9) |
| 9 x 6 = 54 | (5 + 4 = 9) |
| 9 x 7 = 63 | (6 + 3 = 9) |
| 9 x 8 = 72 | (7 + 2 = 9) |
| 9 x 9 = 81 | (8 + 1 = 9) |

என வரல் காண்க. துதிகளில் நூற்றெட்டு, ஆயிரத்தெட்டு என வருவதும், கூட்டுத்தொகை ஒன்பதாக வரவேண்டுமென்பது கருதியே பதினெண்புராணங்கள், பாரதத்தில் பதினெட்டுப் பருவம், பகவத் கீதையில் பதினெட்டு அத்தியாசம், பாரதப் போர் பதினெட்டு நாட்கள், பதினெட்டாம்படி முதலியன இவ்வெண்ணின் பெருமையையும், தனித்தன்மையும் விளக்குவன. தமிழ் இலக்கியமும் பதினெண்கீழ்க்கணக்கு என்றும், பதினெண் மேற்கணக்கு என்றும், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்றும் கூறப்படுதல் காண்க. முத்தொள்ளாயிரம் (2700) எனும் தொகையும் ஒன்பதாகவே அமையும். இதுபோன்றே பிள்ளை லோகாச்சாரியரும் பதினெண் நூல்கள் இயற்றினார் என்று கூறுவர். ★

---

★ அஷ்டாதசரஹஸ்யங்கள் (தெலுங்கு லிபி) சுதர்சனாச்சாரியர்.

இந்த ரஹஸ்ய கிரந்தங்களில் வைணவ சித்தாந்தத்தின் மூல மந்திரங்களான திருமந்திரம், துவயம், சரம சுலோகம் இம் மூன்றினையும் விளக்கு முகமாகதான் தத்துவ ஞானக் கருத்துக்களும், பிரபத்தி மார்க்கத்தின் பெருமையும், சரணாகதி தத்துவச் சிறப்பும் கூறப்படுகின்றன. யாத்ருச்சிகப்படி, மு முட்சுப்படி, ஸ்ரியஃபடி, பரந்தபடி ஆகியவற்றில் திருமந்திரப் பிரகரணம், சரமஸ்லோக பிரகரணம் எனும் முப்பிரிவுகளாகப் பிரித்து விளக்கியுள்ளார். திருமந்திரப் பிரகரணத்தில் அகார உகார மகாரங்களின் தத்துவார்த்தமும், துவயத்தில் நாராயண பதத்தின் விசேடார்த்தங் களும், சரம ஸ்லோகத்தில் பிரபத்தி மார்க்கத்தின் தத்துவமும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. ஒரு நூலைவிட மற்றொன்றில் சில விரிவுரைகளாக அமைக்கப்பட்டுள்ளன. இதுவன்றி இன்னும் விரிவாக தனி துவயம், தனிசரமம், தனி பிரணவம் என்றும் மூன்று நூல்கள் விளக்கமாக இயற்றியுள்ளார். இக் கருத்தினைத் தொகுத்து சாரசங்கிரகம் திருவாய்மொழியின் பத்துப் பாடல்களின் அடவை வைத்து விளக்கியுள்ளார். மு முட்சுப்படி முதலிய இந்த நான்கு நூல்களிலும் மணிப்பிரவாள நடையில் மிகச்சிறந்த கருத்துக்களைக் காணலாம்.

*"தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாப்போலே*
*மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையுமெடுத்தது.*
*ஆகையிலே இது சகல வேதசாரம்."*

*"ஈஸ்வரன் தனக்கேறாயிருக்கும், அசித்து பிறர்க்கே*
*யாயிருக்கும், ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாய் இருக்கும்."*

*"எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள*
*சூத்திரம் போலே திருமந்திரம்."*

*"சர்வ தர்மங்களையும் விட்டென்று சொல்லுகையாலே*
*சிலர் அதர்மங்கள் புகுருமென்பார்கள். அது கூடாது.*
*அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே*
*தன்னடையே சொல்லிற்றாகாதோ வென்னில்*
*ஆகாது. தர்ம சப்'த'ம் அத'ர்ம நிவ்ருத்தியைக்*
*காட்டாமையாலே."*

*"வேத புருஷன் உபாயந்தரங்களை விதித்தது*
*கொண்டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப் போலே*

*அகங்கார மம காரங்களால் வந்த களிப்பற்று*
*ஸ்வரூபஞானம் பிறப்பிக்கைக் காக."*

இது போன்ற அழகிய பழமொழிகளைப் பெய்து எளிய நடையில் அரிய கருத்துக்களை யாவரும் உணருமாறு இந்த ரகசிய கிரந்தங்கள் அமைந்துள்ளன. தத்துவத் திரயத்தில் சித் பிரகரணம், அசித் பிரகரணம், ஈஸ்வர பிரகரணம் என்று மூன்று பிரகரணங்கள் உள்ளன. சித்தாகிய ஆன்மாவின் சொரூப லட்சணமும், அசித்தாகிய பிரகிருதியின் லட்சணமும், ஈஸ்வரனாகிய இறைத் தத்துவமும் சுருக்கமாகவும், விளக்கமாவும் விவரிக்கப்பட்டுள்ளன.

தத்துவ சேகரத்தில் பரசொரூபம், ஜீவசொரூபம், புருஷார்த்த சொரூபம், விரோதி சொரூபம், உபாய சொரூபம் என்று ஐந்து பிரகரணங்கள் உள்ளன. பரசொரூபத்தில் இறைவன் ஸ்ரீமந் நாராயணனே பிற பிரம்ம ருத்திரர்களை விட பரம்பொருளாவார் என்று விளக்கப்படுகிறது. இரண்டாம் பிரகரணமாகிய ஜீவ சொரூபத்தில் ஆன்மா, உடல், அந்தக் கிரணங்களினின்றும் வேறுபட்டது என்றும், சுயம்பிரகாசமாகி, ஆனந்த ரூபமாக, ஞானானந்தங்கட்கு நிலைக்களனாக அமைந்துள்ளதாகவும் விளக்கி, பிற மதக் கருத்துக்களை விமர்சித்து தன் மதக் கோட்பாட்டை நிலை நிறுத்தும் பாங்கில் விளக்கப்பட்டுள்ளது. மூன்றாவது பிரகரணமாகிய புருஷார்த்த பிரகரணத்தில் ஈசுவர கைங்கரியமே புருஷார்த்தம் என்பதை விளக்குகிறார்.

"கைங்கர்யம் துக்கரூபமாக லோகத்திலே காணாநின்றோம். ஸேவா ஸ்வவ்ருத்திர் யாக்யாதா தஸ்மாத்தாம் பரிவர்ஜயேத்" என்று நிஷித்தமாயிருக்க இதுவே புருஷார்த்தமாம்படி எங்கனே என்னில் லோகத்திலே கைங்கரியமெல்லாம் புருஷார்த்தமன்று, ப்ரியதம விஷயத்திலே கைங்கரியம் புருஷார்த்தமாக காண்கையிலே ஸ்வவ்ருத்தி நிஷேதித்தது இதர ஸேவையை" என்று கைங்கரியம் (தொண்டூழியம்) துயர்தருவதன்றோ. அதைப் புருஷார்த்தமாக (மனிதன் பெற வேண்டிய நற்பேறாக) கருதலாமோ? என்று வினாவெழுப்பி, பிறர் ஏவலில் இன்றி தனது அன்பின் மிகுதியால் இயற்றும் தொண்டு இன்புடையதென்றும், அது புருஷார்த்தமே என்றும், மனம் ஒப்பாவிடினும் கூலிக்காகவோ, நிர்ப்பந்தத்தாலே இயற்றும் வேலையே துயர் தருவது என்றும் விளக்கிக் காட்டுகிறார். நான்காவது பிரகரணத்தில் இந்தப் புருஷார்த்தத்துக்குத் தடையாக,

பி... ிச் சக்கர ிில் சுழலச் செய்யும் கரும சம்..ந்தத்தை (வினைத் தொடர்பை) ...ச் ிக் கூறுகிறார்.

பந்தமும் மித்யை'' என்று கூறும் அத்வைத கருத்தை மறுத்து பிள்ளை லோகாச்சாரியார் தமது விஷிஷ்டாத்வைத சித்தாந்தத்துக்கிசைய பல தருக்கக் கருத்துக்களை முன்வைத்து பந்தம் (வினைகட்டு) பரமார்த்...ம் என்று நிறுவுகிறார்.

ஐந்தாம் ...கரண...த்தில் அந்தப் பந்தத்தை நீக்கும் வழிகளை விள...் உபாய சொருப ...ணயம் ...ிளக்கப்பட்...ள்ளது. பக்தி, ...ிரபத்தி, தியாகம், சர...ாகதி தத்துவம் முதலியவற்றின் மூலம் கட்டறுத்து வீடு பெறும் வ...ியைச சு...்க்கமாக எடுத்தியம்பப் ...ட்டுள்ளது.

அர்த்த பஞ்சகம் எனும் நூலில் ஜீவ, ஈசுவர, புருஷார்த்த, உபாய விரோதி சொரூபங்களாகிய ஐந்து பொருட்களைப் பற்றி விளக்கப்பட்டுள்ளது. முதல் பிரகரணமாகிய ஜீவ சொ...ப நிர்ணயத்தில், நித்தியர், முக்தர், பத்...ர், கேவலர், முமுட்சு ஆகிய ஐந்து பிரிவினரை விளக்குகிறார். இரண்டாவது ஈசுவர சொரூப நிர்ணயத்தில் இறைநிலையை, பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்சாவதாரம் எனும் ஐந்து நிலைகளை விளக்குகிறார். மூன்றாவதான புருஷார்த்த பிரகரணத்தில், தருமம் (அறம்), பொருள், இன்பம், ஆத்மானுபவம், பகவதனுபவம் எனும் ஐந்து மனிதனால் அடையப்பட வேண்டிய பேறுகளை அறிவுறுத்துகிறார். தர்...ார்த்த காமமோட்சமென்னும் நான்கு புருஷார்த்தங்களையே மோட்சத்தை இருகூறாகப் பிரித்து ஆத்மானுபவம், பகவதனுபவம் என விளக்கி ஐந்தாக்கியுள்ளார். நான்காவது உபாய சொரூப நிர்ணயத்தில் கர்மயோக, ஞான யோக, பக்தி யோகங்களும், பிரபத்தி, ஆசாரியாபிமானங்களும் சேர்த்து ஐந்து வகைகளை தெளிவாக விளக்கிக் காட்டுகிறார். ஐந்தாவதாக விரோதி சொரூப நிரூபணத்தில் சொரூப விரோதியாகிய தேகாபிமானம், பரத்வ விரோதிகளாகிய சிறு தெய்வ வழிபாடு, அவதாரங்களை மானுடர்களாகக் கருதுவது முதலியவற்றையும், புருஷார்த்த விரோதியாகிய தீய விஷயங்களில் நாட்டமும், சுயநலப் பற்றும், உபாய விரோதியில், பக்தியின்மை, பற்றற்று தொண்டு புரிவதில் ஈடுபாடின்மை முதலியவையும், பிராப்தி விரோதியாகிய பகவதபசாரம், பாகவத அபசாரம் முதலியவையும் விளக்குகிறார்.

ஐந்து பிரிவுகளும் ஒவ்வொன்றும் உட்பிரிவுகளாக ஐந்தைந்தும் அமைத்து அர்த்த பஞ்சகம் (ஐம்பொருள்) எனப் பெரிட்டது, அர்த்தம் (பொருள்) உடையதும் பொருத்தமுடையதுமாகும்.

அர்ச்சிராதி எனும் நூலில் நான்கு பிரகரணங்கள் உள்ளன. ஒரே பொருளைப் பற்றியதாயினும் நூல் பகுப்பிற்காகவே நான்கு பிரகரணங்கள் அமைந்துள்ளன. இந்நூலில் இறைவனின் லாலாவிபூதி, முமுட்சுவுக்கு ஈசுவரன் செய்யும் உபகாரம், முக்தர் அனுபவிக்கும் கிரமம், வைகுண்ட நகர வருணனை, பகவன் ஆஸ்தான மண்டப வருணனை. நித்தியசூரிகளைச் சேர்ந்திருத்தல், பெரிய பிராட்டியார் எழுந்தருளியிருக்கும் கிரமம், எம்பெருமான் அடி முதல் திருமுடிகாறும் உள்ள அழகின் வருணனை, எம்பெருமான் அருள் செய்யும் முறை, திருமகள் அருள் செய்யும் முறை ஆகியன விளக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் ஆழ்வார்கள் சொல்லமுத வாசகங்களும், உபநிடத வாசகங்களும் மேற்கோள்கள் நாட்டியுள்ள புலமைமிக்க நடையில் இந்நூல் அமைந்துள்ளது.

பிரமேய சேகரத்தில், ''நிர்ஹேதுக பகவத் கடாட்சம் அடியாக அக்ஞாத சுக்ருதம் உண்டாய். அதனடியாக அத்வேஷம் உண்டாம். அதனடியாக பகவத் பாகவத விஷயங்களில் ஆபி முக்கியம் உண்டாம். ஆபி முக்கியம் உண்டானவாறே த்யாஜ்ய, உபாதேய, விபாக ஞானத்தின் கௌதுகமுண்டாம். அத்தாலே சாத்விக சம்பாஷணமுண்டாம். அத்தாலே சதாசார்ய சமாச்ரயமுண்டாம்'' என்று இறைவன் அருள் பெறும் நிலைகளின் நிரல்பட்ட வருணனையும் விளக்கமும் உள்ளன. இது ஒரு சிறு கட்டுரையே எனலாம். ஏறத்தாழ ஐம்பது வாக்கியங்களே உள்ள சிறிய கருத்துக் கட்டுரையாகும். இதே போன்ற சிறு கட்டுரைகள் தான் சம்சார சாம்ராஜ்யம், நவரத்தினமாலை, நவவித சம்பந்தம், பிரபன்ன பரித்திராணம் எனும் நான்குமாகும். சம்சார சாம்ராஜ்யத்தில் பிறவிச் சூழலில் சிக்குண்ட ஜீவன் இறைநிலையோடொன்றும் அருட்கிரமத்தைச் சொல்லுவதாகும்.

நவரத்தினமாலையில் சரணாகதன், தன்னையும், தன் உடலையும், தனது உடலைப் பற்றி வரும் பந்துக்களையும், பிற உயிரினங்களையும், தெய்வங்களையும், பிராட்டியையும், சர்வேசுவரனையும் எப்படிக் கருதுகிறான் என்பதை விவரித்து, தனக்கும், தன்னைச் சார்ந்த இந்த ஒன்பது உறவுகளோடும் அவனுக்குள்ள கருத்துடன்பாடு பற்றியும் விளக்குவதாகும். நவவித

சம்பந்தம் என்னும் கட்டுரையில் இறைவனுக்கும், ஜீவனுக்கும் உள்ள தொடர்பை ஒன்பது வகை உவமை மூலம் விளக்குவதாகும். பொருட்கும் அதன் அடைமொழிக்கும் உள்ள தொடர்பு (செந்தாமரையில் தாமரை பொருள் செம்மை அடைமொழி), காக்கப்படுவோன் காப்போன் தொடர்பு (அரசுக்கும் குடிமகனுக்கும் உள்ள தொடர்பு), சேஷ சேஷி சம்பந்தம், பர்த்ருபார்யா சம்பந்தம் (கணவன் மனைவி உறவு), ஞாத்ருஞேய சம்பந்தம் (அறிபொருள் அறிவோன் தொடர்பு), ஸ்வ, ஸ்வாமிபாவ சம்பந்தம் (ஆண்டான், அடிமை உறவு), சரீர சரீரிக சம்பந்தம் (உடல், உயிர் உறவு), தார்யதாரக சம்பந்தம் (தாங்குவது, தாங்கப்படுவதன் தொடர்பு), போக்த்ரு போ'க்ய சம்பந்தம் (துய்ப்போன், துய்க்கப்படு பொருள் தொடர்பு) ஆகிய ஒன்பது விதமான உறவு நிலைகளின் மூலம் இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ள உறவினை விளக்குவதாகும்.

பிரபன்ன பரித்திராணத்தில் சகோதரர், மனைவி, தாய், தந்தையர், மக்கள் யாரும் தன்னைக் காக்க மாட்டார் என்றும், நாள், கோள்கள் (கிரகங்கள், ஜோதிடம் எல்லாம்) காப்பாற்றாது என்றும், பிற தெய்வங்களும் காப்பாற்றா என்றும், பரம் பொருளான கடவுள் (திருமால்) ஒருவனே உயிர்களைக் காப்பாற்றுபவன் என்றும் விளக்கப்பட்டுள்ளது. இதனைப் புராண இதிகாச, வரலாறுகளில் இருந்து விளக்குகிறார். சகோதரர் தன்னைக் காக்கமாட்டார் என்பதனை வாலி, இராவணன் பக்கலிலும், மக்கள் காக்க மாட்டார் என்பதனை சிவன், கம்சன் பக்கலிலும், தாய் தந்தையர் காப்பாற்ற மாட்டார் என்பதனை கைகேயி, இரணியன் பக்கலிலும் காணலாம் என்று கூறுகிறார். பெண்கட்கு கணவரும் பாதுகாவலரென்று என்பதனை தருமன், நளன் பக்கலிற் காணலாம். இதுபோன்ற பிற கதைகளைச் சுட்டிக்காட்டி பரம்பொருளே நம்மைக் காப்பவன் என்பதனை விளக்கி உரைக்கின்றார்.

பிள்ளை லோகாச்சாரியரின் சிறந்த படைப்பு ஸ்ரீவசன பூஷணம் ஆகும். இந்துக்கள் கீதையையும், தமிழர்கள் குறளையும் சிறப்பித்துப் பேசுவது போல வைணவர்கள் இந்நூலைப் பாராட்டிப் பேசுவார்கள். இந்நூலில் ஆறு பிரகரணங்கள் உள்ளன. சிலர் ஒன்பது பிரகரணங்களாகக் கொள்வதும் உண்டு. முதல் உபாய பிரகரணத்தில் புருஷகார வைபவம் பிரபத்தி வைபவம் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

''வேதார்த்தம் அறுதியிடுவது ஸ்மிருதி இதிகாச புராணங்களாலே. இதி காசஸ்ரேஷ்டமான ஸ்ரீஇராமாயணத்தால்

சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது. மகாபாரதத்தால் தூது போனவன் ஏற்றம் சொல்லுகிறது. இவையிரண்டாலும் புருஷகார வைபவமும், உபாய வைபவமும் சொல்லிற்றாய்த்து.''

''ஆத்ம குணங்களில் பிரதானம் சமமும், தருமமும் இவையிரண்டும் உண்டானால் ஆசாரியன் கைபுகும். ஆசாரியன் கை புகுந்தவாறே திருமந்திரம் கை புகும். திருமந்திரம் கைபுகுந்தவாறே ஈஸ்வரன் கைபுகும்'' என்பன போன்ற எழிலார்ந்த நடையில் உயர்ந்த கருத்துக்களை விளக்கியுள்ளார்.

இரண்டாம் பிரகரணத்தில் சாதன கௌரவத்தைப் பற்றி விளக்குகிறார். திருமகள் அருள் பெறவே தான் இயற்ற வேண்டிய அறக்கடமைகளை விளக்கும் இப்பகுதியில், ''அழுகுக் கிட்ட சட்டை அனைகைக்கு விரோதியாம் போலே'' என்பன போன்ற உவமச் சொற்றொடர்கள் அழகுறப் பெய்துள்ளார்.

''பாகவத அபசாரந்தான் அனேக விதம். அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜன்ம நிரூபணம்.''

''க்ஷத்திரியனான விஸ்வாமித்திரன் பிரம்மரிஷியானான். தரும வியாதன் வாசலிலே துவண்டு தரும சந்தேகங்களை சமர்ப்பித்துக் கொண்டார்கள் ரிஷிகள். கிருஷ்ணன், பீஷ்மதுரோணாதி கிருகங்களை விட்டு ஸ்ரீவிதுரன் திருமாளிகையிலே அமுது செய்தான். பெருமாள், ஸ்ரீசபரி கையாலே அமுது செய்தருளினார். இராஜாவான ஸ்ரீ குலசேகரப் பெருமாள், திர்யக், ஸ்தாவர ஜன்மங்களை ஆசைப்பட்டார், பிரமணோத்தமரான பெரியாழ்வாரும் திருமகளும் கோ'ப ஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினார்கள்.''

இவ்விதம் பல உதாரண சரிதங்களை எடுத்துக் காட்டி குலபேதம் கருதுவது தவறு என்று இடித்துரைத்துள்ளார்.

மூன்றாவது பிரகரணத்தில் பக்தர்களின் ஒழுக்கம் பற்றுறுதியை விளக்குகிறார்.

''பிராட்டி ராட்சசிகள் குற்றம் பெருமாளுக்கும், திருவடிக்கும் அறிவியாதாப்போலே, தனக்குப் பிறர் செய்த

குற்றங்களை பகவத் பாகவத விஷயங்களில் அறிவிக்கக் கடவனல்லன்.''

''குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும், கிருபையும், சிரிப்பும், உகப்பும், உபகார ஸ்மிருதியும் நடக்க வேணும்.''

நான்கு ஐந்தாவது பிரகரணங்களில் ஆசாரிய நிஷ்டை பேசப்படுகிறது.

''ஈஸ்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக் காரியம் கொள்ளும் உபாதி' ஆசாரியனைப் பற்றுகை காலைப் பிடித்துக் காரியம் கொள்ளும் உபாதி.''

''ஒரு செய் நிரம்ப நீர் நின்றால் அயல் செய் பொசிந்து காட்டுமாப் போலே''

''ஸ்ரீ விதுரரையும், ஸ்ரீ மாலாகாரரையும், கூனியையும் போலே கிஞ்சித்தரித்தால் ஸ்வரூபம் நிறம் பெறுவது. மடிதடவாத சோறும், சுருள் நாறாகப் பூவும், சுண்ணாம்புப் படாத சாந்துமிறே இவர்கள் கொடுத்தது'' முதலிய சொற்றொடர்களும், கருத்துரைகளும் சிந்தனைக்கு விருந்தாயமைவன.

ஆறாம் பிரகரணத்தில் பிரபத்தி வைபவம், ஆசாரியாபிமானம் முதலியன விளக்கப்படுகிறது. இவ்வழகிய நூலுக்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் பொன்மலர் நாற்றம் பெற்ற பொலிவுடன் திகழ்கிறது.

''உய்யும் நினைவுடையீர் உங்களுக்குச் சொல்லுகின்றேன்
வையகுரு முன்னம் வாய் மொழிந்த - செய்யகலை
யாம் வசன பூஷணத்தின் ஆழ்பொருளை கற்றதனுக்
காம் நிலையில் நில்லும் அறிந்து''

என்று மணவாள மாமுனிகள் அருளிச் செய்தது போல வைணவ தத்துவ சாரமாக விளங்கும் ஸ்ரீவசன பூஷணம் மிகச் சிறந்த தத்துவ நூலாகும்.

இத்தகு அரிய தத்துவ நூல்களை எளிய இனிய நடையில் மணிப்பிரவாளத்தில் வெளியிட்ட பிள்ளை லோகாச்சாரியார், தம்

ஆழ்ந்த புலமைத் திறத்தாலும், புதிய கருத்துக்களைத் துணிந்து சொல்லும் திறத்தாலும் வைணவ மரபில் புதுச் சிந்தனைகளை முளைவிட தூண்டுகோலாக இருந்தார். தமிழ் மொழியிலும், ஆழ்வாராதிகளின் பிரபந்தங்களிலும், உபநிடதங்களிலும் ஆழ்ந்த பற்றுக் கொண்டு, குலபேதம் இல்லாத அன்பு வழியைப் போதித்த இந்த ஆசாரியர் காலத்தில், பிற்காலத்தில் இருபிளவாகப் பிரிந்த தென்கலை - வடகலை சம்பிரதாயக் கருத்து முரண்பாடுகளின் மூல விதைகள் தோன்றின எனக் கருதப்படுகிறது. பிள்ளை லோகாச்சாரியரின் சகோதரராகிய அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் சிறந்த மேதாவியாவார். இவருடைய ''ஆச்சார்ய ஹ்ருதயம்'' எனும் நூல் வைணவ சம்பிரதாய கிரந்தங்களில் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளது. திருப்பாவை, ஆறாயிரப் படி முதலிய நூல்களும் இயற்றியவர். இவருடைய ஆசாரிய ஹிருதயத்தில் வேதாந்த தேசிகரோடு தமக்குள்ள கருத்து வேற்றுமையைத் தெரிவித்துள்ளதாகக் கூறுவர்.

பெரிய வாச்சான் பிள்ளை தமக்குப் பிள்ளை இல்லாததால், தமது சகோதரி பிள்ளையை சுவீகாரம் பெற்று வளர்த்து சகலார்த்தங்களையும் போதித்தார். அவரது பெயர் நாயனாராச்சான் பிள்ளை. இவரது நூல்கள் சதுஸ்லோகி வியாக்கியானம், தத்துச சங்கிரகம், ஞானார்ணவம் முதலிய பலவாகும். இவர் வேதாந்த தேசிகரை விட நாற்பதாண்டுகள் மூத்தவர். பிள்ளை லோகாச்சாரியரிடம் அதிக பக்தியுடன் இருந்தார். இவருடைய சீடருமான ஸ்ரீரங்காசாரியரின் சீடரே ஆதிவண்சடகோப ஜீயராவார். பெரிய வாச்சான் பிள்ளைக்கும், நாயனாராச்சான் பிள்ளைக்கும் சீடரான வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர் மன்னார்கோவிலில் அவதரித்தவர். இவர் திருவாய் மொழிக்குப் பன்னீராயிரப்படி உரை அருளினார். இவர் பல நூல்கள் வடமொழியிலும், தென் மொழியிலும் அருளியுள்ளார். தீப பிரகாசம், தீப சங்கிரகம், தத்துவ நிருபணம், ரஹஸ்யத்திரய காரிகாவளி, பகவத்கீதை வெண்பா முதலிய பல நூல்கள் அருளினார். இவரது காலம் 1252 முதல் 1350 ஆகும்.

நம்பிள்ளையின் சிஷ்யராய் திருவாய்மொழி ஈட்டைப் பெற்றவர் ஈயுண்ணி மாதவதாசர். இவர் குமாரர் ஈயுண்ணி பத்மநாபர். இவரது சீடர் நாலூர் பிள்ளை. இவரது குமாரர் நாலூராச்சான் பிள்ளை. இவருடைய சிஷ்யர் திரு நாராயணபுரத்தாய் என்னும்

ஜனன்யாச்சாரியார் ஆவர். இம்மரபில் ஈடு வழி வழியாக உபதேசிக்கப்பட்டு பிரசித்தி பெற்றது.

**ஸ்ரீ வேதாந்த தேசிகர்**

காஞ்சிபுரத்துக்கருகில் 'தூப்புல்' எனும் கிராமத்தில் கி.பி. 1268ல் அனந்த சோமயாஜிகள், தோதாத்திரியம்மாள் ஆகியோருக்கு திருக் குமாரராக அவதரித்தார். இவரது தாய் மாமனாரான 'கிடாம்பி அப்புள்ளார்' எனும் இராமானுசப் பிள்ளானிடம் கல்வி கற்றார். நடாதூரம்மாள் சீடரான அப்புள்ளாருடன் சென்ற சிறுவரான வேதாந்த தேசிகரைக் கண்டு, 'இவர் தரிசனப் பிரவர்த்தகராகத் திகழ்வார்' என்று கூறி வாழ்த்தினார். ஸ்ரீஹயக்கிரீவ மந்திர உபாசனையால் பிரத்தியட்சமாக இறையருள் பெற்றவர் என்பர். இவர் வடமொழி, பிராகிருதம், தமிழ் முதலிய மொழிகளில் இலக்கியம், தத்துவம், கலைஞானங்கள், சாத்திரங்கள் அனைத்தையும் கற்றறிந்து, 'சர்வதந்திரசுதந்திரர்' என்ற பட்டம் பெற்று புகழ்மிக்க ஆச்சாரியரானார்.

திவ்யதேச சஞ்சாரம் செய்து திருக் கோவிலூரில் சில காலம் தங்கியிருந்து பெருமாள் கோவிலில் தங்கி வைணவ சித்தாந்தத்தை விளக்கியும் பிற சித்தாந்தங்களைக் கண்டித்தும் பல நூல்கள் இயற்றினார். இவரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்த ஸ்ரீவித்யாரண்ய சுவாமிகள், விஜய நகரப் பேரரசனிடம் வந்து மானியங்கள் பெற்றுச் செல்வச் செழிப்புடன் வாழ வகை செய்ய ஒரு கடிதம் அனுப்பினார். தேசிகரோ பதிலாக,

> "நமே பித்ரார்ஜிதம் திஞ்சித் ந மயா திஞ்சிதார்ஜிதம்
> அஸ்தி மே ஹஸ்தி சைலாக்ரே வஸ்து பைதா மஹம் தனம்"

என்று, "எனக்கு தந்தை சம்பாதித்த பொருள் சிறிதும் இல்லை. நானும் சிறிதும் சம்பாதிக்கவில்லை (உண்மைதான்), எனினும் அத்திகிரியில் எனக்கு மரபு வழிப்பட்ட பெரும் பொருள் (இறைவன்) இருக்கிறது" என பதில் அனுப்பியதோடு, 'வைராக்கிய பஞ்சகம்' எனும் நூலும் அருளினார். ஒரு கொத்தன் தேசிகரிடம் வந்து, "நீர் சர்வதந்திர சுதந்திரர் என்கிறார்கள். ஒரு கிணறு கட்டும் பார்ப்போம்" என்று கூற சுவாமியும் புன்முறுவல் பூத்து அவனெதிரிலேயே கிணறு கட்டி முடித்தார். ஒரு பாம்பாட்டி தேசிகரிடம், "நீர் சர்வதந்திர சுதந்திரரானால் இந்தப் பாம்புகளைக் கட்டும்" என்று கூறி பெட்டியிலிருந்த பாமபுகளை வெளியே விட, அவை திரும்பிவந்து

வந்தன. உடனே சுவாமி காருட மந்திரம் உபாசித்து ஒரு கோடு போடவே அதற்குள் கருடன் வந்து அப்பாம்புகளைத் தூக்கிச் சென்று விட்டன என்பர்.

சுவாமிகள் உஞ்சவிருத்தி செய்வதை விரும்பாத சிலர் அவருடைய பாத்திரத்தில் அரிசியுடன் பொன்னும் சேர்த்து சமர்ப்பித்தனர். திருமாளிகையில் எழுந்தருளிய பின் தேவிகள் அவற்றைக் காண்பிக்கவே, ஓடும் பொன்னும் ஒக்க நோக்கும் பெருந் தகையாளராதலின் அதனை எடுத்து வீதியிலே எறிந்து விட்டார்.

தேசிகர் திருவரங்கத்தில் இருந்தபோது, 'கந்தாடை லட்சுமணாசாரியர்' எனும் ஆசாரிய பீடத்தவர் அவ்வழியே வந்தார். தேசிகர் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தமையால் அவர் வரவை கவனிக்கவில்லை. கந்தாடை லட்சுமணாச்சாரியாரின் சீடர் ஒருவர் இவர் தம் குருவை மதிக்கவில்லை என்று கருதி, இவரருகே வந்து காலைப் பிடித்திழுத்து, ''எமது ஆசாரியார் எழுந்தருளி நிற்க நீர் அவமரியாதை செய்யலாமோ?'' என்று கூறிச் சினந்து சென்றார். இதனால் மனம் நொந்த தேசிகர் தாம் பாகவதாபசாரம் செய்து விட் டோமே எனக் கருதி கோயிலை விட்டு நீங்கி சத்தியமங்கலத்தில் தங்கினார். லட்சுமணாச்சாரியார் உடல் நோய் கண்டு இதற்குக் காரணம் தன் சீடன் தேசிகரை அவமதித்து விட்டது தான் என்று தெரிந்து தேசிகரை வணங்கி ஸ்ரீபாத தீர்த்தம் பெற்று நோய் நீங்கி குழந்தைச் செல்வமும் பெற்றார். அக்குழந்தை தீர்த்தப் பிள்ளை என்ற பெயரோடு திகழ்ந்து தேசிகர் விஷயமாக ஒரு நூற்றந்தாதி செய்ததாகவும் தெரிகிறது. துலுக்கர்கள் படையெடுப்பால் திருவரங்கத்திலிருந்து திரு நாராயணபுரம் சென்று, 'அபீதிஸ்தவம்' எனும் நூலை அருளி மீண்டும் நாடு அமைதியுற வழி செய்தார். அத்வைதியான வித்யாரண்யருக்கும், துவைதியான அக்ஷோப்பியருக்கும் வாதமுண்டானபோது இவர் நடுவராக இருந்து சிறப்பித்து, ஒரு சுலோகம் அருளியது பிரசித்தம். கிருஷ்ணமிஸ்ரன் எனும் அத்வைதி, 'பிரபோத சந்திரோதயம்' எனும் நாடகம் வடமொழியில் இயற்றினார். அந்த நாடகத்தை மறுத்து தம் கருத்துக்களை வெளியிட்டு விஷ்டாத்வைத பரமாக, 'சங்கல்ப சூரியோதயம்' என்னும் நாடகத்தை இயற்றியருளினார். தயாசதகம் இயற்றினார். இவர் படைத்த சிறந்த காவியங்கள் யாதவாப்யுதயம், பாதுகா சஹஸ்ரம், ஹம்ச சந்தேசம் எனும் மூன்றும் வடமொழி இலக்கிய வரலாற்றில் மிகச்சிறந்த இடத்தைப் பெற்றுள்ளன. சித்தாந்த விஷயமாக 'தாத்பர்ய சந்திரிகை', 'ஸ்ரீபாஷ்ய

வியாக்கியானமாக', 'தத்வ பீகை', 'நியாய சித்தாஞ்சனம்', 'சததூ'ஷணி' அதிகரண சாராவளி, 'தத்வமுக்தாகலாபம்', 'கத்யத்ரய பாஷ்யம்' முதலிய பல நூல்களை இயற்றினார். மணிப்பிரவாள நடையில் பரமதபங்கம், ரஹஸ்யத்ரயசாரம், சம்ப்ரதாய பரிசுத்தி, அபய பிரதான சாரம், அமலனாதிபிரான் வியாக்கியானம் முதலியன அருளியுள்ளார்.

'த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி', 'த்ரமிடோப நிஷத்சாரம்' எனும் திருவாய்மொழியின் பொருளை விளக்கும் நூல்களை வடமொழியில் இயற்றியுள்ளார். ஆஹார நியமம் முதலான பல தமிழ்க்கவிதைகள் உள்ள 'தேசிக பிரபந்தம்' எனும் தமிழ் நூலும் இயற்றினார். தசாவதார தோத்திரம், கோதாஸ்துதி, ஸ்ரீஸ்துதி, யதிராஜ ஸப்ததி, ஹயக்ரீவ ஸ்தோத்திரம், ''கருடபஞ்சாசத்'' முதலிய தோத்திர நூல்களை வடமொழியில் அருளியுள்ளார். இவ்விதம் நூற்றுக்கும் மேற்பட்ட அரிய தத்துவ நூல்களும், காவியங்களும் இயற்றிய பெருமை தேசிகருக்குண்டு. தேசிகர் ஒரு நூற்றாண்டு வாழ்ந்தார். தேசிகருடைய குமாரர் வரதாச்சாரியார் ஆந்திர நாட்டிற் சென்று வைணவத்தைப் பரப்பிய முக்கியமானவர்களில் ஒருவர். தேசிகருடைய சீடர்களில் ஒருவரான பிரம்மதந்திர சுதந்திர ஜீயர். மேனாட்டில் மைசூரில் பரகால மடம் நிறுவி வைணவத்தை ஆந்திர நாட்டிலும், கன்னட நாட்டிலும் பரப்பிப் புகழ் பெற்றவராவார். அகோபில மடம், பரகால மடம் வடகலை சார்ந்த மடங்கள். அவை தேசிகரின் புகழ் பரப்பும் மடங்களாக இன்றும் சிறப்புடன் திகழ்கின்றன.

வடகலை மரபு வேதாந்த தேசிகரை பரமாசாரியராகக் கொண்டு திகழ்வது போன்று தென்கலை மரபு மணவாள மாமுனிகளை பரமாசாரியராகக் கொண்டு திகழ்கின்றது. தென்னாச்சாரிய சம்பிரதாயம் எனும் தென்கலை மரபுப்படி இராமானுசருக்கு பின் எம்பார், அவரது சீடர் கூரத்தாழ்வார் குமாரர் பட்டர், அவர் சீடர் நஞ்சீயர், அவர் சீடர் நம்பிள்ளை, அவர் சீடர் வடக்குத் திருவீதிப் பிள்ளை, அவர் குமாரர் பிள்ளை லோகாச்சாரியார், அவர் சீடர் திருவாய் மொழிப் பிள்ளை, அவர் சீடர் மணவாள முனிகள் என்றிப்படி குரு பரம்பரை அடைவு உள்ளது.

திருவாய்மொழிப்பிள்ளை இயற்பெயர் திருமலையாழ்வார். இவர் மதுரைக்கருகிலுள்ள குந்தகை என்னும் ஊரில் அந்தணர் குலத்தில் கி.பி. 1290-ம் ஆண்டில் அவதரித்து நூற்றிருபதாண்டுகள்

வரை நிறைவாழ்வு வாழ்ந்தவராவார். இவர் பிள்ளை லோகாச்சாரியரின் சீடர் ஆகும். துலுக்கர் படையெடுப்பின் காரணத்தால் பிள்ளை லோகாச்சாரியார் நம்பெருமாள் (விக்கிரகத்தை) வலசையாக எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போந்து, 'ஜோதிஷ்குடி' என்னும் கிராமத்தில் தங்கியபோது பிள்ளை லோகாச்சாரியருக்கு சரமதசை நெருங்குகிறது. அப்போது அவர் திருவடிகளைச் சேர்ந்த சீடர்கள், 'இனி எங்கட்குத் தஞ்சம் ஏது?' என்று கேட்க, லோகாச்சாரியார், 'திருமலையாழ்வார் (திருவாய் மொழிப் பிள்ளை) இடம் சேருங்கள். அவர் லௌகிக வைதிகங்களிலே அதி நிபுணர். மதுரை மன்னன் இறந்து போகவே, அவனது வர்ரிசான இளவரசனுக்குத் துணையாக அவர் ஆண்டு வருகிறார். அவர் அதை விட்டு தரிசனப் பிரவர்த்தகராகும்படி ஆசீர்வதித்து, ரகஸ்யார்த்தங்களை கூரகுலோத்தமதாசரும், திருவாய்மொழியை பிரசாதிக்கும்படி திருக்கண்ணங்குடி பிள்ளை, திருப்புட்குழி ஜீயரும், வியாக்கியானங்களை நாலூர் பிள்ளை விளாஞ்சோலைப் பிள்ளையும் பிரசாதிக்கும்படியும் ஏற்பாடு செய்வதாக' வாக்களித்தார். அதன்படியே லோகாசாரியரும் ஏற்பாடு செய்து சீடர்களை திருவாய்மொழிப் பிள்ளையைச் சாருமாறு செய்து பரமபதமுற்றார். பிள்ளை லோகாசாரியரின் சீடராகும்பேறு பெற்ற திருவாய்மொழிப் பிள்ளை பாண்டிய நாட்டை இளவரசுக்குத் துணையாக இருந்து தானே எல்லா அரச காரியங்களையும் நிருவகித்துக் கொண்டு வரும்போது கூரகுலோத்தமதாசர் சென்று அவரைத் தடுத்தாட்கொண்டு தரிசனப் பிரவர்த்தகராக்கினார். இவர் பெரியாழ்வார் திருமொழிக்கு வியாக்கியானம் செய்தருளியுள்ளார். ஆழ்வார் திருநகரியில் ஜீரனோத்தாரணம் செய்து கோயில் சிறப்புறச் செய்தார். திருவனந்தபுரம் சென்று விளாஞ்சோலைப் பிள்ளையிடம் சகலார்த்தங்களையும் கேட்டு, அவர் பரமபதம் அடையவே சரம கைங்கரியம் செய்து முடித்து வந்தார். இத்தகு நிறைவாழ்வும், குறைவற்ற செல்வச் செழிப்பும், மறைதேர்ந்த புலமையும் உடைய திருவாய் மொழிப் பிள்ளையின் சீடராகிய மணவாள மாமுனிகள் கி.பி. 1370-ஆம் ஆண்டில் பாண்டி நாட்டில் திருக்குருகூர் எனும் ஆழ்வார் திருநகரியில் திகழக் கிடந்தான் திருவாவீறுடைய பிரான் தாதரண்ணன் என்னும் அந்தணருக்கும், ஸ்ரீரங்க நாச்சியாருக்கும் திருக்குமாரராக அவதரித்தார். அனந்தாழ்வான் அவதாரமாகக் கருதப்படும் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தம் தந்தையாரிடம் கல்வி கற்றுத் தேர்ந்தார். பின்னர் திருவாய்மொழிப் பிள்ளையிடம் சீடராகச் சேர்ந்து ஆழ்வார் திருநகரியில் இருந்து திருவாய்மொழி முதலிய பிரபந்தங்களை அனுசந்தித்து சகலார்த்த

விசேஷங்களையும் கேட்டறிந்து அவருடனே இருந்து வந்தார். திருவாய் மொழிப் பிள்ளை நிறுவிய, 'இராமானுஜ சதுர்வேதி மங்கலம்' எனும் அக்கிரகாரத்தினை நாயனார் உடைமையாக்கினார். 'யதீந்திர பிரவணர்' என்று பட்டம் சூட்டி அழைத்தார். அங்குள்ள உடையவர் சன்னதியில் துதி ரூபமாக 'யதிராஜவிம்சதி' அருளிச் செய்த மணவாள மாமுனி பல நூல்கள் இயற்றினார். ஸ்ரீவசன பூஷணம், தத்துவத்திரயம், முமுட்சுப்படி ஆகிய பிள்ளை லோகாச்சாரியருடைய மணிப்பிரவாள தத்துவ நூல்கட்கும் வியாக்கியானம் செய்தருளினார்.

பிள்ளை லோகாச்சாரியர் தம்பியாகிய அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின், ''ஆசார்ய ஹிருதயம்'' என்னும் தத்துவ நூலுக்கும் பேருரை வரைந்துள்ளார். பெரிய வாச்சான் பிள்ளை நாலாயிர பிரபந்தத்துக்கு முழுவதும் உரை வகுத்தார். அதில் பெரியாழ்வார் திருமொழியில் சில பாசுர வியாக்கியானப் பகுதி ஏடு கரையான் பிடித்து அழிந்து போயிற்று. அந்தப் பகுதிக்கு மணவாள மாமுனிகள், உரை வரைந்து கொடுத்தார். அவ்வுரைச் சிறப்பினைக் கண்ட பெரியோர்கள் அந்த ஏடு முழுதும் கரையான் பிடித்திருந்தால் நூல் முழுதுக்கும் உரை செய்து உதவியிருப்பாரே என்று கூறிப் பாராட்டினாராம். இராமானுச நூற்றந்தாதி, ஞான சாரம், பிரமேயசாரம், கீதை முதலியவற்றுக்கும் வியாக்கியானங்கள் செய்தருளினார். ஈடு முப்பத்தாறாயிரப்படிக்கும், ரகஸ்ய கிரந்தங்கட்கும் பிரமாணத்திரட்டு (மேற்கோள் பாடல்களின் முழுமையையும் எடுத்துக்காட்டி, எந்த நூலில், யார் இயற்றியது என்ற விவரம் தரும் நூல்கள்) செய்தருளினார். உபதேசரத்தின மாலை, திருவாய் மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி எனும் அழகிய தூய தமிழ்ப் பிரபந்தங்களையும் இயற்றியருளினார்.

இவர் தம் குமாரருக்கு இராமானுசப் பிள்ளை என்று பெயரிட்டு அழைத்தார். திருவாய் மொழிப் பிள்ளை திருநாடலங்கரித்த பின் தரிசன பிரவர்த்தகராக பெரிய ஜீயர் என்ற பட்டமும் பெற்று மணவாள மாமுனிகள் திருவரங்கம் சென்றிருந்தார். காஞ்சி, திருமலை முதலிய திவ்விய தேச யாத்திரைகள் செய்து மங்களா சாசனங்கள் செய்து வந்தார். தமது பேரர்களுக்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் என்றும், பெரியாழ்வார் என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்தார். ஆச்சாரியர் களுக்குள் அஷ்டகோத்திர வியவஸ்தையை ஏற்படுத்தினார். எழுபத்து மூன்றாண்டுகள் வாழ்ந்து வைணவ தென்னாச்சாரிய

சம்பிரதாயத்துக்கு மறுமலர்ச்சியூட்டிய மகத்தான மேதையாகத் திகழ்ந்தவர் மணவாள மாமுனிகள். 'விசதவாக் சிகாமணி' எனும் பட்டத்துக்கேற்ப இவரது நூல்களும், வியாக்கியானங்களும் தெளிவும், எளிய நடைச் சிறப்பும், நற்கருத்தாழமும் கொண்டிலங்கு கின்றன. இராமானுசரோடு ஒப்பிட்டுப் பேசும் சிறப்புப் பெற்ற மணவாள மாமுனிகளை அண்டிச் சேர்ந்த சீடர்களை அஷ்டதிக் கஜங்கள் (எண்டிசை யானைகள்) என்று சிறப்பித்து அழைப்பர். இவர்களது மரபினர் இன்றும் தமிழகத்திலும், ஆந்திர நாட்டிலும் சிறந்த அறிஞர்களாகவும், விஸாஷ்டாத்வைத சித்நாந்த பிரவர்த்தகர் களாகவும், நூலாசிரியர்களாகவும் திகழ்கின்றனர்.

1. வானமாமலை ஜீயர்
2. பட்டர்பிரான் ஜீயர்
3. திருவேங்கட இராமானுஜ ஜீயர்
4. கோயிலண்ணன்
5. பிரதிவாதி பயங்கரமன்னன்
6. எறும்பியப்பா
7. அப்பிள்ளை
8. அப்பிள்ளார்

மணவாள மாமுனிகளின் சீடராகிய வானமாமலை ஜீயர் கி.பி. 1440ல் வானமாமலை மடத்தினை நிறுவினார். மணவாள மாமுனிகள் தம் வாழ்வில் பல அற்புதங்களை நிகழ்த்திய பெருமை உடையவர். இவர் திருவரங்கம் வந்தபோது உத்தநம்பி ஸ்ரீரங்காச்சாரியர் கோயில் மேற்பார்வையாளராக இருந்தார். அவர் இவர் வரவை விரும்பவில்லை. பின் அவர் கனவில் திருமால் தோன்றி மணவாளமுனிகளை அடிபணியுமாறு பணிக்கவே அவரும் கோயிலண்ணன் முதலியோரும் சீடராயினர். மாயாவாதி ஒருவர் வாதம் செய்ய வரும்போது தம் சீடர் வேடலப்பை மூலம் வாதாடச் செய்து தோற்றோடச் செய்த சரிதம் பிரசித்தமானது. ஆதிசேட அவதாரம் என்பதை சில இடங்களில் காட்சி தந்து உணர்த்தியதாகவும் வரலாற்றில் கூறப்படுகிறது.

திருக்குருகூரில் இவர் இருந்த மடத்தில் பொறாமைக் காரர்கள் தீ வைத்து விட்டனர். அவர்களை அரசன் தண்டிக்கப் புகுந்தபோது, கருணையுடன் அவர்களை மன்னித்து விடுத்த வரலாறு பிரசித்தம். மணவாள மாமுனிகளின் சீடர்கள் அறிவாற்றல் வாய்ந்த மேதைகளாகவும், தத்துவ வித்தகர்களாகவும் திகழ்ந்தனர்.

வானமாமலை ஜீயர் அவர்களில் முதல்வராகத் திகழ்ந்தார். இவருக்கு இராமானுஜமுனி என்றும் பெயர். இவருடைய சீடராகிய ஆத்தான் ஜீயர் ஆந்திர நாட்டிலிருந்து வந்து திருவரங்கத்தில் இருந்து ஈட்டு வியாக்கியான நூல்களை வரைந்துள்ளார். பிரதிசாதி பயங்கரம் அண்ணா - ஸ்ரீபாஷ்ய வியாக்கியானம் இயற்றியவர். பிள்ளை லோகம் ஜீயர் யந்திர பிரவணபிரபாவம் எழுதியவர். அப்பிள்ளை யதிராஜ விம்சதிக்கு உரை எழுதியவர். இவ்விதம் மணவாள முனிகளின் சீடர்களும் அவர்களது வழிவந்த சீடர்களும் தமிழகம் மட்டுமன்றி, ஆந்திர நாட்டிலும் குடியேறி அங்குள்ள சிற்றரசர்கள் ஆதரவுடன் வைணவத்தை நிலை நிறுத்தியும் பரப்பியும் வந்துள்ளனர்.

இக்கால கட்டத்தில் வைணவம் வடகலை, தென்கலை என இரு பிரிவுகளாகப் பிரிந்து விட்டது. வடகலையாருக்கு ஆந்திர நாட்டிலிருந்த அகோபில மடமும், மைசூரிலிருந்த பரகால மடமும், தென்கலையாருக்கு வானமாமலை மடமும் ஆதரவளிக்கும் நிறுவனங்களாக விளங்கின. பதின்மூன்று பதினான்காம் நூற்றாண்டுகளில் முஸ்லீம் மன்னர் படையெடுப்பாலும், சிற்றரசர்களின் ஆதிக்கப் போட்டிகளாலும் நாட்டில் அமைதி குலைந்திருந்தது. எனினும், வைணவ ஆச்சாரியர்கள் சிறிதும் மனம் தளராமல் தத்துவ ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டு வியாக்கியானங்கள் செய்துகொண்டு கோயில் நிர்வாகத்துக்குப் பழுது வராமல் பாதுகாத்து வந்து வைணவத்தைப் பரப்பினர். இச்சமயத்தில் பல அந்தணர்கள் ஆந்திர நாட்டிற்கு குடியேறிச் சென்று அங்குள்ள சமஸ்தான மன்னர்களின் ஆதரவைப் பெற்று கோயில் கைங்கரியம் செய்து வரலாயினர். வடகலை, தென்கலை இரு பிரிவினருமே ஆந்திர நாட்டில் இன்றும் சிறப்புடன் விளங்கி வருகின்றனர்.

வைணவத்தில் வடகலை மரபும், தென்கலை மரபும் முதன் முதலில் கருத்து முரண்பாடுகளால் உண்டாயினும், பிற்காலத்தில் சடங்குகளிலும், பூசை செய்யும் முறையிலும், திருமண் காப்பிடுதல் முதலியவற்றிலும் பேதங்கள் ஏற்படலாயின. சுமார் முன்னூறு ஆண்டுகளாகவே அதிக அளவில் முரண்பட்டு, கோயில் யாருக்கு உரிமை என்ற வகையில் வழக்குகளும், போராட்டங்களும் எழுந்தன. இது பற்றிய விரிவான வரலாறுகள் ஸ்ரீகாஞ்சி, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் தமது, 'இராமானுஜ தயாபாத்ர பத்ய சரித்திரம்' எனும் நூலில் விவரித்துள்ளார். எனினும் வடகலை,

தென்கலை அடிப்படைக் கருத்து முரண்பாடுகளைத் தெரிந்து கொள்வது இன்றியமையாதது.

"வடகலை தென்கலை வடுகு கன்னடம்"

எனும் கம்பன் பாடலில் வடகலை என்பது வடமொழியையும், தென்கலை என்பது தமிழையும் குறிப்பிடுகிறது. அதுபோலவே இச்சொற்றொடரும், வடமொழியிலுள்ள வேதோபநிஷதங்களையும் ஸ்ரீபாஷ்யாதி கிரந்தங்களையும் முதன்மைப்படுத்தும் மரபு வடகலை மரபு என்றும், நாலாயிர திவ்யபிரபந்தம், ஈடு முதலான தமிழ்ப் பிரபந்தங்கட்கு முதன்மை தரும் மரபு தென்கலை மரபு என்றும் பொதுவாகக் கருதப்படுகிறது. ஆனால், வடகலை, தென்கலை ஆசாரியார்கள் அனைவருமே இருமொழிப் பெரும்புலமையும், இரு மொழிகளையும் இரு கண்ணென மதிக்கும் சமநோக்கும் உடையவர்களாகவே திகழ்ந்துள்ளனர். ஆதலின் இம்மரபுகள் உருவாவதற்கு கருத்து முரண்பாடுகளும் சமுதாயச் சூழ்நிலைகளுமே காரணமாகும். சமுதாய முன்னேற்றக் கருத்துக்களில் ஏற்பட்ட பழமைக்கும், புதுமைக்கும் ஏற்படும் கருத்துப் போர்களும் மூலகார்ணமாக அமைந்திருக்கின்றது. தீண்டாமை ஒழிப்பு, குலப் பெருமை பாராட்டல், பெண்களை மதித்தல் போன்ற சமூக முன்னேற்றக் கருத்துக்களின் தாக்கமும் இந்த மரபு முரண்பாடுகளுக்குக் காரணமாகலாம்.

தென்கலையார் இறையருளை மார்ஜால நியாயம் எனப்படும். தாய்ப்பூனை தன் குட்டியைத் தானே கவ்விக் கொண்டு சென்று பாதுகாப்பது போல இறைவன் பாதுகாப்பான் என்பர். வடகலையார் இறையருளை மர்க்கட நியாயம் எனப்படும், குரங்குக்குட்டி தன் தாய்க்குரங்கைப் பற்றிக் கொண்டு இருப்பது போல இறைவனை தன் முயற்சியால் பற்றிக் கொள்ள வேண்டும் என்பர்.

பகவத் கிருபை நிர்ஹேதுகம் (காரணமற்றது) என்பது தென்கலை. சஹேதுகம் (காரணமுடையது) என்பது வடகலை.

பிரபத்தி உபாயமன்று என்பது தென்கலை. உபாயந்தான் என்பது வடகலை.

சேதனலாபம் ஈஸ்வரனுக்குப் பேறு என்பது தென்கலை, ஈஸ்வர லாபம் சேதனனுக்குப் பேறு என்பது வடகலை.

உபாயாந்தரங்களான கர்மஞான பக்திகள் ஸ்வரூப விருத்தங்களாகையாலே த்யாஜ்யங்கள் (கை விடத்தக்கன) என்பது தென்கலை. அவற்றைக் கைவிடலாகாது என்பது வடகலை.

பிராட்டிக்கு புருஷகாரத்துவமே (இரங்கிப் பரிந்துரை கூறல்) உள்ளது. எம்பெருமானே மோட்சம் அளிக்கும் ஆற்றல் உடையவன் என்பது தென்கலை. பிராட்டிக்கும் மோட்சம் தரும் ஆற்றல் உண்டு என்று கூறுவது வடகலை.

சிறந்த பகவத் பக்தர்களின் பெருமைக்கு ஜாதி, குலம் கூடாது. அதை ஆராய்வது தவறு என்பது தென்கலை. ஜாதி, குலம் பிறப்பால் உருவானது. அதுபோய்விடாது என்பது வடகலை.

இதுபோல சில கருத்து முரண்பாடுகள் உள்ளன. இல்லத்தில் இறைவனை வழிபடும்போது மணி வைத்துக் கொள்வர் வடகலையார். மணியடித்தல் தென்கலையில் இல்லை. திருமண் காப்பில் பாதம் வைப்பது தென்கலை. பாதமற்று இருப்பது வடகலை. இதுபோல புறச்சின்னத்திலும் சிறு வேறுபாடுகள் உள்ளன.

# 5. மடங்கள் வளர்த்த வைணவம்

இராமானுஜர் வைணவ தருமத்தைச் சீர்திருத்தி கோயில்களில் முறையான வழிபாட்டு நெறிகளை அமைத்து, கோயில் சொத்துக்களை பாதுகாக்கவும், வைணவ தத்துவக் கருத்துக்களைப் பரப்பவும், சிம்மாசனாதிபதிகளையும், ஜீயர்களையும் நியமித்தருளினார். அவருக்குப் பின் வேதாந்த தேசிகரும், மணவாள மாமுனிகளும் தரிசனப் பிரவர்த்தகர்களுள் சிறந்து விளங்கினர். பின் வைணவம் வடகலை, தென்கலை எனப் பிரிந்தது. திருமங்கை ஆழ்வார், கம்பர் போன்றோர் வடகலை, தென்கலை என்ற சொற்களை சமஸ்கிருதம், தமிழ் என்ற மொழியின் பெயராகவே பயன்படுத்தினர். பின்னர் இச்சொற்கள் வைணவத்தில் சமயத்தின் இரண்டு உட் பிரிவுகளுக்கான பெயராக வழங்கி வரலாயிற்று. இதன்பின் சமயத்தைக் காத்து, தத்துவ தரிசனத்தைப் பரப்புவதற்காக மடங்கள் ஏற்பட்டன. மடங்கள் முதன் முதலில் ஞான வேள்விக்குரிய இடங்களாகக் கருதப்பட்டன. ஜீயர்கள் நாடெங்கும் திரிந்து, தம் சீடர்கட்கு தரிசன விளக்க சொற்பொழிவுகளையும், உபந்யாச காலட்சேபங்களையும் செய்து, அவர்கள் தரும் காணிக்கைகளை ஏற்று மடத்தின் வருவாயை அதிகப்படுத்தினர். மன்னர்களும், ஜீயர்களின் மாண்புணர்ந்து பற்பல மானியங்கள் தந்தனர்.

தருமபுரம், திருவாவடுதுறை முதலிய சைவ மடங்களும், சிருங்கேரி, காஞ்சி, பூரி முதலிய அத்வைத மடங்களும், உடுப்பி, பெஷாவர் முதலிய மாத்வ மடங்களும், அகோபிலம், வானமாமலை முதலிய வைணவ மடங்களும் தம் தம் மதக் கருத்துக்களைப்

பரப்புவதற்கு ஆவன செய்து வந்தன. சைவ மடங்கள் அந்தணர்கள் அல்லாதாரை மடத் தலைவராக (பண்டார சன்னதிகள்) ஏற்றுக் கொண்டன. பிற மடங்கள் அந்தணர்களே மடாதிபதிகளாக (ஜீயர், சுவாமிகள்) அமைந்தனர். சங்கரர் உருவாக்கிய அத்வைத மடங்களில் பிரம்மச்சாரிகளே சன்னியாசிகளாகி மடத்தின் தலைவர்கள் ஆயினர். வைணவ மடங்களில் இல்லறத்தாரும் சன்னியாசம் பெற்று ஜீயர்கள் ஆகி மடத்தின் அதிபதிகளாக அமைந்தனர்.

அத்வைத சன்னியாசிகள் தம் கையில் ஏகதண்டம் (ஒற்றைக்கோல்) ஏந்தியிருப்பர். இது சத்வஸ்து ஒன்றே என்ற தம் கொள்கையின் புறவடிவம் ஆகலாம். வைணவ சன்னியாசிகள் திரிகண்டம் (முக்கோல்) ஏந்தி இருப்பர். இது விஸிஷ்டாத்வைத சித்தாந்தமான சத்வஸ்து மூன்று என்பதைப் பிரதிபலிப்பதாகவும் கொள்ளலாம். ★ சாங்கியர், துவைதிகள் முதலியோர் ஏக தண்டமே கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. முற்காலத்தில் பவுத்த, ஜைன மடங்கள் பல இருந்தன. இன்னும் சமண மடங்கள் உள்ளன. மடங்கள் தமது மதத்தைப் பாதுகாக்கும் நிறுவனங்களாக, பள்ளிகளாக இயங்கின. மதத் தலைவர்கள், சன்னியாசிகள் ஆண்களாகவே இருந்தனர்.

தமிழ்ச் சங்க காலத்திலேயே ''முக்கோல் பகவர்'' பற்றிய குறிப்புகள் உள்ளன. ஆசீவகர்கள் தான் முக்கோல் பகவர் என்றும், வைணவ சன்னியாசிகள் தான் முக்கோல் பகவர் என்றும் வேறுபாடுண்டு. முக்கோல் பகவர் என்பதற்கு நச்சினார்க்கினியர் அரி, அரன், அயன் எனும் திரிமூர்த்திகளின் ஒருமைப்பாட்டைக் குறிப்பதாகக் கருதினார்.

மடங்கள் தொன்மைக் காலத்திலிருந்தே இருந்தன. எனினும், சிறப்புடன், செல்வ வளத்துடன், கல்வி நலத்துடன் செழித்திருந்த மடங்கள் ஒரு சிலவே. வைணவ மடங்களில் தென்கலை மடங்களில் வானமாமலை மடம் சிறந்ததாகும். ஆழ்வார் திருநகரி உடையவர், கோவில் மடம், ஸ்ரீபெரும்புதூர் யதிராஜ ஜீயர் மடம், திருக்கோவிலூர் எம்பெருமானார் ஜீயர் மடம், திருக்குறுங்குடி மடம், திருப்பதி ஜீயர் மடம், திருமாலிருஞ்சோலை மடம் முதலிய மடங்கள் பிரசித்தமானவை. வடகலையார் மடங்களில்

★ முக்கோல் : எண்ணம், சொல், செயல் மூன்றையும் குறிப்பதாக மோனியர் வில்லியம்ஸ் கருதினார்.

அகோபிலமும், பரகால மடமும், ஸ்ரீரங்கம் ஆண்டவன் மடம் பிரபலமானவை. ஆந்திர நாட்டில் குண்டூர் அருகில் நடகட்டிபாலம் சின்ன ஸ்ரீமந் நாராயண இராமானுஜ ஜீயர் சுவாமிகள் மடம் அண்மையில் ஏற்பட்டதாகும்.

## அகோபில மடம்

வைணவ மடங்களில் அகோபிலம் மிகப் பிரசித்தமானது. ஆந்திர நாட்டில் கர்நூல் மாவட்டம், நந்தியாலா ஊரிலிருந்து இருபத்தைந்து மைல் கிழக்கே மலைச்சரிவில் அகோபலம் உள்ளது. அகோபிலம் என்றும் கூறுவர். பிலம் என்பது குகை என்று பொருள் படும். பல குகைகள் அங்குள்ளதால் இப்பெயர் வந்ததெனக் கூறுவர். அகோபலம் என்ற சொல்லுக்கு மிகுந்த ஆற்றல் என்ற பொருள் கொண்டு, இறைவன் நமக்கு வலிமையான பாதுகாப்பு தருகிறான் என்ற கருத்தினை விளக்குவதாகக் கொள்வர். அகோபலம் - இயற்கை எழில் மிக்க மலையாகும். இந்த மலை கிழக்குத் தொடர்ச்சி மலையைச் சேர்ந்தது. இந்த மலை பாம்பு (ஆதி சேடன்) உருவில் அமைந்ததாக உருவகிப்பர். இந்தப் பாம்பின் தலை திருமலை என்றும், நடு உடல் அகோபலம் என்றும், ஸ்ரீசைலம் வால் என்றும் உருவகிப்பர்.

இங்கு ஒன்பது குகைகளிலும், ஒன்பது நரசிம்மஸ்வாமிகள் உள்ளனர். உக்ர நரசிம்மர், ஜ்வாலா நரசிம்மர், யோக நரசிம்மர் என்று பெயர்கள் வழங்கப்படுகின்றன. மாலோால. நரசிம்மர், வேடுவப் பெண்ணான செஞ்சுலட்சுமியை நரசிம்மர் காதலித்து மணமுடித்த கதை தெலுங்கு நாடோடி இலக்கியத்தில் பிரபலமானது. கல்யாண நரசிம்மர் எனப்படும் திருமால் செஞ்சுலட்சுமியை திருமணம் புரிந்த இக்கதை 'செஞ்சுலட்சுமி' என்று திரைப்படமாகவும் வந்ததுண்டு. மலையடிவாரத்திலிருந்து ஏழு மைல் தொலைவு நடந்து வருவர். தற்போது பஸ் வசதி உள்ளது. அகோபலம் கோவில் கலை அழகு மிக்க கோயில். விஜயநகர மன்னர்கள் பல மானியங்கள் தந்துள்ளனர். விலங்குகள் தொந்தரவு முன்பு இருந்தது. இரவில் யாரும் தங்குவதில்லை. கோயிலைச் சேர்ந்து அழகிய ஆறு ஓடுகிறது. ஆற்றின் இருபுறமும் செங்குத்தான மலைகள் கம்பீரமாக காட்சியளிக்கின்றன. இந்த இடத்தில் இருந்த நரசிம்மர் பிரதாபருத்திர மன்னனுக்குக் காட்சி தந்து கோயில் கட்டப் பணித்ததாக ஐதீகம்.

பிரதாப ருத்திரன் சைவனாக இருந்தான் என்றும், தினந்தோறும் பொன்னை உருக்கி லிங்கம் செய்து பூசித்து வந்தான் என்றும், அவன் வேட்டையாட இந்தப் பகுதிக்கு வரும்போது, பொன் உருகாமல் சிவலிங்கமாகாமல் இருந்ததாகவும், நரசிம்ம சுவாமி காட்சி தந்து தம் இருப்பிடம் இது என்று காட்டி கோயில் கட்டச் செய்ததாகவும் ஒரு கதை வழங்குகிறது.

''திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் முதற்பத்தில் ஏழாந் திருமொழியில் 'சிங்கவேள் குன்றமாகிய' இந்த அகோபிலத்தைத் தரிசித்து மங்களாசாசனம் செய்தருளினார்.''

*"எவ்வம் வெவ்வேல் பொன் பெயரோன் ஏதலனின்னுயிரை*
*வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம்*
*கவ்வு நாயும் கழுகும் உச்சிப் போதொடு கால் சுழன்று*
*தெய்வமல்லால் செல்ல வொண்ணாத சிங்கவேள் குன்றமே"*

*"முனைத்த சீற்றம் விண்சுடப் போய் மூவுலகும் பிறவும்*
*அனைத்துமஞ்ச வாளரியாய் இருந்தவம்மான திடம்*
*கனைத்ததீயும் கல்லுமல்லா வில்லுடை வேடருமாய்*
*திணைத்தனையும் செல்லவொண்ணாச் சிங்கவேள் குன்றமே"*

என்று மங்கைமன்னன் கூறியபடி செல்லவொண்ணாத மலைக் காட்டில் அகோபிலம் இருந்திருக்கிறது. ஜுவாலா நரசிம்மர் இருக்குமிடம் மிகவும் பயங்கரமான இடமாக இருந்திருக்கிறது. அங்குள்ள குகைக்குள் சென்றவர்கள் திரும்ப மாட்டார்கள் என்பது ஐதீகம். திருமங்கை மன்னன் சிங்கவேள் குன்ற நரசிம்மரைக் காண இயலாது வழிதெரியாது திகைத்து வாடி வருந்தியபோது இறைவனே வேடனாக வந்து வழிகாட்டினான் என்பர்.

அஹோபல நரசிம்மரையே தெலுங்குக் கவிஞர்கள் வணங்கி அருள் பெற்றனர். திருமலை வெங்கடேசுவரரைவிட நரசிம்மரே தெலுங்கு மக்களின் இஷ்ட தெய்வமாக இருந்ததாகத் தெரிகிறது. எர்ராபிரகட முதலிய கவிஞர்கள் நரசிம்மரையே வணங்கினர்.

தற்போது அகோபலம் மலைக் கோவிலில் குகையில் உள்ள நரசிம்மர் மற்றும் சற்றுத் தொலைவில் உள்ள சிறு சிறு குகைகளில் உக்ர, யோக, கல்யாம நரசிம்மர்கள் விக்கிரகங்கள் உள்ளன. பிரதானமான கோவிலில் முன் பாதாள சுரங்க குகை இருந்ததாகவும்,

அதனுள் ஏழாவது ஜீயர் சுவாமிகள் சென்று அங்கேயே ஐக்கியமாகி விட்டதாகவும், அந்தப் பாதாளக் குகை மூடப்பட்டு விட்டதாகவும் கூறுகின்றனர். மூடப்பட்டுள்ளது போல ஒரு கற்பாறை செதுக்கப் பட்டுள்ளதை இன்றும் காணலாம். முதல் ஜீயரான ஆதிவண்சடகோபர் நரசிம்மரை சேவிக்க வந்தபோது நரசிம்மர் இந்த மடம் நிறுவும்படியாக காட்சி தந்து சிறு விக்கிரகமும் தந்து அருள் பாலித்ததாகக் கூறுகிறார்கள். மலைக்குக் கீழே அடிவாரத்தில் அகோபல நரசிம்ம சுவாமி கோயில் இருக்கிறது. இங்கு அற்புத சிற்ப வேலைப்பாடுடைய சிலைகளும், மண்டபமும் உள்ளது. கிருஷ்ணதேவராயரின் கற்சாசனங்கள் ஐந்தாறு காணப்படுகிறது. தெலுங்கு லிபியில் எழுதப்பட்ட இந்த சாசனங்கள் தமது உதயகிரி, கொண்ட வீடு விஜயத்தின்பின் இங்கு வந்து மானியம் தந்த செய்தியை விவரிக்கின்றன. நான்கடி அகலமும், ஏழு முதல் பத்தடி வரை உயரமும் உள்ள இந்த சாசனங்கள் வரலாற்று ஆய்வாளர்கட்கு நற்சான்றுகளாகத் திகழ்கின்றன. கோயில் அழகாக, பழமை யுடையதாக இருக்கிறது. எனினும் பராமரிப்பு போதவில்லை. ஊர் மிகச் சிறு கிராமம் ஆதலின் போதுமான பொலிவுடன் காணப்பட வில்லை. இந்தக் கோயிலின் மாண்புக்கேற்ற நிர்வாகம் காணப்பட வில்லை.

இங்கு அகோபல மடமும், சாதாரண கட்டடத்தில்தான் உள்ளது. சிறப்பான முறையில் இல்லை. வேதாந்த தேசிகருடைய சீடர் மரபில் வந்த திருநாராயணபுரத்து கிடாம்பி கேசவாச்சாரியரின் குமாரர் ஸ்ரீனிவாசாச்சாரியர். இவர் தம் இருபதாவது வயதில் சன்னியாசம் ஏற்றார். இவர் கி.பி. 1398ல் இந்த மடம் நிறுவினார். இவர் கடிகாசலம் அம்மாள் சீடர் ஆவார். இவர் காலத்தில் இந்த மடம் தென்கலை சம்பிரதாயமாகவே இருந்தது. இந்த ஜீயர் ஆழ்வார் திருநகரி வந்து ஆதிநாதப் பெருமாளுக்கும், சடகோபராகிய நம்மாழ்வாருக்கும் சன்னதிகள் கட்டி ஜீரணோத்தாரணங்கள் செய்து, 'ஆதி வண்சடகோபர்' என்ற பட்டம் பெற்றார். அழகிய சிங்கர் என்பது அகோபில மட ஜீயர்களின் மரபு வழிப் பெயராகும்.

ஆதிவண்சடகோபர் திருப்பதி - திருமலை கோயில்கட்கும் பல கைங்கரியங்கள் செய்தார். அன்னமாச்சாரியார், அலசானி பெத்தண்ணா போன்ற தெலுங்கு மாபெரும் கவிஞர்கட்கு குருவாக இருந்த பெருமை இவருக்குண்டு. விஜயநகர மன்னர்கள் இந்த மடத்திற்குப் பல மானியங்கள் தந்தனர்.

ஆதிவண்சடகோபர் தமிழகமும், ஆந்திர நாடும் முழுதும் சுற்றி வைணவம் பரப்பிய மகாமேதையாவார். நாராயண சரிதம், புருஷார்த்த சுதாநிதி, ஸம்ஸ்கார ரஹஸ்யத்ரயம் முதலிய நூல்கள் படைத்தார். அகோபல மடத்தின் முதல் ஜீயரான ஆதிவண் சடகோபர் ஆந்திர நாட்டில் வைணவம் பரவுவதற்கு முக்கியமான காரணகர்த்தராகத் திகழ்ந்தார் என்பதில் ஐயமில்லை.

இவருக்குப் பின் வந்த இரண்டாவது ஜீயர் அறுபது நூல்கள் எழுதிய அறிஞர். இவரும் வைணவம் பரப்ப சுற்றுப் பயணங்கள் செய்து வந்தார். இவர் 1458 முதல் 1473 வரை மடத்தில் ஜீயராக இருந்தார். மூன்றாவது ஜீயர் முதலாம் பராங்குசர் (1473-85) பல அக்கிரகாரங்களை உருவாக்கினார். நான்காவது ஜீயர் ஸ்ரீனிவாசர் (1485-93) வட நாடுகட்கும் சென்று, அங்கு வைணவ மதத்தை பரப்பிப் புகழ் பெற்றிலங்கினார். ஐந்தாவது ஜீயர் வண்சடகோபர் (1493 - 99) காலத்தில் தென்கலையிலிருந்து இந்த மடம் வடகலையாக மாறியது என்பர். இந்த ஜீயர் கிருஷ்ணா நதிக் கரையில் பயணத்தின்போது பரமபதமுற்றார். ஆறாவது ஜீயர் பராங்குச ஜீயர் காலத்தில் மடத்துக்கு அதிகச் செல்வம் சேர்ந்தது. சதாசிவராயர் காலத்தவர். முஸ்லீம் படையெடுப்புக்களைச் சமாளித்து இந்தக் கோயிலைக் காத்த விஜய நகர மன்னர்கள் பல அறக்கட்டளைகள் நிறுவினர். இந்த ஜீயர் அகோபில கோயில் பாதாளக் குகையில் சென்று அங்கேயே சமாதியுற்றார் எனப்படுகிறது. இவர், 'வாசந்திகாபரிணயம்' என்னும் நூல் இயற்றியுள்ளார். இவர் ஸ்ரீரங்கராயர் (1584-85) காலத்தவர். பூரி ஜகந்நாதத்தில் ஆழ்வார் விக்கிரகங்களை நிறுவினார். ஒரியாவில் முகுந்த ஹரிச்சந்திரன் எனும் மன்னன் அப்போது ஆண்டு வந்தான் எனத் தெரிகிறது. பின்னர் பதினான்காவது ஜீயர் (கி.பி. 1676-89), 'ஆச்சர்யகுணாதர்சம்' எனும் நூல் வடமொழியில் இயற்றியுள்ளார். பதினாறாவது ஜீயர் கேசவசடகோப ஸ்வாமி (1694-98) திருவாய் மொழிக்கு பதினெட்டாயிரப்படி வியாக்கியானம் வரைந்துள்ளார். பெரும்பாலும் ஜீயர்கள் இந்திய நாடு முழுவதும் சுற்றி வந்து வைணவ மதத்தைப் பரப்பி வந்தனர். அகோபிலம் பெருங்காடாக இருந்தமையால் அவர்கள் சாதுர்மாஸ்ய விரதங்கள்கூட தமிழகத்தின் பிரபல ஊர்களிலும், வடநாட்டு யாத்திரை ஸ்தலங்களிலும் இருந்தன. இருபத்தெட்டாவது ஜீயர் ரங்கநாதர் (கி.பி. 1883-36) சீடர்களால் புலமை தெரிந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர். இருபத்தொன்பதாவது ஜீயர் இயற்றிய சுப்பிரபாதம் பாடி, தினந்தோறும் மடத்தில் ஓதப்படுகிறது. முப்பத்தொன்றாவது ஜீயர் முதல் முப்பத்தாறாவது ஜீயர் வரை அகோபில மட தலைமைக் காரியாலயம் திருவள்ளூரில்

அமைந்தது. முப்பத்தெட்டாவது ஜீயர் ஸ்ரீனிவாச சுவாமிகள் கி.பி. 1905-1909 வரை இருந்தார். வடநாட்டிலிருந்து வந்த பால முகுந்தாச்சாரியார் இவரது சீடராகி இராஜபுதனத்தில் பேஷ்காரில் உத்தர அகோபில மடம் என்று ஒரு நிறுவனம் நிறுவினார். அகோபில மடத்தின் கிளைகள் திருவரங்கம் முதலிய இடங்களிலும் இயங்குகின்றன. ஹைதராபாத், சென்னை முதலிய பெருநகரங்களிலும் அகோபில மட நிர்வாகக் கிளைகள் உள்ளன.

அகோபல மடத்தின் தற்போதுள்ள 44-வது ஜீயராகிய ஸ்ரீவண்சடகோபர் வேதாந்த தேசிக யதீந்திர மகாதேசிக சுவாமிகள் அகோபல மடத்தினை அபிவிருத்தி செய்து வருவதோடு திருவரங்கப் பெருநகரில் எம்பெருமானார் கோவில் இராஜகோபுரம் கட்டும் முயற்சியில் ஈடுபட்டு நிறைவேறி வருவது வைணவ உலகு மட்டுமன்றி இந்திய நாடு பாராட்டும் பெரும் பணியாகும். இம்மடத்தின் சார்பில் 1941 முதல் ஸ்ரீநரசிம்மபிரியா என்ற தமிழ் மாத இதழும், 1980 முதல் தெலுங்கு, ஆங்கில இதழும் தொடர்ந்து நடந்து வருகின்றன.

அகோபில மட ஜீயர்கள் மரபு கீழ்வருமாறு :

1. ஆதிவண்சடகோப யதீந்திர மகாதேசிகன்
2. நாராயண சடகோப யதீந்திர மகாதேசிகன் 1
3. பராங்குச சடகோப யதீந்திர மகாதேசிகன் 1
4. ஸ்ரீனிவாச சடகோப யதீந்திர மகாதேசிகன் 1
5. வண்சடகோப 2
6. ஷஷ்ட பராங்குச 2
7. சடகோப 3
8. பராங்குச 3
9. நாராயண 2
10. சடகோப 4
11. ஸ்ரீனிவாச 2
12. நாராயண 3
13. வீரராகவ 1
14. நாராயண 4
15. வீரராகவ 2
16. சடகோப 5
17. வீரராகவ 3
18. நாராயண 5
19. ஸ்ரீனிவாச 3

| | | |
|---|---|---|
| *20.* | *வீரராகவ* | *4* |
| *21.* | *பராங்குச* | *4* |
| *22.* | *நாராயண* | *6* |
| *23.* | *வீரராகவ* | *5* |
| *24.* | *பராங்குச* | *5* |
| *25.* | *ஸ்ரீனிவாச* | *5* |
| *26.* | *ரங்கநாத* | *1* |
| *27.* | *வீரராகவ* | *6* |
| *28.* | *ரங்கநாத* | *2* |
| *29.* | *பராங்குச* | *6* |
| *30.* | *ஸ்ரீனிவாச* | *5* |
| *31.* | *நாராயண* | *7* |
| *32.* | *வீரராகவ* | *7* |
| *33.* | *சடகோப* | *6* ★ |
| *34.* | *இராமானுஜ* | *1* |
| *35.* | *ரங்கநாத* | *3* |
| *36.* | *ஸ்ரீனிவாச* | *6* |
| *37.* | *வீரராகவ* | *8* |
| *38.* | *ஸ்ரீனிவாச* | *8* |
| *39.* | *பராங்குச* | *7* |
| *40.* | *ரங்கநாத* | *3* |
| *41.* | *லட்சுமி நரசிம்ம* | |
| *42.* | *ஸ்ரீரங்க சடகோப யதீந்திர மகாதேசிகன்* | |
| *43.* | *ஸ்ரீ சடகோபர்* | |
| *44.* | *ஸ்ரீவேதாந்த தேசிக யதீந்திர மகாதேசிகன்* | |

*அகோபல மட ஜீயர்கட்கு அழகிய சிங்கர் என்ற விருதுடன் அழைக்கப் பெறுவதுண்டு. பதினான்காம் நூற்றாண்டு முதல் அறுநூற்றாண்டுகளாக தமிழக - ஆந்திர வைணவத் தொடர்புகட்கு ஒரு பாலமாக அகோபல மடம் அமைந்துள்ளது. முதல் ஜீயரின் சீடர்களாக அன்னமாச்சாரியார், அலசானி பெத்தண்ண போன்ற தெலுங்கிலக்கியத்தின் மிகப் பெரும் கவிஞர்கள் திகழ்ந்துள்ளனர். இது தமிழ்நாட்டுக்கும் பெருமை சேர்க்கும் செய்தியாகும். அகோபில மட ஜீயர்கள் தமிழ்நாட்டிலிருந்து சென்ற அந்தணர்களேயாவர். இன்றும்கூட அகோபலம் கோவில் அர்ச்சகர்கள், மடத்தின் நிர்வாகிகள், பரிசாரகர்கள் அனைவருமே தமிழ்நாட்டு*

★ *அபிதான சிந்தாமணியில் முப்பத்து மூன்று பட்டம் வரை [illegible]ர்கள் திரல்பட தரப்பட்டுள்ளது.*

அந்தணர்களே. அகோபலம் கோவிலில் ஆழ்வார்கள், ஆண்டாள், இராமானுஜர் சன்னதிகள் உள்ளன. நித்தியானு சந்தானம், இராப்பத்து, பகல் பத்து உற்சவங்கள் நடைபெறுகின்றன. தமிழ் திவ்விய பிரபந்தம் ஆந்திர மண்ணின் உட்பகுதியில் இன்றும் ஒலித்துக் கொண்டு தமிழகத்துக்கும், தமிழ் மொழிக்கும் பெருமை சேர்க்கிறது.

### பரகால மடம்

வேதாந்த தேசிகரின் சீடராகிய பிரம்மதந்திர ஜீயர் கி.பி. 1360ல் காஞ்சியில் தொடங்கி, திருப்பதியில் சில காலம் இருந்து பின் மைசூர் அருகே மேல்கோட்டையில் நிலை பெற்று இருக்கிறது. பதினேழாம் நூற்றாண்டில் மைசூர் மன்னர் தேவராஜ உடையார் ஆதரவு தந்துள்ளார். அதற்கு முன்னைய மைசூர் மன்னர்கள் சிக்கதேவராஜ உடையார் முதலியவர்களும் இம்மடத்தின் சீடர்களாக இருந்துள்ளனர். பரகால மட ஜீயர்கள் ஆந்திர நாட்டில் வைணவம் பரப்பியவர்களில் முக்கியமானவர்கள் ஆவார்கள். கர்நூல், அனந்தப்பூர் மாவட்டங்களில் பரகால மடத்தின் சீடர்கள் உள்ளனர். வடகலை வைணவ மடங்களில் பரகால மடத்திற்கு சிறப்புண்டு. வடகலை பிரிவிற்கு இவர்களே அடிப்படைக் காரணம் என்பாரும் உண்டு. தமிழகத்திலும் இம்மடத்தின் சீடர்கள் பலர் உள்ளனர்.

### வானமாமலை மடம்

ஆந்திர நாட்டில் மிகுந்த செல்வாக்குடைய தென்கலை மடம் வானமாமலை மடம் ஆகும். இம்மடத்திற்குக் கிளைகளாக நெல்லூரிலும், நூஜிவீடுவிலும் மடங்கள் அமைந்துள்ளன. மணவாள மாமுனிகளின் சீடராகிய வானமாமலை இராமானுஜ ஜீயர் இம்மடத்தைத் தோற்றுவித்தார். இவரது வரலாறு, ''வரமங்கை முனி வைபவம்'' எனும் நூலில் விரிவாகக் காணலாம். இம்மடத்தார் வெளியிட்ட, 'ககனகிரி, முனீகுருபரம்பராபிரபாவம்' என்னும் நூலில் இந்த மட ஜீயர்கள் வரலாறுகள் விளக்கப்பட்டுள்ளன. ககனகிரி குருபரம்பராபிரபாவம் நூலில் முதல் ஜீயரின் வரலாறும், பின் வந்த ஜீயர்களின் வரலாறுகளும் மணிப் பிரவாளம் கலந்த தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளன. ககனகிரி என்பது வானமாமலை என்பதன் வடமொழிப் பெயராகும். வானமாமலையை தோதாத்திரி என்றும் வடமொழியில் வழங்குவர். வானமாமலை திருநெல்வேலி மாவட்டத்தில் நாங்குனேரியில் உள்ளது. இதற்கருகேயே மேற்கு மலைத் தொடர்ச் சாரலில் திருக்குறுங்குடியும் அமைந்துள்ளது.

வானமாமலை ஜீயர்கள் மரபு கீழ்வருமாறு :

1. வானமாமலை இராமானுஜ ஜீயர்
2. களஷூர் வரத முனிஸ்வாமி
3. செண்டலங்காரர் சுவாமி
4. அனைத்தழகும் கண்ட ரங்கப்ப சுவாமி
5. திம்மையங்கார் சுவாமி
6. எம்பெருமானார் சுவாமி
7. பெரிய திருவேங்கட சுவாமி
8. கோணப்ப சுவாமி
9. ரங்கப்ப சுவாமி
10. நடு திருவேங்கட சுவாமி
11. பெரிய தெய்வ நாயக சுவாமி
12. சின்ன தெய்வ நாயக சுவாமி
13. கூரத்தாழ்வான் சுவாமி
15. ஸ்ரீவத்ச சுவாமி
16. திருநகரி திருவேங்கட சுவாமி
17. கோயில் திருவேங்கட சுவாமி
18. பெரிய சடகோப இராமானுஜ சுவாமி
19. பெரிய பட்டர் பிரான் சுவாமி
20. கலியன் ராமானுஜ சுவாமி
21. மதுரகவி ராமானுஜ சுவாமி
22. யோகி ராமானுஜ சுவாமி
23. சின்ன சடகோப ராமானுஜ சுவாமி
24. சின்ன பட்டர் பிரான் சுவாமி
25. சின்ன கலியன் ராமானுஜ சுவாமி
26. ஸ்ரீவானமாமலை சின்ன மதுரகவி ராமானுஜ சுவாமி
27. சின்ன ராமானுஜ சுவாமி

தற்போதுள்ள ஜீயர் வட இந்திய யாத்திரையை முடித்துக் கொண்டு அண்மையில் வானமாமலைக்கு எழுந்தருளி தரிசனப் பிரவர்த்தகராகத் திகழ்கிறார்.

ககனகிரி முனி சரிதத்தை, வானமாமலை முதல் ஜீயரின் ஞானபுத்திரர் என்று பிரசித்தி பெற்றவரும், மணவாள மாமுனிகள் சீடராகிய ராமானுஜன் பிள்ளான் எனும் அஷ்டதிக் கஜங்களில் ஒருவருடைய பேரராகிய சுந்தராச்சாரியர் வடமொழியில் சுலோகமாக செய்தருளினார்.

திருவரங்கத்தில் உள்ள முனித்திரய மடம் எனப்படும் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் மடம், குறுங்குடி மடம் முதலியன இன்றும் தமிழகம் மட்டுமன்றி, இந்திய நாடு முழுவதும் பிரசித்தியுடன் வைணவம் வளர்த்து வருகின்றது. மடங்கள் தத்துவ தரிசனத்தைக் கற்பிக்கும் கலாசாலைகளாகத் திகழ்ந்தன. குருகுல முறையில் அங்கேயே தங்கி வேத வேதாங்கங்களும், புராணேதிகாசங்களும், திவ்ய பிரபந்தம், ஈடு, ஸ்ரீபாஷ்யம் முதலிய தரிசன கிரந்தங்களும் கற்பிக்கப்பட்டன.

மடங்கள் தரிசனங்களை எல்லோரும் புரிந்து கொள்ளும் எளிய நடையில் வெளியிட்டுப் பிரச்சாரம் செய்ய வேண்டியது இன்றியமையாததாகும். சில நூல்கள் வெளியிட்டிருப்பினும், மிகக் குறைந்த அளவே வெளியிடப்பட்டுள்ளன. சடங்குகட்கும், திருவிழாக்களுக்கும் நடக்கும் ஆடம்பரச் செலவுகளைக் குறைத்துக் கொண்டு, வைணவ தருமத்தைப் பரப்பும் நூல்கள் அதிக அளவில் வெளியிட்டு எல்லோருக்கும் குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

மடங்களில் பல ஏட்டுச் சுவடிகள் இன்றும் உள்ளன. வைணவ மடங்களில் தெலுங்கு லிபியில் பல ஏட்டுச் சுவடிகள் இன்றும் உள்ளன. அவற்றைத் தக்க அறிஞர்கள் மூலம் பார்வையிடச் செய்து வெளிவராத புதிய நூல்கள் இருப்பின் அதை வெளியிடச் செய்ய வேண்டும். மடம் சம்பந்தப்பட்ட நிர்வாகிகட்கு தகுந்த ஊதியம் அளித்தும், தக்க ஆசிரியர்களை நியமித்தும், மரபு வழிப்பட்ட பண்பாடுகளைப் பாதுகாக்கும் வகையில் வடமொழி, தென்மொழி, தெலுங்கு ஆகிய மொழிகளில் உள்ள சிறந்த வைணவ கிரந்தங்களைப் பயிற்றுவித்தும், ஆய்வுகள் செய்து நூல்கள் எழுதுவித்தும் வைணவ தருமம் இன்னும் சிறப்புடன் அனைவரும் அறிந்துகொள்ள வகை செய்ய வேண்டும்.

# ௬. மணிப்பிரவாளமும் தெலுங்கு லிபியும்

வைணவத்தோடு நெருங்கிய தொடர்புடையது மணிப்பிரவாள மொழியும், மணிப்பிரவாள நூல்களை தெலுங்கு எழுத்தில் வெளியிடப்பட்டுள்ளதுமாகும். இது ஆந்திர, தமிழக வைணவத் தொடர்புக்கு நல்லதொரு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

மணியும் பவளமும் கோத்தாற்போல தென்மொழியும், வடமொழியும் இணைந்த நடையே மணிப்பிரவாளம் எனப்படுகிறது. மணிமிடை பவளம் என்பது சங்க இலக்கியமாகிய அகநானூற்றின் ஒரு பகுதிக்குப் பெயர். அந்த நூல் தொகுப்பு முறை நோக்கி அப்பெயர் வந்திருக்கலாம். மணிப்பிரவாளம் சொல்லாக்கங் கருதி வந்த பெயர்.

மணிப்பிரவாள நடை மலையாள நாட்டிலும், தமிழகத்திலும் பயன்படுத்தப்பட்டது. தமிழ்நாட்டினைவிட மலையாள நாட்டில் மணிப்பிரவாளம் அதிகம் செல்வாக்கைப் பெற்று மணிப்பிரவாள காவியங்களும் உருவாகியுள்ளன. மணிப்பிரவாள இலக்கண நூலாகவே 'லீலாதிலகம்' பதினான்காம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. தமிழில் வீரசோழியமும் மணிப்பிரவாள விதிகள் சில கூறிச் செல்கிறது. தமிழ், தெலுங்கு, கன்னட மொழிகளில் வடமொழிச் சொற்கள் கலந்தாலும், வடமொழி வேற்றுமை உருபுகள், சர்வ நாமங்கள், விபக்திகள், உபசர்க்கங்கள் முதலிய உருபுகள் இல்லாமல் தத்தம் மொழி மரபுக்கேற்பவே கலக்கும்.

தமிழக மணிப்பிரவாள நடையும் அப்படியே உள்ளது. ஆனால், மலையாளத்தில் மட்டும் எந்த ஒரு வரன் முறையுமின்றி வடமொழிச் சொல்லாக்கங்களும், உருபுகளும் தடையின்றி வந்து கலக்கும். உரைநடை நூல்களில் மட்டுமன்றி செய்யுட்களிலும் கூட வடமொழி உருபுகள், உபசர்க்கங்கள் கலந்து வரும்.

மே - எனக்கு, மம - என்னுடைய அஸ்மின் - இந்த தஸ்மின் - அந்த அபி, வை, து, ச முதலிய உபசர்க்கங்கள் மலையாள நாட்டு மணிப்பிரவாளம் மட்டுமே ஏற்கும். மணிப்பிரவாளம் சமணரிடமிருந்து தமிழகத்துக்கு வந்ததாகக் கருதுவர். நீலகேசி உரையாசிரியராகிய சமய திவாகர வாமன முனிவர் முதல் மணிப்பிரவாள உரையாசிரியராவார். சமண மத நூலாகிய நீலகேசி உரையாசிரியருக்கு, அவருக்கு முன்பிருந்த மணிப்பிரவாள நடையின் தாக்கம் இருந்திருக்கலாம். எட்டாம் நூற்றாண்டில் ஷட்கண்டாகமத்துக்கு உரையாய 'ஜயதவள'வில் ஜினசேனரும், 'தவள' உரையாசிரியர் வீரசேனரும், சமஸ்கிருதமும், பிராகிருதமும் கலந்த நடையை மணிப்பிரவாளமாக பயின்றனர்.

'ஸ்ரீபுராணம்' முதலிய பல நூல்கள் சமணர்களால் மணிப்பிரவாளத்தில் இயற்றப்பட்டன. தோலன் எனும் மலையாள கவி மணிப்பிரவாள காவியம் ஒன்று ஒன்பதாம் நூற்றாண்டில் இயற்றியுள்ளார். ★

வீரசோழியத்தில் அலங்காரபடலம் 40 பாடலில்,

**இடையே வடவெழுத்தெய்தில் விரவிய லீண்டெதுகை சொல்லின்**
**நடையேது மில்லா மணிப்பிரவாள நற்றெய்வச் சொல்லின்**
**இடையே முடியும் பதமுடைத்தாய் கிளவிக் கவியின்**
**தொடையே துறைநற் பிரளிகையாதி துணிந்தறியே**

**- வீரசோழியம் 180**

என்று கூறப்பட்டுள்ளது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பால்குரிசி சோமநாதர் (தெலுங்குக் கவிஞர்) தமது விருஷாதிப சதகத்தில், மணிப்

★ [illegible]ணிப்பிரவாள பாஷ: டி. கோதண்ட ராமையா பாரதி தெலுங்கு இதழ், 1973, ஜனவரி.

பிரவாளப் பாடல்கள் நான்கை இயற்றியுள்ளார். தமிழிலும் ஒரு பாடல் இதில் உண்டு. மணிப் பிரவாளப் பாடல் இது.

*அனயமு சேதுலந்து ப'வ தங்க்ரி சரோஜயுகம்*
*நமாமி நெம்*
*மனமுன லெம்ஸ் மராமி யனு மாடல*
*நின் வரிவஸ் கரோம் யஹம்*
*மனுசு மணிப் ரவாள முன ணம்கவ*
*சேயுது பிக்த' லோகஹ்ருத்'*
*வனஜ விஹார லோல! ப' ஸ வா! ப'ஸவா!*
*ப'ஸவா! வ்ருஷா தி'பா!*

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த பார்ஸ்வ பண்டிதன் எனும் சமணக் கவிஞர் கன்னடத்தில் பார்ஸ்வநாத புராணம் இயற்றியவர். அவர் தம் நூலில் தம் குருவை வணங்கும் வகையில் ஒரு கந்த பத்தியம் இயற்றியுள்ளார்.

*வாஸ்தவ ப'க்தி யுதம் ரூ*
*பஸ்தவன மணிப்ரவாளமும் ஜினநாதஸ்*
*தாஸ்தவ நம ணொத'பு'வ*
*னஸ்துதநா த'க்'க'ளம் க'க்'க'ள ரொளரே*

என்ற பாடல் மூலம் அக்களன் என்ற சமணக் கவிஞர் 'ரூபஸ்தவம்' எனும் மணிப்பிரவாள காவியம் இயற்றியுள்ளார் என்று தெரிகிறது.

ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளில் பிராகிருத மொழி அபப் பிரம்ச மொழியாகத் திரிந்தது. அந்தக் காலத்தில் பிரதேச மொழிகள் தனித்தன்மையுடன் வளம்பெறத் தொடங்கின. ஆதலின், வடமொழியை மட்டும் கையாளாமல் வடமொழியுடன் தத்தமது தாய் மொழியாகிய பிரதேச மொழிகளையும் கையாளும் ஒரு புதிய நடை உருவாகியது. அதன் விளைவாக மக்கள் மொழியில் இலக்கியம் படைத்து, தமது மதக் கருத்தைப் பரப்புவதில் ஆர்வமுடனிருந்த சமண மதம் முதலில் இந்த நடையை ஏற்றுக் கொண்டு பரப்பத் தொடங்கியது. இதனை முதலில் செந்தமிழில் ஆர்வம் மிக்க திருஞானசம்பந்தர் முதலிய சைவ ஆச்சாரியர்கள் ஏற்கவில்லை. திருஞானசம்பந்தர் தேவாரத்தில் திருவாலவாய்ப் பதிகத்தில், ''ஆகமத்தொடு மந்திரங்களமைந்த சங்கத பங்கமாம்

பாகதம்'' என்று சங்கதமாகிய சமஸ்கிருதத்தை பங்கப்படுத்துகிற சமணர்களைத் தாக்கியுள்ளார்.

பின் வந்த சைவ ஆச்சாரியர்களும், மெய்கண்டார், அருணந்தி சிவம் முதலியவர்களோ, திருவாவடுதுறை ஆதீனகர்த்தர்களோ, சிவஞான முனிவரோ, மணிப்பிரவாள நடையை ஏற்கவில்லை என்பது தெளிவு. திராவிட மாடியத்தில் வடமொழி மேற்கோள்கள் பலவரினும்கூட மணிப்பிரவாள நடை வரவில்லை என்பது தெளிவு.

சைவர்கள் ஏற்றுக் கொள்ளாவிடினும், வைணவ ஆச்சாரியர்கள் மணிப்பிரவாள நடையை விழைந்தேற்றுக் கொண்டார்கள். வடமொழி வேதங்கள், தென்மொழி பிரபந்தங்கள் இரண்டையும் உபய வேதாந்தங்களாக ஏற்றுக்கொண்ட வைணவ ஆசாரியர்கள், வடமொழியையும், தமிழையும் சமமாகவே மதித்து வந்தனர். இருமொழிப் புலமை மிக்க மரபினர்கட்கு இயல்பாகவே மணிப்பிரவாள நடை கைவருவது எளிதேயாகும். மணிப்பிரவாளத்தில் பெரும்பாலும் உரைநடை நூல்களும், விளக்க உரைகளும் இயற்றப்பட்டன.

திருக்குருகைப் பிரான் பிள்ளான் 'ஆறாயிரப்படி' எனும் திருவாய்மொழி வியாக்கியானமே முதல் வைணவ மணிப்பிரவாள நூலாகும். பின்னர் பராசர பட்டர் திருமங்கை ஆழ்வாரின் திருநெடுந்தாண்டக வியாக்கியானம், நஞ்சீயரின் ஒன்பதாயிரப்படி, திருப்பாவை வியாக்கியானம், முதலாழ்வார்களின் அந்தாதிகள், கண்ணிநுன் சிறுத்தாம்பு ஆகிய வியாக்கியானங்கள், நம்பிள்ளையின் 'ஈடு', வடக்குத் திருவீதிப் பிள்ளை ஈடு முப்பத்தாறாயிரப்படி, பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியான கிரந்தங்களும், ரகசிய கிரந்தங்களும், பிள்ளை லோகாச்சாரியரின் இரகசிய கிரந்தங்கள், அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் திருப்பாவை வியாக்கியானம், அமலனாதிபிரான், கண்ணிநுன் சிறுத்தாம்பு வியாக்கியானங்கள், திருவாய்மொழிப் பிள்ளையின் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம், வேதாந்த தேசிகரின் பரமதபங்கம், ரஹஸ்யத்ரய சாரம் முதலிய ரகசிய கிரந்தங்கள், பின்பழகிய பெருமாள் ஜீயரின் ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம், வார்த்தாமாலை மற்றும் அழகிய மணவாள நாயனாரின் ஆசார்ய ஹ்ருதயம், மணவாள மாமுனிகளின் திருவாராதனக் கிரமம் முதலிய

பல மணிப்பிரவாள நூல்கள் வைணவாசாரியர்களால் அருளப்பட்டுள்ளன. ★ இப்பரந்துபட்ட மணிப்பிரவாள இலக்கியச் செழுமை வைணவத்துக்கும், மணிப்பிரவாளத்துக்கும் உள்ள உறவை தெள்ளிதின் புலப்படுத்துகிறது.

மணிப்பிரவாள நூல்கள் தமிழ் எழுத்துடன் கிரந்த லிபியையும் பயன்படுத்தி எழுதப்பட்டு வந்தன. கிரந்தம் என்ற சொல் தொகுக்கப்பட்டது என்ற கருத்தில் நூல்களைக் குறித்தது. நூல்கள் எழுதப்படுவதால் அது பின் எழுத்துக்கும் அப்பெயரே நிலைபெற்றுவிட்டது. ''எழுத்தறியத் தீரும் இழிதகைமை'' என்னுமிடத்தில் எழுத்து என்பது எழுத்தாலான நூல்களை (இலக்கியத்தை)க் குறிப்பது போல, நூல்களைக் குறிக்க வடமொழியில் கிரந்தம் என்ற சொல் பயன்பட்டது.

கிரந்தம் தமிழ்நாட்டில் (மலையாள நாடு உட்பட்ட தமிழகம்) வாழும் அறிஞர்கள் வடமொழியை எழுதுவதற்கு ஏற்படுத்திய எழுத்து வகையாகும். வடமொழியை வட இந்தியாவில் தேவநாகரி லிபியிலும், ஆந்திர, கன்னட நாடுகளில் தெலுங்கு எழுத்திலும், தமிழ், மலையாள நாட்டினர் கிரந்த எழுத்திலும் எழுதி வந்தனர். இந்திய மொழிகள் அனைத்திலுமே உள்ள எழுத்துக்கள் யாவும் அசோகன் கற்சாசனங்களில் காணப்பட்ட பிராம்மி, கரோட்டி எழுத்துக்களிலிருந்தே தோன்றியவை என்பது அறிஞர்கள் கண்ட முடிவாகும். தமிழகத்தில் உருவான கிரந்த எழுத்து கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக் காலத்திலிருந்தே வழங்கி வந்திருக்க வேண்டும். இன்றைய தமிழ் நெடுங்கணக்கு ஆகிய எழுத்துக்களும், மலையாள எழுத்துக்களும் கிரந்த எழுத்தோடு தொடர்புடையனவே. தமிழ் எழுத்திலிருந்து கிரந்த எழுத்து பிற்காலத்தில் உருவாகி, வேண்டிய வடமொழிக்குரிய புதிய எழுத்துக்களை ஏற்றுக்கொண்டதா? அல்லது வடமொழி எழுதப் பயன்பட்ட கிரந்த எழுத்துக்களிலிருந்து தமிழ் சொற்கட்கு வேண்டாத மிகை எழுத்துக்களை விலக்கி விட்டு இன்றைய தமிழ் எழுத்து உருவானதா என்பது ஆழ்ந்து சிந்தித்து ஆராய்ச்சி செய்து முடிவு கட்ட வேண்டிய ஒன்றாகும். வட்ட எழுத்து, கோலெழுத்து முதலிய பழைய தமிழ் எழுத்து வடிவங்கட்கும், இதற்குமுள்ள ஒற்றுமை, தொடர்பு, வேற்றுமைகளை நுணுகி ஆராய்தல் வேண்டும். தமிழகத்தில் சமணப் பள்ளிகளில் கிடைத்த

★ *The Manipravala Litereature of the Sri Vaisnava Acharyur Dr.K.K.A. Venkatachari, Ananthacharya Research Institute, Bombay 1978.*

பிராமி லிபிக் கல்வெட்டுக்கள், குடுமியான்மலைக் கல்வெட்டு, பிற்கால கல்வெட்டுக்கள் யாவும், கிரந்த லிபிக்கும், தமிழ் எழுத்துக்கும் உள்ள நெருங்கிய உறவை எடுத்துக் காட்டுகிறது. கிரந்த லிபி தெலுங்கு எழுத்துக்கும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதைக் கவனிக்க முடியும். ஆதலின் கிரந்த லிபி தொன்மையான ஒன்றே. ஏழாம் நூற்றாண்டுத் தமிழ், தெலுங்கு சாசனங்களில் அதன் தாக்கத்தைத் தெளிவாகக் காணமுடியும். வடமொழிக்குரிய கிரந்த எழுத்தையே மணிப்பிரவாள நூல்களிலும் கையாளப்படலாயிற்று என்பது இயல்பான பரிணாமமேயாகும். வட எழுத்துக்களைத் தவிர்த்து தற்சம தற்பவங்கள் உருவாகுமென தொல்காப்பியனார் விதி செய்துள்ளார்.

> "வடசொற் கிளவி வட எழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே"

என்று தொல்காப்பியர் கூறுவது வடவெழுத்து என்பது கிரந்த லிபியையும், எழுத்து என்பது தமிழ் எழுத்தையும் குறிப்பதால் இதன் பழமையை நாம் உணரலாம்.

இந்தக் கிரந்த லிபியை மணிப்பிரவாள நூலாசிரியர்கள் தாராளமாகப் பயன்படுத்தினர். தமிழ்நாட்டில் அந்தணர்களும், வடமொழி அறிஞர்களும் அண்மைக் காலம் வரையும் கிரந்த லிபி நூல்களையே விரும்பிப் பயின்று வந்தனர். இந்த ஐம்பதாண்டுக் காலமாக சிறுகச் சிறுக கிரந்த லிபி நூல்கள் மறையத் தொடங்கின. தேவநாகரி லிபியிலேயே படிக்கத் தொடங்கினர். அச்சுக் கூடங்கள் நாகரி லிபியைப் பயன்படுத்தினால் தமிழகம் மட்டுமின்றி இந்திய நாடு முழுவதும் அந்த நூல்களை விற்பனை செய்ய முடியும் என்பதாலும், கிரந்த லிபி நூல்கள் வரவரக் குறைந்து போயின. சென்னையிலும், ஸ்ரீரங்கத்திலும், காஞ்சியிலும் பல கிரந்த லிபி நூல்கள், வடமொழி இலக்கியமும், வைணவ தரிசன நூல்களும் வெளியிடப்பட்டன. அவை வரவரக் குறைந்து விட்டது. நாகர லிபி (இந்தி எழுத்து), சமஸ்கிருதம், ஹிந்தி, மராத்தி மூன்று மொழிகளும் ஒரே அச்சு வார்ப்பில் பயன்படவே அதற்குச் செல்வாக்கு ஓங்கியது. பிற வட இந்திய மொழிகளான குஜராத்தி, வங்காளி முதலிய நாகர லிலியிலிருந்து சிறிதே வறுபட்ட எழுத்தைப் பயன்படுத்தின. இவ்விதம் கிரந்த லிபியின் செல்வாக்கு குறையவே, வைணவ ரகசிய கிரந்தங்களும், வியாக்கியானங்களும் கிரந்த லிபியை எழுதுவதை

விடுத்து தெலுங்கு லிபியில் எழுதப்பட்டன. வைணவ ஆசாரியர்களும், அர்ச்சகர்களும், அந்தணர்களும், ஆந்திர நாட்டில் குடியேறி பல அக்கிரகாரங்களை உருவாக்கினர். முஸ்லீம் படையெடுப்புகள், வைணவத்திற்கு ஆந்திர நாடு அளித்த ஆதரவு ஆகியவற்றின் காரணமாக தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டிருந்த பல குடும்பங்கள் ஆந்திர நாட்டில் தங்கின. அங்கு தம் தாய்மொழியான தமிழையும், வைணவத் தத்துவ நூல்களுள்ளதும், ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் உள்ளதுமான தமிழையும் போற்றிப் பாதுகாத்து வந்தனர். அதற்கு முக்கியக் காரணம் வைணவ சம்பிரதாயம் தமிழகத்திலிருந்து சென்றதேயாகும். ஆதலின் ஆந்திர நாட்டில் குடியேறிய வைணவர்கள் மணிப்பிரவாள நூல்களையும், ஆழ்வாராதிகளுடைய திவ்யபிரபந்தங்களையும் தெலுங்கு எழுத்து மூலமே கற்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. தெலுங்கு நாட்டில் கிரந்த லிபி வழக்கிலில்லாததாலும், தெலுங்கு லிபி மணிப்பிரவாள நடைக்கேற்ற வகையில் அமைந்ததாலும், தெலுங்கு எழுத்துக் களையே பயன்படுத்தலாயினர். அச்சுக்கலை வளராத பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் ஏட்டுச் சுவடிகளாக எழுதி வைத்துக்கொண்டு கற்றும், கற்பித்தும் வந்தனர்.

தமிழ்நாட்டிலிருந்து ஆந்திர நாட்டுக்குக் குடிபெயர்ந்த இந்த வைணவ அந்தணர்களும், ஆசாரியர்களும் மீண்டும் தமிழகத்துக்கும் குடும்பங்களாக வந்தனர். இவர்களோடு தெலுங்கைத் தாய்மொழி ஆகக் கொண்டவர்களும் சேர்ந்து கொண்டனர். இப்படி வந்தவர்கள் தமிழை மட்டுமன்றி தெலுங்கு எழுத்தையும் இயல்பாகவே கைவரப் பெற்றவர்கள் ஆனார்கள். தமிழகம் வந்தபின் தெலுங்கு மொழியை மறந்து விடினும்கூட தெலுங்கு எழுத்தை மறவாது பயன்படுத்தி வந்தார்கள். தாய்மொழி தமிழாக உடைய தெலுங்கு நாட்டில் வாழ்பவர்களும், தமிழ்நாட்டில் தெலுங்கைத் தாய்மொழியாக உடையவர்களும், தமிழே தாய்மொழியாக உடையவர்களும் ஆகிய வைணவர்கள் தெலுங்கு லிபியைப் போற்றிப் பாதுகாத்து வந்தனர். முக்கியமாக வைணவத் திருத்தலங்களில் வாழும் அந்தணர்களில் பெரும்பாலோருக்கு தெலுங்கு எழுத்து தெரிந்திருந்தது. திவ்விய தேசங்களுக்கு ஆந்திர நாட்டு பக்தர்கள் அடிக்கடி வருவதாலும், தஞ்சை, மதுரை நாயக்க மன்னர்கள் காலத்தில் தெலுங்கு மொழிக்கு ஓர் உயர்ந்த அந்தஸ்து இருந்த காரணத்தாலும், தெலுங்கு லிபி தென் மாவட்டங்களில் நன்கு பரவி இருந்தது.

ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகளாகவே இப்படி தெலுங்கு எழுத்தில் மணிப்பிரவாள நூல்களையும், திவ்யப் பிரபந்தமும், உரைகளும் எழுதப்பட்டு வந்தன. இந்த நூல்கள் ஒரு நூற்றாண்டாக அச்சிடப்பட்டும் வருகிறது. திருவாய்மொழி வியாக்கியானங்கள் அனைத்தும் தெலுங்கு எழுத்திலேயே அச்சிடப்பட்டுள்ளன. பிள்ளை லோகாச்சாரியார் நூல்களும், வார்த்தாமாலை, குருபரம்பரா பிரபாவம் முதலிய நூல்களும் இவ்விதம் அச்சிடப்பட்டு வழங்கி வருகிறது. சென்னை, காஞ்சிபுரத்திலிருந்து இந்த நூல்கள் நூறாண்டுகட்கு முன்பே வெளிவந்தன. அதன் பழைய அச்சுப் பிரதிகள் அருகியே காணப்படுகிறது. திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் தி.கு.வெம்.ந. சுதர்சனாச்சாரியரால் பதிப்பித்து 1953ல் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய கிரந்தமாலை என்ற தொடரில் முதலில் பிள்ளை லோகாச்சாரியரின் அஷ்டாதச ரகசியங்களை இரண்டு பாகமாக வெளியிட்டனர். பின் திருப்பாவை, ஆழ்வார்களின் மங்களா சாசன பாசுரங்கள், நித்தியானு சந்தானம் முதலிய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டனர். தற்போது இந்த நூல்கள் தீர்ந்து போயிற்று. மீண்டும் இப்படிப்பட்ட நூல்களைப் பதிப்புக்கும் முயற்சி நடைபெறவில்லை. மீண்டும் பதிப்பித்தல வேண்டும். அது தெலுங்கு நாட்டில் உள்ள தமிழைத் தாய் மொழியாகக் கொண்டுள்ள வைணவர்கட்கு பேருதவியாக இருக்கும். காஞ்சிபுரத்திலிருந்து பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சார்ய சுவாமிகளும், இத்தகைய தெலுங்கு எழுத்தில் மணிப்பிரவாள சம்பிரதாய கிரந்தங்கள் பல வெளியிட்டுள்ளார்கள். தெலுங்கு எழுத்து தமிழ் ஒலிகட்கும், வடமொழி ஒலிகட்கும் ஏற்ப, உச்சாரணப் பிழையின்றி எழுத வசதியாக உள்ளது. ஆதலினால் தெலுங்கு எழுத்து நூல்களையே வைணவர்கள் விரும்பிப் படித்து வந்தனர்.

தமிழுக்கே சிறப்பான ழகரமும், றகரமும் தெலுங்கில் முன்பிருந்து பிற்காலத்தில் இல்லாமற் போயின. ழகரம் டகரமாகத் திரிந்தது. றகர ரகர பேதங்கள் நீங்கிவிட்டன. ஆதலின் ழகரமும் றகரமும் தமிழ் எழுத்தினையே இந்த நூல்களில் பயன்படுத்தி வருவது தனித்தன்மையுடையதாகும். ழகரமும், றகரமும் மட்டுமே ஏற்றுக் கொண்டாலும் அதனுடைய பிற உயிர்க் குறியீடுகள் கால், கொம்பு, சுழிகள் (ா, ெ, ை, ீ முதலிய) அடையாளங்கள் இந்த எழுத்துகட்கு ஏற்கவில்லை. ழகரத்தில் தெலுங்குக் குறியீடுகளை ஏற்றி வழங்கி வந்தனர். ழா, ழி, றி, றா, று என்பனவற்றை ழ¯, ழீ, றீ,

ற, றி என்று எழுதப்பட்டிருக்கும். ற், ழ் என்பன ற, ழ என்று குறிக்கப்படும். இவ்விதம் ழகர றகரங்கட்கு தெலுங்கு எழுத்துக் குறியீடுகளையே, தீர்க்கம், சுழி, கொம்மு முதலியன இணைத்து அச்சிட்டுள்ளனர்.

இந்த தெலுங்கு லிபி வைணவ சம்பிரதாய மணிப்பிரவாள, தமிழ் நூல்கள் தெலுங்கு நாட்டில் மட்டுமன்றி தமிழ்நாட்டிலும் விரும்பிப் படிக்கப்பட்டு வருகிறது. காஞ்சி, ஸ்ரீரங்கம், வானமாமலை முதலிய இடங்களில் இன்றுகூட இத்தகு நூல்களைப் படிக்கும் பயிற்சியுடையாளர்கள் உள்ளனர். ஸ்ரீரங்கத்தில் அண்மைக் காலம் வரை தெலுங்கு மொழி தெரியாவிடினும் இந்த நூல்களைக் கற்பிப்பதற்காகவே தெலுங்கு எழுத்தை வைணவர்கள் அனைவரும் கற்று வந்தனர். பிரசித்தமான சொற்பொழிவாளரும், கதாகாலட்சேப விற்பன்னருமாகிய எம்பார் விஜயராகவாச்சாரியார், வைணவ நூல்களை சிறப்புடன் வெளியிட்டு வரும், 'சுதர்சனம்' பத்திராதிபரும், அறிஞருமாகிய புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் முதலிய அறிஞர்கள், தாங்கள் தெலுங்கு எழுத்து சம்பிரதாய நூல்களையே கற்றுள்ளதாகவும், திருவரங்கத்தில் வைணவ சம்பிரதாயம் வல்லார் அனைவருமே தெலுங்கு எழுத்துப் பயிற்சி உடையவர்கள் என்றும், தெலுங்கு எழுத்து பரம்பரை வழக்கமாகவே படிப்பிக்கப்பட்டதாகவும், தெலுங்கு எழுத்து தெரியுமே தவிர தெலுங்கு மொழி பேசவோ, புரிந்து கொள்ளவோ தெரியாதவர்கள் பலர் உள்ளனர் என்றும் தெரிவித்தார்கள். வானமாமலையிலும் இவ்விதமே கூறுகிறார்கள். ஆதலின் வைணவத்தோடு மணிப் பிரவாளமும், தெலுங்கு எழுத்தும் நெருங்கிய உறவு பூண்டுள்ளது தெற்றென விளங்குகிறது. இது தமிழக வைணவம் ஆந்திர வைணவத்தோடு கொண்டுள்ள நெருங்கிய தொடர்புக்குச் சரியான சான்றாகும்.

திருப்புறம்பயம் இராமசாமி நாயுடு இயற்றிய வசன பூசன பிரமாணத்திரட்டு என்ற தமிழ் நூல் தெலுங்கு எழுத்தில் 1942ல் வெளியிடப்பட்டது. அதன் முன்னுரையில் முன்னாள் சென்னை மாநில அமைச்சராக இருந்த கத்தெ வெங்கடசாமி நாயுடு குறிப்பிடும்போது, ''தமிழ் நூலாயினும், தெலுங்கு லிபியில் இருந்தால் பலர்க்கும் பயன்படும் என்று வெளியிட்டுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார்.'' இதன் மூலம் தெலுங்கு எழுத்தில் வைணவ சித்தாந்த நூல்கள் ஆந்திர நாட்டினர்க்கு மட்டுமன்றி தமிழ்நாட்டு

வைணவர்கட்கும் பயன்படும் என்பதால் தமிழ்நாட்டு வைணவர்கள் தெலுங்கு எழுத்தைப் போற்றி வந்தது தெற்றென விளங்கும். ஒரு காலத்தில் தமிழக நாயக்க மன்னர் காலத்தில் ஆட்சி வட்டாரத்தில் இருந்த தெலுங்கு எழுத்துக்கள் அவர்கள் ஆட்சி மறைந்ததும் மறைந்து விட்டன. ஆனால், வைணவ சம்பிரதாயத்திலோ தெலுங்கு எழுத்துக்கள் அழியாமல் இன்றும் நீடு நிலவுகிறது. இது ஆந்திர தமிழக வைணவத் தொடர்பின் மிக முக்கியமானதென்பதில் ஐயமில்லை.

# 7. கோயில்கள்

நம் நாட்டுக் கோயில்கள் நமது பண்பாட்டின் நிலைக் கலனாகவும், பொதுமை நலம் பேணும் நிறுவனங்களாகவும் திகழ்ந்தன. நமது மன்னர்கள் தமக்கெனப் பெரிய மாளிகைகள் கட்டுவதைவிட இறைவனுக்குப் பெரிய கோயில் எழுப்புவதே சாலச் சிறந்ததென மதித்தனர். விலையுயர்ந்த மணிகள், நகைகள் இறைவனுக்கே சமர்ப்பித்தனர். விலை மதிக்க முடியாத கலைச் சிற்பங்களைக் கோயில்களில் உருவாக்கினர். தத்துவ ஞானத்தை உணர்த்தும் விரிவுரைகள் நிகழ்த்துவதற்காக பெரிய பெரிய மண்டபங்கள் எழுப்பபப்பட்டன. பல்வேறு மக்கள் ஒருங்கே கூடி கருத்துப் பரிமாற்றங்களைச் செய்யும் நிலையங்களாகத் திகழ்ந்தன. வெள்ளப்பெருக்கு, கடும் வறட்சி, பஞ்சம் முதலிய இயற்கையின் சீற்றங்களில் இருந்து சமுதாயத்தைப் பாதுகாக்கும் உறைவிட மாகவும், ஏழை எளியவர்கட்கு உண்டி தந்து காப்பாற்றும் அன்ன தானமாகவும், மருத்துவ நிலையமாகவும், மாண்புறு கலைக் கூடங்களாகவும் திகழ்ந்தன. பௌத்த விகாரங்கள், சமணப் பள்ளிகள் போலவே, இந்துமதக் கோயில்கள் தமது மதக் கருத்துக்களைப் பரப்பவும், பேணவும் ஏற்பட்ட நிலையங்களாகத் திகழ்ந்தன.

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சங்கரர், பல கோயில்கட்குச் சென்று வணக்க முறைகளைச் சீர்திருத்தியுள்ளார். ஆழ்வார்கள், நாயன்மார்களும் கோயில்கட்குச் சென்று மங்களாசாசனம் செய்து பரவி புகழுறச் செய்தனர்.

சங்க காலத்திலேயே, மதுரை, திருப்பரங்குன்றம், திருவரங்கம், திருமலை, காஞ்சி முதலிய பழமையான கோயில்களைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆந்திர நாட்டில் அகோபலம், ஸ்ரீசைலம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம், தக்ஷாராமம் முதலிய கோயில்கள் தொன்மையானவை.

வட இந்தியக் கோயில்களின் அமைப்புக்கும், தென்னிந்தியக் கோயில்கள் அமைப்பு முற்றிலும் வேறுபட்டவையாகும். குறிப்பாக தமிழகக் கோயில்கள் தனிச் சிறப்புடையவை. தமிழகத்தில் எங்கு நோக்கினும் வானளாவிய கோபுரங்களுடன் அழகிய தேர்களுடன் கோயில்கள் காட்சியளிக்கின்றன. பல்லவர்களின் குடைவரைக் கோயில்கள் மாமல்லபுரம் முதலிய இடங்களில் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் காணப்படுகிறது. சோழ, பாண்டிய மன்னர்கள் காலத்தில் இன்று காணும் பெரும்பாலான கோயில்கள் உருவாயின. நாயக்க மன்னர்கள் காலத்தில் பெரிய பெரிய பிரகாரங்களும், கோபுரங்களும் கட்டப்பட்டன. கோயில்களில் பொறிக்கப்பட்ட சாசனங்கள் நமது வரலாற்றுக்குப் பெரிதும் துணை புரிகின்றன. இச்சாசனங்கள் அரசாங்க தொல்பொருள் துறையினரால் ஆராய்ந்து வெளியிடப்பட்டுள்ளன. மரங்களைத் தொழுது காவல் மரங்களை நட்டு வழிபட்ட சங்க கால வழக்கமே கோயில்கள் ஏற்பட்ட பிறகும் ஸ்தல விருட்சங்களாக வணங்கும் வழக்கமாக உருப் பெற்றதாகத் தெரிகிறது. குகைக் கோயில்கள், கோயில்கள் பிற்காலத்தே உருவாயின. வைணவக் கோயில்கள் இவ்வகையில் உருவாகி, சமயப் பரப்புதலுக்கு முக்கிய உறைவிடங்களாயின. தென்னிந்தியக் கோயில்கள் (Temples of South India) என்ற கே.ஆர். ஸ்ரீனிவாசன் அவர்களின் நூல் நேஷனல் புக் ட்ரஸ்ட் 1972ல் வெளியிட்டுள்ளனர். கலைச் சிற்பங்கள் மிகுந்த பல கோயில்களைப் பற்றிச் சுருக்கமாக இந்நூல் விவரிக்கிறது. பேராசிரியர் ந. சுப்புரெட்டியார் அவர்கள், பாண்டிய நாட்டுத் திருப்பதிகள், தொண்டை நாட்டுத் திருப்பதிகள், மலைநாட்டுத் திருப்பதிகள், சோழ நடு நாட்டுத் திருப்பதிகள் என வைணவக் கோயில்களைப் பற்றிய சுருங்கிய கட்டுரைகளாக நூல்கள் படைத்துள்ளார். பெங்களூர் வழக்கறிஞர் ஜி.கே. பலிஜா என்பவர் நூற்றெட்டு திவ்ய தேசங்களில் பரமபதம், திருப்பாற்கடல், சாளக்கிரமம் மூன்றையும் தவிர்த்த எல்லா வைணவத் தலங்கட்கும் நேரில் சென்று ''நூற்றெட்டுத் திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரோதயம்'' என்றொரு நூலும், ம.கோ. பட்டாபிராம முதலியார்

அவர்கள், ''விஷ்ணுதல மஞ்சரி'' என்ற நூலும் 1950ம் ஆண்டையடுத்து வெளியிட்டுள்ளனர். திவ்ய தேசப் பிரபாவம் என்று மயிலை மாதவதாசன் அவர்கள் எந்தெந்தத் தலங்கள் எங்கெங்கு உள்ளது என்பதை விளக்கும் சிறு விவரம் அளித்து 1962ல் நாலாயிரத் திவ்ய பிரபந்தம் பதிப்பில் சேர்த்துள்ளார்.

பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதிச் செய்யுள் ஒன்று கூறுவதாவது :

ஈரிருபதாம் சோழம் ஈரொன்ப தாம் பாண்டி,
ஓர்பதின்மூன் றாம்மலைநாடு ஓரிரண்டாம் - சீர்நடுநாடு
ஆறோடீ ரெட்டு தொண்டை அவ்வடநாடு ஆறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

சோழ நாட்டில் நாற்பது ஸ்தலங்களும், பாண்டிய நாட்டில் பதினெட்டுத் தலங்களும், மலைநாட்டில் பதின்மூன்று ஸ்தலங்கலும், நடுநாட்டில் இரண்டும், தொண்டை நாட்டில் இருபத்திரண்டும், வடநாட்டில் பன்னிரண்டும், திருநாடாகிய வைகுந்தம் ஒன்றும் ஆக நூற்றெட்டுத் திருப்பதிகள் உள்ளன.

இவற்றுள் கடற்கரையில் ஏழும், காஞ்சிபுரத்தில் பதினான்கும், காவிரிக்கரையில் பன்னிரண்டும், மலைகள், மலைச் சரிவுகளில் பத்தொன்பதும், தமிழகத்திலுள்ள கோயில்கள். நவ திருப்பதிகள் என்று ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி, தொலைவிலி மங்கலம், திருக்குளந்தை முதலிய ஒன்பது தலங்களும் பிரபலமானவை.

கோயில் என்பது வைணவ மரபில் திருவரங்கத்தையே குறிக்கும். திருவரங்கம், காஞ்சிபுரம் எம்பெருமானார் கோயில், திருமலை வெங்கடேசுவரர் ஆகிய மூன்று கோவில்களும் தமிழகத்தில் மிக முக்கியமானவை. ஆந்திர நாட்டில் அகோபலம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் மிக முக்கியமானவை.

வானமாமலை கோயில் தலையில் பாவிய கற்களில் அண்மையில் அந்தக் கற்களை பாவிய தெலுங்கு பக்தர்கள் பெயர் தெலுங்கு எழுத்தில் உள்ளன. திருவரங்கம் தாயார் சன்னதியிலும், சுவாமி சன்னதிக்கருகிலும், தரையில் பாவிய கற்களிலும் தெலுங்கு

பக்தர்கள் தங்கள் பெயரை தெலுங்கில் பொறித்து வைத்துள்ளனர். அதுபோல திருவரங்கம் கோவிலில் இராம லட்சுமணர் சன்னதி, அனுமன் சன்னதி கோயில்களில் தெலுங்கு சாசனங்களும் உள்ளன.

திருவரங்கம் கோயில் வரலாற்றினை, 'கோயில் ஒழுகு' என்ற பழமையான நூல் விவரிக்கின்றது. இந்நூல் இராஜமஹேந்திர சோழன், திருமங்கை ஆழ்வார், குலோத்துங்க சோழன், சுந்தர பாண்டிய தேவர் முதலிய தமிழக மன்னர்கள், வீரநரசிங்க தேவர், கம்பய தண்ட நாயக்கர், வால நாதராயர் முதலிய ஆந்திர நாட்டு மன்னர்கள், சேனாதிபதிகள் செய்த திருப்பணிகளை விவரிக்கின்றது. நாதமுனிகள், இராமானுசர், பட்டர் முதலியோர் கோயில் நிர்வாகம் செய்த வரலாறு, பெரியாழ்வார் குமாரரின் மரபினரான உத்தம நம்பி மரபினர் வரலாறு, நாயக்க மன்னர்கள் கைங்கரியங்கள் முதலியவற்றை நன்கு விளக்கும் நூலாகும். டில்லி அரசன் மகள் திருமாலைக் காதலித்த வரலாறும், இராமானுசர் டில்லி சென்று செல்வப் பிள்ளையாரைக் கொணர்ந்த வரலாறும் கூறப்பட்டுள்ளது.

தற்போதும் திருவரங்கம் கோயிலில் சுவாமி கருவறைக்குக் கிழக்கே உள்ள மண்டபத்தில் வடக்குச் சுவரில், 'துலுக்க நாச்சியார்' சித்திரம் தீட்டப்பட்டுள்ளது. சுவாமிக்கு அதிகாலை பிராட்டியும், வெண்ணெயும் கைலி கட்டிக் கொண்டு பூசாரி நிவேதனம் செய்வதாகவும், அப்போது நடக்கும் முறைகள் மரபுக்கு முரண்பாடாக இருப்பதும், அது முஸ்லீம் சம்பிரதாயப்படி ஓர் இணைப்பு ஏற்பாட்டில் நடப்பதுபோல் இருப்பதாகவும் இவ்வழக்கம். ஒரு முஸ்லீம் அரசன் மகள் திருமாலை நேசித்து இங்கே வந்திருந்து இரண்டறக் கலந்துவிட்டதாகவும், அந்த மன்னன் அலாவுதீன் கில்ஜியாக இருக்கலாம் என்பதும், அவன் மகளே சுரதாணி என்று குறிப்பிடப்பட்டிருப்பவள் என்றும் கூறப்படுகிறது.

முஸ்லீம் மன்னர்கள் திருவரங்கத்தைப் படையெடுத்த பின் ஏற்பட்ட சமரச எண்ணத்தின் விளைவாக இந்து முஸ்லீம் ஒற்றுமையை வலியுறுத்த ஏற்பட்ட ஏற்பாடாகவும் இருக்கலாம். மேல் கோட்டை திரு நாராயண புரத்திலும், ஸ்ரீமுஷ்ணத்திலும் டில்லி அரசன் மகள் கதை வழங்கப்பட்டு வருகிறது.

திருவரங்கம், ஸ்ரீராமானுசர் முதலிய ஆசாரியர்கள் வாழ்ந்து, வைணவ தரிசனம் பரப்பிய ஸ்தலமாகையாலே ஆந்திர நாட்டு

பக்தர்கள் வந்து பல காணிக்கைகள் அர்ப்பணித்துள்ளார்கள். வங்காளத்தில் கிருஷ்ண பக்தி இயக்கத்தை வளர்த்த ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் கி.பி. 1250-ம் ஆண்டில் திருவரங்கம் வந்து ஒரு மாத காலம் தங்கிச் சென்றார். அவரது பாத சின்னங்கள் கோயிலுக்கு புகுமுன் ஒரு மண்டபம் கட்டி அதில் வைத்துள்ளனர்.

தற்போது அகோபல மடம் ஜீயர் சுவாமிகள் இராஜகோபுரம் கட்டி வருவதும், அது முடிக்கும் தருவாயில் இருப்பதும் ஒரு பெரிய சாதனையே ஆகும்.

''நகரேஷு காஞ்சி'' என்று பவபூதியால் பாராட்டப்பட்ட பல்லவ மன்னர்களின் தலைநகராகத் திகழ்ந்த காஞ்சிபுரம் முன்காலத்தில் ஞானக் களஞ்சியமாகத் திகழ்ந்தது. இங்கு ஆந்திர அறிஞர்களும், தமிழக அறிஞர்களும் ஒருங்கிணைந்து தத்துவ ஞான வேள்வியாற்றினர். காஞ்சி வரதராஜர் கோயில் வைணவர்கட்கு பிரசித்தமான கோயில். இங்கு இராமானுசர் சிலகாலம் வாழ்ந்து தம் அறிவைப் பெருக்கிக் கொண்டார். பிரதிவாதி பயங்கரம் அண்ணரங்காச்சாரியார் காஞ்சியிலிருந்து கொண்டு தமிழிலிலும், தெலுங்கு மொழியிலும் வைணவ சமய நூல்களை வெளியிட்டு வந்தார். தெலுங்கிலும் சொற்பொழிவாற்றினார்கள். ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் தொடர்புடைய கோயில் திருப்பதி திருமலை, திருவேங்கடவன் கோயில் ஆகும். இக்கோயிலின் வரலாறு, 'திருமலை ஒழுகு' என்ற பழைய நூல் தெரிவிக்கிறது. இந்நூல் திருப்பதி தேவஸ்தானத்தாரால் 1953ம் ஆண்டு பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.

முதலாழ்வார்களாலும், பிற ஆழ்வார்களாலும் மங்களா சாசனம் செய்யப்பட்ட பெருமையுடைய திருமலை வேங்கடவன் கோயில் ருக்வேத காலத்திலேயே பிரசித்தமானது என்று கூறுவர்.

*அராயி கானே விகடேகி' ரிம் க'ச்ச சதான்வே*
*சிரிம் பிடஸ்ய ஸத்வபி' தே பி'ஷ்ட்வா சாதயாமன்*

என்று ருக்வேதம் 7-153-8-ல் கூறப்பட்டுள்ளது. ''ஏ! ஏழையே! காணாதவனே! (குருடனே) விகடேகிரி (வேங்கடகிரி?) க்குச் சென்று திருமகளைப் பணிந்து அருள்பெற்று நீ உய்வாயாக'' என்றுள்ளது.

விகடகிரி வேங்கடகிரியே என்பது டி.கே.வி.என். சுதர்சனாச்சாரியார் கருதுகிறார். ★

பிரம்ம புராணத்திலும்

*"ஏவம் ஸ்ரீக்ருஷ்ணரூபஸே க்ரீடிதோ வேங்கடாசலே*
*அராயி கானே விகடேகி ரிம் க'ச்செதி ந விது:*
*ஏவம் வேதமயஸ் ஸாக்ஷாத் கி'ரீச பன்னகா'சல"*

இதே கருத்தையே கூறியுள்ளதும் சான்றாகக் கொள்வர். 'பசிண்டி வேங்கடத்துறைவர்' என்பவர் புராணங்களில் வரும் வேங்கடாசலப் பெருமையைத் தொகுத்து ஒரு நூல் செய்ததாகவும், தாள்ளபாக அன்னமைய்யா வேங்கடாசல மகாத்மியம் ஒரு நூல் செய்ததாகவும் தெரிகிறது. இவை இப்போது கிடைக்கவில்லை. இராமானுசரின் சீடர் அனந்தாழ்வான், 'வேங்கட இதிகாசமாலை' இயற்றியுள்ளார். தரிகொண்ட பெங்கம்மா, தெலுங்கில் வேங்கடாசல மஹாத்மியம் இயற்றியுள்ளார். வேங்கடம் என்பதற்கு வேம்-கடம் என்று பாவங்கள் தீர்ப்பது என்று பொருள் கொண்டனர். கடன் ஆகிய பாவங்களை வேகச் செய்வது என்பது பொருளாகக் கொண்டனர்.

வேங்கடம் பற்றி அகநானூற்றில்,

*"...................... வடவயின்*
*வேங்கடம் பயந்த வெண்டகோட்டியானை."*

*- அகம் 27*

*"கழல்புனை திருந்தடிக் களவர் கோமான்*
*மழபுலம் வணக்கியமாவன் புல்லி*
*விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்*
*பழகுவர் ஆதலோ அரிதே."*

*- அகம் 61*

*"கல்லா இளையர் பெருமகள் புல்லி*
*வியன்தலை நல்நாட்டு வேங்கடம் கழியானும்"*

*- அகம் 83*

---

★ *ஆழ்வாருல மங்களாசாசன பாசுரமுலு, சுதர்சனாச்சாரியார் திருப்பதி தேவஸ்தான வெளியீடு - 1957.*

*''கன்று பசி களைய பைங்கன் யானை*
*முற்றா மூங்கில் முளைதருபு ஊட்டும்*
*வென்வேல் திரையன் வேங்கட நெடுவரை''*

**- அகம் 85**

*''பனிபடு சோலை வேங்கடத்தும்பர்*
*மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்''*

**- அகம் 211**

*''வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்*
*இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு*
*ஓங்குவெள் ளருவி வேங்கடத்தும்பர்''*

**- அகம் 213**

*''சென்றுதல் யானை வேங்கடம் தழீஇ''*

**- அகம் 265**

*''நிரை பல குழீஇய நெடுமொழிப் புல்லி*
*தேன்தூங்கு உயர்வரை நல்நாட்டும்பர்*
*வேங்கடம் இறந்தனர் ஆயினும் ஆண்டவர்*
*நீடலர்! வாழி! தோழி.''*

**- அகம் 393**

*''தேங்கமழ் நெடுவரைப் பிறங்கிய*
*வேங்கட வைப்பிற் சுரன் இறந்தாரே''*

**- அகம் 141**

இச்சான்றுகளால் யானைகள் மிகுந்த காடாக இருந்த வேங்கடமலை தமிழக எல்லையாக இருந்த செய்தி தெளிவாகும். 'விழவுடை விழுச்சீர் வேங்கடம்' என்று குறிப்பிட்டதால் அந்நாளில் கோயில் இருந்து விழாக்கள் நடந்தன என்பது தெரிகிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலக்கியமான சிலப்பதிகாரத்தில்,

*வீங்குநீ ரருவி வேங்கடமென்னும்*
*ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை*
*விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி*

*இருமருங் கோங்கிய இடைநிலைத்தானத்து*
*மின்னுக் கொடியுடுத்து விளங்குவிற்பூண்டு*
*நன்னிற மேகம் நின்றது பே...*
*பகையணங் காழியும் பால் வெண் சங்கமும்*
*தகைபெறத் தாமரைக் கையின் ஏந்தி*
*நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு*
*பொலம்பூவாடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்*

***- சிலப்பதிகாரம் காடுகாண் காதை***

என்று கூறியிருப்பதால் அக்காலத்திலேயே திருவரங்கம் போல திருவேங்கடமும் மிகப் பழமையான கோயிலாகும். புறப்பொருள் வெண்பா மாலையில்,

*வெளிகொள் அறையருவி வேங்கடத்துச் செல்லின்*
*நெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட்கு*
*இருளீயும் ஞாலத் திடரெல்லாம் நீங்கி*
*அருளீயும் ஆழி யவன்*

எனப் புலவரை ஆற்றுப்படுத்தும் வெண்பா உள்ளது. இச்சான்றுகளால் திருவேங்கடம் திருமாலுறையும் கோயில் என்பது தெளிவு. எனினும் பிற்காலத்தில் சைவர்கள் இக்கோயிலை தங்களுடைதென ஆக்கிரமிக்க முயற்சித்தனர்.

*தாழ் சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்*
*சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்*
*திரண்ட ருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு*
*இரண்டுருவும் ஒன்றாயிசைந்து*

***- இயற்பா 3-63***

என்று பேயாழ்வாரும்,

*வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை*
*வேங்கடத்துள்ளே விளையாடும் நந்தியை*
*வேங்கட மென்றே விரகறி யாதவர்*
*தாங்கவல் லாருயிர் நாமறியாரே.*

***- திருமந்திரம் 190***

என்று திருமூலர் திருமந்திரத்து ...ம்

*அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூ ரம்மான*
*அரியாரும் பாகத் தமுதன் அரியாரும்*
*வேங்கட த்து மேயானை மேவா உயிரெல்லாம்*
*வேங்கடத்து நோயால் விளிந்து*

என்று கபில தேவநாயனாரும் சிவபெருமான் திருவந்தாதியிலும் கூறியிருப்பதை ஆதாரமாகக் கொண்டு இது சிவபெருமான் கோயில் என்றும் கூறுவர். நாகாபரணமுட் தை மாதத்தில் வில்வ இலை அர்ச்சனையும் இதற்குக் காரணமாகும் என்றும் எடுத்துக் காட்டுவர். சிவன் வேறு, திருமால் வேறன்று. இருவரும் ஒரே கடவுளே என்பதை நிறுவுவதற்கு வந்த பாடலகளே இவையாம்.

*பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்*
*நின்றுலகம் தாட நெடுமாலும் - என்றும்*
*இருவரங்கத்தால் திரிவரேலும் - ஒருவன்*
*ஒருவரங்கத்தென்று முளன்.*

***- இயற்பா 1-98***

என்று பொய்கையாழ்வாரும்

*மின்போலும் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்*
*என்போலும் காண்பர்கட் கொன்றிரேல் - தன்போலும்*
*பொற்குன்றும் நீலமணிக் குன்றும் தாமுடனே*
*நிற்கின்ற போலும் நெடிது*

எனக் காரைக்காலம்மையாரும் அரிஹரர்கள் ஒருவரே எனக் கூறியுள்ளனர். மகாகவி திக்கணாவும் தமது பாரதத்தில் அரிகாரத்து விதத்தை வற்புறுத்தியுள்ளார்.

*இடமால் பலந்தான் இடப்பால் துழாய் வலப்பால் ஒன்கொன்றை*
*வடமால் இடந்துகில், தோல்வலம், ஆழியிடம் வலமான்*
*இடமாய் கரிதால் வலஞ்சேலிவனுக் கெழில் நலஞ்சார்*
*குடமாலிடய் வலம் கொசிகரை யாலமங்கள கூத்தனுக்கே*

என்று சேரமான் பெருமாள் நாயனாரும் கூறியுள்ளார். ஆதலின்

திருமாலை சிவனாகவும் காணும் மரபுப் படியான பாடல்களை வைத்துக் கொண்டு திருமலை சைவமே என்பது பொருந்தாது.

'சேயோன் மேய மைவரை யுலகமும்' எனத் தொல் காப்பியத்தில் முருகன் உறைவிடம் மலையாக இருத்தலாலும், 'திருவேங்கடத்திலுறைதரு பெருமாளே' என அருணகிரிநாதர் கூறுவதாலும், முருகனே திருவேங்கடத்திலிருப்பதாகக் கூறுவதுண்டு. பரிபாடலில் திருமால் மலைமீதுறையும் காட்சி வருணிக்கப்பட்டுள்ளதாலும், அறுபடை வீட்டில் ஒன்றாகவோ, நக்கீரர் திருமுருகாற்றுப் படையிலோ கூறப்படாததால் திருவேங்கடம் திருமால் திருத்தலமே என்பதில் ஐயமில்லை. ஸ்ரீராமானுஜர் திருமலைக்குச் சென்று சைவர்களுடன் வாதிட்டு திருமால் திருத்தலமே என்பதை நிறுவிய வரலாறு பிரசித்தம். பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் முதலிய கவிஞர்கள் திருவேங்கடமாலை, திருவேங்கட கலம்பகம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்கள். திருவேங்கடக் கோவை போன்ற பல தமிழ் நூல்கள் இயற்றப் பெற்றுள்ளன. தாள்ளபாக மரபினரும், கிருஷ்ண தேவராயரும் திருவேங்கடத்தின் பெருமையைப் பறைசாற்றி உரைத்தனர்.

இராமானுஜர் திருமலைக்கு மூன்றுமுறை எழுந்தருளினார். ஸ்ரீகிருஷ்ணதேவராயர் ஏழு முறை வந்தார். திருமலைக் கோயிலில் கிருஷ்ணதேவராயரும், அவரது மனைவியர் திருமலாதேவி, சின்னா தேவியரும் தம் விஜயத்தின் அறிகுறியாகவும், தாம் திருமாலுக் குட்பட்டவர்கள் என்பதையும் உலகுக் குணர்த்தும் ஐம்பொன் விக்கிரகங்களை நிறுவினர். அவை இன்றும் திருவேங்கடவன் திருவாயிலில் காணலாம். இராமானுஜர், திருவேங்கடவனுக்கு சங்காழி தரிசிக்கச் செய்ததும், திருமஞ்சனத்தில் திருமஞ்சன காலத்தில் நாச்சியார் திருமொழி ஓதச் செய்ததும், திருமண் காப்பை கருப்பூரப் பொடிகளால் மூன்று நாட்களும், மற்றை நாட்களில் முத்துப் பொடிகளால் அமைத்து காட்சி தரச் செய்தும், பல்வேறு விழாக்களை ஏற்படுத்தி, நாகாபரணம் அணிவித்தும் திருப்பதி யிலும், கோவிந்தராசப் பெருமாளைப் பார்த்தசாரதி கோவிலில் பிரதிட்டை செய்வித்தும், ஆண்டாளைப் பிரதிட்டை செய்வித்தும் பல ஏற்பாடுகள் செய்து ஜீயர்களை நியமித்து கோயில் நிர்வாகம் ஒழுங்குபடுத்தினார்.

சந்திரகிரியில் வாழ்ந்த மல்லண்ணா, ஆரவீட்டு மரபினனாண திருமலய்யதேவன், அச்சுத தேவராயன், கிருஷ்ண தேவராயர் போன்றவர்கள் செய்த திருப்பணிகள், அளித்த ஆபரணங்கள் கணக்கற்றவை. பதினேழாம் நூற்றாண்டில் மட்ளகுமார அனந்தராயன், பொன்யானை, பொற்குதிரை முதலிய வாகனங்களும், வெள்ளிப் பாத்திரங்களும் அளித்தான். யாதவ ராயர் மரபினனான ஒபளநாதன் தஞ்சாவூரில் வாழ்ந்தவன். அவன் திருமாலின் வலது திருககைக்கு பொன் வேய்ந்து அழகு படுத்தினான். இவன் காலம் கி.பி. 1370 எனக் கருதுவர்.

*ஓதவளர் வண்மை ஒபளநா தன் தஞ்சை*
*யாதவர் கோன் வாழ இனிதாழி - போத*
*மது குலவு சோலை வட வேங்கட வாணர்க்குத்*
*திருக்கைமலர் தந்தான் சிறந்து*

என்ற வெண்பா இச்செய்தியை மெய்ப்பிக்கிறது.

தாள்ளபாக்கம் திருமலாச்சாரியர், ஆழ்வார் தீர்த்தத் தென்கரையில் தீர்த்தவாரி மண்டபம் கட்டினார். கி.பி. 1536ல் சாளுவ திம்மரசர் என்பவர் 1900 பணத்தைத் தந்து திருமலாசாரியரிடமிருந்து நாள் வழிப்பிரசாதமும், அதிரசம் விற்கும் உரிமையைப் பெற்றார். மணவாள மாமுனிகள் 1503ல் திருமலை வந்து மூன்றாண்டுகள் பெரிய ஜீயராகத் தங்கி இருந்து சிறப்பான பல ஏற்பாடுகள் செய்வித்தார். ஆதிவண்சடகோப ஜீயர் கி.பி. 1506ல் ஒரு மடம் கட்டி, படிக்கட்டுகள் சீர்திருத்திக் கட்டியும், சமய உண்மைகளை போதித்தும் இருந்து வந்தார்.

பல வைணவ ஆச்சாரியர்களும், கவிஞர்களும் இருந்து வைணவத்தைப் பரப்பிய திருமலை கோயில்கள் ஆந்திர நாட்டினர்க்கும், தமிழர்க்கும் உறவுக்குத் தலையாய தலமாக விளங்கி வருகிறது. இன்று ஆந்திர நாட்டில் இருந்தாலும் திருமலை, திருப்பதி ஜீயர்கள் தமிழர்களே. அவர்களது தார்மீகமான அதிகாரத்தின் மீதுதான் அக்கோயில் நிர்வாகமும், பூசைக் கிரமங்களும் உள்ளன. திருக்கோயில் தாழ்ப்பாள் இவர்களிடமே இருந்தது. இடையே மஹந்துக்கள் என்போர்கள் கைக்கு அதிகாரம் சென்றிருந்தது. பின் தேவஸ்தான போர்டார் கைக்கு நிர்வாகம் மாறியது. தற்போது போர்டார் மேற்பார்வையில் கோயில் நிர்வாகம் சிறப்புடன் இயங்கி வருகிறது.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு நல்ல வருவாய் வருவதால் வேங்கடேசுவரா பல்கலைக் கழகம் நிறுவப்பட்டது. மருத்துவமனைகள், தங்கும் விடுதிகள் நிறையக் கட்டப்பட்டுள்ளன. வெளியூர்களிலும். வெளிநாடுகளிலும் கூட வைணவ மத பிரச்சாரத்துக்காகவும், இந்து தருமப் பண்பாடுகளைப் பாதுகாக்கவும் வேண்டிய பல உதவிகள் புரிந்து வருகிறார்கள்.

இன்றும் திருமலை, திருப்பதி கோவிலில் இராமானுஜர் காலம் போலவே தமிழ் அர்ச்சகர்கள், நாலாயிர பிரபந்தம், நித்தியானு சந்தானம் ஓதி வருகின்றனர். பகல்பத்து, இராப்பத்து உற்சவங்களில் திருவாய்மொழி அனுசந்தானம் நடக்கிறது. இராமானுஜர், பிள்ளை லோகாச்சாரியார், அனந்தாழ்வான், மணவாள மாமுனிகள் ஆகியோர் சன்னிதிகளும் உள்ளன. ஆண்டாள் சன்னிதி உள்ளது. இவை தமிழ்நாட்டுப் பெருமைக்கு ஒரு நிலைக்களனாக உள்ளது.

ஆந்திர நாட்டில் பிரபலமான பழைய வைணவத் தலங்கள் அகோபிலமும், சிம்மாசலமும், ஸ்ரீகூர்மமும் ஆகும். திருமங்கை ஆழ்வார் அகோபிலம் சென்று மங்களா சாசனம் செய்தருளினார். ஸ்ரீ இராமானுஜர் இம்மூன்று தலங்களுக்கும் யாத்திரை சென்று கோயில் நிர்வாகத்தைச் செம்மைப்படுத்தியுள்ளார். அகோபிலத்தில் ஆதிவண்சடகோபர் மடம் நிறுவி ஆந்திர நாட்டில் தமிழ் அந்தணர்கள் அர்ச்சகர்களாக உள்ளனர். தமிழக வைணவக் கோயில்கள் போலவை பூசை நடக்கின்றது.

சிம்மாசலம் விசாகப்பட்டினத்திற்குப் பத்து மைல் தொலைவில் வடக்கே குன்றின்மேல் உள்ளது. ஆதிவராக நரசிம்ம சுவாமி எழுந்தருளியுள்ளார். இரணிய கசிபுவைக் கொன்றபின் சீற்றம் தணியாத நரசிம்மர் இங்கு பிரகலாதன்பால் அருளால் சிறிது சீற்றம் தணிந்த இடம். அழகிய இயற்கை எழில் மிக்க இடம். இக்கோயிலுக்கு ஸ்ரீகிருஷ்ண தேவராயர் திருப்பணிகள் செய்ததோடு அழகிய மண்டபம் கட்டியுள்ளார். அதில் அவரது கலிங்க வெற்றிச் செய்தியைப் பொறித்த சாசனமும் தெலுங்கில் உள்ளது. இங்கு தற்போது வேதபாராயணத்தோடு நாலாயிர திவ்ய பிரபந்த நித்தியானு சந்தானமும், ஆழ்வார்களின் திருநட்சத்திரங்களில் சிறப்பு வழிபாடுகளும் நடக்கின்றன. தமிழக கோயில்களில் போலவே இங்கும் வழிபாடுகள் உள்ளன. இங்கு தமிழகத்திலிருந்து போன அந்தணர்கள் தமிழிலும், வடமொழியிலும், தெலுங்கு மொழியிலும் வைணவ சம்பிரதாய நூல்களைக் கற்றறிந்த விற்பன்னர்களாக

உள்ளனர். பெரும்பாலும் தற்போதுள்ள இளைஞர்கள் தமிழ் பிரபந்தப் பயிற்சியை இழந்து வருகின்றனர். தமிழ் நாட்டோடு தொடர்புடைய அந்தணர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. ஆந்திர நாட்டு அந்தணர்களே அர்ச்சகர்களாகி வருகின்றனர். எனினும் திவ்யப் பிரபந்த அனுசந்தானத்துக்கான சிலரை நியமித்து பழைய மரபுகளைப் பாதுகாத்து வருகின்றனர். இங்குள்ள மூல விக்கிரகம் சிறியதுதான். அதனை சந்தனக் காப்பிட்டு மூடி வைத்துள்ளனர். ஆண்டுக்கொருமுறைதான் காப்பு நீக்குவர். சுவாமியின் உக்கிரத்தைத் தணிக்க சந்தனக் காப்பு, சந்தனக் காப்புடன் உள்ள விக்கிரகம் பார்வைக்கு சிவலிங்கம் போலவே தோன்றுகிறது. ஒரு காலத்தில் இது சைவ தலம் என்றும் இராமானுசரே வைணவத் தலமாக்கினார் என்றும் கூறப்படுகிறது.

ஸ்ரீ கூர்மம் ஆந்திர நாட்டின் வடக்கிழக்கு மூலையில் உள்ளது. ஸ்ரீகாகுளம் அருகே பதினைந்து மைல் தொலைவில் கிழக்கே உள்ளது. சிறிய கோயில்தான். இராமானுஜர் இங்கு வந்து சைவர்களின் ஆதிக்கத்தை நீக்கி வைணவமாக மீண்டும் செம்மைப்படுத்தி கோயில் நிர்வாகத்தைச் சீர்படுத்தினார். பூரி ஜகந்நாதர் கோயிலுக்குள்ளே இராமானுஜரை புகவிடவில்லை என்றும், இறைவனே அவரை இங்கு வைணவம் சிறப்புடன் உள்ளது ஸ்ரீகூர்மம் சென்று சைவ ஆதிக்கத்தை நீக்கி மீண்டும் பழமையான வைணவத் தலமாக மாற்றுமாறு பணித்ததாகவும், அதன்படி இங்கு இராமானுஜர் வந்ததாகவும் கூறப்படுகிறது.

இங்கு ஆழ்வார்கள், இராமானுஜர் சன்னதி, ஆண்டாள் சன்னதிகள் உள்ளன. தமிழகத்திலிருந்து சென்று குடியேறிய அந்தணர்களே அர்ச்சகர்களாக உள்ளனர். திவ்விய பிரபந்த அனுசந்தானமும், ஆழ்வார்களின் திருநட்சத்திரங்களின் சிறப்பு வழிபாடுகளும், தமிழகக் கோயில்களைப் போலவே நடைபெறுகின்றன.

பாஞ்சராத்திரம், வைகானசம் எனும் இரு ஆகம முறைப் படியே இந்தக் கோவில்களில் பூசனைகள் நடைபெறுகின்றன. இரண்டுக்கும் சிற்சில வேறுபாடுகளே உள்ளன. ஆந்திர நாட்டில், திருமலை, திருபபதி, அகோபிலம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் ஆகிய கோயில்களில் தமிழக அந்தணர் மரபினரே அர்ச்சகர்களாக இன்றும் உள்ளனர். தமிழ்த் திவ்ய பிரபந்த அனுசந்தானங்களும், முந்நைய நாட்கள் போலவே இன்றும் நியமப்படி நடந்து வருகின்றன.

தமிழக வைணவத்திற்கு தொடர்பில்லாமல், சுமார்த்தர்களே அர்ச்சகர்களாக உள்ள பல வைணவத் தலங்களும் ஆந்திர நாட்டில் உள்ளன. இங்கு ஆழ்வார் சன்னதிகள் இல்லை. திவ்ய பிரபந்த அனுசந்தானமும் இல்லை. வடமொழி வேத படனமும், அர்ச்சனைகளும் நடக்கின்றது. ஆந்திர நாட்டில் உள்ள முக்கியமான வைணவக் கோயில்களில் பத்திராசலம் ஸ்ரீசீதாராமாலயம் பிரசித்தமானது. கம்மம் மாவட்டத்தில் கோதாவரிக் கரையில் சிறு குன்றின் மேல் இக்கோவில் உள்ளது. ஸ்ரீராமரின் பாதம் பட்ட மலை என்ற கருத்தில், ''இராமபத்ர பதாங்கத் வாத் பத்ராத்'ரிதி விஸ்ருத:'' என்று வடமொழிச் சுலோகம் கூறுகிறது. ஏழாம் நூற்றாண்டில் ஸ்ரீசங்கரர் இங்கு வந்து ஒரு சக்கரம் பிரதிட்டை செய்தார்.

பத்ராசலம் அருகே பத்ரிரெட்டி பாலம் என்ற கிராமத்தில் சபரகுலத்தின்னளான தம்மக்க என்பவளின் கனவில் தோன்றி இராமர், தாம் இங்கு கோயில் கொண்டுள்ளதாகக் கூறியதாகவும், அதன்படி அங்கு இராம லட்சுமண சீதை விக்கிரகங்கள் கண்டெடுக்கப்பட்டு சிறு ஓலைக் குடிசையாக ஒரு கோயில் கட்டி வழிபட்டதாகவும் பின்னர் கோயில் உருவாகியதாகவும் கூறுவர்.

கோபன்ன என்னும் இராமதாசர் கோல்கொண்டா நவாப்புக்கு தாசில்தாரர் ஆக பத்ராசலம் பகுதியில் இருந்தபோது பக்தி மேலிட்டு, வரிப்பணத்தை எல்லாம் கோயில் கட்டச் செலவழித்து விட்டார். தானிஷா எனும் நவாப் இராமதாசரை கி.பி. *1676* முதல் *1686* வரை சிறையில் வைத்து தண்டித்தார். கோல்கொண்டா கோட்டையில் இராமதாசர் சிறையிலிருந்த இடம் இன்றும் உள்ளது. பின் ஸ்ரீராமனே வந்து தானிஷாவிடம் வரிப்பணம் செலுத்தியதாகவும் அதன் பின் இராமதாசர் விடுதலை செய்யப்பட்டதாகவும் வரலாறு கூறுகிறது.

இராமதாசர் மிகச் சிறந்த கவிஞர். 'தாசரதி சதகம்' இயற்றியுள்ளார். பல கீர்த்தனைகள் இயற்றியவர். பத்ராசல ராமருக்கு பல ஆபரணங்கள் செய்து போட்ட பக்தர். இவரது தெலுங்குக் கீர்த்தனைகள் பிரபலமானவை. இராமதாசரின் சரிதமும், தமிழக நாடக மேடைகளில் நடிக்கப்பட்ட பிரசித்தமான வரலாறாகும்.

பத்ராசலம் இராமலாயத்தின் அருகே ஒரு மண்டபம் கட்டி அதில் இராமதாசரின் தெலுங்குக் கீர்த்தனைகளை எல்லாம் கல்லில் பொறித்து வைத்துள்ளார்கள். இங்கு வைதீக முறைப்படி பூசைகள்,

விழாக்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. ஆந்திர நாட்டு பிராமணர்கள் அர்ச்சகர்களாக உள்ளனர். கோடை காலத்தில் இந்தியாவிலேயே அதிக வெப்பமான இடம் பத்ராசலம். அதன் அருகில் புனித கோதாவரி அமைந்து பக்தர்களின் பாவங்களைக் கழுவிப் புனிதமாக்குகிறது. ஹைதராபாத்திலிருந்து வடக்கே நாற்பது மைல் தொலைவில் நல்கொண்டா மாவட்டத்தில், 'யாதகிரி குட்ட' உள்ளது. இங்குள்ள சிறு குன்றின் குகையில் நரசிம்ம சுவாமி எழுந்தருளியுள்ளார். சிறிய கோவில் ஆயினும் சிறப்புடைய கோவில். இங்கு வைதீக ஆந்திரப் பிராமணர்கள் அர்ச்சகர்களாக உள்ளனர். மற்றொரு பிரபலமான இடம் அன்னவரம் சத்திய நாராயண சுவாமி கோயில். இது விசாகப்பட்டிணத்திற்குத் தெற்கே துனி அருகே உள்ளது. சிறு குன்றில் உள்ள இக்கோயில் சென்ற நூற்றாண்டில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. வைதீக ஆந்திர பிராமணர்களே அர்ச்சகர்கள். இக்கோயில் அருகே நீர்த் தேக்கம் உள்ளது. அழகிய இயற்கை எழில் கொஞ்சும் சிறு குன்றுகள் உள்ளன. பக்தர்கள் தங்குவதற்கு வசதியான சத்திரங்கள் உள்ளன.

கிழக்கு கோதாவரி மாவட்டம் அமலாபுரம் அருகே ரயாலி என்ற கிராமத்தில் ஸ்ரீஜகன்மோகினி கேசவ ஸ்வாமி கோயில் உள்ளது. சிறிய கோயிலாயினும் மூல விக்கிரகம் கலையெழில் மிகுந்த சிலையாகும். திருமால் திருப்பாற்கடலைக் கடைந்தபோது மோகினியாக அவதாரம் செய்த கதையைச் சொல்லிச் சிவன், மோகினியான திருமாலை மோகித்து பின் தொடர்ந்து வந்து நின்ற இடம் என்று ஐதீகம். இந்தச் சிலை பேலூர், ஹளேபீடுவிலுள்ள ஹொய்சள மன்னர்களின் சிற்பக்கலைத் திறன் உடைய சிற்பமாக உள்ளது. பின்பக்கம் மோகினியான பெண் உருவம். முன்பக்கம் ஸ்ரீவிஷ்ணு உருவம். தசாவதாரங்களும் சிறிய அளவில் செதுக்கப் பட்டுள்ளது. பின்பக்க மோகினியின் கூந்தலை சிற்பி மிக மிக அற்புதமாகச் செதுக்கியுள்ளார். முன்பக்க விஷ்ணுவின் பாதங்களில் எப்போதும் நீர்த்தாரை கசிந்து கொண்டே இருக்கிறது. கங்கை விஷ்ணு பாதத்தில் உற்பத்தியாகிறதென்ற ஐதீகப்படி இச்சிலையில் அற்புதமாக நீர் கசியுமாறு படைத்துள்ள சிற்பக்கலை நுட்பம் வியந்து பாராட்டாமலிருக்க முடியாது. ஈடிணையற்ற இந்தச் சிற்ப அழகைக் காண வேண்டியது கலை ஆர்வலர்கட்குப் பெருவிருந்தாய கடமை யாகும். இக்கோயிலில் தெலுங்கு பிராமணர்களே அர்ச்சகர்களாக உள்ளனர். சிலை பழமையாக உள்ளது. கோவில் பிற்காலத்தில் சென்ற நூற்றாண்டில் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. விஜயவாடா வுக்கு மேற்கே, குண்டூருக்கு இடைய பத்து மைல் தொலைவில்

மங்களகிரி உள்ளது. நரசிம்ம சுவாமி கோயில் உள்ளது. மலை மேலும் நரசிம்ம சுவாமி கோயில் உள்ளது. கீழே உள்ள கோயில் கோபுரம் உயரமாகவும், அழகாகவும் உள்ளது. மலைமேல் உள்ள ஒரு குகையில் ஒரு பொந்து உள்ளது. அப்பொந்துவினை வாயாக வைத்து, நரசிம்மர் முகத்தை மட்டும் ஐம்பொன் தகட்டால் செய்து பொருத்தியுள்ளார்கள். இந்த வாய் வழியாக பானகம் ஊற்றுவார்கள். நாம் எவ்வளவு கொண்டு செல்கிறோமோ அதில் சரியாகப் பாதியை ஏற்றுக்கொண்டு மீதியை ஏற்காமல், உமிழ்ந்து விடுவார் என்பது ஐதீகம்.

பூரி ஜகந்நாதத்தில் போஜனம், சிம்மாசலத்தில் சந்தனம், மங்களகிரியில் பானகம், திருப்பதியில் அரசோச்சல், ஸ்ரீரங்கத்தில் சயனம் என்று ஸ்ரீமந் நாராயணன் வைபத்தோடுள்ளதாகக் கூறுவர்.

கிருஷ்ணதேவராயர் வந்து பல தான சாசனங்கள் தந்துள்ளார். மற்றும் கலிங்க மன்னர்களும் சாசனம் செய்துள்ளனர். ஸ்ரீசங்கராச்சாரியர் வந்து தரிசித்த சிறப்புடையது. கி.பி. 1250ல் ஸ்ரீசைத்தன்னியர் திருவரங்கம் வந்தபோது இங்கு வந்து தரிசித்துச் சென்றுள்ளார். அதற்குச் சின்னமாக அவரது பாதமுத்திரையை பக்தர்கள் பதித்துள்ளனர். ஸ்ரீவல்லபாச்சாரியாரும் வந்து சேவித்துள்ளார். மேலே மலை மேல் உள்ள சுவாமி பானகால நரசிம்ம சுவாமி. கீழே உள்ள சுவாமி ஸ்ரீலட்சுமி நரசிம்ம சுவாமி. பானகம் ஏற்கும் பழக்கத்தால் 'ஸ்ரீபானகாலராயடு' என்றே மக்கள் அன்புடன் அழைப்பர். பானகம் வெல்லம் போட்டு, சிறிது புளி சேர்த்து, நீர் நிறைய ஊற்றிக் கொண்டு வரப்படுகிறது. அர்ச்சகர்கள் ஒரு சங்கு கொண்டு பாதி சிந்தியும், பாதி நீரை சுவாமி வாயில் ஊற்றுகின்றனர். கொணர்ந்த பாத்திரத்தில் பாதியை ஊற்றியதும், மீதியை பக்தர்கள் கொண்டு செல்ல வேண்டும். இங்கு தெலுங்கு பிராமணர்களே அர்ச்சகர்களாக உள்ளனர். வைதீக மரபுப்படியே பூசைகள் நடைபெறுகின்றன.

ஆந்திர நாட்டில் இன்னும் பல வைணவத் தலங்கள் உள்ளன. முக்கியமான ஒருசில மட்டுமே சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. இக்கோயில்கள் ஆந்திர நாட்டில் வைணவம் பரவவும் நிலை நின்று பேணப்படவும் ஆதார சக்திகளாகத் திகழ்கின்றன.

# 8. ஆந்திர நாட்டில் வைணவம்

## அ. ஆந்திர நாடு - மொழி - இனம் - இலக்கியம்

இந்திய நாட்டின் எழிலார்ந்த மாநிலங்களில் ஆந்திரம் ஒன்று. தெலுங்கு தேசம், தெலுங்கு நாடு என்றும் அழைப்பதுண்டு. ஆரிய இனமாகிய ஆந்திர இனமும், திராவிட இனமான தெலுங்கரும் இணைந்த கலப்பினமாகவும், ஆரிய மொழியாகிய சமஸ்கிருத மொழிச் சொற்களின் தற்சம, தற்பவச் சொற்களும், தூய திராவிடச் சொற்களும் இணைந்த மொழியாகவும் அமைந்துள்ளது. வடக்கே மராட்டிய, ஒரியா, மத்திய மாநிலங்களும், கிழக்கே வங்காள விரிகுடாவும், தெற்கே தமிழகமும், மேற்கே கர்நாடகமும் எல்லையாக அமைந்த பெருநிலப்பரப்பில் துங்கபத்ரா, கிருஷ்ணா, கோதாவரி எனும் வளமார்ந்த ஜீவநதிகள் பாயும் இம்மாநிலம் விவசாய வளம் மட்டுமன்றி தற்போது தொழில் வளத்திலும் முன்னேறி வருகிறது.

இந்திய துணைக் கண்டத்தில் இந்தி மொழிக்கடுத்த இரண்டாவது பெருமொழியாக தெலுங்கு மொழி திகழ்கின்றது. ஆந்திர நாட்டில் 86% மக்கள் தாய்மொழி தெலுங்காகும். 7% உருது பேசுவோரும், தமிழ் பேசுவோர் 2%, கன்னடம் பேசுவார் 2% ஆக உள்ளனர். சித்தூர், நெல்லூர் மாவட்டங்களிலும், நாகர்ஜுனசாகர் அணைக்கட்டுப் பகுதியிலும், செகந்திராபாத்திலும் தமிழர்கள் உள்ளனர். சித்தூர் மாவட்டத்தில் 15%, ஹைதராபாத் 3%, நெல்லூர் 3% ஆக உள்ளனர்.

கன்னட மொழியினர் அனந்தப்பூர், கர்நூல் மாவட்டங்களிலும், ஹைதராபாத், மெடக், மகபூர் நகர், நிஜாமாபாத் மாவட்டங்களிலும் உள்ளனர். உருதுமொழி பேசுவோர் கடப்பா, கர்நூல், ஹைதராபாத், மெடக் ஆகிய மாவட்டங்களிலும் அதிகம் உள்ளனர். சித்தூர், குண்டூர், கிருஷ்ணா, மேற்கு கோதாவரி, ஸ்ரீகாகுளம் ஆகிய மாவட்டங்களிலும் உள்ளனர்.

ஆந்திர நாட்டில் 81% இந்துக்கள், 15% முஸ்லீம்கள், 4 கிறிஸ்தவர்கள் என்ற கணக்கில் உள்ளனர். கீழக் கடற்கரையோர மக்கள் பெரும்பாலும் இந்துக்களே. அதிலும் குறிப்பாக வைணவமே அதிகம். முஸ்லீம்கள் கர்நூல், ஹைதராபாத், கடப்பா மாவட்டங்களிலும், மற்ற தெலுங்கானா பகுதியிலும் உள்ளனர். கிறிஸ்தவர்கள், குண்டூர், கிருஷ்ணா மாவட்டங்களிலும், கர்நூல், கம்மம், கடப்பா, கோதாவரி, நெல்லூர் மாவட்டங்களிலும் உள்ளனர்.

ஆந்திர நாட்டை பொதுவாக முப்பெரும் பகுதிகளாகப் பிரித்துக் காண்பது வழக்கம். தமிழகத்தை சேர, சோழ, பாண்டிய மண்டலங்களாகவும், தொண்டை மண்டலம் எனவும் வழங்குவது போன்றே ஆந்திர நாட்டை கடற்கரையோரப் பகுதியை, 'கோனசீம' என்றும், சித்தூர், கர்நூல், அனந்தப்பூர், கடப்பா ஆகிய மேற்குப் பகுதியை 'ராயலசீமா' என்றும், ஹைதராபாத் சமஸ்தானப் பகுதியை, 'தெலுங்கானா' என்றும், நெல்லூர், கிருஷ்ணா, மேற்கு கோதாவரிப் பகுதிகளை 'சர்க்கார்' என்றும் அழைப்பர். முற்காலத்தில் தெலுங்கு நாட்டில் பல்நாடு, வெலநாடு, பாகநாடு, பொத்தபி நாடு, வேங்கி நாடு என்ற பிரிவுகள் அமைந்திருந்தன. தமிழகத்தைப் பன்னிரு நிலங்களாக முன்னோர் பிரித்துப் பார்த்தது போலவே, ஆந்திர நாட்டிலும் பல பிரிவுகள் அமைந்திருந்தன. பல நாடு என்பது குண்டூர் மாவட்டப் பகுதியாகும். வேங்கி என்பது இராஜ மேஹேந்திரவரப் பகுதியாகும். வெல நாடு கிருஷ்ணா மாவட்டப் பகுதியாகும். முலிகி நாடு கடப்பா மாவட்டம். ரே நாடு கர்நூல் மாவட்டம், ஜந்துரு நாடு விசாகப்பட்டினம் மாவட்டம், பாக நாடு நெல்லூர் மாவட்டம், ப்ரோலு நாடு மேற்கு கோதாவரி மாவட்டம் ஆகும். தற்போது

இப்பெயர்கள் வழக்கற்றுப் போய் மாவட்டப் பெயர்களே நிலைத்து விட்டன. ★

ஆந்திர நாட்டில் அதிலாபாத் மாவட்டத்தில் மேற்கு மலைத் தொடர்ச்சி அமைந்துள்ளது. தெலுங்கானா முழுவதும் மலைகளும், கற்களும் நிறைந்த நிலப்பகுதியே. கிழக்கு மலைத் தொடர்ச்சி விசாகப்பட்டினம், ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் தொடங்கி சித்தூர் மாவட்டம் வரை காணப்படுகிறது. இம்மலைத் தொடர்கள் இடைவெளி விட்டு, சிறிய மலைத்தொடர்களாக அமைந்துள்ளன. இம்மலைத் தொடரில் சிம்மாசலம், ஸ்ரீசைலம், அகோபிலம், திருப்பதி முதலிய புண்ணிய ஸ்தலங்கள் அமைந்துள்ளன. கிருஷ்ணா, கோதாவரி நதிகள் பாயும் கிருஷ்ணா, கிழக்கு, மேற்கு கோதாவரி மாவட்டங்களில் டெல்டாப் பகுதிகள் மிகவும் வளமான நிலங்கள். முப்போகம் விளையும் நெல்வயல்களும், தென்னந் தோப்புகளும் நிறைந்து இயற்கை எழில் மிக்க நிலமாக அமைந்துள்ளன. ராயல சீமா பகுதி கரிசல் காடுகள் போன்றவை. செவல் காடுகளும் மிகுதியாக உள்ளன. கர்நூல், கடப்பை மாவட்டத்தில் கிடைக்கும் கற்கள் மிகவும் அழகானவை. தளவரிசைக் கற்களாக உபயோகப்படுகின்றது.

ஆந்திர நாடு கனிவளம் நிறைந்த நாடு. இரும்பு நெல்லூர் மாவட்ட சிங்கராய கொண்ட, விசாகப்பட்டினம் மாவட்ட நாராயணபேட்ட மாடுகு, வாரங்கல் மாவட்டம், அதிலாபாத் மாவட்ட ராஹு¬ரா அருகிலும், கோதாவரி நதிப் படுகையிலும் கிடைக்கிறது.

நிலக்கரி பத்ராசலம் அருகிலும், வாரங்கல் மாவட்ட சிங்கரேணியிலும், கொத்த கூடத்திலும், அதிலாபாத் மாவட்ட பெல்லம்பல்லி, கோதாவரி மாவட்ட இராமகுண்டம் முதலிய இடங்களில் கிடைக்கிறது. செம்பு, நெல்லூர் மாவட்டம் காவலி,

---

★ *கன்னிங்காம், நந்தலால்போஸ், பி.சி.லால், பணிக்கர் முதலியோர் வரலாற்று வரைபடங்களை நிர்ணயித்து ஆங்கிலத்தில் நூல்கள் படைத்தாற்போன்று குந்தூரி ஈஸ்வரதத் என்னும் ஆந்திர நாட்டறிஞர் 'ப்ராசீனாந்திர சாரித்ரக பூகோளமு' என்று ஒரு நூல் எழுதியுள்ளார். இதில் பழைய கால கல்வெட்டுக்களை ஆராய்ந்து அந்தந்த நாடுகளைப் பற்றியுணர்ந்து வரைபடங்களைத் தயாரித்துள்ளார். இதில் பழைய தெலுங்கு நாட்டைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். தமிழிலும் இத்தகு நூல் [illegible] இல்லை.*

உதயகிரி, காளஹஸ்தி, நலகொண்டா மாவட்டம் காவலி ஆகிய இடங்களிலும் கிடைக்கிறது. மைக்கா (அப்பிரகம்) நெல்லூர் மாவட்டம் கூடூர், விசாகப்பட்டினம் மாவட்டம், வாரங்கல், நிஜாமாபாத் மாவட்டம் ஆகிய இடங்களில் கிடைக்கிறது. மாங்கனீஸ், விசாகப்பட்டினம், கர்நூல் மாவட்டங்களில் கிடைக்கிறது. விசாகப்பட்டினம், கர்நூல் மாவட்ங்களில் மாங்கனீஸ் உலகிலேயே சுத்தமானதெனப் பிரசித்தி பெற்றுள்ளது.

ஆஸ்பெஸ்டாஸ் (கல்நார்), பைரேட்ஸ் (பேரியம் சல்பேட்), கிரௌபட் முதலிய கனிப்பொருள்களும் கிடைக்கிறது. தங்கம் அனந்தப்பூர் மாவட்டம், தருமாவரம் தாலுக்காவிலும், கிருஷ்ணா, கோதாவரி நதிப் படுகை மணலிலும், சித்தூர் மாவட்ட குப்பம் தாலுக்காவிலும் கிடைக்கிறது. கனிவளம் நிறைந்த ஆந்திர நாட்டில், பல்வேறு தொழிற்சாலைகள் உருவாகியுள்ளது. தற்போது முனைப்பாக தொழில் முன்னேற்றம் காணும் போக்கு வளர்ந்துள்ளது. மின்சாரம் தட்டின்றிக் கிடைக்கும் மாநிலம் ஆதலின் தொழில்துறை முன்னேற்றம் காண வாய்ப்புகளுண்டு. விசாகப்பட்டினம் கப்பல் கட்டும் தொழிற்சாலை பிரசித்தமானது. காகித ஆலைகள், சிமெண்ட் ஆலைகள், நெல் அறவை ஆலைகள், கரும்பு ஆலைகள் மிகுதியாக உள்ளன. ஹரிகோட்டா ஏவுகணை நிலையம் பிரசித்தமானது. சினிமா (திரைப்படத் தொழில்) தொழிலும், திரைப்பட அரங்குகளும் ஆந்திராவில் மிகுதியாகி வருகின்றது. கோஹினூர் வைரம் ஆந்திராவில் கோல்கொண்டா பகுதியில் கிடைத்ததாகும். வைரமும் பிரபலமான தொழிலாகும். வஜ்ரபூமி, நாகபூமி என்ற பௌத்தமத இலக்கியங்களில் ஆந்திர நாடு குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு வைரம் கிடைப்பதுவும், பழைய மரபு மக்கள் வாழ்ந்ததையும் குறிப்பிடுவதாகும்.

ஆந்திர நாட்டை வளப்படுத்தும் நதிகள் பென்னை நெல்லூர் மாவட்டத்தையும், கிருஷ்ணா, கோதாவரி நதிகள் கடற்கரை மாவட்டங்களையும், துங்கபத்ரா குண்டூர் மாவட்டத்தையும் வளப்படுத்துகின்றன. குண்டூர் அருகே உள்ள நாகார்ஜுன கொண்டா மிகப் பெரிய அணைக்கட்டு ஆகும். இராஜமேஹந்திரவரம் (ராஜமுந்திரி)யில் உள்ள கோதாவரியில் கட்டப்பட்ட பாலம் பிரகாசம் பாரேஜ் உலகின் மிகப் பெரிய பாலங்களில் ஒன்றாகும். கீழே ரயிலும், மேலே பேருந்துகளும் போகும் வகையில் மிகப் பெரிய பாலம் கட்டியுள்ளனர். மூன்று மைல் அகலமுள்ள தவனேசுவரம் நீர்த்தேக்க அணை இராஜமுந்திரியில் காணக்கூடும்

அணையாகும். இந்த அணை கட்டிய காட்டன்துரை ஆந்திர மக்களால் இன்றும் போற்றப்பட்டு வருகிறார்.

கோதாவரி நதி கம்பனாலும் பாராட்டப்பட்ட நதி. 'சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி' என்று கம்பர் கூறுகிறார். மராட்டிய மாநிலத்தில் நாசிக் அருகே உற்பத்தியாகும் கோதாவரி நதி மேற்கு மலைத் தொடர்ச்சியில் திரியம்பகேஸ்வரம் என்னும் இடத்தில் பிறந்து, கங்காபூர் என்னும் இடத்தில் நீர்வீழ்ச்சியாகி பின் நடந்து நாசிக்கை அடைகிறது. இங்குதான் கம்பன் வருணித்த பஞ்சவடி உள்ளது. பின்னர் பிரதிஷ்டானபுரம் எனும் ஆந்திர சாதவாகன மன்னர்கள் ஆண்ட தலைநகரை அடைகிறது. கடல் மட்டத்திலிருந்து பதினாயிரம் அடி உயரத்திலிருந்த கோதாவரி இதன்பின் எழுநூறு அடி சமதலத்திற்கு வந்து சேர்கிறது. வலப்புறத்திலிருந்து பூர்ணா நதியும், இடப்புறத்திலிருந்து மஞ்சீரா, வஞ்சீரா நதிகளும் இணையவும், பின் ஆந்திர நாட்டில் அதிலாபாத் மாவட்டத்தில் சரஸ்வதி க்ஷேத்திரமான 'பாஸரா' எனும் ஊருக்கருகே வந்து புகுகிறது. நிஜாமாபாத் மாவட்ட எல்லையில் மஞ்சீரா கலந்திணைகிறது. அதிலாபாத், நிஜாமாபாத், கரீம்நகர் வழியாக வாரங்கல் மாவட்டத்தில் பத்ராசலம் வந்து, அங்கே வந்து கலக்கும் 'இன்னெரசானி'யுடன் இணைந்து கிழக்கு நோக்கி பாபிகொண்ட எனும் மலைப்பாதைகளில் வளைந்தும், நெளிந்தும், சுற்றித் திரிந்து இராஜமுந்திரியை அடைகிறது. இராஜமுந்திரியில் மூன்று கிலோ மீட்டர் அகலமுள்ள கோதாவரி சுமார் ஏழு மைல் தொலைவு கடந்தும் ஆறு கிலோ மீட்டர் அகலமுள்ள தவளேசுவரத்தில் கடலெனக் காட்சி தரும் அழகை யாரோ கண்டு களியாதார்?

தவளேசுவரத்திலிருந்து பின் கோதாவரி, வசிஷ்ட கோதாவரி, கௌதமீ கோதாவரி எனும் இரு பிரிவுகளாகப் பிரிந்து விடுகிறது. வஸிஷ்ட கோதாவரி, விருத்த கௌதமியாக பிரிந்து யானாம் அருகிலும், வசிஷ்ட கோதாவரி நரசாபுரம் அருகிலும் கடலில் கலக்கின்றன.

மகாராஷ்டிர மாநிலத்தில் எழுநூற்றென்பது கிலோ மீட்டரும், ஆந்திரத்தில் எழுநூற்று இருபது கிலோமீட்டரும் பயணம் செய்த கோதாவரித்தாய், தாய் வீட்டையும், புகுந்த வீட்டையும் சமமாக [illegible] பெருமைப்படுத்தி புனித நதிகளுள் ஒன்றெனப் புகழ் பெற்றாள். மகாராஷ்டிரத்தில் ஜாயக்வாடி [illegible] ராஜக்ட், ஆந்திரப் பிரதேசத்தில் [illegible] போச்சம்பாடு பிராஜக்ட், கடம், நிஜாம் சாகர்,

போசாரம், போல வரம் பிராஜக்ட் முதலிய நீர் மின் திட்டங்கள் மூலம் இன்னும் வளப்படுத்தி இந்திய மக்களின் அன்னபூரணியாக விளங்கும் கோதாவரியை 'புவியினுக்கணியாக' அமைந்துள்ளது என்று கம்பன் பாராட்டுவது பொருத்தமாகவே உள்ளது.

மேற்கு மலைத் தொடரில், மராட்டிய மாநிலத்தில் மகாபலேஸ்வரத்தில் உற்பத்தியாகும் கிருஷ்ணா நதி, சதாரா மாவட்டத்தில் பாய்ந்தோடி வந்து, பெண்ணையாற்றுடன் கலந்து கர்நாடக மாநிலத்தில் பிரவேசித்து, பெல்காம், பீஜப்பூர், ராய்ச்சூர் மாவட்டங்களில் பாய்ந்து வருகிறது. ஐரால், வார்னியா, இட்கங்கா, கடப்பிரபா, மல்ப்பிரபா, பீமரதி, துங்கபத்ரா ஆகிய துணைநதிகள் கலக்கின்றன. கிருஷ்ணா நதி மகபூப் நகர் மாவட்டம் சங்கமேஸ்வரத்தினருகே ஆந்திர நாட்டில் புகுகிறது. முன்னூற்று என்பது மைல் தூரம் பாய்ந்து வளப்படுத்தி கடலில் கலக்கிறது. கிருஷ்ணா நதி கர்நூல் மாவட்டம் ஸ்ரீசைலத்தில் வருகிறது. அங்குள்ள அணைக்கட்டில் தங்குகிறது. இந்த ஸ்ரீசைலம் திட்டத்தின்படியே சென்னைக்கும் குடிநீர் வழங்க அண்மையில் தமிழக ஆந்திர முதல்வர்கள் ஓர் ஒப்பந்தம் செய்து இருநாட்டுறவுக்கும் இணையற்ற தொண்டாற்றினர். கிருஷ்ணா நதி குண்டூர் அருகே நிருமித்த நாகார்ஜுனாசாகர் அணைக்கட்டில் ஓய்வு கொண்டு பின் விஜயவாடா சென்று ஹம்சலதீவி அருகே கடலில் கலக்கிறது.

நாகார்ஜுன சாகர் புராஜக்ட் இந்திய நாட்டின் மிகப் பெரிய அணைக்கட்டுகளில் ஒன்று. இந்த அணைக்கட்டு நீர்த்தேக்கப் பகுதியில்தான் பிரசித்தி பெற்ற ஆந்திர மன்னர்களான இஷ்வாகு மரபினர் ஆண்ட விஜயாபுரி இருக்கிறது. இங்குதான் சாதவாஹன மன்னர்களின் காலத்திலிருந்து சித்த நாகார்சுனர் என்னும் ஆச்சாரியர் இருந்தார். புத்த மதத்தில் மகாயானப் பிரிவினை உருவாக்கியவரும், பல்கலைக் கழகம் வைத்து ரசாயனம், பௌதிகம், தத்துவம், இலக்கியம், கலைகள் முதலிய பல்கலைகளும் கற்பித்த மேதையும், தருக்கத்தில் புதுநெறி கண்ட ஞானியுமான நாகார்ச்சுனர் பேரில் இந்த அணைக்கட்டு கட்டப்பட்டுள்ளது. பஞ்சாபில் உள்ள பத்ரா அணைக்கட்டுக்கு அடுத்ததாக இந்தியாவில் இரண்டாவது பெரிய அணைக்கட்டு இது. நீர்ப்பிடிப்புப் பகுதி பத்ராவைவிட நாகார்ச்சுன சாகரே பெரியதாகும். இந்த நாகார்ச்சுனசாகர் நடுவே நாகார்ச்சுன கொண்டா எனும் தீவில் ஒரு பழம் பொருட் காட்சிச் சாலையும் வைத்துள்ளனர். படகில் சென்று காணலாம். பழைய பௌத்த மதச் சின்னங்களும், கலைப் பொருட்களும், ஆந்திர நாட்டின் பழமைச்

சிறப்பையும், பண்பாட்டையும் விளக்குகிறது. ஆந்திர நாட்டை திரிலிங்கதேசம் என்பர். இந்நாட்டிலுள்ள பிரசித்தமான சைவ க்ஷேத்திரங்களான ஸ்ரீசைலம் (கர்நூல் மாவட்டம்), திராட்சா ராமம் (கிழக்கு கோதாவரி), சாளேஸ்வரம் (தெலுங்கானா) ஆகிய மூன்று க்ஷேத்திர லிங்கங்களின் பெயரில் திரிலிங்க நாமம் உண்டானதென்பர். திரிலிங்கமே திருகலிங்கமே திரிலிங்கம் என மருவிய தென்பாரும் உள்ளனர். திரிலிங்கமே திரிந்து தெலுங்க, தெலுங்கு என்றானது எனச் சில ஆய்வாளர்கள் கருதுவர். பத்தாம் நூற்றாண்டு சாசனங்களில், 'தெலுங்கு', 'தெலுங்கதமல்லி' முதலிய சொற்கள் காணப்படுகின்றது. தெலுங்கு, தெனுகு என்றும் அழைக்கப்பட்டது. தென் (தெற்கு), தேன் என்னும் சொல்லடியாகப் பிறந்ததாகவும் கருதுகின்றனர். தெலுங்கு, தெலுகு, தெனுங்கு, தெனுகு என்னும் இச்சொற்கள் நாட்டையும், மொழியையும் இனத்தையும் குறிப்பிட்டன. அந்த்ர, ஆந்திர என்ற சொற்களும் வடமொழி இலக்கியங்களிலும், வேதத்திலும் குறிப்பிட்டுள்ளது.

வேதத்தில் ஐதரேய பிராம்மணத்தில் ஒரு கதை வருகிறது. ஹரிச்சந்திரன் இயற்றிய ஒரு வேள்வியின் சுனஸ்சேபன் எனும் ரிஷிகுமாரர் நரபலியிட ஏற்பாடு செய்யப்பட்டது. தாய் தந்தையரால் கைவிடப்பட்டு யாகபசுவாக நியமிக்கப்பட்ட சுனஸ்சேபன் விசுவாமித்திரரை சரணடைந்தான். விசுவாமித்திரர் அவனை அடைக்கலம் தந்து அவனுக்குப் பதிலாக தன் நூறு புத்திரர்களை அணுகி அவர்களில் ஒருவனை யாகபசுவாக இருக்கும்படி வேண்டினான். தம் உயிரிழக்க விரும்பாத அந்த மைந்தர்கள் தந்தை சொற்கேட்க மறுத்தனர். அதனால் சினமுற்ற விசுவாமித்திரர் அவர்களை அநாகரிக மக்களாகும்படி சாபம் இட்டார். அப்படிச் சாபம் பெற்ற மக்கள் 'ஆந்திர', 'புளித்த', 'புண்ட்ர மூதிப', 'சதர முதலியவர்கள்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ருக்வேத ஐதரேய பிரமாணத்தில் காணப்படும் இந்த 'ஆந்திர' என்ற சொல் ஐந்தாயிரம் ஆண்டுக்காலப் பழமையானதாகலின் ஆந்திர மரபு மிகத் தொன்மையான மரபுகளில் ஒன்றெனக் கருதப்படுகிறது.

அசோகனது சாசனங்களிலும், இரண்டாயிரத்து ஐநூறு ஆண்டுகட்கு முற்பட்ட புத்தமத இலக்கியங்களிலும், புராணங்களிலும் ஆந்திரர்களைப் பற்றிய குறிப்புளது. வால்மீகி இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்களிலும்,

தொன்மையான தமிழ்ச் சங்க இலக்கியத்திலும் ஆந்திரர் (வடுகர்)களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இவற்றால் ஆந்திர மக்களின் தொன்மைச் சிறப்பு புலனாகிறது. ஆந்திர மொழி தெலுங்கு மிக இனிமையான மொழியாகும். East of the Italian என்று மேனாட்டாரால் கிழக்கிந்திய இத்தாலிய மொழி எனப் பாராட்டப்படுகிறது. இத்தாலிய மொழியைப் போலவே எல்லாச் சொற்களும் உயிரீறாகவே முடியும் தனிச்சிறப்பு தெலுங்கு மொழிக்கு உண்டு. மேலும், வல்லொலிகளைவிட மெல்லொலிகளே மிகுதி வழங்குவதும் இவ்வினிமைக்கும் காரணமாகும். பிற திராவிட மொழிகளான தமிழ், கன்னடம், மலையாளம் மூன்றும் ஓரின மாகவும், தெலுங்கு மற்றொரு தனிப் பிரிவாகவும் மொழியிய லாளர்கள் கணித்துள்ளனர். தெலுங்கு மொழிச் சொல்லமைப்புக்குச் சில உதாரணங்கள் காண்க.

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| அவன் | வாடு |
| கண் | கண்ணு |
| அவள் | ஆமெ |
| நான் | நேனு |
| வரும் | வச்சுனு |
| செல்லும் | போவுனு |
| கடல் | கடலி |
| வான் | வான |
| அவர் | வாரு |
| கால் | காலு |
| காற்று | கா'லி |
| புற்று | புட்ட |
| தப்பு | த'ப்'ப'ர |
| உப்புதல் | உப்'பு'ட |
| புகழ் | பொக'டு' |

தமிழின் மெய்யீற்றுச் சொற்கள் தெலுங்கில் உயிரீறாகவே முடிவதையும், தமிழ் வல்லெழுத்துக்கள் மெல்லொலிகளாக வழங்குவதும் காண்க. தெலுங்கிலக்கணத்தில் கூறப்படும், 'கசடதபதேஸ சந்தி' அதன் மெல்லொலித் தன்மைக்கு சிறந்த உதாரணமாகும், வல்லொழிகள் கதடதப - தெலுங்கில் க (GA), ச(SA), ட (DA), த (DHA), வ (VA) என்று மென்மையுறுவதால்

இனிமை மிகுகிறது என்று ம் கூறப்படுகிறது. மேலும், வடமொழிச் சொற்களும் தற்பவங்களாக மிகத் திரிந்தும், பிராகிருத மொழிச் சொற்களும் கலந்து தெலுங்கு மொழி திகழ்கின்றது.

| சமஸ்கிருதம் | தெலுங்கு |
|---|---|
| குர்க்குர | குக்க |
| லக்ஷ்மி | லச்சி |
| ஸ்ரீ | சிரி |
| ரத்னம் | ரத்னாலு |
| ஹம்ச | அஞ்ச |
| ஸ்னிக்தம் | நித்தமு |

வடவாரிய மொழி நாகரிகங்கட்கும், தென் திராவிட மொழி நாகரிகங்கட்கும் இடைப்பட்ட நிலப்பகுதியில் நிலவுவதால் தெலுங்கு மொழி வடகலையும், தெற்கையும் இணைந்த பண்பாடுடைய மக்கள் மொழியாக அமைந்துள்ளது.

தெலுங்கு எழுத்துக்கள் முத்துக் கோர்த்தாற்போல உருள் வடிவினதாக, அழகாக அமைந்துள்ளது. இந்திய நாட்டின் எந்த மொழியையும் தெலுங்கு எழுத்தில் எழுதலாம். வட இந்திய மொழிகட்கு எகர, ஒகரங்கள் இல்லாததால் பிற தென்மொழிச் சொற்களை எழுத இயலாது. புதிய குறியீடுகளை அமைத்துக் கொண்டுதான் எழுத நேரும். தமிழில் வடசொற்கள அனைததையும் எழுத முடியாது. கன்னடமும், தெலுங்கும் ஒரே எழுத்தே (லிபி) ஆகும். மராட்டியில் உள்ள சில பிராகிருதச் சொற்களுக்குரிய விசேச எழுத்து அமைப்பு ச்- (tch-), ஜ் (ZA) எனும் ஒலி எழுத்துக்களும் தெலுங்கில் உண்டு. மலையாளத்தில் இல்லை. ஆதலின் இந்திய மொழிகள் அனைத்துக்கும் ஏற்ற எழுத்தாக தெலுங்கு எழுத்து அமைந்துள்ளது. J.B.S. ஹால்டன் எனும் உயிரியல் அறிஞரும், நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானியும், இந்திய நாட்டில் வாழ்ந்து நமது பாரதப் பண்பாட்டை உணர்ந்தவருமான அறிஞர், 'இந்திய நாட்டின் பொது லிபியாக இருக்கத்தகுந்தது. தெலுங்கு லிபியே' என்று பரிந்துரை கூறியுள்ளார். அசோகனது கற்சாசனங்களில் காணப்படும் பிராம்மி லிபியிலிருந்து கிளைத்ததே தெலுங்கு லிபியாகும். பிராம்மி லிபியினின்றும் உருவாகி வளர்ச்சியுற்றவையே, இந்திய மொழிகளின் அனைத்து லிபி (எழுத்து)களும் என்பது ஆய்வாளர் கண்ட முடிவாகும்.

## ஆந்திர மன்னர்கள்

தெலுங்கு நாட்டை முதன் முதலில் ஆண்ட மன்னர் மரபு சாதவாகனர்கள் ஆகும். கி.மு. 235 - 221 வரை ஆண்ட சாதவாகன மன்னன் மிகச் சிறந்த பேரரசாகத் திகழ்ந்தான். கோதாவரிக் கரையில் பிரதிஷ்டானபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். இந்த சாதவாகன மரபு நானூற்றைம்பது ஆண்டுகள் ஆண்ட சிறப்புடைய மன்னர்களையுடைய மரபாகும். சிமுகன் (கி.மு. 221 - 198) சிமுகன் சகோதரன் கிருஷ்ணன் (கி.மு. 198 - 180), சாதக்ர்னி (கிருஷ்ணனின் மகன் முதலாம் சாதகர்ணன்), (கி.மு. 180 - 170) ஆண்டில் ஆண்டனர். இவனது குமாரன் பூர்னோத்ஸங்கன் (கி.மு. 170 - 152) இரண்டாவது சாதகர்னி (கி.மு. 152 - 96), லம்போதரன் (கி.மு. 96 - 78), ஆபீலகன் (கி.மு. 78 - 66) ஆகியோர் ஆண்டனர். பின்னர் குந்தல சாதகர்னி (கி.பி. 38 - 30) தன் காலத்தில் நாடு பரப்பியதோடு வடமொழி, பாகத ஏடுகளைப் பாதுகாத்து இலக்கிய வளமும் உருவாகச் செய்தான். அவனுக்குப் பிறகு புலோமாயி (கி.மு. 30 - 6) ஆண்டான். பின் அரிஷ்டகர்ணன் கி.பி. 19 வரை ஆண்டான்.

இவனுக்குப் பின் வந்த பெருமன்னன் ஹாலசாதவாஹனன். கி.பி. 19 - 24 வரை ஆண்டான். இவன் காலத்தில் பிராகிருத மொழி வளம் பெற்றது. புகழ்மிக்க பேரிலியக்கியங்களான ★ காதாசப்தசதி எனும் அகப் பொருட் தொகை நூலும், குணாட்டியரின் பிருகத்கதை எனும் பெருங் கதையும், லீலாவதி எனும் பிராகிருத நாடகமும் இக்காலத்தில் தோன்றின. ஹாலன் சிறந்த கவிஞனும், வள்ளலுமாவான். பிராகிருத மொழி இலக்கியத்துக்கு ஹாலன் செய்த தொண்டு அளப்பரியது. ஹாலனுக்குப் பின் ஆண்ட கௌதமீபுத்ர சாதகர்ணி கி.பி. 78 - 102 ஆண்டுகளில் அரசாண்டான். இவர் காலத்தில் ஆட்சி மாட்சியுடன் திகழ்ந்தது. பல வெற்றிகளை அடைந்தான். கலிங்காந்திரப் பகுதியை நிலை நிறுத்தியபின், வடபுல அரசர்களையும், தென்புல சோழ அரசுகளை கப்பம் பெற்றுச் சிறப்புடன் ஆண்டான். இவனுக்குப் பிறகு, வாசிஷ்டீ புத்ர புலுமாயி 2 கி.பி. 102 - 130 வரை ஆண்டான். மூன்றாம் புலுமாயி கி.பி. 211 - 218 வரை ஆண்டான். இவனுடன் சாதவாஹனப் பேரரசு வீழ்ச்சியுற்றது.

பதிற்றுப் பத்தில் சேரமன்னர் பரம்பரையை - தாய் பெயரையும் குறிப்பிட்டுச் சொல்லும் மரபு காணப்படுவது போல

---

★ *காதாசப்தசதி - இந்நூலாசிரியரால் தமிழாக்கம் செய்யப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.*

அக்கால சாதவாஹன மன்னர்களையும் தாய் பெயரையும் குறிப்பிட்டு அழைக்கும் மரபு அமைந்துள்ளது குறிப்பிடற்குரியதாகும். சாதவாகனர்க்குப் பின் இக்ஷ்வாகு கு மன்னர்கள் வடபகுதியையும், பல்லவ மன்னர்கள் தென் பகுதியையும் ஆண்டனர். இக்ஷ்வாகு மன்னர்கள் காலத்தில் பௌத்த மதம் ஆந்திர நாட்டில் சிறப்புற்றிலங்கியது. பல்லவர்கள் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை ஆந்திர நாட்டினையும், தமிழகத்தின் வடபுலத்தையும் அரசாண்ட மன்னர் மரபினர் ஆவா.

பல்லவர்கள் ஆந்திரர்களே என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். வின்செண்ட் ஸ்மித் - டாக்டர் கிருஷ்ணசாமி அய்யங்கார், நேலடூரி வெங்கடராமய்யா ஆகியோர் இந்தக் கருத்துடையவர்கள் ★ பல்நாடு எனும் தெலுங்கு நாட்டின் பகுதியின் பெயரடியாக பல்லவர் என வந்ததாகக் கருதுவர். பஹ்லவ எனும் மேனாட்டின மரபினரே பல்லவர் எனக் கருதுவோரும் உண்டு. பல்லவர்கள் காஞ்சிபுரம் தலைநகராகக் கொண்டு தென்னகத்தில் கலைகளும், இலக்கியமும் வளர்ந்து புகழ்பெற்ற அரசர்களாகத் திகழ்ந்தனர் பல்லவர்கள் வரலாறு தமிழக வரலாற்றுடன் இணைந்த வரலாறாதலின் விரிந்துரைக்க வேண்டியதில்லை. கி.பி. ஆறாம், ஏழாம் நூற்றாண்டுகளில் ஆந்திர நாட்டை சாளுக்கிய மன்னர்கள் சிறப்புடன் ஆட்சி புரிந்தனர். தெலுங்கானா பகுதியில் (ஓரங்கல்) நகரை தலைநகராகக் கொண்டு ஆண்ட காகதீயர்கள் ஆந்திர நாட்டு வரலாற்றில் சிறப்பிடம் பெறும் மன்னர்கள் ஆவார்கள்.

முதலாம் பேதராஜு கி.பி. 1000 - 1030 வரை ஆண்ட காகதீய மன்னன் முதல் ப்ரோல ராஜு கி.பி. 1030 - 1075 இரண்டாம் பேதராஜு கி.பி. 1075 - 1110. இரண்டாம் ப்ரோல ராஜு (1110 - 1158) வரை ஆண்டனர். காகதீய மன்னர்களில் மிகச் சிறந்தவர்களும், கலைகளைப் பேணி வளர்த்தவர்களுமான ருத்ரதேவன் (1158 - 1195) பிரதாப ருத்ரன் (1296 - 1323) முக்கியமானவர்கள் பிரதாபருத்ரனைக் கம்பன் கண்டு பரிசில் பெற்றதாக கதையுண்டு. இவனுடைய காலத்தில்தான் இராமானுஜரின் விசிஷ்டாத்வைத வைணவ மதம் ஆந்திர நாட்டில் பரவியது. கி.பி. 1324 - 1424 வரை ரெட்டி அரசினர்கள் ஆண்டனர். பிற குறுநில மன்னர்களும் ஆங்காங்கே அரசாட்சி செய்து வந்தனர்.

---

★ ஆந்த்ருல சரித்ர - ஸம்ஸ்க்ருதி (தெலுங்கு) 1951.

காபய நாயக்கர், கொண்டவீடு ப்ரோலய வேமாரெட்டி (1324 - 1353), அனபோதாரெட்டி (1353 - 1364), அனவேமா ரெட்டி (1364 - 1386) ஆகிய மன்னர்கள் முக்கியமானவர்கள்.

தென்னகத்தின் மிகப் பிரபலமான மன்னர் மரபு விஜயநகர சாம்ராஜ்ய அதிபதிகளாகும். முஸ்லீம் மன்னர்களின் படையெடுப்பை ஹரிகர புக்கர்கள் 1336ல் வித்யாநகரத்தை உருவாக்கினர். சிறந்த வேதாந்தியும், மேதாவியுமான வித்யாரண்யரின் ஆசியுடன் இந்த சாம்ராஜ்யம் தொடங்கப் பெற்றது. ஹரிஹரர் (1336 - 1355), அவர் சகோதரர் புக்கராயர் (1350 - 1377), இரண்டாம் ஹரிஹர ராயர் (1377 - 1404) ஆகியோர் சிறப்புடன் ஆண்டான். சாளுவ வம்சத்தைச் சேர்ந்த நரசிங்கராஜு (1485 - 1491), கலிங்கம், தொண்டை நாடு வரையும் வென்று அரசினை விரிவாக்கினார்.

துளுவ வம்ச வீரநரசிம்மராயர் (1503 - 1509) பதவிக்கு வந்தார். இவரது இரண்டாம் மனைவி நாகமாம்பா மகன் கிருஷ்ணதேவராயர் (1509 - 1537) பட்டத்துக்கு வந்த பின்னர், கலிங்கம், தமிழகம், சிங்களம், கேரளம் ஆகிய தென்னாடுகள் அனைத்தையும் ஒரு குடைக்கீழ் கொணர்ந்து ஆட்சி புரிந்தார். இவரது காலத்தில் தெலுங்கிலக்கியமும், வைணவமும் தழைத்தோங்கியது. இவரது காலம் பொற்காலம் எனப் புகழ் பெற்றது. அச்சுத தேவராயர் (1530 - 1542), சதாசிவராயர் (1543 - 1576), அளிய ராமராஜு ஆகியோருக்குப் பின் விஜயநகர சாம்ராஜ்யம் மகம்மதிய அரசர்கள் கைக்குச் சென்று சிதிலமடைந்தது.

தஞ்சை, மதுரை நாயக்க மன்னர்கள் சோழ, பாண்டிய மண்டலங்களில் இருந்து சுதந்திரமாக ஆட்சி புரிந்து தெலுங்கிலக்கியத்தை வளர்த்து கலைகளைப் பேணி வந்தனர். மராட்டியர், மகம்மதியர் படையெடுப்புகட்கும் பின் ஆங்கிலேயர் கையில் நம் நாடு அமையப்பட்டது. சுதந்திரப் போராட்டங்கட்குப் பின்னர் நாடு சுதந்திரம் அடைந்ததும், சென்னை மாநிலமாக இருந்த ஆந்திர நாட்டை பண்டித ஜவகர்லால் நேரு காலத்தில் பொட்டி ஸ்ரீராமலு அவர்களின் உயிர்த் தியாகத்தால் ஆந்திர மாநிலம் உருவானதும், ஹைதராபாத் சமஸ்தானத்தை இணைத்து ஆந்திர பிரதேஷ் உருவானதும் அண்மைக்கால வரலாறுகள் ஆகும்.

சாதவாஹனர்கள், பல்லவர்கள், காகதீயர்கள், சாளுக்கியர்கள், விஜயநகர சாம்ராஜ்யாதிபதிகள் ஆகிய ஆந்திர

மன்னர்கள் காலத்தில் தெலுங்கு மொழி நல்லிலக்கியங்களை உருவாக்கி வளமுடன் செழித்தோங்கியது. தெலுங்கிலக்கியம் மிகவும் வளமுடைய இலக்கியமாகும். இந்திய மொழிகளில் வடமொழி, தமிழ் ஆகிய இருமொழி இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட காலத்திலேயே தோன்றிவிட்டன. கன்னட இலக்கியம் ஒன்பதாம் நூற்றாண்டிலும், தெலுங்கு இலக்கியம் பத்தாம் நூற்றாண்டிலும் கிடைக்கின்றன. தமிழ், கன்னட மொழிகளில் பழமையான சமண, பௌத்த இலக்கியங்கள் கிடைத்துள்ளன. ஆனால், தெலுங்கில் தொன்மையான இலக்கியங்கள் கிடைக்கவில்லை என்று கருதப்படுகிறது.

தெலுங்கிலக்கியத்தின் தொடக்கமே தமிழக ஆந்திர மன்னர்களின் உறவில் விளைந்த கொடை என்றே கருத வேண்டும். கீழைச் சாளுக்கிய மன்னன் சக்தி வர்மா (கி.பி. 999 - 1011) இராஜ மஹேந்திரவரம் பகுதியான வேங்கி நாட்டை ஆண்டான். இவனுக்குப் பிறகு விமலாதித்தன் (1011 - 1018) ஆண்டான். விமலாதித்தன் சோழ மன்னர்களுடன் உறவு கொண்டு இருந்தான். இவன் இறுதிக் காலத்தில் சமண மதத்தைத் தழுவியதாகவும் ஒரு சாசனம் தெரிவிக்கிறது. விமலாதித்தன் சோழமன்னன் இராசராசனின் மகள் குந்தவையை மணந்தான். இவளது மகனே இராஜ இராஜ நரேந்திரன்.

விமலாதித்தனின் மற்றொரு மனைவி தெலுங்குச் சோழரின் மரபில் வந்த 'மேளம்மா'வின் மகன் விஜயாதித்தன். விஜயாதித்தனை விரட்டி இராஜேந்திர சோழன் இராஜராஜ நரேந்திரனைப் பட்டத்திலமர்த்தினான். கி.பி. 1022ல் பட்டம் ஏறிய இம்மன்னன் கி.பி. 1061 வரை அரசாட்சியில் இருந்து கலைகளையும், தெலுங்கிலக்கியத்தையும் வளர்த்து புகழ்மிக்க அரசனாகத் திகழ்ந்தான். இந்த இராஜ இராஜ நரேந்திரனின் காலத்தில் தான் நன்னய தமது 'மகாபாரதம்' இயற்றினார். இதுவே தற்போது நமக்குக் கிடைக்கும் 'முதல் தெலுங்கு இலக்கியமாகும்.'

நன்னயர் தமிழ்நாட்டிலிருந்து சோழ மன்னன் அவையிலிருந்து ஆந்திர நாட்டுக்குச் சென்ற அந்தணராக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. இவர் மகாபாரதத்தில் முதல் மூன்று பருவங்கள் மட்டுமே சுதந்திரமான தழுவல் மொழி பெயர்ப்பாகச் செய்தார். நூற்றுக்கு அறுபது விழுக்காடு வடசொற்களும், நாற்பது விழுக்காடு தெலுங்குச் சொற்களும் பெய்து தமது அழகிய நடையில் செய்யுட்கள் இயற்றிப் புகழ் பெற்றார். நெல்லூர் பகுதியை ஆண்ட

மனுமசித்தி என்னும் குறுநில மன்னனின் அவைக்களத்தில் வாழ்ந்த மகாகவி திக்கன்னா பதிமூன்றாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இருந்தவர். இவர் மிகச் சிறந்த கவிஞராவார். இராஜ தந்திரியும் கூட. இவர் நன்னய எழுதாதுவிட்ட மகாபாரதத்தின் மீதி பதினைந்து பருவங்களையும் தெலுங்காக்கம் செய்தார். இவர் தெலுங்குச் சொற்கள் அறுபது விழுக்காடும், வடசொற்கள் நாற்பது விழுக்காடும் உள்ள எழில் மிக்க தெலுங்கு நடையில் செய்யுள் இயற்றினார். நன்னயர் மூன்றாம் பருவமாகிய அரண்ய பருவத்தில் பாதி தான் எழுதியதாகவும், மீதி எழுதுமுன் சித்த பிரமை வந்து இறந்து விட்டார் என்றும், முன்னைய சமண நூல்களை எரித்தழித்ததால் சாபக் கேடாக இந்நிலைமையுற்றார் என்றும் கதைகள் வழங்குகின்றன. திக்கனவிற்குப் பின் வந்த எர்ராபிரகட பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதியில் நன்னய நடையையும், திக்கனா நடையையும் இணைவித்து வட சொற்களும், தெலுங்குச் சொற்களும் சமமாகக் கலந்து மகாபாரதத்தை முழுமை செய்தார்.

இம் முப்பெருங்கவிஞர்களே தெலுங்கிலக்கியத்தில் மூலவர்களாகவும், பிரமாணிகர்களாகவும் கருதப்படுகின்றனர் கவித்திரயம் என்று பாராட்டப்படும் இக்கவிஞர்கள் படைத்த மகாபாரதம் வியாசபாரதத்தைவிட உயர்ந்த தனிச் சிறப்புடன் இருக்கிறது என்று கூறுவர். வால்மீகி இராமாயணத்தைவிட கம்ப ராமாயணம் தனிச் சிறப்புடைதெனக் கருதப்படுவது போலவே முப்பெருங் கவிஞர்களால், மகாபாரதமும் கருதப்படுகிறது. தமிழ்நாட்டில் கம்பராமாயணத்துக்கே சிறப்பு. ஆனால், தெலுங்கு நாட்டில் தெலுங்கு ராமாயணத்தைவிட மகாபாரதத்துக்கே அதிகச் சிறப்புண்டு.

*திண்ட்டே காரெலு தினாலி*
*விண்ட்டே பாரதம் வினாலி*

என்று தின்றால் மெதுவடை தின்ன வேண்டும், கேட்டால் பாரதம் கேட்க வேண்டும் என்ற பழமொழி மக்களிடையே பாரதம் பெற்ற செல்வாக்கை உணர்த்துகிறது.

மக்கள் மொழியில் புரியும் நடையில் இனிய தெலுங்கில் (ஜானு தெலுங்கு), பன்னிரண்டாம் நூற்றாண்டில் சிவகவி பாலகுரிகி சோமநாதர், 'பஸவபுராணம் பண்டிதாராத்ய சரித்ர' எனும் காவியங்களை இயற்றினார். மற்றொரு கவிஞரான உறையூர் அதிபதி

என்றும் கரிகால சோழன் மரபினன் என்றும் தன்னைக் கூறிக்கொண்ட நன்னசோடன் எனும் அரசகவி, 'குமாரசம்பவம்' எனும் அழகிய காவியம் படைத்தார். பதிமூன்றாம் நூற்றாண்டில் சைவப் பற்று மிக்க ஸ்ரீநாத கவியும், வைணவப் பற்று மிக்க பம்மெர போதனாவும் சமகாலத்தில் வாழ்ந்த இரு பெரும் கவிஞர்கள் ஆவார்கள். போதனாவின் பாகவதம் மக்கள் ஆதரவைப் பெற்றது. சுயமான, இயல்பான புலமை பெற்றவர் போதனா. பாண்டித்தியத்தின் மிடுக்கும், அரசவைப் புலவரெனும் செருக்கும் உடைய பெரும் புலவர் ஸ்ரீநாத கவி. இருவரும் மாமன் மைத்துனர் உறவுடைய வர்களே. ஸ்ரீநாதகவியின் 'பல்நாடி வீர சரித்ர' தெலுங்கு நாட்டில் திகழ்ந்த பாரதக் கதை போன்ற மண்ணுக்கான போர் பற்றிய வீர வரலாறு ஆகும். நைடதம், ஹரவிலாசம், காசிகண்டம், பீமகண்டம் முதலிய பல நூல்களை எழுதி கனகாபிஷேகம் பெற்ற கவிஞர் இவர். இவ்விரு கவிஞர்களைப் பற்றிப் பல கதைகள் நிலவுகின்றன. ஸ்ரீநாதகவி சைவ மதாபிமானி. பாண்டியத்தியச் செருக்குடையவர். போதனா எளிய வாழ்க்கையுடைய இயற்புலமையாளர். இருவருக்கும் உள்ளூர முரண்பாடுகள் உண்டு. ஒரு சமயம் போதனா தமது பாகவதத்தை ஸ்ரீநாதரிடம் படித்துக் காட்டினார். அப்போது, 'கஜேந்திரமோட்சம்' கதை வருணனைப் பகுதியை படித்தார். அதில், 'சிரிகிம் செப்படு சங்கு சக்ரமு சேதோயி சந்திப்படே' என்று தொடங்கும் பாடலைப் பாடிக் காட்டினார். திருமால் தன்னை ஆதிமூலமே என்றழைத்த ஆனையைக் காக்க ஓடோடி வரும்போது திருமகளிடமும் கூறாமல் மேல்துண்டையும் போட்டுவிட்டு சங்கு சக்கரங்களையும் கையில் எடுக்காமல், கருடனிலும் ஏறாமல் ஓடோடி விரைந்து வந்தான் என்பது அப்பாடலின் பொருள். அப்பாடலைக் கேட்ட ஸ்ரீநாதகவி, 'என்ன பாவா? (மைத்துனரே) ஒரு கருவியும் எடுக்காமல், வெறுங் கையோடு ஸ்ரீமந் நாராயணன் வந்ததாக வருணித்துள்ளீரே! சங்கு சக்கரமில்லாமல் வந்தென்ன பயன்? பொருத்தமாக இல்லையே!' என்று ஆட்சேபித்தாராம். இதற்கு மறுப்புரை வழங்காத போதனர் சில நாட்கள் கழித்து ஒரு நாள் ஸ்ரீநாதரை விருந்துக்கழைத்தார். ஸ்ரீநாதரும் வந்து உறவினருடன் உணவுண்டு கொண்டிருந்தார். சிறிது முன்பாகவே எழுந்திருந்து வெளியே வந்த போதன்னா, புழக்கடைக் கிணற்றில் ஒரு கல்லைப் போட்டு ஓசை உண்டாக்கி, ''பாவா! பாவா! உன் மகன் கிணற்றில் விழுந்து விட்டான்'' என்று கூக்குரலிட்டார். அதுகேட்ட ஸ்ரீநாதர் விழுந்தடித்துக்கொண்டு ஓடி வந்து கையையும் அலம்பாமல் கிணற்றைச் சுற்றி வந்தவாறே, ''எங்கே? எங்கே?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார். உடனே, போதனா, ''பாவா! பயப்படாதீர்!

யாரும் விழவில்லை. சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன்! அது சரி! குழந்தை விழுந்து விட்டான் என்று கேள்விப்பட்டதும் ஓடோடி வந்தீரே! கிணற்றிலிருந்து எடுக்கும்படியாக கயிறு, பாதாளக் கரண்டி, ஏணி முதலிய எந்த ஒரு கருவியும் கையில் எடுக்காமல் ஏன் ஓடி வந்தீர்? வெறுங் கையோடு வந்து என்ன பயன்?'' என்று கேட்டார். அது கேட்ட ஸ்ரீநாதர் வெட்கித் தலைகுனிய, போதன்னா, ''உம் மகனைக் காப்பாற்ற எப்படி ஓடோடி வந்தீரோ, அப்படித்தான் ஆண்டவன் தன் குழந்தையான பக்தனைக் காப்பாற்றவும் ஓடோடி வந்தான்'', என்று அறிவுறுத்தினார். இவ்விரு பெருங்கவிஞர்களும் தெலுங்கிலக்கியத்தை வளப்படுத்திய வீரகவிகளாவர்.

நாசன சோமன்னாவின், 'ஹரிவம்சம்', 'ரங்கநாத இராமாயணம்', 'பாஸ்கர இராமாயணம்' முதலிய நல்லிலக்கியங்கள் பன்னிரண்டு, பதிமூன்றாம் நூற்றாண்டுகளில் தோன்றின.

தெலுங்கிலக்கியத்தில் இருந்த புராணப் போக்கையும், மொழியாக்கப் போக்கையும் மாற்றிய முதல்வராக அலசானி பெத்தன்னா கருதப்படுகிறார். இவரே பிரபந்த காவியகர்த்தர்களில் முதல்வர். கிருஷ்ண தேவராயரின் அவைக்களப் புலவராகத் திகழ்ந்தார். இவரது, 'மனு சரித்ர' கவிதை எழில் மிக்க காவியமாகும். கிருஷ்ணதேவராயர் இயற்றியது சூடிக் கொடுத்த சுடர்க்கொடியாகிய ஆண்டாள் சரிதமும், பெரியாழ்வார் சரிதமும் கூறும், 'ஆமுக்த மால்யத' நல்லதொரு காவியமாகும். தெனாலிராமகிருஷ்ணனின் பாண்டுரங்க மகாத்மியம், பிங்களி சூரணா ராகவ பாண்டவீயம் எனும் இந்த ஐந்து பெருங்காவியங்களும் சிறப்பான படைப்புகளாகும். தெலுங்கு பஞ்ச காவியங்கள் எனப்படும் இந்த ஐம்பெருங் காவியங்களும் தெலுங்குத் தாயின் நல்லணிகளாக மதிக்கப்படுகிறது.

தாள்ளபாக அன்னமாச்சாரியார் மரபினர் வைணவ பக்தி இலக்கியத்தை வளர்த்தனர். தூர்ஜடி போன்றவர்கள் சைவ இலக்கிய கர்த்தர்கள். பில்லலமர்ரி பினவீரன கும்மரி மொல்ல, அய்யலராஜு இராமபத்ருடு முதலிய பல கவிஞர்கள் அழகிய காவியங்கள் படைத்துள்ளனர். விஜயநகர சாம்ராஜ்யம் வீழ்ச்சியுற்றதுமே தெலுங்கிலக்கியமும் ஆந்திர நாட்டை விடுத்து தனக்கு ஆதரவு தரும் தமிழகத்தை அண்டி வளர்த்து செழித்துயர்ந்தது. தஞ்சை நாயக்க மன்னர்களும், மதுரை நாயக்க மன்னர்களும் தெலுங்கிலக்கியத்தைப் பேணி வளர்த்தனர். யட்சகானம் எனும் புதிய பிரபந்த வகை

வளமுற்றது. சேமகூர வெங்கடகவி 'விஜய விலாசமு', 'சாரங்கதர' முதலிய காவியங்கள் சிறந்த படைப்புக்களாகும். முத்துபழனி எனும் பெண்பாற் கவியின் எழில் மிக்க படைப்பு, 'ராதிகாசான்த்வனமு' ஆகும். சமுகம் வெங்கட கிருஷ்ண நாயக்கரின், 'அஹல்யா சம்க்ரந்தனமு' மற்றொரு நல்ல காவியமாகும். தஞ்சை மராட்டிய மன்னர்களும், புதுக்கோட்டை தொண்டைமான்களாகிய தமிழ் மன்னர்களும் தெலுங்கில் புலமை பெற்று தாமே காவியங்கள் இயற்றியதோடு பல தெலுங்குக் கவிஞர்களை ஆதரித்தனர். ரகுநாத நாயக்கர், விஜயரங்க சொக்கநாதர் முதலிய மன்னர்கள் கலைகளையும், தெலுங்கிலக்கியத்தையும் தமிழ் மண்ணில் வளர்த்தனர். யோகி வேமனா, வீரப் பிரம்மம் முதலியவர்களும், கூசிமன்சி திம்மகவி (பதினெட்டாம் நூற்றாண்டு), கணபவரம் வெங்கடகவி, எலகூசி பால சரஸ்வதி முதலிய பிற்காலக் கவிஞர்களும் நல்ல படைப்புக்களை வழங்கியுள்ளனர்.

சின்னயசூரி, கந்துகூரி, வீரேசலிங்கம் பந்துலு, பானுகண்டி லட்சுமி நரசிம்மம், குரஜடா அப்பாராவ் முதலியோர் இந்நூற்றாண்டின் தொடக்க காலக் கவிஞர்கள் ஆவர். தற்காலத்து தெலுங்கிலக்கியம் தன் தொன்மைச் சிறப்புக்கேற்ப பல்துறை களிலும் நற்படைப்புக்களை உருவாக்கி சிறப்புற்றிலங்குகிறது. ஆந்திர நாடு, மொழி, இனம், இலக்கியங்களைப் பற்றி ஓரளவு சுருக்கமாகக் கண்டோம். இந்தப் பின்னணியில் ஆந்திர நாட்டில் வைணவம் வளர்ந்து பரவிய வரலாற்றினைக் காண்போம்.

### ஆ. ஆந்திர நாட்டில் வைணவம்

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரேகூட ஆந்திர நாட்டில் வைணவம் இருந்தது என்பதற்கு ஐயமில்லை. ஆந்திர சாதவாகன மன்னர்கள் காலத்தில் வைணவம் வடபுலத்திலிருந்து ஆந்திர நாட்டில் புகுந்தது எனக் கருதப்படுகிறது. சாதவாஹன மன்னர்கள் காலத்திய சாசனங்களில் சங்கருடண, கேசவ, கிருஷ்ண, கோபால, வாசுதேவ நாமங்கள் காணப்படுகின்றன. சாதவாஹன மன்னர்களில் சிறந்த ஹாலன் (கி.பி. முதல் நூற்றாண்டு) தொகுத்த பாகதமொழிப் பேரிலக்கியமான காதாசப்த சதியில் கிருஷ்ணனைப் பற்றிய பல கவிதைகள் உள்ளன. யசோதை - கோபியர்களைப் பற்றியும், ராசலீலை பற்றியும் பல கவிதைகள் உள்ளன.

பின்னர் பல்லவ மன்னர்கள் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை அரசாண்ட காலத்தில்

பல்லவர்கள் வைணவத்தைப் பேணி வளர்த்தார்கள். ஸ்கந்தவர்மா (485 - 510) ஆட்சிக் காலத்தின் இவன் குமாரன் புத்தவர்மனின் மனைவி சாருதேவி தாலூரில் கூளமகாதரகனினால் நியமிக்கப்பட்ட நாராயணனின் தேவகுலத்திற்கு சில நிலங்கள் தானமாகத் தந்த செய்தி கல்வெட்டால் தெரிகிறது. ★ தென்னாட்டில் முதலில் நிறுவப்பட்ட வைணவக் கோயில் இதுதான் என்று கருதப்படுகிறது.

பல்லவ விஷ்ணு கோபவர்மா, உருவு பல்லி கிராமத்தில் இருநூறு நிவர்த்தன (நிவந்தம்) நிலத்தை, கந்துகூரி விஷ்ணு வர்ம சேனாபதி நிர்மித்த விஷ்ணுஹார தேவகுலத்துக்கு (கோயிலுக்கு) இறையிலி நிலம் தந்ததாக ஒரு சாசனம் மூலம் தெரிகிறது.

கி.பி. நான்காம், ஐந்தாம் நூற்றாண்டுகளில் கிருஷ்ணா நதிக்குத் தென்பக்கம் உள்ள பகுதிகளில் வைணவம் தழைத்திருந்ததாகத் தெரிகிறது. பல்லவ மன்னர்களான விஷ்ணு கோபன், குமார விஷ்ணு - நரசிம்மவர்மா என்னும் பெயர்களே வைணவத்தில் அவர்கட்கிருந்த பற்றினைப் புலப்படுத்துகிறது. திருமங்கையாழ்வாரால் குறிப்பிடப்பட்ட இரண்டாம் நந்திவர்மன் காஞ்சியில் பெருமாள் கோயில் கட்டியதும் குறிப்பிடத்தக்கதாகும்.

சாலங்காயன மன்னர்களில் சண்டவர்மா மகன் விஜயநந்தி வர்மா வைணவனாகும். இவன் கி.பி. 410 முதல் 430 வரை ஆந்திர நாட்டின் சில பகுதிகளை ஆண்ட மன்னன். இவன், 'ப்ராலூரி' என்னும் கிராமத்தில் திருலோகநாதன் எனும் விஷ்ணு கோயிலுக்கு ஆருதூரு, முண்டூரு, செஞ்செருவு, கம்புராம் செருவு எனும் கிராம நிலங்களை மானியமாகத் தந்துள்ளான்.

கி.பி. ஐந்து, ஆறாம் நூற்றாண்டுகளில் சிறப்புற்றிலங்கிய விஷ்ணு குண்டி மன்னர்களும் சைவத்துடன் வைணவமும் பேணி வளர்த்தனர். இவர்கள் காலத்தில் உண்டவல்லி குகை ❐ ஆலயத்தில் மிகப் பெரிய அனந்த சயன விக்கிரகம் பள்ளி கொண்ட திருக்கோலத்தில் செதுக்கப்பட்டுள்ளது. நரசிம்ம விக்கிரகமும், தசாவதாரங்களும் செதுக்கப்பட்டுள்ளன.

---

★ *மனசம்ஸ்க்ருதி - சரித்திர நவோதய சமிதி - ஹைதராபாத் 19[illegible]*

❐ *உண்டவல்லி குகை விஜயவாடாவிலிருந்து மூன்று மைல் தொலைவில் உள்ளது.*

மொகல்ராஜபுர குகை ஆலயத்தில் கண்ணன் கோவர்த்தன கிரியை எடுத்தது, வராகாவதாரம், நரசிம்மாவதாரம், திரிவிக்கிர மாவதாரம் ஆகிய சிற்பங்கள் அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன.

கங்கவம்ச அரசர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் வைணவக் கோயில்கட்கு நிலங்கள் தந்த சாசனங்கள் உள்ளன.

கி.பி. ஆறாம் நூற்றாண்டில் கங்க வம்ச அரசர்கள் வைணவக் கோயில்களைப் பேணியதோடு நிலமானியங்களும் தந்து விஷ்ணு பக்தர்களாகத் திகழ்ந்தனர். இவர்கள் பல விஷ்ணு கோயில்களை நிருமானித்தனர். ஸ்ரீகூர்மம், பூரி ஜகந்நாதர் கோயில்கள் இவர்கள் நிர்மானித்தவை ஆகும். ★

கீழைச் சாளுக்கிய மன்னர்கள் காலத்தில் வைணவம் சிறப்பாக வளர்ச்சியுற்றது. விஷ்ணு வர்த்தன மகாராஜா விஷ்ணுவின் அவதாரமாகவே கருதப்பட்டான். சாமர்லகோட்ட விஷ்ணுவாலயம் இவர்கள் காலத்தில் நிர்மானிக்கப்பட்டது.

பதினொன்றாம் நூற்றாண்டில் ராஜராஜ நரேந்திரன் காலத்தில் சைவமும், வைணவமும் சமமாக மதிக்கப்பட்டது. எனினும், ஆங்காங்கே முரண்பாடுகள் தோன்றத் தொடங்கின. இவன் மகன் குலோத்துங்க சோழன் சைவப் பற்றுடையவனாகி இராமானுஜரை வெறுத்தான். இராமானுஜரும் தமிழகம் நீங்கி கர்நாடக நாட்டில் மேல் கோட்டைக்குச் சென்று அம்மன்னன் ஆதரவில் இருந்தார். குலோத்துங்கன் மறைந்த பிறகு மீண்டும் தமிழகம் வந்து தம் தரிசனத்தைப் பரப்பினார்.

இராமானுஜர் ஆந்திர நாட்டில் சுற்றுப்பயணம் செய்து தம் தரிசனத்தைப் பரப்பினார். வடநாட்டு யாத்திரைக்குப் பின், பூரி ஜகந்நாதர் கோயிலுக்கு வந்தார். பூரி ஜகந்நாதர் கோயில் பண்டாக்கள் அவரை உள்ளே விடவும் மறுத்தனராம். சங்கரர் தம் அத்வைத சித்தாந்தம் பரப்பி, சைவ, வைணவ மதம் இரண்டையும் சமமாகக் கருதினார். அவருடைய செல்வாக்கு இந்தியா முழுவதும் பரவியது போலவே, ஆந்திர நாட்டிலும் பரவி இருந்தது. சங்கரரும், பத்ராச்சலம், அகோபலம், சிம்மாசலம் முதலிய வைணவத்

★ *மனசமஸ்கிருதி - சரித்ர - ஆந்திர தேசமுன சைவமு, வைஷ்ணவமு - டீ. சரீமா, எம்.ஏ.,*

தலங்கட்கு சென்று ஆகம விதிப்படி சக்கரங்களையும் ஸ்தாபித்துச் சென்றார். பூரி ஜகந்நாதர் கோயிலும் அவர் செல்வாக்குக்குட் பட்டிருந்தது. பூரியில் அவர் நிறுவிய மடம் இன்றும் உள்ளது. புதிய விஸிஷ்டாத்வைத சித்தாந்தம் நிறுவியபடியால் ஸ்ரீராமானுஜரை ஜகந்நாதர் கோயிலுக்கு உட்புக விடவில்லை. இறைவன் அவர் கனவில் வந்து, ''ஸ்ரீகூர்மம் சைவர்கள் ஆதினத்திலிருக்கிறது. அதை சீர்திருத்தி வைணவமாக்கும் பணி செய்க'' என்று ஏவியதாகவும், ஸ்ரீகூர்மம் வந்து வைணவ க்ஷேத்திரமாக ஆக்கினார் என்றும் வரலாறு கூறுகிறது. அப்படியே, சிம்மாச்சலம், அகோபிலம் ஆகிய இரு பெரு ஆந்திர நாட்டின் வைணவ க்ஷேத்திரங்கட்கும் வந்து பாஞ்சாராத்திரா கமப்படி பூஜைக் கிரமங்களை வகுத்தார். மேலும், ஆழ்வார்களை பிரதிஷ்டை செய்தும், திருவாய்மொழி, திருப்பல்லாண்டு, திருப்பாவை மற்றும் திவ்ய பிரபந்த நித்யானு சந்தானங்களையும் ஏற்படுத்தி ஒழுங்குபடுத்தினார். அவர் தம் பயணக் காலத்தில் தம்மோடு பல சீடர்களையும் அழைத்துச் சென்று ஆங்காங்குள்ள வைணவ ஆலயங்கட்கு அர்ச்சகர்களையும் நியமித்து வைணவ தரிசனத்தை வலிவான அடிப்படையில் ஆசார அனுஷ்டானங் களுடன் நிலைநிறுத்தினார். அதன்பின் ஆந்திர நாட்டில் வைணவம் சிறப்புற்று வளர்ந்தது. பன்னிரண்டாம் நூற்றாண்டில் திக்கனா சைவ வைணவ பேதத்தை அகற்ற பெருமுயற்சி செய்தார். 'ஹரிஹராத்தைவம்' எனும் புதிய சிந்தனையை மக்களிடையே பரப்ப முயன்றார். எனினும் சைவமும் வைணவமும் தத்தம் முரண்போக்கில் தனித்தனியாகவே வளரத் தொடங்கியது. இக்காலத்தில் பிரதாபருத்திரன் (1254 - 1323) ஆண்டபோது கிருஷ்ண மாச்சாரியார் எனும் தென்னக வைணவ ஆச்சாரியர் சிம்மாச்சலத்தில் இருந்து வைணவத்தைப் பரப்பி வந்தார். பிரதாப ருத்திரனையும் கண்டு ஆதரவு பெற்றதாக பிரதாப சரித்ர, சித்தேஸ்வர சரித்ர எனும் நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவரே தெலுங்கில் முதல் வசன இலக்கியம் தோற்றுவித்தவர் என்று கூறப்படுகிறது. இவர் சங்கீர்த்தனைகள் கூட இயற்றினார். இவரே முதன் முதலில் ஆந்திர நாட்டில் வைணவ தரிசனம் பரப்பிய ஆசாரியராகத் தோன்றுகிறார். இவருடைய 'சிம்மகிரி வசனங்கள்' வைணவத்தினைப் பரப்பிய வரலாற்றுக்குச் சான்றாகத் திகழ்கிறது.

ஸ்ரீநாத கவியால் இயற்றப்பட்ட 'பல்நாடி வீரசரிதம்' தெலுங்கிலக்கியத்தில் மிக முக்கியமான காவியமாகவும், வீர

காதையாகவும் மதிக்கப்படுகிறது. குண்டூருக்கடுத்துள்ள பகுதியே பல்நாடு என்பது. இங்கு கி.பி. 1176 - 1184 காலகட்டத்தில் இப்போர் நடைபெற்றது. இக்கதை மகாபாரதக்கதை போலவே இருந்தாலும் சரித்திர நிகழ்ச்சியாகவே கருதப்படுகிறது. உண்மையான வரலாறும், சிறிது கற்பனையும் கலந்து இந்தக் காவியம் அமைந்துள்ளது. பாரதம் போலவே தாயாதிகளின் போரே காரணம் எனினும் இது சைவ - வைணவ மதப் பூசலும் உட்காரணம் என்று சரித்திர ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் நடுவில் ஹைஹைய வம்சத்தவனாகிய நலகாமராஜன், 'குரஜால' எனும் தலைநகரில் இருந்து கொண்டு பல்நாடு சீமையை ஆண்டு வந்தான். இவனது மந்திரி பிரம்ம நாயுடு. இவன் வைணவ பக்தன். கிருஷ்ணனின் அம்சாவதாரமாகவே கருதப்பட்ட சான்றோன் - இராஜதந்திரி, நற்பண்பினன். நலகாமராஜுவின் தந்தை அனுகுராஜு. இவனுக்கு வீரவித்யா தேவி, பூரமாதேவி, மைலமாதேவி என்று மூன்று மனைவியர். வீரவித்யாதேவிக்கு பெதமல்ல தேவன், பின்மல்ல தேவன், பாலமல்லதேவன் என மூவரும், பூரமாதேவிக்கு நலகாமராஜு, நரசிங்கராஜு, ஜட்டிராஜு, பெருமாள்ராஜு என்று நான்கு பேரும் பிறந்தனர். தொட்டநாயுடு மகன் பிரம்மநாயுடு அமைச்சராக இருந்தான். அனுகுராஜு மரணம் அடைந்தபின் மைலமதேவி மகன் நலகாமராஜு பட்டம் ஏற்றான். பல்நாடு தாலுக்கா, நாகுலேட்டிக்கரையில் சிட்டகாமாலபாடு எனும் சிற்றூரில் ரெட்டி குலத்தில் பிறந்த நாகாம்பா என்னும் நாயகுராலு என்ற வீரப்பெண்மணி நலகாமராஜுவிடம் அமைச்சராகத் திகழ்ந்து இராஜதந்திரத்துடன் அரசியல் விவகாரங்களை நடத்திவந்தாள். பெதமல்ல தேவாதிகளுக்கு மந்திரியாக பிரம்ம நாயுடு, மாச்செர்ல என்ற பட்டணத்தில் இருந்து கொண்டு சிறுவர்களைப் பாதுகாத்து வந்தான். அவர்கள் பெரியவர்கள் ஆனதும் திருமணம் செய்வித்து, மாச்செர்லவில் பட்டம் கட்டி வைத்தான். பிரம்மநாயுடு கப்பம் கட்ட குரிஜாலவுக்கு போனபோது நாயகுராலு விஷமிட்டுக் கொல்ல முயற்சித்தாள். அது பலிக்கவில்லை. பிரம்மநாயுடுவும், மல்ல தேவாதிகளும் வளர்ந்து வருவதும், மக்கள் ஆதரவு பெறுவதும், பொறுக்காத நலகாமராஜுவும், நாயகுராலுவும் சதி செய்து கோழிப் போர் பந்தயம் கட்டச் செய்து, பிரம்மநாயுடு தோற்கும்படி நேரிடுகிறது. ஏழாண்டுகள் தம் நாட்டைத் துறந்து போக நேரிட்டது. கிருஷ்ணா நதியைத் தாண்டி, 'மண்டாதிபட்டணத்தில்' இருந்தனர். ஏழாண்டுகள் கழிந்த பிறகு தம் நாட்டைக் கேட்டனர். அதற்காக

அலராஜு என்பவனைத் தூதனுப்பினர். நாயகுராலு தூதனைக் கொல்வித்தா. அதனால் இரு திறத்தாருக்கும் போர் மூண்டது. பிரம்மநாயுடு தன் புராந்தகம் வழியாக கார்யமபூடி எனும் ஊரில் படை கொண்டு சென்று போரிட்டான். பிரம்மநாயுடு மகன் பாலசந்திரன். இவன் சிறுவன். புதிதாக திருமணம் ஆனவன் எனினும் தம் தந்தையர் போர்க் களத்தில் உள்ளதையறிந்து தானும் சென்று போரிட்டு வீர சுவர்க்கம் அடைந்தான். இவன் மனைவி, 'மாஞ்ச்சால' வீரப்பெண்மணி. தன் கணவனைப் போருக்கு மகிழ்வோடு அனுப்பிய வீரநங்கை. இந்தப் போரில் பிரம்மநாயுடு வெற்றி பெற்றார். பிரம்மநாயுடு கிருஷ்ணனாகவும், பாலசந்திரன் அபிமன்யுவாகவும், நாயகுராலு சகுனியாகவும் அமைய கோழிப்போர் பந்தயமே பெரும் போராக முடிந்த இந்த தெலுங்கு பாரதம் உண்மையான நடந்த வரலாறேயாகும் என்பர். சிறிது கற்பனை கலந்தாலும் பாரதக்கதை போலவே இக்கதையும் இருந்தாலும், வரலாற்றுண்மையே என்பர். நாயகுராலு சைவமதாபிமானி. பிரம்மநாயுடு வீர வைஷ்ணவர். இந்த முரண்பாடே அடிப்படைக் காரணமாகப் போர் மூண்டதாகவும் கூறுவர். இந்த பல்நாடி வீரசரித்திர ஸ்ரீநாதர் போன்ற பெரிய கவிஞர்களால் காவியம் ஆக்கப்பட்டு பிரசித்தி பெற்ற வீரவரலாறாகத் திகழ்கின்றது.

பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டுகளில் சைவ, வைணவக் கோயில்கள் மிகுதியாக நிர்மானிக்கப்பட்டன. சைவ, வைணவ முரண்பாடுகள் கூர்மையடைந்தன. மதப் போராட்டங்களும் நிகழ்ந்தன. தத்தம் மதமே பெரிதென வாதப் போர்கள், மோதுபோர்கள் நடந்தன. கன்னட நாட்டில் பதினொன்றாம் நூற்றாண்டில் பசவரும், தமிழகத்தில் இராமானுஜரும், ஆந்திர நாட்டில் பண்டிதாராத்யரும் தத்தம் மதங்களை வளர்க்கத் தலைப்பட்டனர். அதன் விளைவாக ஆந்திர நாட்டில் கன்னட நாட்டின் வீர சைவமும், தமிழகத்தின் வீர வைணவமும் வந்து தத்தம் செல்வாக்கை நிலைநாட்டப் பாடுபட்டன. இவ்விரு முரண்பட்ட மதங்களின் விளைவாக மதநோக்குடைய பல இலக்கியங்கள் உருவாயின.

கோனபுத்தாரெட்டியின், 'இரங்கநாத இராமாயணம்' வைணவ மதம் பரவுவதற்காகவே எழுதப்பட்டது. திருப்பதியில் வாழ்ந்த தாள்ளபாக அன்னமாச்சாரியார் (1408 - 1503) மரபினர்

அகோபிலம் மடம் ஆதிவன் சடகோபயதிகளிடம் தீட்சை பெற்று வைணவத்தில் தீவிர பக்தி கொண்டு சங்கீர்த்தனைகள் இயற்றி இசையுலகுக்கு அருங்கொடைகள் தந்து கர்நாடக சங்கீதத்தின் பிதாமகர் ஆகத் திகழ்ந்து வைணவ மதத்தை பரப்பினார். இவரது குமாரர் பெத திருமலாச்சாரியர் அச்சுத தேவராயர் காலத்தில் அவருக்கு வைணவ பக்தியூட்டிய ஆச்சாரியர்களில் ஒருவர். இவர் குமாரர் சின்ன திருமலய்யா, பெத திருவவேங்களப்பா, திருவேங்களநாத எனும் சின்னன்ன, கோளேட்டி திருவேங்களநாத முதலிய வைணவக் கவிஞர்கள் சங்கீர்த்தனங்களும், காவியங்களும் இயற்றி வைணவ தருமத்தை ஆந்திர நாட்டில் பெரிதும் பரவக் காரணமாக இருந்தனர். கோதாவரி மாவட்டத்தில் இருந்த கோருகொண்ட பகுதியை ஆண்ட மன்னர்களில் மும்மடி நாய குடு *(1340 - 1388)* வைணவ பக்தராவார். இவர் காலத்தில் தமிழ் நாட்டிலிருந்து வைணவ ஆச்சாரியர்கள் ஆந்திர நாட்டில் பயணம் செய்து தீட்சைகள் தந்து தமது சீடர்களை அதிகப்படுத்தி வந்தனர். பராசர பட்டர் திருவரங்கத்திலிருந்து வந்து மும்மடி நாயகனை தன் சீடராக்கினார். அவன் தன் குருவுக்கு, 'கொட்டாலபுரரு' எனும் கிராமத்தை தானமாகத் தந்தான். பராசர பட்டரும் இங்கேயே வாழ்ந்து திருநாடலங்கரித்தார். ★

வேதாந்த தேசிகரின் குமாரரான வரதாச்சாரியார். தெலுங்கானாவில் உள்ள இராசகொண்ட சமஸ்தானத்துக்குச் சென்று ரேச்சர்ல மாதவ நாயக்கன் மகன் சர்வக்ஞ சிங்க நாயகனை வைணவத்திற்குத் தீட்சை தந்தார். இவரது ஆதரவில் தெலுங் கானாவில் வைணவம் தீவிரமாகப் பரவியது. தமிழகத்திலிருந்து பல வைணவ அந்தணர் குடும்பங்கள் இப்பகுதியில் குடியேறினர். கிருஷ்ண தேவராயருக்குப் பின் தமிழக அந்தணர்கள் ஆந்திர நாட்டில் வைணவக் கோயில் அர்ச்ச ர்களாகவும், விசிஷ்டாத்வைத தரிசன பிரசாரகர்களாகவும் பரவினர் திருமல, கந்தாடை, பரவஸ்து முதலிய பல குடும்பத்தினர்கள் ஆந்திர நாட்டில் பரவி வைணவத்தைப் பரப்பினர். இவர்களது மரபினர்கள் இன்றும் ஆந்திர நாட்டில் தமிழைத் தாய்மொழியாகப் பேசியும், சிலர் ஒருசில தமிழ்ச் சொற்களை மட்டும் எச்சமாக வைத்துக்கொண்டு தெலுங்கையே பேசிக் கொண்டும் இருக்கின்றனர். தாத்தாச்சாரியர், தொட்டயாச் சாரியர், பட்டர் போன்ற பல பேரறிஞர்கள் வைணவ மதத்தைப் பரப்பியதாகச் சான்றுகள் உள்ளன.

---

★ *கலைமகள்ஸ்ரீ - சித்ர - 1960*

அன்னமாச்சாரியர் போன்ற பக்தர்களும், கவிஞர்களும், ஜீயர்களும் வைணவத்தை இக்காலத்தில் பரப்பினர். தாள்ளபாக திருவேங்களநாத (1498 - 1561) அன்னமாச்சாரியரின் பேரர். சிறந்த கவிஞர். இவர் நம்பிள்ளையின் சீடர் பின்பழகிய மணவாள ஜீயரின் ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவத்தைத் தழுவி எழுதிய 'பரமயோகி விலாசமு' எனும் காவியம் ஆழ்வார் ஆச்சாரியர்கள் வரலாறு கூறும் சிறந்த நூல் ஆகும். ஆழ்வார்கள் வரலாற்றுடன் தொடங்கி இராமானுஜர் வரலாற்றுடன் இந்நூல் முடிவுறுகிறது.

கிருஷ்ணதேவராயர் வைணவ மதத்தை தழைத்தோங்கச் செய்தார். இவர் அவைக்களப் பெரும் புலவரான அலசானி பெத்தன அஹோபில மடம் ஸ்தாபித்த ஆதிவண்சடகோபயதியின் சீடர். கி.பி. 1437 - 1515ல் வாழ்ந்த இந்த சடகோபியதியின் சீடர் என்பதை தம் மனு சரித்ராவில் தெளிவாகவே குறிப்பிட்டுள்ளார். மனுசரித்ர ஆஸ்வாஸாந்த கத்யத்தில் (படல முடிவுரையில்) ''சடகோப தாபஸ ப்ரசாதாசாதித சதுர்வித கவிதாமதல்லிகா அல்லசானி சொக்கயாமாத்யபுத்ர'' என்று தன்னைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். சடகோப முனிவரின் அருளால் பெற்ற நாற்கவிப் புலமையிற் சிறந்த அல்லசானி சொக்கயாமாத்யரின் மகன் என்பது பொருள். பெத்தநா கிருஷ்ணதேவராயரிடம் பெற்ற 'கோகட' என்ற கிராமத்துக்கு, 'சடகோப புரம்' என்றே பெயர் வைத்தார். தென்னாற்காடு மாவட்டத்தில் 'அன்னூர்' எனும் கிராமத்தில் வரதராஜ சுவாமி கோயிலுக்கு 31.10.1518ல் நிலதானம் செய்ததாக ஒரு சாசனம் உள்ளது.★ தெனாலி இராமலிங்கம் வைணவத்தைப் பின்பற்றி தெனாலி இராமகிருஷ்ணராக மாறியதாக வரலாறு கூறுகிறது. இக்காலப் பெருங்கவிஞருள் ஒருவராகிய பிங்களி சூரணர் 'களாபூரணோதயம்' எனும் தமது சுய கற்பனைக் காவியத்தில் தமிழக வைணவ க்ஷேத்திரங்களைப் பற்றி விரிவாக எழுதிய வைணவ பக்தராவார். கிருஷ்ணதேவராயரும் வைணவப் பற்று மிக்கவராக இருந்து தென்னாட்டு வைணவக் கோயில்கட்கு எல்லாம் மானியங்கள் தந்தும், பிரகாரங்களைக் கட்டியும், பழுது பார்த்தும், கவிஞர்களை ஆதரித்தும், கலைகளை வளர்த்தும் செங்கோலோச்சினார். இவரது, 'ஆமுக்த மால்யத'❒ எனும் பெரியாழ்வார், ஆண்டாள் ஆகிய இருவரின் வரலாறு கூறும் தெலுங்கு காவியத்தில் வைணவ

---

★ அல்லசானி பெத்தன - டாக்டர் பல்லா துர்க்கய்யா 1972.

❒ ஆமுக்த மால்யத - இந்நூலாசிரியரால் (மு.கு.ஜ.) தமிழாக்கம் செய்யப்பட்டு ஹைதராபாத் தெலுங்கு பல்கலைக்கழகம் 1988ல் வெளியிட்டது.

சம்பிரதாயங்களைப் பற்றியும், ஆளவந்தார் சரித்திரமும், வசிஷ்டாத்வைத தத்துவமும் அழகாக விளக்கியுள்ளார். கிருஷ்ண தேவராயர் திருப்பதி வெங்கடேஸ்வரன் இஷ்ட தெய்வமாகக் கொண்டவர். ஆந்திர நாட்டில் முன்னைய நாட்களில் அகோபில நரசிம்மரும், சிம்மாசல நரசிம்ம ஸ்வாமியுமே வைணவர்களின் இஷ்ட தெய்வமாக விளங்கியது. எர்ராபிரகட தம் நரசிம்ம புராணம் அகோபில நரசிம்மருக்கு சமர்ப்பணம் செய்தார். சைவர்கட்கு ஸ்ரீசைலமும், வைணவர்கட்கு அகோபிலமுமே முக்கிய க்ஷேத்திரங்களாக இருந்தன. தாள்ளபாக மரபினருக்குப் பின்னர் தான் திருப்பதியும் வைணவத் தலமாக ஆந்திரர்களை ஆகர்ஷித்தது. பதினைந்தாம் நூற்றாண்டுக்கு முன்னர் அகோபிலமே முக்கிய வைணவ க்ஷேத்திரமாகத் திகழ்ந்தது. கிருஷ்ண தேவராயருக்குப் பின் திருப்பதி - திருமலை வெங்கடேஸ்வரர் ஆந்திர மக்களின் அபிமான தெய்வமாயிற்று.★ அச்சுத தேவராயர், அச்சுத தேவஸ்வாமி, பட்டாபி ராமஸ்வாமி ஆலயங்கள் நிறுவினர். இவர் காலத்தில் பெனுகொண்ட விருபண்ண என்னும் சேனாதிபதி 'லேபாட்சி'யில் இராமாலயம் நிறுவினார். தஞ்சாவூர் நாயக்க மன்னர் மரபு கிருஷ்ண தேவராயரின் உறவினர் செவ்வப்ப நாயக்கரிடமிருந்து தொடங்குகிறது. செவ்வப்ப நாயக்கர், வைணவ பக்தர். மன்னார்குடி இராஜகோபால ஸ்வாமி இவருடைய இஷ்ட தெய்வம். அச்சுதநாயக்கர் திருவரங்கத்தில் எட்டாவது பிரகாரம் கட்டியவர். இரகுநாத நாயக்கர், அவர் குமாரர் விஜயராகவ நாயக்கர் முதலியோர்கள் வைணவ மதத்திற்கு ஆற்றிய சேவை அளப்பரியது. தெலுங்கிலக்கியத்தையும் போற்றி வளர்த்தனர். சுயமாகப் பல காவியங்களையும் யாத்தனர். இராஜசூடா மணிகவி 'ருக்மணி கல்யாணம்', குமாரதாத்தாச்சாரியர் 'பாரிஜாதா பஹரனம்' முதலிய நாடகங்கள், ரங்காஜம்மா என்னும் பெண் கவியின் 'மன்னாருதாச விலாசமு' காவியம் முதலியன வைணவம் செழித்திருந்த வரலாற்றைக் கூறும். தஞ்சை நாயக்க மன்னர்கள் தமிழகத்தை ஆண்டபோதும், அதன் செல்வாக்கு ஆந்திர நாட்டில் பிரதிபலித்தது. ஆந்திர நாட்டிலிருந்த பல வைணவ அந்தணர்களும், கவிஞர்களும், கலைஞர்களும் தமிழகம் வந்து குடியேறினர். அதுபோன்றே இங்கிருந்த பல தமிழக அந்தணர்களும், கவிஞர்களும், கலைஞர்களும் ஆந்திர நாட்டில் குடிபெயர்ந்து சென்றனர். இவர்களில் பெரும்பாலோர் வைணவ சமயத்தினரேயாவர். க்ஷேத்திரய்யா, தியாகராசர் போன்றோர் வைணவ கீதங்களை

★ ஸ்ரீ வெங்கடேசதுதி ரத்னமாலா 2. 1962 கோராட இராமகிருஷ்ணய்யாவின் முன்னுரை.

இயற்றிய மேதைகள். தெலுங்கிலக்கியத்திலும் வைணவ வரலாற்றிலும் இவர்கட்கு சிறப்பிடம் உண்டு.

1650ல் வாழ்ந்த கஞ்செர்ல ்கா ்ன்னா எனும் இராமதாசர் பத்ர சல இராம...டம் ஈடுப ட வைணவ பக்தர். இ ருடைய கீர்த்தனைகள் தியாகய்யருககு வழிகாட்டியாக திகழ்ந்ததெனலாம். இராமதாசர் கோல்கொண்டா நவாப் ருதுப் ஷாகியிடம் தாசில்தாராக இருந்து பணத்தையெல்லாம் பத்ராசல இராமர் கோயிலுக்கு செலவிட்டதும், கோல்கொண்டா கோட்டையில் கைது செய்யப் பட்டதும், இ ர லட்சுமணர் வந்து தானீஷிடம் பணம் செலுத்தி விடுவித்தது தமிழகம் நன் ிந்த வரலாறாகும். 1700ம் ஆண்டில் வாழ்ந்த நார. ர தீர்த்தா ஆந்திர ாட்டின் கடற்கரைப் பகுதி (கோனசீம)யைச் சே. ந்தவர். இவர் உறையூர் விஷ்ணு ஆலயத்திற்கு வந்து வழிபட்டு ( நாய் நீங்கப் பெற்று, 'கிரு ணலீலா தரா கினி' எனும் நூலை வடமொழியில் இய றினார்.

பதினெட்டாம் நூற்றாண்டில் கார்வேடி சமஸ்தானத்தை அண்டியிருந்த சார ்கபாணி, வேணுகோபால ஸ்வாமி ீது பாடிய சங்கீர்த்தனங்கள் குறிப்பிடத்தக்க வைணவப் படைப்புகளில் ஒன்றாகும்.

இந்த நூற்றாண்டில் சுப்பிரமணிய கவியின் ஆத்யாத்ம இராமாயண கீர்த்தனைகள், பெல்லம் கொண்ட ராமராயகவி (1875 - 1914) ருக்மணி பரிணயம், ரமா பரிணயம் முதலிய காவியங்கள் தெலுங்கானாவில் வழங்கி வந்த 'திருநாமமுலு' எ ும் வைணவ கீ..த்தனைகள், நாடோடிப் பாடல்கள் முதலியன ஆந்திர நாட்டில் வைணவம் தொடர்ந்து நிலைபெற்று வளர்ந்து வருவதற்குச் சான்றாக அமைந்துள்ளன.

இன்றும் ஆந்திர நாட்டில் பெரும்பான்மையோர் பின்பற்றும் முதன்மை மதமாக வைணவமே திகழ்கின்றது. திருப்பதி, திருமலை, அகோபலம், கதிரி, மங்களகிரி, யாதகிரி குட்ட, அன்னவரம், சத்திய நாராயணசாமி, ரீயாலி கேசவ ஸ்வாமி, சிம்மாசலம், ஸ்ரீகாகுளம், ஸ்ரீகூர்மம் முதலிய வைணவத் தலங்கள் சிறப்புடன் வழிபாட்டுக் குரியத க இலங்குகின்றன. வடகலை, தென்கலை பேதங்கள் அங்கும் உள்ளன. எல்லாக கோயில்களிலும் ஆழ்வார்கள், ஆண்டாள் உற்சவ மூர்த்திகள் உள்ளன. அகோபிலம், திருப்பதி, திருமலை, சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் ஆகிய இடங்களில் தமிழ் வைணவ

அந்தணர்கள் திவ்வியப் பிரபந்த நித்யானு ‹ தானம் செய்து வருகின்றனர். வடகலைக்கு அகோபல ஜீயரும், தென்கலைக்கு குண்டூருக்கு அருகேயுள்ள நடுகட்ட பால ஸ்ரீமந் நாராயண திரிதண்டி ஸ்வாமிகள் ஆசிரம ஜீயரும் 'ரதான குருக்களாகத் திகழ்கின்றனர். இன்றும் வைணவம் தன் செல்வாக்கை இழக்காமல் சீரோடும், சிறப்போடும் இயங்கி வருகிறது.

காஞ்சிபுரத்துக்கு அண்மையிலுள்ள அரசாணி பாலை என்ற அக்ரஹாரத்தில் பிறந்த வெங்கடாச்சாரியர் பேரறிஞரும், கவிஞருமாகத் திகழ்ந்தவர். ஸ்ரீவேதாந்த தேசிகரின் மாதுலரும் ஆச்சாரியருமான அப்புள்ளார் மரபில் அவதரித்தவர். இவர் கி.பி. 1590 - 1660ல் வாழ்ந்தவர். வடமொழியில் பல நூல்களை இயற்றியுள்ளார். வெங்கடாத் வரி என்றும் பெயர். அப்பயதீட்சிதரின் பேரர். கிருஷ்ணதேவராயரின் குருவாகத் திகழ்ந்த தாத்தாச்சாரியார் இவரது தாய்மாமன். இத்தகு அறிஞர் மரபில் பிறந்த இக்கவிஞர் 'வி ்வ குணாதர்ச்ம்' எனும் சம்பு காவியம் வடமொழியில் இயற்றியுள்ளார். 'உலக இயல்புக் கண்ணாடி' என்பது இதன் பொருள். கிருசானு எனும் குற்றங் காணும் இயல்புடைய ஒரு கந்தருவனும், விசுவாவசு எனும் நற்குணங்களே காணும் இயல்புடைய ஒரு கந்தருவனும் ஆகிய இருவரும் விமானத்தில் ஏறி உலகைச் சுற்றிப் பார்க்கிறார்கள். இங்கு உலகம் என்பது இமயம் முதல் குமரி ‹ 'ரையுள்ள இந்திய நாடேயாகும். பதரி காசிரமம், அயோத்தி, காசி, பூரி, கூர்ஜரம், ஆந்திரம், கர்நாடகம், திருப்பதி, காஞ்சி, திருவரங்கம், இராமேசுவரம் முதலிய 'ஆசேது ஹிமாசலம்' வரையிலான நாடு நகரங்களைக் கண்டு வருகின்றனர். துரியோதனனுக்கு உலகமே கெட்டவர்களாகவும், தருமனுக்கு உலகமே நல்லவர்களாகவும் தோன்றிய பாரதக் கதை போலவே, கிருசானு குற்றங்கள் கூற விசுவாவசு நற்பண்புகளைக் கூற, உரையாடல் வடிவில் உரைநடை யிட்ட செய்யுளில் (சம்பு) இக்காவியம் இயற்றப்பட்டுள்ளது.

*குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள்*
*மிகை நாடி மிக்க கொளல்*

என்ற வள்ளுவர் கூறுவது போல நூலாசிரியர் தொனியாக உலக இயல்பினை விளக்குகிறார்.

*த்ராவிட சப்தானாம் கோ'நாம சம்ஸ்க்ருதாத் அபகர்ஷ:*

தமிழ்மொழி சமஸ்கிருதத்தைவிட எந்த வகையில் குறைந்தது என்று கேட்டு தமிழின் மேன்மையை, வைணவ திவ்யப் பிரபந்தங்களின் சிறப்பை, இராமானுஜருடைய பெருமையை எல்லாம் சிறப்பித்துப் பாடியுள்ளார். வேதாந்த தேசிகரையும் புகழ்ந்துரைக்கின்றார். இந்த நூலில் ஆந்திர நாட்டைப் பற்றி வருணிக்கும் இந்த உரையாடல் குறிப்பிடத்தக்கது.

*விசுவாவசு*

இந்த ஆந்திர தேசம் சமுத்திரம் போல் விளங்குகின்றது. இந்த தேசம் நல்லதும், மங்களகரமானதுமான ஆசாரமுள்ளவர்களால், பிழைக்க வேண்டி வந்த சேர்ந்த, அந்தணர்கள் நிறைந்த நாடு, கடலுக்கிணையானது.

*கிருசானு*

அடே! ஒரு நீதிக்குக் கட்டுப்படாத இந்த நாட்டை ஏன் புகழ்கின்றாய். பார். இங்கு ஒவ்வொரு கிராமத்திலும் சூத்திரன் எஜமானனாக இருக்கிறான். அந்தணன் அவனிடம் வேலைக்காரனாக அமர்ந்து கணக்குப் படித்துச் சொல்கிறான். பாலைவனத்தில் நீர் நிலை போல எங்கோ ஒருவன் வேதங்கறிவு அந்தணன் இருந்தாலும் அவன் அழுக்குப் பாத்திரங்களைக் கழுவும் வேலையில்தான் இருக்கிறான். மகாராஷ்டிர நாட்டில் கண்ட குற்றங்கள் எல்லாம் இங்கும் உள்ளன.

*விசுவாவசு*

நண்ப! அப்படிச் சொல்லாதே. இந்த ஆந்திரர்கள் வேள்விகள் இயற்றி வேதங்கள் கற்காவிட்டாலும், தெய்வ பக்தியும், அந்தணர் கட்கியற்றும் தானமும் இவர்களுடைய குற்றங்களை எல்லாம் நீக்குகின்றன என்று கூறிவிட்டு மேலும், கோதாவரிக் கரையில் அந்தணர்கள் சிவனை வணங்குவதாகவும் கூறியுள்ளார். பின்னர்,

*விசுவாவசு :*

ஆகா, கிருஷ்ணா நதிக்கும், கோதாவரி நதிக்கும் இடையே உள்ள இந்த மறையோரின் நிலையான சம்பிரதாயம் புகழ்ச்சிக் குரியது. சாத்திரமறிந்த அந்தணர்கள் வேதமோதி பாவங்களை நீக்கிக்கொண்டு, வேள்விகள் இயற்றிக்கொண்டு முகுந்தனை (விஷ்ணுவை) தியானித்தவாறு சுகமாக வாழ்கின்றார்கள். ★

---

★ *விசுவகுணாதர்ச சம்பு : வேங்கடாத்வரி,*
*தமிழாக்கம் ஆர். சரோஜா எம்.ஏ.,பி.டி., தாம்பரம், 1968.*

இக்காவியத்தில் கூறியது போல ஆந்திர மக்கள் தெய்வ பக்தியிலும், அந்தணர்களைப் போற்றுவதிலும் இன்னும் சிறந்து திகழ்கின்றனர். குறிப்பாக மேற்கு கோதாவரி, கிழக்கு கோதாவரி, கிருஷ்ணா மாவட்டங்களில் இந்த விஷ்ணு பக்தியும், சதாகாரமும் சிறப்பாகக் காணப்படுகிறது. ஆந்திர நாட்டில் இராமானுஜரின் வழிப்பட்ட வைணவம் நல்ல ஆதரவைப் பெற்றது.

இராமானுஜருக்கு தமிழகத்துக்குப் பிறகு ஆந்திரமே நல்லாதரவு தந்தது எனலாம். ஆந்திர பூரணர் என்னும் வடுக நம்பி சீடராக அமைந்தார். திருமலையில் அவரது ஆணைப்படி பூசைக் கிரமங்கள் நடந்தன. ஸ்ரீகூர்மத்திலும் அப்படியே நடந்தது. ஒரியாவில் பூரி ஜகந்நாதர் கோயில் இராமானுஜரின் நியமங்களை ஏற்காதது மட்டுமன்றி உள்ளே வரவே மறுத்ததாக கதை உண்டு. அதேபோல கேரளத்திலும் இராமானுஜரின் நியமங்கள் ஏற்கப்படவில்லை. திருவனந்தபுரம் பள்ளி கொண்ட பெருமாளைத் தரிசித்ததும் அவ்விறைவன் கேரளாவைச் சுற்ற வேண்டாம் என்று அலாக்காக வான் வழிக் கொணர்ந்து திருக்குறுங்குடிக்கருகே திருவட்டப் பாறையில் இறக்கி வைத்துவிட்டார் என்று ஒரு வரலாறு கூறுகிறது. இது கேரளாவில் இராமானுஜ நெறி பரவாததையும் உறுதிப் படுத்துகிறது. கன்னட நாட்டில் பசவரின் லிங்காயத்துக்களான வீர சைவம் பிரபலமாக இருந்தது. ஆனால், ஆந்திர நாட்டில் மட்டும் மன்னர்களாலும், மக்களாலும் இராமானுஜரின் புதிய வைணவ நெறி விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டது என்று தெளிவாகிறது. வடகலை, தென்கலை மரபுகள் காணப்படினும் திருமண் தரித்தல், சடாரி வைத்தல் முதலிய ஆசாரங்கள், திவ்விய பிரபந்தானுசந்தானம் முதலியன இன்றும் ஆந்திர நாட்டில் நின்று நிலவுகிறது. தமிழகத் திலிருந்து இராமானுஜரின் வைணவ நெறி பரவிச் செழித்திருந்தது என்பதை மெய்ப்பிக்கின்றது. அந்நாட்டில் வைணவம் செழித்து இருந்ததை அங்குள்ள வைணவ மக்கள் இலக்கியங்களும் மெய்ப்பிக்கின்றன.

சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் சைவமாக இருந்து வைணவமாக்கப் பட்டதாகவே கருதப்படுகிறது. மங்களகிரி, அகோபிலம், கதிரி, சிங்கராயகொண்ட, நெல்லூர், அந்தர்வேதி, உபமாகல ஆகிய இடங்களில் நரசிம்மர் கோயில்களும் சிறப்புடன் திகழ்ந்தன. கோருகொண்டவிற்கு கி.பி. 1365ல் ஸ்ரீரங்க பராசரபட்டர் வந்து மும்முடி ரெட்டியை சீடனாகக் கொண்டார். பெத்தன்னா போன்ற

அத்வைதிகளே வைணவர்கள் ஆயினர். இதன் விளைவாக வைணவத்தில் பற்றுமிக்க மக்கள் இலக்கியங்களும் பல உருவாயின.

காஞ்சிபுரம் வரதராஜரின் திருமணக் கதையை, 'கோபயகாரி ராமய்யா', 'வரதராஜு பெண்ட்ள பாட்ட' என்று ஒரு பாடல் இயற்றினார். ஆண்டாளின் சரித்திரம் மக்கள் இலக்கியமாக எத்தனையோ தெலுங்குப் பாடல்கள் இயற்றியுள்ளனர். ஹரிதாஸ் என்பவர் 'திருமந்திரம்பாட்ட' இயற்றினார். 'செஞ்சீத கத' என அகோபல நரசிம்மர் பழங்குடி மக்களின் பெண்ணாகிய செஞ்சு லட்சுமியை மணந்த கதையும் மக்கள் இலக்கியத்தில் மலர்ந்து மணம் வீசுகிறது. கங்காதரம் என்பவர், 'ஏகாதசி மஹாத்மியம், ருக்மாங்கத, மகாராஜுகத' இயற்றியுள்ளார். சின்னம்மா என்ற வைஷ்ணவ பக்தை. சைவர்களான அத்தை, மாமனாரிடம் பல துயர்கள் பட்டு, கதிரி அருகே உள்ள மத்துலேட்டி வேங்கட விட்டல ஸ்வாமி அருளால் அவர்களும் வைஷ்ணவர்களான கதையை ஒரு நாட்டார் பாடல் விவரிக்கின்றது.

சைவ, வைஷ்ணவ போரை சமரசப்படுத்தும் வகையில், ஸ்ரீசைல, அகோபில க்ஷேத்திரங்களைக் களமாக்கி சைவர்கட்கும், வைணவர்கட்கும் போர் நடந்ததாகவும், இரு சுவாமிகளும் வைணவர்களை நோக்கி சிவனை வழிபடுமாறும், சைவர்களை நோக்கி திருமாலை வழிபடுமாறும் கூறி உபதேசித்து வைணவ சைவ சமய ஒற்றுமையை போதித்ததாகவும் ஒரு நாட்டார் பாடல் இயற்றப்பட்டுள்ளது. தெலுங்கானா பகுதியில் 'திருநாமமுலு' எனப்படும் வைணவ கீதங்கள் மக்கள் இலக்கியமாக எத்தனையோ பாடல்கள் வழங்கி வருகின்றன. 'ஆளவந்தார் ஊஞ்சற்பாட்டு', 'திருநாமம்', 'ஸ்ரீரங்க ஸ்தோத்திரம்', 'இராமானுஜ ப்ராபாவம்' முதலிய நாட்டார் பாடல்கள் தமிழக வைணவம் ஆந்திர நாட்டில் எவ்வாறு ஊன்றிச் செழித்திருக்கிறது என்பதற்குச் சான்றாக உள்ளன.

'திருநாமமுலு' என்று ஒரு நூல் அண்மையில், வாரங்கல்லில் உள்ள காகதீய பல்கலைக்கழகத் தெலுங்குத் துறையைச் சார்ந்த கோயில் கந்தாடை சுப்பிரசன்னாச்சாரியர், அவரது சீடர்கள் மூலம் சேகரிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.★ ஆழ்வார்கள், ஆண்டாள், ஆசாரியர்கள், ஜீயர்கள், மணவாள மாமுனி போன்றவர்கள் பேரில் பற்பல கீர்த்தனைகள் பாடப்பட்டு

---

★ திருநாமமலு : இடாம்பி நரசிம்மாச்சார்ய தொகுத்தது.

வருகின்றன. இன்றும் இந்த வைஷ்ணவ கீதங்கள் இல்லங்களில் பாடிப் பரவப்படுகிறது.

புலமை சான்ற இலக்கியங்கள் மட்டுமன்றி ஊர் பேர் தெரியாத கவிஞர்கள் இயற்றிய மக்கள் இலக்கியமாகிய நாட்டார் பாடல்களிலும், தமிழகத்திலிருந்து சென்ற வைணவத்தின் சிறப்புக்களை எடுத்துக் காட்டும் கருத்துக்களுடைய கவிச் சித்திரங்களைக் காண முடிகிறது. 'திருநாமமுலு' எனும் வைணவப் பக்தி கீதங்களில் தமிழ்ச் சொற்கள் அதிகம் பயன்படுத்தப்பட்டுள்ளன. திருமால், திருமகள், ஆழ்வார்கள், நம்மாழ்வார், திருக்கச்சி நம்பி, ஸ்ரீராமானுஜர், மணவாள மாமுனி, பீடாதிபதிகள் ஆகியோரைப் பற்றியும் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் குறித்தும் துதித்து வைணவ தத்துவத்தை விளக்கும் பாடல்களாக அமைந்துள்ளன.

*சூடி குடுதயு நேடு வேடுக*
*சுக்ரவாரமு கொலுவை யுன்னதி*
*சூடாம்மா கோர்கெலு வேடரம்மா*

என்பன போன்ற பல பாடல்கள் தமிழ்ச் சொற்களும், தெலுங்குச் சொற்களும் இணைந்து அழகூட்டும் மதுர கீதங்களாகவும், ஆந்திர நாட்டில் வைணவம் எவ்வளவு அழகாக தமிழ்ப் பண்பாட்டோடு கலந்து கிடக்கிறது என்பதைக் காட்டும் சாசனச் செய்யுட்களாகவும் அமைந்துள்ளன.

# 9. கிருஷ்ணமாச்சாரியாரின் வைணவத் தொண்டு

ஆந்திர நாட்டில் தமிழகத்திலிருந்து சென்ற இராமானுஜரின் வைணவ நெறியை முதலில் பரப்பிய சான்றோராக கிருஷ்ணமாச்சாரியார் கருதப்படுகிறார். இவருடைய 'சிம்மகிரி வசனங்கள்' தெலுங்கு இலக்கிய உலகில் முதல் வசன இலக்கியமாகக் கருதப்படுகிறது. இதற்கு முற்பட்ட காவியங்களில் செய்யுள்களும், இடையிடையே உரைநடையும் கலந்த சம்பு நடையில் பல காவியங்கள் உள்ளன. செய்யுளே இன்றி வசனத்திலேயே கூறும் வகை பிற்காலத்திலேயே தோன்றியது. கன்னட நாட்டில் பசவர், அல்லமபிரபு - அக்கமகாதேவி, சென்னபசவர் முதலியவர்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் கன்னட மொழியில் வசன நடையைப் பயன்படுத்தி எளிமையும், இனிமையும், அழகும், உயர்ந்த தத்துவக் கருத்துக்களையும் கொண்ட 'வசனங்கள்' இயற்றினர். கன்னட உபநிடதங்களாக மதிக்கப்பட்ட இந்த வசனங்கள், மக்களுக்கு எளிதில் தம் தத்துவக் கருத்துக்களைப் புரிந்து கொள்ளப் பயன்பட்டது. அதனால் பிரபலமடைந்து சிறந்து விளங்கியது. ஸ்ரீராமானுஜரும், 'கத்யத்ரயம்' எனப்படும் மூன்று சிறிய வசனங்களை அருளியிருந்தார். இவை கிருஷ்ணமாச்சாரியருக்கு தெலுங்கில் வசனம் எழுதத் தூண்டுகோலாக இருந்திருக்கலாம். கிருஷ்ணமாச்சாரியார் சங்கீர்த்தனைகளும் எழுதி செப்புத் தகட்டில் பதிவு செய்து வைத்தார். இம்முறை அன்னமாச்சாரியருக்கும், பெத திருமலாச்சாரியருக்கும் தூண்டுதலாக அமைந்தது. அன்னமாச்சாரியர் ஒரு பாடலில் கிருஷ்ணமாச்சாரியரைக் குறிப்பிட்டுள்ளார்.

தாள்ளப்பாக வேங்களநாதரும், தமது பரமயோகி விலாசம் எனும் காவியத்தில் கிருஷ்ணமாச்சாரியாரை,

*வேதம்பு தெலுங்கு காவிஞ்ச்சி சம்சார*
*கேதம்புமான்பின கிருஷ்ணமாச்சார்யுன்*

என்று தனது பாட்டனார் அன்னமய்யாவுக்கு முன்னர் இவர் பெயரைக் குறிப்பிட்டு வணங்குகிறார்.

*வேதத்தை தெலுங்கில் செய்து, பிறவித்துயரைப்*
*போக்கிய கிருஷ்ணமாச்சாரியரை*

என்று திருவேங்களநாதர் கூறுகிறார். பெத திருமலாச்சாரியர் குமாரர் சினதிருமலாச்சாரியர் தமது, 'சங்கீர்த்தன லட்சணம்' என்னும் நூலில்

*மறியு சூர்ணாக்ய பதம் பெட்டிதன்டேனி*
*தர க்ருஷ்ணமாச்சார்யாதிக*
*பரிகல்பித பதமுதாள பந்த சந்தோ*
*விரகிதமை சூர்ணாக்யன்*
*பரகுணதி நிருக்த நாம பாசித மகுசுன்*

என்று கூறுகிறார். இந்த வசனங்கட்கு பதம், சூர்னிகை என்ற பெயர்களும் இருந்தன. தாள, லயபந்தம், செய்யுள் அமைப்பு இவை இன்றி வரும் என்று கூறுவதால் இது வசனமே என்பது ஐயமில்லை. தாள்ளபாக அன்னமய்யாவும், கிருஷ்ணசாம்சாரியரை ஒரு கீர்த்தனையில் பாடிப் பரவியுள்ளார்.

*ஆடுசு பத க மாகல்லை ஜோல*
*பாடக நாடெல்ல பசிபிட்ட னைதின்*
*ஆக்ருஷ்ணமாச்சார்யு னத்யாத்ம வினுதி*
*ராக கொன்னாள்ளு விரக்துண்ட னைதி*

''ஊஞ்சற் பாட்டைப் பாடாமல் அன்னாள் சிறு குழந்தையாக இருந்தேன். அந்த கிருஷ்ணமாச்சாரியரின் ஆன்மீக ஞானக் கேள்வியின்றி சிலநாள் பற்றின்றிக் கிடந்தேன்'' என்று கூறி அன்னமாச்சாரியர் தமக்கு முன்பிருந்த கிருஷ்ணமாச்சாரியரை நினைவு கூறுகிறார். ஆதலின், தாள்ளபாக மரபினருக்கு முன்பே சங்கீர்த்தனைகள், வசனங்கள் இயற்றிய கிருஷ்ணமாச்சாரியர்

வைணவ இலக்கியத்தில் முதலிடம் பெறுகிறார். கிருஷ்ண மாச்சாரியரின் லட்சக்கணக்கான பாடல்கள் மறைந்தொழிந்தன. இன்று நமக்குக் கிடைப்பன மிகச் சிலவே. தஞ்சாவூர், சரசுவதி மகாலில் இருந்த ஒரே ஒரு ஏட்டுப் பிரதி மூலம், சரஸ்வதி மகால் தெலுங்கு பண்டிதர் விசுவநாதத்தின் உதவியுடன் முதன் முதலில் 1968ல் டாக்டர் எம். குலசேகர ராவ் அவர்கள் பதிப்பிட்டு தெலுங்கெழுத்தாளர் சங்கம் வெளியீடாக வந்தது. மீண்டும் ஆந்திரப் பிரதேச சாஹித்திய அகாடமியினர் 1980ல் இரண்டாம் பதிப்பை வெளியிட்டுள்ளனர். இப்பதிப்பில் 60 வசனங்களே உள்ளன. முத்தொள்ளாயிரம் பாடல்களில் இன்று 108 பாடல்களே கிடைப்பது போல லட்சக்கணக்கான வசனங்களில் அறுபது வசனமே கிட்டியுள்ளது. கிருஷ்ணமாச்சாரியார் வரலாற்றில் நான்கு லட்சம் கீர்த்தனைகள் இயற்றியதாக குறிப்புள்ளது. இவருடைய வரலாறு பற்றிய சில குறிப்புகள், ஏகாம்பரநாதன் இயற்றிய 'சிந்தேஸ்வர சரித்ர' என்ற நூலிலும், பிரதாபசரித்ர எனும் நூலிலும், சிம்மகிரி வசனத்திலும் கிடைக்கின்றன. இதன் அடிப்படையில் ஆச்சார்ய கண்டவல்லிலட்சுமி ரஞ்சனம், நேலடூரி வெங்கடரமணய்யா, மல்லம்பல்லி சோமசேகர சர்மா முதலிய அறிஞர்கள், இவர் பிரதாப ருத்திரன் காலத்தவர் என்றும், கி.பி. 1254 - 1323ல் இம்மன்னன் வாழ்ந்த காலத்தில் இவரைச் சந்தித்த காரணத்தால், இவர் பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையும் வாழ்ந்தார் என்று தெரிகிறது.

இவர் பிறந்த ஊர் 'சந்தூரு' என்ற குறிப்புள்ளது. இந்த 'சந்தூரு' தமிழ்நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்திலும், தென்னாற்காடு மாவட்டத்திலும் இருப்பதாகவும், அங்கேதான் பிறந்திருக்க வேண்டும் என்றும் டாக்டர் நிடுதவோலு வெங்கட்ட ராவ் அவர்கள் கிருஷ்ணமாச்சாரியர் பற்றிய கட்டுரை ஒன்றில் குறிப்பிட்டிருந்தார். இதனை மறுத்து டாக்டர் குலசேகர ராவ் - தெலுங்கானா - மகபூப் நகருக்கு அருகில் உள்ள 'சந்தபூரு' என்பதுவே கிருஷ்ணமாச்சாரியார் பிறந்த ஊராக இருக்கும் என்று நிறுவியுள்ளார். தமிழ்நாட்டில் பிறந்தாரா, தெலிங்கானாவில் பிறந்தாரா என்று நிர்ணயமாக முடிவு செய்ய இயலாவிடினும், இவர் தமிழ் நாட்டிலிருந்து ஆந்திராவிற் குடியேறிய அந்தணர் மரபினர் என்பதும், தமிழ் தாய்மொழியாக உடையவரே என்பதிலும் ஐயமில்லை. பதினோராம் நூற்றாண்டிலிருந்தே தமிழக அந்தணர்கள் ஆந்திராவிற் குடிபெயர்ந்தனர். குலோத்துங்க சோழன் காலத்தில் தமிழக பிராமண குடும்பங்கள் மிகுதியும் குடிபெயர்ந்தன வீரசோழன் எனும் வேங்கி

நாட்டு மன்னன் காலத்தில், சோழ நாட்டிலிருந்து 536 பிராமணர்களை அழைத்துக்கொண்டு வந்து பிடாபுரம் அருகில் 'வீரசோட சதுர்வேதி மங்கலம்' என்னும் அக்ரஹாரம் நிறுவினான். அந்த மரபினர் இன்றும் ஆந்திர நாட்டில் உள்ளனர். ஆதலின் கிருஷ்ணமாச்சாரியர் தமிழக அந்தண மரபினர் என்று கூறத் தடையேதுமில்லை.

கிருஷ்ணமாச்சாரியரைப் பற்றிய வரலாறு காண்போம். சந்தூர் எனும் கிராமத்தில் இவர் ஒரு வைஷ்ணவ பிராமணர் குடும்பத்தில் அவதரித்தார். பிறக்கும்போது கண் குருடாக இருந்தது என்று கருதி தாய் தந்தையர் இவரைக் கைவிட்டனர். பாழும் கிணற்றில் தள்ளி விட்டனர். அப்போது 'குவ்வாரு' எனும் சாது வந்து இவரைக் காப்பாற்றி தம் மடத்தில் வைத்துக் கொண்டு பாதுகாத்து கல்வி கற்பித்து சிம்மாசலத்தில் சேர்த்து விட்டுச் சென்றார். சிம்மாசலத்தில் இருக்கும்போது நரசிம்ம ஸ்வாமியே ஒரு சிறுவன் உருவில் வந்து சாமி பிரசாதமாக தீர்த்தம் தரவே அதனைக் கண்ணில் ஒற்றிக் கொண்டு வணங்கியபோது கண்பார்வை வந்தது. அன்று கனவில் நரசிம்ம சுவாமி வராக ரூபத்தில் காட்சி தந்து தம்மேல் பாடல்கள் பாடுமாறு கூற பதினாறாம் வயதில் கிருஷ்ணமாச்சாரியார் தம் கீர்த்தனைகளைப் பாட ஆரம்பித்தார்.

இப்படிச் சிலகாலம் கடந்ததும், இவரது தாய்மாமன் ஸ்ரீரங்காச்சாரியரின் மகளினைத் திருமணம் செய்து கொண்டார். இவர்கட்கு ஒரு மகன் பிறந்து ஏழாவது வயதிலேயே இறந்து போனான். பக்திமானாகிய கிருஷ்ணமாச்சாரியர் புகழ் நாற்புறமும் பரவியது.

கிருஷ்ணமாச்சாரியர் சிலகாலம் மோகனாங்கி எனும் பரத்தையிடம் மையல் கொண்டு அவளது இல்லத்திலேயே இருக்கத் தொடங்கினார்.

இப்படி இருக்கும்போது அகோபிலம் அருகே 'பொதகமூரு' என்னும் ஊரிலிருந்து பாகவதோத்தமர்கள் அறுவர், அகோபில நரசிம்ம பக்தர்கள் கிருஷ்ணமாச்சாரியர் கீர்த்தனைகளின் புகழைக் கேட்டு அவரைக் காண விரும்பியும், சிம்மாசலத்தைக் கண்டு நரசிம்மரை வழிபடவும் வந்தனர். சிம்மாசலம் வந்து கிருஷ்ண மாச்சாரியர் திருமாளிகை எதுவென்று அறியாமல், மோகனாங்கி வீட்டுக்கருகே வந்தனர். அப்போது அங்கிருந்த கிருஷ்ணமாச் சாரியரைக் கண்டு, அவரை அடையாளம் தெரியாததால் [illegible]

கிருஷ்ணமாச்சாரி வீடு எது? அவரைத் தரிசித்துப் போக வந்தோம், அவர் விஷ்ணுவின் பதினோராவது அவதாரம் என்றும், மகாபக்தரும், பவித்திரமான சான்றோரும் ஆவர் என்றும், அந்த பரம பாகவதரைக் கண்டு வணங்கிச் செல்லவே இத்தனை தூரம் வந்தோம்'' என்றும் கூறினர். அவர்கள் பாகவதோத்தமர்கள் என்றும், அவர்களது இசை கேட்டு இறைவனே எழுந்தருளி கேட்டு மகிழ்வான் என்று ஏற்கனவே கிருஷ்ணமாச்சாரியார் அவர்களைப் பற்றிக் கேள்வி பட்டிருந்தார். இத்தகைய பெரியோர்கள் தன்னைப் புகழ்ந்து பேசியது கேட்ட கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் தன்னைத் காணவே வந்தார்கள் என்பதையறிந்து வெட்கமும், வருத்தமும் அடைந்தவராக நின்றார். தனது இழி நிலைக்கிரங்கி அவர்கள் அறிந்தால் வருந்துவர் என்றும், இகழ நேருமென்றும் கருதிய கிருஷ்ணமாச்சாரியார் அவர்கட்கு சிறிது தொலைவிலிருந்த தமது திருமாளிகையைக் காட்டி அங்கு செல்லுமாறு அனுப்பி வைத்துவிட்டு, தாம் வெறொரு வழியே சென்று, தம் தாடி, மீசைகளைச் சிரைத்து, புத்துடையணிந்து அவர்கள் அடையாளம் கண்டு கொள்ள முடியாதபடி கோலம் கொண்டு தம் இல்லம் புகுந்து அவர்களை வரவேற்றுக் காட்சியளித்தார். வந்தவர்களும் இவரை வணங்கி நின்றனர். எனினும் தாம் இதற்கு முன்பு கண்டவரின் முகச் சாயலைக் கண்டு கொண்டனர். அவர் திருக்கோலம் மாற்றக் காரணமாகிய தம்மை நொந்து கொண்டு மன்னிப்புக் கேட்க, கிருஷ்ணமாச்சாரியார், ''நான் ஒன்றும் நீங்கள் கருதும் அளவுக்கு பெரியவனல்ல! நீங்களே உயர்ந்தவர்கள்! நீங்களே மன்னிக்க வேண்டும்'' என்று அடக்கத்துடன் கூறினார். பின் ஒருவரை ஒருவர் பாராட்டி மகிழ்ந்து அளவளாவி இன்புற்றனர். பொதலூர் பாகவதர்கள் நடனமிட கிருஷ்ணமாச்சாரியார் சங்கீர்த்தனைகள் பாடி இறைவனைப் பரவி மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர். அப்போது சிம்மாசல நரசிம்ம ஸ்வாமியே ஒரு குழந்தைக் கோலத்தில் வந்து இக்காட்சியைக் கண்டு களித்தான். பாகவதர்கள் முதலில் இக்குழந்தை கிருஷ்ணமாச்சாரியரின் குழந்தை என்றே கருதினர். பிறகு உண்மை தெரிந்து கிருஷ்ணமாச்சாரியாரின் பெருமையை உணர்ந்து வணங்கினர். பின் சில நாட்கள் தங்கி சிம்மாசல ஸ்வாமியை வழிபட்டு மகிழ்ந்து, பின் தமது ஊருக்குச் சென்றனர்.

ஏகாம்பரநாதனின் பிரதாப சரித்திரத்தில் வரும் கிருஷ்ணமாச்சாரியார் வரலாறு சுவையுடையதாக அன்றைய சமுதாயச் சூழ்நிலையைச் சித்தரிப்பதாக உள்ளது. பிரதாப சரித்திரம் கூறுவதாவது : ஒரு சமயம் சந்தூர் எனும் கிராமத்தில் கிருஷ்ணமாச் சாரியாரின் தம்பி அனந்தாச்சார்யுலு அவ்வூரில் உள்ள வண்ணாத்தி

ஒருவளிடம் மையல் கொண்டு கள்ளத் தொடர்பு கொண்டிருந்த ..ர. அதைக் கண்ணுற்ற வண்ணான் சினமுற்று இருவரையும் வாளால் குத்திக் கொலை செய்தான். இருவரும் இறந்தனர். அவ்வூர் அந்தணர்கள், ''இது சூத்திரப் பிணத்துடன் கூடியுள்ளது. நாங்கள் சுமக்க மாட்டோம்'' என்று கூறி விட்டனர். வண்ணார்கள் பெண் சவத்தை மட்டும் கொண்டு சென்று விட்டனர். இது கிருஷ்ணமாச்சாரியருக்குத் தெரிய வந்தது. அவர் நிலைமையை உணர்ந்து வாசுதேவன் மேல் கீர்த்தனைகள் பாடினார். உடனே பிணம் தானே எழுந்து நடந்து மயானம் வரைக்கும் சென்று சிதையில் வீழ்ந்தது. இந்த அற்புதத்தைக் கண்ட அவ்வூரார் கிருஷ்ணமாச்சாரியார் காலில் வீழ்ந்து வணங்கி மன்னிப்பு கேட்டுக் கொண்டனர். அவர், ''எனக்கு விருப்பு வெறுப்பில்லை என்றும், நீங்கள் அஞ்ச வேண்டாம்'' என்றும் அபயதானமளித்தார். இச்செய்தி ஒற்றர்களால் பிரதாப ருத்ர மகாராஜா கேட்டறிந்தார். அவர் கிருஷ்ணமாச்சாரியாரை வரவழைத்து வணங்கி அவருக்கு கனககிரி சீமையில் நாலிலொரு பங்கும், ஐம்பது கிராமங்களுக்கு அதிகாரமும், ஓர் ஊரை அக்ரஹார மாகவும் கொடுத்து அனுப்பி வைத்தான். கிருஷ்ணமாச்சாரியார் சந்தூர் வந்ததும் எல்லாச் செல்வத்தையும் பகிர்ந்தளித்தார். கல்லூர் எனும் கிராமத்தை உருவாக்கினார். மூன்றாண்டுகள் அதிகாரம் செய்து வந்த பொருளில் செப்புப் பட்டயங்கள் உருவாக்கி அதில் தாம் இயற்றிய நான்கு லட்சம் கீர்த்தனைகளையும் செலுத்தி வைக்க ஏற்பாடு செய்தார். அவற்றை எடுத்துக்கொண்டு வண்டியிலேற்றி திருவரங்கத்துக்குச் செல்ல முனைந்தார். சில பொறாமைக்காரர்கள் பிரதாப ருத்திரனிடம் சென்று, ''கிருஷ்ணமாச்சாரியார் நீங்கள் அதிகாரம் தந்த கிராமங்களுக்குரிய செல்வத்தைத் திரட்டி செம்புத் தகடுகளாக மாற்றி அதை திருவரங்கத்துக்குக் கொண்டு போகிறார்'' என்று சொன்னார்கள். அதற்கு மன்னன், ''அவர் மகாத்மா. அவருக்கு எது விருப்பமோ, அதுவே எனது விருப்பமும் ஆகும்'' என்று கூறி உடன்பட்டிருந்தான். இச்செய்தி கேட்ட கிருஷ்ணமாச்சாரியார் மிகவும் மனம் மகிழ்ந்து வாசுதேவனைக் கீர்த்தனைகள் பாடிப் பரவி ஒரு வசனம் இயற்றியருளவும் அது கேட்ட இறைவன் பிரதாப மன்னனின் தலைநகரான ஓரங்கல் (வாரங்கல்) நகரில் பொன்மழை பொழிவித்தான். இது கண்ட மன்னனும், மக்களும் கிருஷ்ணமாச்சாரியாரைக் கண்டு வணங்கி வாழ்த்துப் பெற்றுச் சென்றனர். கிருஷ்ணமாச்சாரியார் ஸ்ரீரங்கம் சென்றார்.

ஒரு சமயம் ஓரங்கல் நகரில் உள்ள ஒரு பொன் வேலை செய்யும் ஆசாரி இறந்துவிட்டான். அவனது மனைவி உடன்கட்டை

ஏற வேண்டி சவத்துடன் கூடச் செல்லலானாள். வழியில் கிருஷ்ண மாச்சாரியார் வரவே, அப்பெண் அவரை வணங்கினாள். அவர், அவளைக் கண்டு, ''தீர்க்க சுமங்கலி பவ'' என்று வாழ்த்தினார். அது கேட்ட அப்பெண் கண்ணீர் மல்க தன் கணவன் இறந்துபட அவன் சவம் முன்னே சென்று கொண்டிருப்பதாகவும், தானும் உடன்கட்டை ஏறச் செல்வதாகவும் சொன்னாள். அதுகேட்ட கிருஷ்ணமாச்சாரியார் தன் சொற்கள் பலிக்க வேண்டும் என்று விஷ்ணுமூர்த்தியை வேண்டி கீர்த்தனைகள் பாடினார். உடனே அந்தச் சவம் எழுந்து உட்கார்ந்து கொண்டது. உயிர் பெற்றெழுந்த கணவனை அப்பெண் கண்டு மகிழ்ந்து அவர் பெருமையை அறிந்து வழிபட்டாள். மக்களும் அவர் மாண்பினை உணர்ந்தனர். சைவ மதத்தினனான அவனை உயிர்ப்பித் தெழச் செய்த அவரது சமரச உள்ளத்தையும் பாராட்டினர்.

இத்தகு மகானாகிய கிருஷ்ணமாச்சாரியார் தமிழகத்திலுள்ள திருவரங்கத்திற்கு இறுதிக் காலத்தில் வந்து சேர்ந்தார். அங்கேயே திருநாடலங்கரித்தார். கிருஷ்ணமாச்சாரியரின் 'சிம்மகிரி வசனமுலு' எனும் வசனங்கள் மிகச் சிலவே கிட்டியுள்ளன. அதில், ''தேவா!'' என்று விளித்து வசனங்கள் தொடங்குகின்றன. சிம்மாசலத்தில் எழுந் தருளியிருக்கும் இறைவனாகிய நரசிம்ம ஸ்வாமியை விளித்து, விண்ணப்பம் கூறும் பாங்கில் அமைந்துள்ளன. ஓரிடத்தில் 'மாயதி ராமானுஜ முனிவரமு' என்று எங்கள் முனிவன் இராமானுஜ முனிவரின் வரம் என்று கூறுகிறார். இந்த வசனங்கள் சில வைஷ்ணவ மத சித்தாந்தத்தை விளக்குவன. சில புராண வேதாந்த நீதிகளைப் பற்றிக் கூறுவன. ஸ்ரீராமானுஜர் பிரசாரம் செய்த வைணவ நெறியின் சிறப்பியல்புகளான விஷ்ணுபக்தி, வருணாசிரம தருமங்களைப் பொருட்படுத்தாத சமத்துவம், பாகவத கைங்கர்யம், குருபத்தி, பிரபத்தி முதலியவற்றை கிருஷ்ணமாச்சாரியார் விளக்குகிறார். வைணவ சம்பிரதாயத்துக்குரிய தமிழ்ச் சொற்களையும் ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளார். தளிகை பிரசாதம் அடியேன், திருவடிகள், தொண்டன் (தொண்டடு) முதலிய தமிழக வைணவத்துக்கே உரிய சொற்களையும் பயன்படுத்தியுள்ளார்.

'சிம்மகிரி வசனமுலு' தெலுங்கு இலக்கியத்தில் வசன கவிதையின் முதல் முயற்சியாக மதிக்கப்பட்டு சிறப்பிக்கப்பட் டுள்ளது. கிருஷ்ணமாச்சார்யாரின் இந்த வசனங்கள் தமிழ் நாட்டுக்கும், வைணவத்துக்கும் பெருமை தருவதாக அமைந்துள்ளன.

சிட் 'மகிரி வசஙங்கள் சிலவற்றைக் காண்போம்.

''மதேவா! அகார உ கார மகாரங்கள் கூடுவதால் பிரணவம். இதில் பீஜாட்சரம் காயத்திரி. இச்சாசக்தி, க்ரியா சக்தி, ஞான சக்திகளின் பெருமையை மனி; ணரக் ச டுமே.. அனந்தா வை வேதா: என்று சுருதி சொல்கிறது. சாஸ்திரங்கள் உலகை விளக்குபவை. அடியேன் தாசன், தொண்டன் எனும் 6 ாற்கள் உனது தாசானு தாசர்களுக்குக் காரணமாயிற்று. உமது பாதத்தில் மீதாணை, இந்தப் பொருள் தப்பாது. அநாதபதி, சுவாமி! சிம்மகிரி நரஹரி! நமோ நமோ தயாநிதி!''

*- 27*

''தேவா! இந்திராதி தேவர்கள் நூறு, பிரம்மாக்கள் இருநூறு, காஸ்மீரகிரிகள் முந்நூறு, திலதாஞ்சன கிரிகள் நானூறு, பதிவிரதைகள் ஐந்நூறு, அக்கிரகாரங்கள் அறுநூறு, பெண்மூர்த்திகள் எழுநூறு, உபயதோமகர்கள் எண்ணூறு, பொன் மகளிர் கருக்கள் தொள்ளாயிரம், காராம் பசுக்கள் ஆயிரம், காலச்சக்கரங்கள் லட்சம், துலா புருடங்கள் கோடி, கன்னிகாதானம் பத்துக்கோடி இவை இத்தனையும் கூடினால், உமது திவ்ய நாம சங்கீர்த்தனம் கேட்டதற்கு ஆயிரத்திலொரு பங்குக்கிணையாகாது. இந்த சங்கீர்த்தனைகள் பயன் எவர் எழுதுவாரோ, யார் படிப்பார்களோ, யார் கேட்பார்களோ அவர்களுக்கு ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வரியம் அருள்புரிவாய்! அதன்பின் எனக்குத் தந்த வைகுந்தமும் அருள்வாய்! எங்கள் முனிவன் இராமானுஜமுனிவரம். அநாதபதி. ஸ்வாமி! சிம்மகிரி நரஹரி! நமோ நமோ! தயாநிதி!''

*- 1*

''தேவா! ஆயிரம் புண்ணியங்கள் செய்து மனிதனாகப் பிறப்பர். தேவா! இரண்டாயிரம் பாவம் செய்து பெண்ணாகப் பிறக்கும். தேவா! மூவாயிரம் பாவம் செய்து அங்காடிப் பரத்தையாகப் பிறக்கும். தேவா! நாலாயிரம் பாவம் செய்து ஒரு வீட்டு வேலைக்காரியாகப் பிறக்கும். தேவா! ஐயாயிரம் பாவம் செய்து ஆடிப்பாடித் தீயிற்குதிக்கும் கன்னிகையாக பிறக்கும். தேவா! ஏழாயிரம் பாவம் செய்து மதத்திருடனாகப் பிறக்கும். தேவா! எட்டாயிரம் பாவம் செய்து நடுக்காட்டில் வரிப்புலியாகப்பிறக்கும். தேவா! ஒன்பதாயிரம் பாவம் செய்து திருடனாகப் பிறந்து தலை துண்டிக்கப்படுவான். தேவா! பத்தாயிரம் பாவம் செய்து பஞ்சாங்கம் சொல்லும் பிராமணனாகப் பிறக்கும். தேவா! பதினோராயிரம் பாவம் செய்து குரு துரோகியாக குருடனாகப் பிறக்கும். தேவா! பன்னிரண்டாயிரம் புண்ணியம் செய்து

*ஸ்ரீமந் பாகவதனாக, ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறக்கும். தேவா! இது கிருஷ்ணமாச்சாரி சொன்ன சங்கீர்த்தனை பலன். இது தவறாது. எங்கள் முனிவன் இராமாநுசமுனிவரம். அநாதபதி, சுவாமி! சிம்மகிரி நரஹரி! நமோ நமோ தயாநிதி!"*

*- 1*

*தேவா! உடல் மாயம். எண்ணி எண்ணிச் சொல்வதானால், ஆசைகளின் பாஷாணம் இது. ஒட்டுச் சல்லடை இது. தன் வாழ்க்கைக்காகப் போராடிப் போராடிப் பிறரைக் கெடுக்கும் நாற்றப் பாண்டம். நீர்க்குமிழி! ஊற்றுச்சுனை. ஓட்டைக்குடம். பேச்சுக்குத்தான் ஒழிய வேறெதற்கும் பசையில்லை. வாயில் அழுக்கு! பல்லில் ஊத்தை. மூக்கில் ஊழை. கண்களில் பீளை. செவிகளில் குளிகை ★, தீமையின் குடில், மூட்டை கட்டிய மலமூத்திரத்துருத்தி. சீழ், இரத்தம், கிருமிகளின் ஒழுக்கு, பித்தக்கோளம், மேலே காணும் அழகிப்படி. தோல்கப்பிய மேளமிது. நம்பிக்கை இல்லை! நம்பிக்கை இல்லை. இது நாடகமிடும் பூடகப் பொம்மை. அம்மம்மா! இந்தப் பொம்மையின் பண்புகளைப் பார்த்தோமென்றால காமியாக, பாம்பாக, ஊர் பன்றியாக, கடுவன் பூனையாக, பூனைவாய் எலியாக, ஊற்றாக, ஊற்றிலுள்ள மரமாக, வாள் அனுப்புக்குட்பட்டு, செத்துச் செத்து, பிறந்து பிறந்து, ஈயாய், எறும்பாய், கொசுவாக, பறக்கும் பறவையாக, அநேக ஜீவ ஜந்துக்களின் யோனியிற் பிறந்து, கல்லாய், புல்லாய், மீனாய், ஆணாய், மரத்து மீது குரங்காய், காடையாய், பேடையாய், கண்ட பேருண்டம், யானை, சிங்கங்களாய், செம்பாய், இரும்பாய், எஃகாய், கோட்டை, கோயில், கோபுரங்களாய், கொத்தளமாய், காரமாகி, விகாரமாகி, இனிப்பு, கசப்புகளாகி, கடைச் சரக்காகி, அதன்பின் சோணகமாய் பிறக்கும் தேவா! அதன்பின் முடிவில் மனிதனாய் பிறக்கும் அப்பப்பா! அங்கேயா! இங்கேயா என்று தப்பித்துப் போக சத்தில்லாமல் எண்பத்து நான்கு லட்ச கோடி ஜீவ கோடிகளின் வலையில் சிக்கி, கங்கையில் படகு கவிழ்ந்தாற்போல மகாபாவத்தில் சிக்கி, குயவன் சக்கரம்போல கிறுகிறுவெனத் திரிந்து, அலைந்து, முழுகவும், எழுவதுமாக இவ்விதம் உள்ளது. ஹரி! நாதா! என்னைக் காப்பாற்றுவாயாக! இந்த உடல் என்னும் இலங்கையில் படைவீடு கொண்டு, சித்தம் எனும் இந்திர சித்தனை வென்று, தீய புத்திகளாகிய தீய அரக்கர்களைக் கொன்று,*

---

★ *மூலத்தில் ஊளெ, பீளே, குல்மி என்ற சொற்களே உள்ளன. இவை தமிழ்ச் சொற்களே. இந்த மூன்று சொற்கட்கும் பொருள் புரியவில்லை என்றும், தெலுங்கு நிகண்டிலும் இல்லை என்றும் டாக்டர் குலசேகர ராவ் குறிப்பிட்டுள்ளார். இச்சொற்களைப் பயன்படுத்தியதும் கிருஷ்ணமாச்சாரி, தமிழக அந்தணர் மரபினர் என்பதை உறுதி செய்கிறது.*

ஆசை என்னும் பேசச் சகாரரை அடக்கி, அகங்காரம் என்னும் ம... ...தரியை அடிமையாக்கி, ஆச்சாரி ர் எனும் அனுமனை அனுப்பி, அந்... லங்கை புக்கு கொன்று, ஆத்மா என்னும் சீதையைக் கொணர்ந்து உன் பாதார விந்தங்களில் சேர்த்து உய்வித்தருள்வீராக! யதி இராமானுஜமுனி வரம், அநாதபதி, ஸ்வாமி! சிம்மகிரி நரஹரி! நமோ நமோ தயாநிதி!

-4

தே ...! விஷ்ணு ...க்தியில்லாத வித்துவானைக்காட்டிலும், ஹரி சீர்த்தனம் பாடும் ஒருவனே குலத்திற் சிறந்தவனாவான். புலை ...னாயினும் என்ன? எந் ...க் குலத்தவ...ாயினும் என்ன? அந்தணனைவிட அவனே நற்குலத்தவன். சந்தியாவந்தனாதி நித்திய கருமானுஷ்டானங்க...ளத் தவறாமல் செய்து என்ன பயன்? சகல தருமங்களை...ம் செய்து என்ன பயன்? எமது சிம்மகிரி நரஹரி தா...ருக்குத் தாசர்கள் ஆனாலன்றி நற்கதியில்லை. அநாதபதி! சுவாமி! சிம்மகிரி நரஹரி! நமோ நமோ தயாநிதி!

- 11

தேவா! ஸ்ரீராமானுஜ சித்தாந்தத்தைப் போன்ற வேறு சித்தாந்தம் இல்லை. பரமாச்சாரியர்களைப் போன்ற வேறு ஆசாரியர்கள் இல்லை. அவர்கள் கைங்கர்யம் போன்ற வேறு கைங்கர்ய பரர்கள் (தொண்டர்கள்) இல்லை. அஸ்மத் குரு ப்யோ நம: என்பதை விட உயர்ந்த மந்திரம் இல்லை. பரம ரகசியத்தை விட வேறு இரகசியம் இல்லை. பரம நாச்சியார் (நாஞ்சாரு)★ போன்ற வேறு தாயார் இல்லை. அநாதபதி, ஸ்வாமி, சிம்மகிரி நர ஹரி! நமோ நமோ தயாநிதி.

- 17

தேவா! தாங்கள் உலகிலுட்கரந்துறைந்து உங்கள் குணங்கள் பூலோகத்தில் பிரசித்தமடையச் செய்தீர்கள். தேவா! இந்த உலகத்தில் சேஷாசலத்தில் வெங்கடநாம தேயத்துடன் திகழ்ந்தீர். செல்வ வேட்கையுடன் திரிந்தீர். மக்கள் போகத்துக்கு புருஷோத்தமனாக ஜகந்நாதனாக மகாபோகங்கள் அனுபவித்தீர். தேவா! உலகில் தருமா தருமங்களுக்கும் பரம பாகவதர்கட்கும் அருள்புரிய சிம்மாசலத்தில் நின்றிருந்தீர். தேவா! பூலோக வைகுண்டமெனும் உபயகாவேரி நடுவில் விபீடணனுக்கு அருள் செய்து, ஸ்ரீரங்கசாயியாக இருந்தீர்.

---

★ நாஞ்சாரு : நாச்சியார்: - ஸ்ரீ ஆண்டாளைக் குறிக்கும். ஸ்ரீ லட்சுமி தேவியையும் குறிக்கும், நாச்சியார் திருமொழி திவ்ய பிரபந்தத்தில் உள்ளது.

இவ்விதமாக உலகில் நான்கு வித கோலத்தில் திகழ்ந்து அ ந. ர செய்கிறாய்! உ.டீ. மகிமை பரபிரம்மெ னத் தெரிந்தேன். எனது பாபம தீர்ந்தது. அநாதபதி! சுவாமி! சிம்மகிரி நரஹரி. நமோ நமோ தயாநிதி.

- 21

தேவா! துவயத்துக்கு அதிகாரி எப்படிப்பட்டவன். கோபம், சாந்தம், வெட்கமின்மை, புலன்களை வென்றவன் ஆகவேண்டும் துவயாதிகாரி. தன்னைத் தானறியாமல் வையும் வ.ஞ்ச ஒழுக்க ஆடம்பரமானவன் ஆகக் கூடாது. மாற்றமும் இகழும் இல்லாத இதயாபிமானம், செருக்கற்றவனாக இருக்க வேண்டும் கீடக (வண்டு), அங்குர (முளை) பிறவிகளில் கொல்லப்படாதஎ னாக பாகவதாபசாரமில்லாதவனாக இருக்க வேண்டும். அநாதபதி, சுவாமி - சிம்மகிரி நரஹரி, நமோ நமோ தயாநிதி.

- 32

கிருஷ்ணமாச்... சில வசனங்களில் தம் சரிதத்தையும் கூறியிருக்கிறார். சில கதைகளும் சொல்கிறார். அதிலொன்றில் தாம் சிறுவயதில் ஒரு கோமட்டி (செட்டியார்) வைசியச் சிறுவனுடன் சேவற் போர் சூதாடியதாகவும், அவன் ஒன்பது லட்சம் பணம் பந்தயம் வைத்ததாகவும், தான் நளிகை பிரசாதம் பந்தயம் வைத்த தாகவும், அப்போது கிருஷ்ணமாச்சாரி சேவல் இறந்து விட்ட தாகவும், வைசிய சிறுவன் தன் கோழி வென்றதெனச் சொல்லித் திரிந்ததாகவும், அதுகண்டு பொறாது அவனை அடிக்கவே, அவன் இறந்துவிட்டதாகவும், அப்போது, "சுவாமி! அவன் பிராணவாயுவை அவனுக்கு தருவீர்களா? மாட்டீரா!" என்று கேட்க, பேசாம லிருக்கவே, "தேவா! நீர் சபரி எச்சில் தின்றது சொல்லவா? அவன் உயிரைத் தருவீர்களா? மாட்டீரா? என்ன அப்போதும் தராமற் போகவே, தேவா! நீர்ந்தகாசுரன், தாடகை, தேனுகாசுரன், கம்சன் முதலியவர்களைக் கொண்ற போதுண்டான இகழ்ச்சொல் சு வா?" என்று கேட்க, அப்போதும் சும்மா இருக்கவே, "உனக்கு நாலு லட்சம் கிரந்த சங்கீர்த்தனைகள் படைத்தேனே! நீ என்ன தாய் வழி உறவுக்காரனா? நீர் எமக்கு எத்தனை நாள் கடனாளியோ? உமக்கு நான் எத்தனைக் காலக் கடனாளியோ?" என்று கேட்டதாகவும், அப்போது அந்த வைசியன் உயிர் பிழைத்து எழுந்து உட்கார்ந்த தாகவும் தெரிகிறது.

மற்றொரு வசனத்தில் கீழ்க்கண்ட ஒரு கதை சொல்லப்படு கிறது. ஒரு திருடன் பல அந்தணர்களைக் கொன்றான். திருடித்

திரிந்தான். பின் ஒரு சமயம் மனந்திருந்தி அந்தண சபைக்குச் சென்று, தான் திருந்து விட்டதாகவும், தனக்குப் பிராயச் சித்தம செய்து வைக்குமாறு கேட்டான். அதற்கு அவர்கள் நீ தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றென்பது பிராமணர்களைக் கொன்ற பாவி! உனக்குப் பிராயச் சித்தம் இல்லை என்று சொல்லி விட்டனர். அவன் வருத்தமுடன் மனைவியிடம் கூறவே, அவளும், "நீ தான தருமம் செய்யாமல், பிராயச் சித்தம் செய்வார்களா? நம் பொருள் அனைத்தையும் தானம் செய்ய வேண்டும்" என அவனும் இசைந்தான். இருவரும் மீண்டும் பிராமண சபைக்குச் சென்று தானம் செய்வதாகவும், பிராயச்சித்தம் செய்ய வேண்டும் என்றும் கூறினர்.

மீண்டும் பிராமணர்கள், "உன் தானம் எமக்குத் தேவையில்லை. நீ ஆயிரம் பிராமணியரைக் கொன்ற பாவி! உன்னால் ஏழாண்டுகளாக ரத்தத்தில் மூழ்கிய உலக்கைக்கு மூன்று கிளைகள் முளைத்தால் உனக்குப் பிராயச்சித்தம் செய்து வைக்கிறோம்" என்று சொல்லி அனுப்பி வைத்தனர். இப்படி இருக்க ஒருநாள் ஒரு வைணவ பக்தன் தன் கல்யாணத்திற்காக காட்டு வழியே சென்று கொண்டிருந்தான். வழியிடையே காட்டில் ஒரு சுங்க வசூல்காரன் இருந்தான். அவன் வைணவனைப் பார்த்து, "கல்யாண திரவியங்களுக்கு சுங்க வரி உண்டு, அதை வைத்துவிட்டுப் போ" என்று தடுத்தான். அதற்கு வைணவன், "அய்யா, சுங்கரி! கல்யாண முகூர்த்தம் தப்பிவிட்டால் கல்யாணம் நடக்காது. நேரம் தப்பிவிட்டால் பெண் தரமாட்டார்கள்" என்று மன்றாடினான். ஆனால், சுங்க வசூல்காரன் போகவிடவில்லை. அவன் கேட்ட பணமின்றி இவனும் போக முடியவில்லை. இந்த வாக்குவாதத்தின்போது அந்தத் திருடன் அங்கு வந்து சேர்ந்தான். வந்து சுங்கரியைப் பார்த்து, "ஐயா! ஆயிரம் பொய் சொல்லியாகிலும் கல்யாணம் செய்து வைக்க வேண்டும்" என்பார்கள். நீ இதனைத் தடுப்பது கூடாது என்றான். அவன் கேட்காமல் மீண்டும் தடுக்கவே, திருடன் சினமுற்று சுங்கரி தலையை வெட்டிக் கொலை செய்தான். உடனே அந்த தருமத்தின் காரணமாக அந்த மூன்று கிளைகள் முளைத்தன. திரிமூர்த்திகளே மூன்று காகங்களாக வந்து வேதகோஷம் செய்தனராம். பின் அவனைக் கண்டு அந்தணர்கள் பாராட்டி பிராயச்சித்தம் செய்து பாராட்டினர்.

தன்னலத்தால் செய்யும் கொலைக்குப் பரிகாரம் இல்லை என்றும், பிறர் நலத்துக்காகச் செய்யும் கொலையும் தருமமே என்றும் இக்கதை விளக்குகிறது.

ஆந்திர நாட்டில் முதன் முதலில் வைணவ பக்தி கீதங்களும், வசனங்களும் இயற்றி வழிகாட்டியாகத் திகழ்ந்த கிருஷ்ண மாச்சாரியார் தமிழகத்திலிருந்தும் சென்ற வைணவ ஆச்சாரியார்களில் முன்னோடி என்றே கருதப்படுகிறது. தாள்ளபாக அன்னமய்யா, அவரது குமாரர், பேரர் முதலிய மரபினர் பாராட்டிய கிருஷ்ணமாச் சாரியரைப் பற்றி அண்மைக்காலத்தில்தான் தெரிய வந்துள்ளது. அவரது பெருமையும், தொண்டும் மிகச் சிறப்புடையது ஆகும். கிருஷ்ணமாச்சாரியாரைப் பற்றிய சில குறிப்புகளை ஏகாம்பர நாதனின் 'பிரதாப சரித்ர' கூறுகிறது. 'பிரதாப சரித்ர' காகதீய மன்னர்களின் வரலாற்றினையும், அக்கால மக்களின் பழக்க வழக்கங்களையும் கூறும் நல்ல வரலாற்றுச் சான்றாகக் கூடிய நூலாகும். பிரதாபருத்திரன் ஆஸ்தான கவிஞர்களைப் பற்றியும், மந்திரி, அதிகாரிகளைப் பற்றியும் மக்கள் நடவடிக்கைகளைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது. இந்தக் கவிஞன் பதினாறாம் நூற்றாண்டைச் சேர்ந்தவன். ஆனாலும், வரலாற்று நோக்கோடு 'பிரதாப சரித்ர' படைத்துள்ளதைப் பாராட்ட வேண்டும். இந்நூலின் மூலமே கிருஷ்ணமாச்சாரியார் பிரதாப ருத்திரனிடம் சென்று பரிசில் பெற்று வைணவம் பரப்புவதற்குச் செய்த ஏற்பாடுகள் எல்லாம் தெரிந்து கொள்கிறோம்.

மேனாட்டறிஞர்களைப் போல நம் நாட்டவர்க்கு வரலாற்றினைப் பொறித்து வைக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லை என்று குறை கூறுவதுண்டு. எனினும் நம்மவர்களிலும் பிரதாப சரித்ர, குருபரம்பரா பிரபாவம், பெரிய புராணம் முதலிய நூல்கள் காவிய மயமாயினும், அது வரலாற்றுப் பதிவாக்கமாகவே கருத வேண்டும். பால்குரிகி சோமசுந்தரர், 'பசவ புராணம், பண்டிதாராத்ய சரித்ர' முதலிய காவியங்கள் வரலாறேயாகும். எனினும் கற்பனை மிக்க காவிய நடையில் நமது வரலாறுகள் பொறிக்கப்பட்டுள்ளன. ஆதலின் நம் நாட்டவர்க்கு வரலாற்று ணர்வே இல்லை என்று குறை கூறுவது பொருந்தாது, பல நூல்கள் போர்களிலும், இயற்கைச் சீற்றங்களிலும் அழிந்து போயின. பொதுவாக தெலுங்குக் கவிஞர்கள் தத்தம் காவியப் பீடிகையில் தம்மைப் பற்றியும், தம்மை ஆதரித்த மன்னர்களைப் பற்றியும் கூறி வம்சாவளிகளையும் தந்துள்ளனர். இது அவர்களது வரலாற்றுணர்வே யாகும். கிருஷ்ணமாச்சாரியாரைப் போன்ற மகான்களைப் பற்றி வரலாற்றுணர்வோடு கூறிய 'பிரதாப சரித்ர' காவியம் படைத்த ஏகாம்பரநாதனைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

# 10. தாள்ளபாக மரபினர்கள் வளர்த்த வைணவம்

ஆந்திர நாட்டில் பன்னிரண்டாம், பதிமூன்றாம் நூற்றாண்டுகளில் வீரசைவமும், வீர வைணவமும் மேற்கிலிருந்தும், தெற்கிலிருந்தும் புறப்பட்டு ஆந்திர நாடு முழுதும் பரவின.

நன்னய, திக்கன, எர்ராபிரகட முதலிய கவிஞர்கள் சைவ, வைணவம் பேதமின்றி ஒருமைப்பாட்டை வலியுறுத்தினர். ஸ்ரீநாத கவி வைதீக சைவமும், போதனா வைதீக வைணவமும் பரப்பினர். பால் குரிகி சோமநாதர் வீரசைவத்தை வலியுறுத்தி மக்கள் இலக்கியப் படைப்புகள் இயற்றினர். அது மக்களைக் கவர்ந்தது. ஆனால், தமிழகத்திலிருந்து வந்த வீர வைணவம் புகுந்து பரவத் தொடங்கியது. சைவர்கள் ஸ்ரீசைலமும், வைணவர்கள் அகோபலமும் முக்கிய க்ஷேத்திரங்களாகக் கொண்டாடினர்.

பால்குரிகி சோமநாதருக்குப் பின், பிடவர்த்தி சோமனா, பஸவன்னா, கௌரன்னா முதலிய கவிஞர்கள், பசவ புராணம், பிரபுலிங்க லீலை, நவநாதசரித்திரம் முதலிய காவியங்களைப் படைத்து வீர சைவத்தைப் பரப்பினர். அக்காலத்தில், கோன புத்தாரெட்டியின் ரங்கநாத இராமாயணம், வென்னலகண்ட்டி சூரன்ன விஷ்ணுபுராணம், போதன்ன பாகவதம், பைரவகவி ஸ்ரீரங்க மஹாத்மியம் முதலிய வைணவ காவியங்கள் வைணவத்தைப் பரப்பின.

திக்கனா, நாசன சோமன, தூப குண்ட்ட நாராயணகவி, பைசராஜு வெங்கட கவி முதலியோர் இருமத இணைப்பினை வற்புறுத்தும் ஹரிஹரநாதனை வழிபட்டு புதிய சிந்தனைகளைப் பரப்பினர். நாசன சோமனா,

*பரிவாதா' ஸ்பத' வாதா' மோத' மதி' ராபானம்புசே' மத்துலை*
*ஹரி மேலன்சு' ஹருண்டு மேலஞ்சு' னேலா வாத'முல்'*

*துயர்க்கிடனான வாதம் எனும் மகிழ்ச்சியுறு*
*கள்ளினை யுண்ட வெறியால், திருமாலே பெரியவன்*
*சிவனே பெரியவன் என்று ஏன் வாதமிட வேண்டும்.*

என்று கேட்டு சமரச பாவத்தை உருவாக்க முனைந்தான். இவ்விதம் பன்னிரண்டு, பதிமூன்றாம் நூற்றாண்டுகளில் ஆந்திர நாட்டில் வைணவம் ஒருபுறம் வளர்ந்து வந்தாலும், திருப்பதி வெங்கடேசுவர சுவாமியை எந்தக் கவிஞரும் பாடிப் பரவியதாகத் தெரியவில்லை.

எர்ராபிரகட (1286 - 1350) தமது நரசிம்ம புராணம் நூலை அகோபில நரசிம்மருக்கு சமர்ப்பணம் செய்துள்ளார். திருமலை வெங்கடேசுவரரைப் பற்றி குறிப்புளதேயன்றி பரவி வழிபட்டதாக இல்லை. அதோபோல அனந்த கவி போஜ ராஜீயம் எனும் கதைகள் அடங்கிய அழகிய காவியத்தை அகோபல நரசிம்மருக்கே சமர்ப்பணம் செய்துள்ளான. பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த மடிகிசிங்கன தனது வாசிஷ்ட ராமாயணமும் அகோபல நரசிம்மருக்கே சமர்ப்பணம் செய்துள்ளார். ஆந்திர நாடு முழுதும் சுற்றித் திரிந்த கவிஞரான ஸ்ரீநாதரும் வெங்கடேசுவரரைப் பற்றி ஒன்றுமே குறிப்பிடவில்லை. வென்னலகண்ட்டி சூரன பதினைந்தாம் நூற்றாண்டில் தமது படைப்பாக, 'விஷ்ணு புராணத்தை' பாகநாடு பகுதியை ஆண்ட மன்னன் வைணவ மதாபிமானியாக ராவூரி ராகவரெட்டிக்குச் சமர்ப்பணம் செய்துள்ளான். இந்த மன்னன் திருமலதாதாச்சாரியார் சீடனாகும். சூரன தம் நூலில்,

*திருமலதாதயதேசிக*
*வர சிஷ்யுனனுபமேய வைதுஷ்யுனகுன்*
*பர பூபாலதமஸ்ஸம்*
*ஹரணதித்யுனகு பல்லவாதித்யுனகுன்*

என்ற கந்தபத்தியச் செய்யுளில். திருமல தாத்தாச்சாரியரின் சிறந்த சீடனும் இணையற்ற புலமையுடையவனும், பிற மன்னர் எனும் இருளைக் கெடுக்கும் கதிரவனைப் போன்ற பல்லவாதித் தியனுக்கு என்று கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. திருமல தாத்தாச்சாரியர் தமிழகத்திலிருந்து சென்ற வைணவராவர்.

இவ்விதம் பதினைந்தாம் நூற்றாண்டு வரை ஆந்திர நாட்டில் எந்தக் கவிஞரும் திருப்பதி வெங்கடேசுவரரை வழிபட்டதாகத் தெரியவில்லை. ஆனால், அகோபலத்துக்கருகிலே தாள்ளபாக என்ற ஊரில் பிறந்து திருமலைக்கு வந்துறைந்த தாள்ளபாக அன்னமாச்சாரியரே முதன்முதலில் வெங்கடேசுவரரைத் துதித்து கீர்த்தனைகள் பாடிய கவிஞராகத் திகழ்கின்றார். இவருக்குப்பின் தான் கிருஷ்ணதேவராயர் வழிபட்டு 'ஆமுக்தமால்யத' இயற்றி யுள்ளார். ஆந்திர மக்களும் வெங்கடேசுவரரை மிகுதியாக வழிபடலாயினர்.

### தாள்ளபாக அன்னமய்யா

கர்நாடக சங்கீதத்தின் பிதாமகரும் ஆந்திர நாட்டில் வெங்கடேசுவரர் பெருமையை உணரச் செய்தவரும், வைணவத் தைப் பரப்பிய ஆசாரியரும், கவிஞருமான அன்னமாச்சாரியர் ஆந்திர நாட்டில் கடப்பை மாவட்டத்தில் இராஜம் பேட்ட வட்டத்தில் உள்ள, 'தாள்ளபாக' எனும் ஊரில் 1468ல் (சில ஆய்வாளர்கள் 1424ல்) வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்தில் (நம்மாழ்வார் அவதரித்த நாள்) அவதரித்தார். இவர் அந்தணர் குலத்தில் நந்தவரீக பிரிவினில், ருக்வேத ஆஸ்வலாயன சாகையில், பிறந்த பாரத்வாஜ கோத்ரம், நாராயண சூரி என்பவர் திருமகனாக அவதரித்தார். இவரது தாயார் பெயர் லக்கமாம்பா. ஏழாம் வயதில் உபநயனம் ஆனது. தாய், தந்தையர், அண்ணன், அண்ணியர் சொல்லும் ஏவல் கேட்டுக் கொண்டு கற்று வந்த அவர் ஒரு பசுவுக்குப் புல்லறுக்கச் சென்றார். புல் அறுக்கும்போது பண்ணரிவாள் விரலில் பட்டு காயம் ஏற்பட்டு இரத்தம் கொப்பளித்தது. அதைக் கண்ட அன்னமய்யா, அந்த வேலையை வெறுத்து பண்ணரிவாளைத் தூர எறிந்து விட்டு, வீட்டை விட்டோடி விட்டார். போகும் வழியில் திருப்பதி வெங்கடேசு வரரைத் தொழச் செல்லும் ஒரு பாகவத கோஷ்டியைக் கண்டு, அந்தக் கூட்டத்தோடு சேர்ந்து கொண்டு திருமலைக்குச் சென்றார்.

திருமலையடிவாரத்தில் தாள்ளபாக தங்கம்மா என்ற கிராம தேவதையுள்ளது. இது குறித்தும் ஒரு வரலாறு உண்டு. திருப்பதியில்

இருந்த திருமல தாத்தாச்சாரியார் தம் சீடர்களுடன் கடப்பையருகில் ஒரு ஊரில் போய்க்கொண்டிருந்தார். அங்கிருந்த துஷ்ட தேவதையான கங்கம்மாளுக்கு நரபலி கொடுக்கும் வழக்கம் இருந்தது. அன்று தாத்தாச்சாரியார் வந்திருந்தார். சாமியாடி மேல் மருள் வந்து கங்கம்மா, 'பலி, பலி' என்று கத்தியவாறு தாத்தாச்சாரியார் மேல் பாய வந்தான். தாத்தாச்சாரியார் சீடர்கட்கு வைஷ்ணவ முத்திரை போட வைத்திருந்த சங்கு சக்கர முத்திரையைப் பழுக்கக் காய்ச்சி அவன் தோள்களில் முத்திரையிடப் போனார். கங்கம்மன் மருளாடி ஓடப் பார்க்கும் மந்திர மகிமையால் ஓட முடியாமல் நின்று திமிறவே அந்த முத்திரை அவன் முதுகில் பட்டது. கங்கம்மனும் ஓடி மறைந்தான். அவனும் அவர் காலில் வீழ்ந்து வணங்கினான். அவரும் அந்த கங்கம்மனை திருமலையடிவாரத்தில் நிறுவினார் என்று ஐதீகம் உண்டு. தாத்தாச்சாரியார் முத்திரை புஜத்தில் தப்பினாலும் முதுகில் தப்பாது என்ற பழமொழியும் உண்டாயிற்று.★

அந்த கங்கம்மனை அன்னமய்யா முதலில் வழிபட்டு பின் திருமலைமேல் ஏறி கோனேரியில் தீர்த்தமாடி வெங்கடேசுவரனை தரிசித்தார்.

வழியில் இராமானுஜர் திருமலை நம்பியிடம் இராமாயணம் கேட்ட இடத்தில் அமைந்த ஸ்ரீபாதங்களை வணங்கினார். அதற்கடுத்து குயவன் மண்டபம் எனும் இடம் உள்ளது. அதன் வரலாறு சுவையானது.

ஒரு குயவன் சுவாமிக்கு கலங்கள் செய்து தருபவன். தினந்தோறும் வேலை மிகுதியால் மேலே சென்று வெங்கடேசுவரனை தரிசிக்க இயலவில்லை. ஆகையால் மரத்தால் ஸ்ரீனிவாச மூர்த்தியை செய்து மண்ணாலே மலர்கள் செய்து அர்ச்சித்து வந்தான். தொண்டைமான் எனும் அரசன் சுவாமிக்கு பொன்னால் ஆன பூக்களை வைத்து வழிபட்டான். ஒருநாள் தான் வைத்த பொன் மலர்கள் நழுவியும் திருவடிகளில் மண் மலர்கள் தழுவியும் கிடக்கக் கண்ட மன்னன் இந்த மலர்கள் யாரிங்கு வைத்ததென ஆராய்ந்து, குரவ நம்பி, கீழே மரவிக்கிரத்தில் வைத்த மலர்களே இங்கு சுவாமியால் ஏற்றுக்கொள்ளப்பட்டு பொலிவுறுகின்றன என்று தெரிந்து கொண்டான். பின்னர் குரவ நம்பியைக் கண்டு வணங்கிச்

★ *தாள்ளபாக அன்னமாச்சார்யுல ஜீவித சரித்ரமு, வேடூரி பிரபாகர சாஸ்திரி, டி.டி.டீ. பிரசுரம், 1966.*

சென்றான். இக்கதை வெங்கடாசல மகாத்மியத்திலுள்ளது. அன்னமய்யா இந்த இடத்தினைப் பணிந்து வழிபட்டதோடு ஒரு கீர்த்தனையும் பாடியருளினார்.

*குருவ நம்பி திருமலகுருவ நம்பி நீ*
*சரணமுலே கொலிசி ப்ரதிகெ திரிட்முக'லராஜு*

என்று திருமலை குருவ நம்பியே! உன் அடிகளை முடிதரித்த மன்னனே வணங்கினான் என்று கூறுகிறார்.

*த'வ்வுலாமமனுண்டி நீவு*
*புவ்வுல பூஜிஞ்சிதே அவி*
*சிவ்வுன அப்பனி அடுகு' தாமமெரலபை*
*செலகி அப்புடே நிலிசை*
*புவ்வுலகுரெக்கலுன்னவோ லேக*
*புண்ட ரீகாக்ஷு னி மகிமோ?*
*நிவ்வடில்லு நீ பக்தியோ காணி*
*நேடு நாதோ செப்பவே?*

''தூரத்தில் நீ பூக்கொண்டு பூசித்தால் அது உடனே அப்பன் திருவடித் தாமரை மேல் அப்போதே நின்றன. பூக்களுக்கு இறகுகள் உள்ளனவா? அல்லது தாமரைக் கண்ணனின் மகிமையா? பெருகும் உனது பக்தியின் பெருமையா? என்னவோ இன்று என்னிடம் சொல்ல மாட்டாயா?'' என குரவ நம்பியைப் பாடிப் பரவுகிறார்.

பின்னர் முழங்கால் முறித்தான் (மோகாள்ள முடுபு) எனும் மலை மீது ஏறத் துவங்கினார். இந்த மலையை திருமாலாகவே உருவகித்த பக்தர்கள் செருப்புக் காலால் மிதிக்க அஞ்சி முழங்காலால் ஊர்ந்து செல்வது பழங்கால வழக்கம். அப்படியே அன்னமய்யாவும் முழங்காலால் தவழ்ந்து சென்றார். சிறிது தொலை சென்றதும் பசியாலும், சோர்வாலும் கண் இருள, காதடைக்க மயங்கி விழுந்து விட்டார். அப்போது அவர்மேல் மங்கைத் தாயாரே அமுதூட்டி வழிகாட்டிச் சென்றாள். அப்போது அலமேலு மங்காது சதகமாக நூறு பாடல்களைப் பாடியருளினார்.

*அம்மகு தாள்ளபாக க'னு டன்னடு பத்ய சதம்பு செப்பெ கோ'*
*கொம்மனி வாக்ப்ரசூனமுல கூ'ரிமி தோனலமேலு மங்ககுன்*

என்று அவரே தாம் நூறு பாடல் அலமேலு மங்கைக்குச் சொல்லியதாகவே சதக இறுதியில் கூறியுள்ளார். பின் திருமலை வெங்கடேசுவரரைத் தரிசித்துப் பல கீர்த்தனைகள் பாடினார். பதினாறாம் வயதிலிருந்து கீர்த்தனைகள் பாடிய அன்னமய்யா பக்தி, வைராக்கியம், சிருங்காரம் முதலிய ரசங்களில் வெங்கடேசுவரனைத் துதித்துப் பல பாடல்கள் பாடி வழிபட்டார். திருமலையில் இருந்த போது துவாதசி நாளில் ஒரு வைஷ்ணவ ஜீயர் சங்கு சக்கர முத்திரை பதித்து வைஷ்ணவ தீட்சை தந்தார். அவரும் வைணவ கீதங்கள் பாடி மகிழ்ந்தவாறு சில காலமிருந்தார்.

அன்னமய்யாவைக் காணாத அவருடைய பெற்றோரும், உற்றோரும் தேடிப் பார்க்கலாயினர். பின்னர் திருமலையில் இருக்கும் செய்தியறிந்து அவரைக் கண்டு மீண்டும் தாள்ளபாக வருமாறு வற்புறுத்தி அழைத்துச் சென்றனர். அங்கு திருமலக்க, அக்கலம்ம எனும் இரு மடந்தையரை திருமணம் புரிவித்தனர். சில காலம் இல்லற இன்பந்துய்த்து மகிழ்ந்தார்.

தாள்ளபாக உள்ள கடப்பை மாவட்டத்தைச் சேர்ந்துள்ள கர்நூல் மாவட்டத்தில் அகோபிலம் என்னும் புராதனமான வைணவ க்ஷேத்திரம் உள்ளது. அங்கு, வேதாந்த தேசிகரின் சீடரும், மேல்கோட்டையில் சிலகாலம் வசித்தவருமான ஆதிவண் சடகோப முனிவர் அகோபல நரசிம்மனருளால் ஒரு மடத்தை நிறுவினார். இவர் திருப்பதியில் படிக்கட்டுகள் கட்டுவித்தார். ஆழ்வார் திருநகரிக்கு வந்து நம்மாழ்வாரை வணங்கி கோயில் திருப்பணி செய்து அங்கு உறையும் இறைவனாகிய ஆதிநாதனால் பாராட்டப் பட்டு ஆதி என்ற பட்டம் ஏற்று ஆதிவன் சடகோபர் எனப் பெயர் பெற்றார். இவரது காலம் கி.பி. 1430 - 1510 ஆகும். அகோபல நரசிம்ம சுவாமி அருளால் அகோபில மடம் நிறுவி ஆந்திர நாட்டின் மேற்குப் பகுதியில் வைணவம் தழைத்தோங்க மூல காரணம் ஆனவர். இவரே அலசாளி பெத்தன குருவுமாவார். இவரும், இவரது சீடர்களும் விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்களுக்குக் குருவாகத் திகழ்ந்தனர். இவர் காலத்தில் வடகலை, தென்கலை கருத்து முரண்பாடுகள் இருந்திருப் பினும், திருமண் அணிதல் முதலியவற்றில் ஏற்பட்ட வேறுபாடுகள் உண்டாகவில்லை. இவருக்குப் பின் சில ஆசாரியர்கள் தென்கலை யராக இருந்ததுண்டு. ஆறு, ஏழாம் பட்டங்கட்குப் பிறகு இம்மடம் வடகலைக்குரியதாயிற்று. இன்றும் வடகலையாகவே திகழ்கின்றது. அகோபல மட மூலவராகிய ஆதிவண் சடகோபரிடம் அன்னமய்யா சீடராக அமர்ந்து சிலகாலம் வைணவத் தத்துவங்களையும்,

வேதாந்தம், சாத்திரம் முதலியவற்றையும் நன்கு கற்றறிந்தார். அன்னமாச்சாரியாரின் பேரரும், அன்னமாச்சாரியர் சரிதத்தை எழுதியவருமான தாள்ளபாக சின்னன்ன எனும் சினதிருவேங்கள நாதன் தமது அன்னமய சரித்திரத்தில் கூறுவதாவது

*பரமேசுடகு' அஹோபலந்ரு சிம்ஹு-டு'*
*கு'ருப'ாவமுன ஜேருகொணி த்ரி த'ண்டம்பு*
*நா நரசிம்ஹு- சக்ராதி மன்த்ரமுலு*
*தானெப் ரத்யட்சம்பு த'ய சேய கொ'னுசு*
*ஹரி ஹயக்'ரீவு 'ப்ரத்யக்ஷம்பு ஜேஸி*
*த'ர சர்வதந்த்ர ஸ்வதந்த்ருடை 'ணட்டி*
*வேதாந்த தே'சிகு வேங்கடாச்சார்யு*
*ணாதி'வ்ய ஸாம்ப்ரதா'ய முன வர்த்தின்சு*
*சடகோப முனிவத்'த' சகல வேதாந்த*
*படணம்பு' ஜேஸி யப'ங்களிஸ் பூர்த்தி*

பரமேஸ்வரனாகிய அகோபல நரசிம்மனே குருவாக வந்து, திரிதண்டமும், சக்கராதி மந்திரமும் தானே பிரத்தியட்சமாக தானே கைக்கொண்ட; ஹயகிரீவரைப் பிரத்தியட்சமாகக் கண்ட சர்வதந்திர சுதந்திரராகிய வேதாந்த தேசிகவெங்கடாச்சாரியரின் திவ்விய சம்பிரதாயத்தில் இயங்கும் சடகோப முனியிடம், சகல வேதாந்தங்களையும் கற்று, முழுமை பெற்றிலங்கினார். வேதாந்த தேசிகரின் சீடர் ஆதிவண் சடகோபர் என்பதும், அவரே அகோபல மடம் நிறுவியர் என்பதும் வரலாறிந்த உண்மைகள். இதனால் கிருஷ்ணமாச்சாரியரைப் போன்றே ஆதிவண்சடகோபர் வைணவம் பரப்பிய மகான் ஆவார். அன்னமய்யா, அலசானி பெத்தண்ணா போன்ற மாபெரும் சீடர்களை உடைய பெருமையுடைய அவர் தமிழக ஸ்ரீவைஷ்ணவ மரபினர் என்பதால் தமிழகத்துக்குப் பெருமை சேரும். சடகோப யதியை கிருஷ்ணதேவராயரும், 'ஆமுக்தமால்யத' நூலில் புகழ்ந்துரைத்து உள்ளார். அன்னமாச்சாரியரும்,

*சூடு டிந்தரகு சுல பு'டு ஹரி*
*தோடு நீடயகு' தொரமுனியிதடு* **பல்லவி.**

*கைவல்யமுனகு கனகபு தாபல*
*த்ரோவை ஸ்ருதுலகு துதிபதமை*
*பாவனமொக ரூபமை விரஜகு*
*நாவையுண்ணாடிதெ யிதடு* - சூடு

*காபாடக ' லோகமுலகு சுஞ்ஞான*
*தீபமை ஜக'திகி தேஜமை*
*பாபாலடகபக' ப'வ பயோது'லகு*
*தேபை யுண்ணாடிதே' யிதடு.* ரூடு

*கருணாநிதிகி ரங்கபதிகி, காஞ்சீ*
*வருனகு வேங்கடகி' ரிபதிகி*
*நிரதி னகோபல நருகேசரிகிதத்*
*பருடகு' சடகோபமுனி யிதடு.* - ரூடு

''பாரீர்! இத்தனை பேர்க்கும் எளியனவானவன். திருமாலுக்குத் துணை நிழல் ஆன முனியரசு இவன்.''

''கைவல்லியத்துக்கு (மோட்சம்) பொன்மலைக்கப்புறம் உள்ள பாதையாக, வேதங்களுக்கு இறுதிப்பதமாக, புனிதமே ஒருருவாக, விரஜாநதிக்கு ★ ஒரு படகாக உள்ளான் இவன்.''

''உலகைக் காப்பாற்ற நல்லறிவு விளக்காக, உலகுக்கொரு சுடராக, பாவங்களைப் போக்க, பிறவிக் கடல் கடக்கும் தெப்பமாக உள்ளான் இவன்.''

''கருணாநிதிக்கு, ஸ்ரீரங்கபதிக்கு, காஞ்சிபுரப் பெருமாளுக்கு, வெங்கடேசுவரனுக்கு, அகோபல நரசிம்மனுக்கு தற்பரனாகிய (இணைந்துவிட்ட) சடகோப முனியிவன்.''

அன்னமாச்சாரியர் வால்மீகி இராமாயணம் முழுவதும் கீர்த்தனைகளாக இயற்றினார். துவிபத ராமாயணம் (ஈரடிச் செய்யுள்) இயற்றியதாகவும் கூறுவர். இவை இரண்டும் கிட்டவில்லை. சிருங்கார சங்கீர்த்தனைகள், அத்யாத்ம சங்கீர்த்தனைகள் முப்பத்தி ரண்டாயிரம் பாடல்கள் பிரசுரமாகியுள்ளவை. பிரசுரமான மற்றொரு நூல் சிருங்கார மஞ்சரி. அலர்மேல் மங்கைமேல் வெங்கடேசுவரா என்ற மகுடமிட்ட சதகம் பிரசுரிக்கப்பட்டுள்ளது. மற்ற சதகங்கள் கிடைக்கவில்லை. பன்னிரண்டு சதகங்கள் இயற்றியுள்ளதாகக் கூறுவர். வடமொழியில் இயற்றிய 'வெங்கடாசல மகாம்யம்'

---

★ *விரஜாநதி - வைகுந்தத்துக்குப் புகுமுன் உள்ள நதி. இந்த நதியைப் பசுவின் வால் பிடித்துக்கொண்டு கடந்து செல்ல வேண்டும் என்றும், அதற்காகவே பசுவை அந்தணர்க்கு தானம் தரப்படுவதாகவும் ஓர் ஐதீகம் உண்டு.*

இப்போது கிடைக்கவில்லை. வடமொழியில் இயற்றிய மற்றொரு நூல் 'சங்கீர்த்தன லட்சணம்' இதுவும் கிட்டவில்லை. இவரது மனைவி திம்மக்க 'சுபத்திரா கல்யாணம்' எனும் காவியம் எழுதியுள்ளார். இது வெளியிடப்பட்டுள்ளது. இவரது குமாரர்கள், பேரர்களும் மிகச் சிறந்த கவிஞர்களே. கவி மரபின் மூலவரான அன்னமய்யாவின் புகழ் பரவியது. சாளுவ நரசிம்மராயன் கி.பி. 1485 முதல் 1491 வரை விஜய நகர சாம்ராஜ்யத்தை ஆண்டான். அம்மன்னன் சங்கமவம்ச பிரவுடராயனை வென்று தான் பதவிக்கு வந்தான். சந்திரகிரியில் சிறுபகுதி ஆண்ட இவன் தனது ஆற்றலாலும், முயற்சியாலும் விஜயநகரப் பேரரசின் மன்னனானான். 1450ல் இவன் பொத்தபி நாடு 'டங்குடூரு'வில் சேனாதிபதியாக இருந்தான். பின் சிற்றரசனானான். அன்னமய்யாவின் ஆசீர்வாதத்தால் வெங்கடேசுவரரின் அருளாலும் மாமன்னன் ஆனான். இவனுக்கு அன்னமய்யா உற்ற மந்திரியாக இருந்து அவனது வளர்ச்சிக்கு உதவினார். அவனும் மிகுந்த பக்தியுடன் மரியாதை செலுத்தி வந்தான். கலிங்க கஜபதிகளையும் நட்புடன் பாவித்து தன் அரசை நிலை நிறுத்திக் கொண்டான். சங்கம வம்ச விருபாட்சராயரை அவனது பெரிய மகன் இராஜசேகர ராயர் கொன்றான். இவனை இவன் தம்பி இரண்டாம் விருபாட்சராயர் கொன்றான். இந்தக் கொலைகள் மக்கட்கு வெறுப்பையூட்டின. ஆதலின், அதைப் பயன்படுத்திக்கொண்டு சேனாதிபதியாக இருந்த சாளுவ நரசிம்மராயர் பதவிக்கு வந்து தன் ஆட்சியை நிறுவினான்.

சாளுவ நரசிம்மருக்கு பிரம்மஹத்தி பாவம் சுற்றிக் கொண்டதாகவும், அதை மத்துவாச்சாரியார் நீக்கினார் என்றும் வரலாறுண்டு. இக்காலத்தில் அன்னமய்யா பாடிய கீர்த்தனை ஒன்றுள்ளது.

*வெறது வெறதுணிந்து வேடுகபட விட்டி*
*குறுச பு'த்து'ல னெட்டு கூடுது' ணய்யா!*

*தேஹமிச்சின வாணி திவிரி சம்பெடுவாடு*
*த்'ரோஹிகா'க நேடு தொரயடா'*
*ஆஹிகமுகனிட்டி அத'மவ் ருத்திகி கே*
*சாஹச முன்னெட்டு சாலுது ணய்யா!*

*தோடு' புட்டின வாணி தொடரி சம்பெடுவாடு*
*கூட து'ஷ்டுடு கா'க சுக்ருதி யட*

*பாடை யிட்டு வண்ட்டி பாப்பு'த்'து'லு னேளி*
*நீட நிலுவனெட்டு நேருதுனய்யா!*

''அஞ்சுவேன்! அஞ்சுவேன்! இங்கு வியப்புறத் தகுந்த குறுகிய புத்தியுடையவர்களை எப்படி கூடுவேனய்யா.''

''உடல் தந்தவனை முனைந்து கொன்றவன் துரோகியல்லா மல் துரையாம்? இத்தகைய அமதச் செய்லுக்கு எந்தத் துணிவுடன் துணை போவதுவோ?''

''கூடப் பிறந்தவனைக் கொல்கிறவன் கயவனில்லாமல் நயவான் ஆகுமாம். பாழான இத்தகைய பாவ புத்திகள் செய்து துணை நிற்க எப்படி யறிவேன்.''

இவ்விதம் அன்றைய அரசர்களின் இழிநிலையை வெறுத்து பின் புதிய அரசராகிய சாளுவ நரசிம்மனுக்கு ஆதரவு தந்தார். அதனால் நரசிம்ம ராயர் விரைவில் பேரரசரானார். இச்சமயம் நடந்த முஸ்லீம் படையெடுப்புகளையும் கண்டித்து பல கீர்த்தனைகள் பாடியுள்ளார். நரசிம்மராயர் அன்னமய்யாவை தன் ஆஸ்தானத்துக்கு மரியாதை செய்து பல அக்கிரகாரங்கள், நில புலங்கள் தந்து உபசரித்தான். வெங்கடேசுவர பக்தனான மன்னன் மகிழுமாறு வெங்கடேசுவரர் மேல் பல கீர்த்தனைகள் பாடினார். இப்படி யிருக்கும் காலத்தில் நரசிம்மராயன் அன்னமய்யா தன்மீது (தன் பேரில் மகுடமிட்டு) கீர்த்தனைகள் பாடுமாறும், தன் புகழ் நிலை நிற்க அவாவி கேட்டுக்கொண்டான். வெங்கடேசனையன்றி வேறு தெய்வம் நாடாத அன்னமய்யா நரஸ்துதி செய்ய மறுத்துவிட்டார்.

*நரஹரி கீர்த்தன நானின ஜிஹ்வ*
*ஒருல னுதிம்பக' னோபது' ஜிஹ்வ*
*முரஹரு பத முலம் ரொக்கின சிரமு*
*பருல வந்தனகு பரக்'து' சிரமு*

என்று அன்னமய்யா பாடியிருக்கிறார்.

''நரஹரியின் கீர்த்தனைகளைப் பாடி நனைந்த நாக்கு பிறரைப் புகழ இயலாது. முரஹரியின் பாதங்களை வணங்கிய தலை பிறரை வணங்க இயலாது'' என்றபடியே நரசிம்மராயரைப் புகழ்ந்து பாட மறுத்துவிட்டார்.

இதனால் சினமுற்ற மன்னன் அன்னமாச்சாரியாரை சிறை செய்து விலங்கிடுவித்தான்.

*ஆகடி வேளல ளலபைன வேலளது*
*தேகுவ ஹரிநாமமே தி'க்கு மறிலேது*

*செ'றபடி வொருலசே' சி'க்கினவேள*

*ஆபத' வச்சின வேள ஆறடி படினளே*

*சங்கெல பெட்டின வேள ச'ம்ப்ப பிலிசினவேள*
*அங்க்கிலிகா' அப்புலவா ராகி'னவேள*
*வெங்கடேசு நாமமே வீடு'பின்சு க'தி கா'க*
*மங்கு பு'த்'தி பொ'ரலின மறிலேது' தெறகு'*

''பசி வேளையிலும் களைப்புற்ற போதும், திண்ணமாக ஹரி நாமமே அடைக்கலம்! வேறில்லை! சிறைப்பட்டு பிறர் கையிற் சிக்கிய வேளையும், ஆபத்து வந்தபோதும், துயரப்படும் போதும், விலங்கிட்ட போதும், கொல்வதற்கு அழைக்கும்போதும், பிணை கொண்டு கடன்காரர் நின்றபோதும், வெங்கடேசுவரன் நாமமே விடுதலை செய்யுமன்றி, மந்தபுத்தியில் புரண்டாலும் வேறு வழியில்லை,'' என்று பாடியதுபோல வெங்கடவன் அருளால் விலங்குகள் முறிந்தன. மீண்டும் போட்டனர். மீண்டும் முறிந்தன. நரசிம்மராயர் நேரில் வந்து விலங்கிட்டுப் பார்த்தான். அப்போதும் முறிந்து விடவே தன் பிழை உணர்ந்து அன்னமாச்சாரியார் அடிபணிந்து மன்னிக்குமாறு கேட்டு மீண்டும் ஆதரித்தான். பின் நரசிம்மராயர் திருப்பதி திருமலையில் பல காணிக்கைகள் தந்தான். சாளுவ நரசிம்மராயன் வரலாறு 'சாள்வாப்யுதயம்' எனும் வடமொழி நூலில் உள்ளது. ராயரே 'இராமாப்யுதயம்' எனும் காவியம் இயற்றியுள்ளார். பில்லலமர்ரி பினவீரன் எனும் கவிஞன் தனது 'ஜைமினிபாரதமு' இவருக்கு சமர்ப்பணம் செய்துள்ளான். சாளுவ நரசிம்மன் திருமலையில் அப்போது இருந்த கந்தாடை இராமானுஜ ஜீயரின் சீடனாகத் திகழ்ந்தான். திருப்பதி வேங்கடேஸ்வரருக்கு எத்தனையோ நகைகள், உற்சவங்கள் எல்லாம் நடத்தினான். அன்னமய்யா தாள்ளபாகவில் இருந்து திருப்பதிக்கு வந்து இங்கேயே குடியிருக்கத் தொடங்கினார். அவரும் பல உற்சவங்களை நடத்தி வந்தார். புளிமாவைத் தேமாவாக்கினார். ஓர் அந்தணர் திருமணத்திற்கு வேண்டிய பொருளை யாசித்து அன்னமய்யாவிடம்

வந்தார். ''நீ இல்லம் செல்க! வேண்டிய பொருள் கிட்டும்'' என்று வாழ்த்தி அனுப்பினார். அந்த அந்தணர் வீடு புகுவதற்குமுன்பே ஒரு சிற்றரசன் வேண்டிய பொருளை அனுப்பி வைத்திருந்தான். இதுபோன்ற மகிமைகள் செய்துள்ளார். கன்னட மொழியில் கீர்த்தனைகள் இயற்றி வைணவ பக்தராகத் திகழ்ந்த தாசர்களில் முதல்வராகிய புரந்தரதாசர் அன்னமய்யாவைக் காண்பதற்காக திருப்பதி வந்தார். புரந்திரதாசர் மத்வ மதத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீனிவாச தீர்த்தரின் சீடர். அன்னமய்யா வயதில் மூத்தவராகவும், புரந்தரர் இளையவராகவும் இருந்திருக்கக் கூடும். புரந்தரதாசர் கீர்த்தனைகள் மிகவும் பிரபலமானவை. அவற்றில் அன்னமய்யாவின் செல்வாக்கு படிந்திருப்பதைக் காணலாம். அன்னமாச்சாரியர் இயற்றிய சங்கீர்த்தனைகள் செப்புப் பட்டயங்களில் அவர் குமாரர்களால் செதுக்கப்பட்டன. ஏட்டுச் சுவடிகளிலும் உள்ளன. திருப்பதி திருமலை தேவஸ்தானத்தார் அவற்றைப் பல தொகுதிகளாக வெளியிட்டுள்ளார்கள். வேடூரி பிரபாகர சாஸ்திரி, ராள்ளபல்லி அனந்த கிருஷ்ண சர்மா முதலிய பேரறிஞர்கள் பதிப்பித்து வெளியிட்ட இந்நூல்கள் அன்னமய்யாவின் இலக்கியப் பரப்பினை உணர்வதற்கு சிறந்த வாய்ப்பாக அமைந்துள்ளன. அன்னமய்யாவின் வரலாற்றை அவரது பேரர் சின்னன்னாவே கற்பனை மிகாமல் வரலாற்று நோக்கில் சுவைமிகும் காவியப் பாங்கில் எழுதியுள்ளார். இவற்றின் மூலம் அன்னமய்யாவின் வரலாறு தெளிவாகத் தெரிய முடிகிறது.

அன்னமாச்சாரியார் கீர்த்தனைகள் இனிய தெலுங்குச் சொற்களும், எழிலார்ந்த நடைச் சிறப்பும் மிக்கன. ஆங்காங்கே பழமொழிகளைப் பயன்படுத்தி மக்கட்குப் புரியும் நடையில் தம் கருத்துக்களை விளக்குகிறார். ஆழ்வாராதிகளைப் போன்றே மதுரபக்தி எனும் நாயகி நாயக பாவத்தில் பற்பல கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

இறுதி நாட்களில் அன்னமய்யா பற்றற்றவராக வாழ்ந்து வந்தார். அந்நாட்களில் அவர் இயற்றிய கீர்த்தனைகள் வைராக்கிய போதத்தை எடுதது்க் காட்டுகின்றன.

*பரமாத்ம நின்னு கொல்சி ப்'ரதிகேமு*
*விரசபு ஜாலி ஜிக்கி வெதப'ட னோபமு*
*பொசக' தேவுடிச் சினா பூஜாரி வரமீடு*

*விசிகி' நேவிடி சி'னா விடுவரு லோகுலு*
*கொசரேரு முசரேரு கோரிக தீர்ச்ச மனேரு*
*பணிலேனி பனுலகு ப'ட'லனே னோபனு*

பரமாத்மாவே! உன்னைப் பணிந்து வாழ்கிறோம். ரசமற்ற இரக்கத்தில் பட்டு துயர்பட லொல்லேன். பொருந்துமாறு தெய்வம் தந்தாலும் பூசாரி வரந்தர மாட்டான். வெறுத்து நான் விட்டாலும் உலகோர் விடமாட்டார்கள். கெஞ்சுகிறார்கள். கூட்டங் கூடுகிறார்கள். கோரிக்கை தீர்க்குமாறு கூறுகிறார்கள். வேலையற்ற வேலைகளில் சிக்கி துயர்பட மாட்டேன் என்று கூறும் அன்னமாச்சாரியார் இறுதி நாட்களில் அவரது புகழ் அறிந்து மக்கள் கூட்டம் வந்து மொய்த்து எதையாவது கேட்பதாக இருந்த நிலைமையைப் பார்த்து 'போதும் இந்தப் புகழ்' என்று வெறுத்தது போல் தோன்றுகிறது. இவ்விதம் வாழ்ந்த அன்னமாச்சாரியார் தமது 79ம் வயதில் திருநாடலங்கரித்தார். அவருக்கு இரு மனைவியர். திம்மக்க எனும் மனைவி சுபத்ரா கல்யாணம் எனும் காவியம் எழுதியவர். இவரே முதல் தெலுங்கு பெண் கவிஞருமாவார். இவரது குமாரர் நரசிம்மாச்சாரியார். இவரும் சிறந்த கவிஞரே. இவரைப் பற்றி தெனாலி ராமகிருஷ்ண கவி பாடிய தனியன் ஒன்றுள்ளது.

*சின்னன்ன த்விபத கெறகு'னு*
*பன்னக பெத திருமலய்ய பதமுனகெறகு'ன்*
*மின்னந்தி மொரஸெ நரசிங்*
*கன்ன கவித்வமு பத்'ய க'த்'யஸ் ரேனின்*

*சின்னன்ன துவிபதம் (ஈரடி) நன்கறிவான்*
*பெத திருமலய்யா இசைப்பாடலிற் சிறந்த அறிஞன்*
*நரசிங்கன்ன கவிதை செய்யுளிலும் வசனத்திலும்*
*விண்ணெட்டும் புகழ் படைத்திருந்தது.*

இவரை சின்னன்ன தமது, 'அஷ்டமஹிஷி கல்யாணம்' எனும் காவியத்தில் புகழ்ந்துள்ளார். கவி கர்ண ரசாயன நூலாசிரியர் இந்த நரசிம்மாச்சாரியரே என்பர்.

அன்னமாச்சாரியாரின் இரண்டாவது மனைவி அக்கலம்மா வின் குமாரர் பெத திருமலாச்சாரியர். நரசிம்மம்மா, திருமலாம்பா என்னும் இரு குமாரத்திகளும் உண்டு. நரசிம்மசாரியருக்கு நாராயணய்ய, அப்பாலார்யுடு, அன்னயார்யுடு எனும் மூன்று மக்கள்

உண்டு. பெத திருமலாச்சாரியருக்கு சின திருமலய்யா, அன்னய்யா, பெத திருவேங்களநாதுடு, சின்னன்ன கோனேடி, திருவேங்களநாதுடு என்று ஐந்து மக்கள். சின திருமலாச்சாரியர் மகள் திருவங்களப்பா. இந்த மரபினர் அனைவருமே கவிஞர்கள் ஆகவும், சிறந்த சங்கீத மேதைகளாகவும், வைணவாச்சாரியர்களாகவும், திருவேங்கடவன் பக்தர்களாகவும் திகழ்ந்தனர். இத்தகைய ஒரு மரபுக்கு மூல புருஷனாகிய அன்னமய்யா உண்மையில் பாக்கியசாலிதான்.

அன்னமய்யா ஆந்திர நாட்டில் ராயல சீமைப் பகுதியில் மட்டுமன்றி தமிழகத்தில் செங்கற்பட்டு, ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சி, திருவரங்கம் ஆகிய பகுதிகளிலும் பயணம் செய்துள்ளார். தமிழகத்திலுள்ள திருவள்ளூர் வீரராகவர், காஞ்சி வரதராசர், திருவரங்கம் ஸ்ரீரங்கநாதர் ஆகிய சுவாமிகளைப் பாடிப் பரவியுள்ளார்.

அன்னமாச்சாரியார் கவிதை தெளிவும், இனிமையும் நிறைந்தது. கற்பனை வளம் மிக்க அகப்பாடல்களும் கருத்து வளம் நிறைந்த ஆன்மீகப் பாடல்களும் நவில்தொறும் இன்பம் தரும் நயமிக்கன. திராட்சா பாகம் போல அமைந்த தூய தெலுங்குச் சொற்கள் மிகுந்த அழகிய பாடல்கள் அவை. இசைப் பாடல்களாயினும் இலக்கியப் பாடல்களாகவே கருதி படித்துப் படித்துச் சுவைத்துச் சுவைத்து இன்புறற்பாலன. வாழ்க்கைத் தத்துவங்களை வகைப்படுத்தி வைணவ கீதங்களாகப் பாடிய அப்பாடல்கள் செவி விருந்தளிக்கும் கவி மலர்ச் சோலையாகும். வைணவன் யார் என்று அவர் கூறும் பாடல் இது.

''மதம்மாச்சாரியம் இன்றி மனது எளிமையுற
ஆசைகளை அடக்கிவனே வைஷ்ணவன்.''

''அங்கிங்கும் திரிந்தலைந்து, ஏதாவது பொய் கூறி எல்லோரையும் வைது, யாரோடும் சேர்ந்து வெறும் பேராசைப்படும் மனிதனாக இல்லாதவனே வைஷ்ணவன்.''

''சம்பாத்தியத்துக்காகச் சிக்கி, காமக்கலையில் சொக்கி, உடலின்பங்களை பெரிதெனக் கருதி துயர்ப்படாதவனே வைஷ்ணவன்.''

''பிறரை நித்தியாமல், யாருக்கும் தீங்கு கூறாமல் வெங்கடேசுவரனை வணங்கி, பெரியோர்கள் அருளால் மரியாதையும், ஒழுக்கமும் உடையவனே வைஷ்ணவன்.''

இப்பாடலின் சாயல் பிற்காலத்தில் குஜராத்தியில் நரசிம்ம மேதா இயற்றிய, 'வைஷ்ணவ ஜனதோ' என்ற காந்தியடிகட்கு உகந்த பாடலில் காணப்படுகிறது.

''வைஷ்ணவர்கள் இல்லாதவர்கள் யாருமில்லை,
விஷ்ணு பிரபாவமே இந்த முழுதும் ஆதலினால்.''

''எல்லாம் விஷ்ணுமயம் என்ற பின் பிற தெய்வங்களை
நினைப்பானேன்.''

''யாரை வணங்கினாலும் என்ன குறை?
பின் யாரை நினைத்தால்தான் என்ன?''

''அங்கும் இங்கும் ஸ்ரீவிஷ்ணுவின் உருவம் அல்லாதவர்
எவரும் இல்லை என்று தோன்றினால் போதும்.''

''எந்தக் குலத்தவனானால் என்ன? யாரானாலென்ன?''

''சத்திய சந்தன், பிறர் பழிகூறாதவன், எல்லா உயிரையும் நேசிப்பவன், பிறரையும் தன் போல் கருதுபவனே, தூயவனாக, தன்னடக்கம் உள்ளவனே, கரும மார்க்கம் கடமையுணர்ந்தவனே, மருமமாய் ஹரிபக்தி மறக்காதவனே, உலகில் பிறர் நலம் நாடுபவனே, பகையின்றி மண்ணில் வாழ்ந்தவனே, எல்லாம் ஆன்மா என்று உணர்ந்தவனே, வெங்கடேசனின் தாசனாவான்.''

அன்னமய்யாவின் அகத்துறைப் பாடல்களில் சில கவிதைகளின் வரிகள் காண்போம்.

''உயிர்த்தோழி! உன்னால்தான் தலைவன் பெருமை பெற்றான். ஆனால், உலகத்தாருக்கு அந்த உண்மை தெரியாது. உன் தலைவனுக்கு மறுவுடைய மார்பன் என்ற பெயர் ஏன் வந்தது தெரியுமா? உனது கடைக்கண் பார்வை பட்டதால் ஏற்பட்ட காயம் அது. ஆனால், உலகம் திரு உறை மார்பன் எனப் பாராட்டுகிறது.''

''உன் தலைவன் உன்னைப் பிரிந்த வாட்டத்தால் உடல் கறுத்துப் போனான்! உலகம் நீலவண்ணன் என்று பாராட்டுகிறது.''

''சக்கரவாகப் பறவை போன்ற உன் கொங்கைகளை அணைத்ததால் சக்கரபாணி என்ற பெயர் பெற்றான்.''

''உன்னை எப்போதும் எல்லாப் பக்கமும் ஆரத் தழுவ வேண்டும் என்று ஆர்வத்தாலல்லவா அவன் நான்கு கைகள் பெற்று இலங்குகிறான்?''

*- 112 - 376*

''தலைவா! கேட்டியா சேதி? உன் அருளுக்கேங்கிய தலைவி எப்படி இருக்கிறாள் தெரியுமா?''

''உன்னா நோன்பியரைக் கண்டால் நீ விரும்புவாய் என்று அறிந்து நேற்றிலிருந்து அவள் உன்னவே இல்லை.''

''காட்டில் இருந்து தவம் செய்பவரைப் பிடிக்கும் என்று அறிந்து அவள் வீட்டுத் தோட்டத்திலேயே கிடக்கிறாள்.''

''உன்னை எப்போதும் நினைப்பவர் உள்ளத்துறைவாய் என்பதறிந்து எப்போதும் உன்னையே நினைத்து கன்னத்தில் கை வைத்தபடி ஏங்குகிறாள்.''

''தேவர்கட்காக இரவில் உறங்கமாட்டாய்,
மானிடவர்க்காக பகலிலும் உறங்க மாட்டாய்,
உன் போலவே இவளும் இரவும் பகலும் உறங்காமல்
உன்போல் அறிதுயில் கொண்டவளாக நீ எப்போது
வருவாயோ என்று எதிர்பார்த்தவாறு இருக்கிறாள்.''

''நின் நினைவில் வாடும் இவள் உடல் மெலிந்து விரகதாபத்தால் வியர்வை கொட்டுகிறது. ஆனால், அவள் துடைப்பதே இல்லை. ஏன் தெரியுமா? நீ நீரில் வாசம் செய்பவன் என்று யாரோ சொல்லி இருக்கிறார்கள்!''

*(12-36)*

தலைவியின் உடலில் எல்லா ராசிகளும் கூடியுள்ள அழகை ஒரு கவிதை விளக்குகிறது.

*''வில் போன்ற புருவமே தனுர் ராசி. மீன் போன்ற கண்களை உடையவள் ஆதலின் மீன ராசி, குடம் போன்ற கொங்கைகள் உள்ளவள் ஆதலின் கும்பராசி, சிங்கம் போன்ற சிற்றிடையினள் ஆதலின் சிம்ம ராசி, அவள் கன்னி ஆதலின் கன்னி ராசி, தங்கத்துடன் வண்ணத்தில் போட்டி போடுகிறவள் சரி நிகர் ஆனவள் ஆதலின் துலா ராசி, கூரான நகங்கள் உள்ளவள் ஆதலின் விருச்சிக ராசி, பருவச் செழிப்பின் மிடுக்குடையவள் ஆதலின் ரிஷப ராசி, சொல்லிலும் செயலிலும் மிக எச்சரிக்கையுடையவள் ஆதலின் கர்க்கடக ராசி, சிவந்த இதழ் உடையவள் ஆதலின் மேஷ ராசி, உன்னைக் கலந்துறவாடுவதால் மிதுன ராசி.''*

***(12 - 43)***

*ஒருத்தி மற்றொருத்தியிடம் கூறிய வசை யிது.*

*''நீயா நானா என்பது இன்று தெரிந்து விடும். உங்களைப் போன்ற எளியவர்கள் நாங்களானால் மேலான பணிகள் இன்று முடியும்!''*

*''சந்தனம் பூசிக்கொண்டு எங்கள் சேரிக்கு அவள் வரப்போக இருப்பதைக் கண்டு, மறைந்திருந்து எங்கள் வீட்டுக்கருகே உளவு பார்ப்பாயாமே! நாங்கள் என்ன பரத்தையரா?''*

*''நினைத்தென்ன பயன்! உன் கணவனால் வீட்டை விட்டு வெளியேறாமல் கட்டுக்குள் வைத்துக்கொண்டு, காதலிக்கச் செய்ய வேண்டுமன்றி ஊரார் மீது உளவு பார்ப்பது தகுமா தோழி?''*

*''பிரியாது அவன் உனது கணவனானால் பக்கத்தில் படுத்திருக்க வேண்டுமேயன்றி, காயாத காய், பூவாத பூக்கள் கட்டி குடித்தனங்களை அடைமானங் கொள்ளலாமோ?''*

*இதுபோன்ற அகத்துறைப் பாடல்கள் பற்பல உள்ளன.*

*அன்னமாச்சாரியரை ஆந்திர நாட்டு நம்மாழ்வார் என்று புகழ்வர். இருவரும் வைகாசி மாத விசாக நட்சத்திரத்தில் அவதரித்து பதினாறு வயதிலேயே பக்திப் பாடல்கள் பாடியவர்கள். இருவரும் அகத்துறைப் பாடல்களும் பாடியுள்ளனர். அன்னமாச்சாரியர் நம்மாழ்வாரின் திருவாய் மொழியைப் புகழ்ந்துள்ளார்.*

''பரமமான வேதங்களை மிகுதியும் கற்றும் திருமாலை அறிந்தவர்கள் அரிது என்று, திருவாய் மொழியாக திவ்விய மந்திரமாக விரிந்த ஐந்தாவது வேதம் உண்டாயிற்று. கலியுகத்துக்கு உண்டான ஐந்தாம் வேதம் இதுவே.''

இக்கூற்றிலிருந்து ஆழ்வாரதியர் பனுவல்களை ஆதிவண் சடகோபர் மூலம் கற்றறிந்திருப்பார் என்பதில் ஐயமில்லை. இவரது தத்துவக் கருத்துக்களில் சில.

''எங்கே நல்லறிவு! எங்கே ஞானம் எனக்கு!
சாம்பலில் ஹோமம் போல காலம் கடந்து போயிற்று''

இது நல்லது அது நல்லது என்று கட்டளைகள் கடக்க முடியாமல், எதிர்பார்த்து எதிர்பார்த்து, ஏமாந்து ஏமாந்து புதர் மறைவிலுள்ள விலங்காக காலம் கடந்து போனது.

''இதோடு தீரும்ம துக்கம் அதோடு தீரும் என்று
புதிய புதிய கவலைகளில் வெந்து வெந்து
கவலை வேதனைகளில் சிக்கித் தத்தளித்து
நெருப்புக்கருகிலுள்ள வெண்ணெய் போல
காலம் கடந்து போனது.''

''இங்கு சுகம்! எனக்கு அங்கு சுகம் என்று எங்கேனும் சும்மா அலைந்து திரிந்து விரைந்து வெங்கடேசுவரனைக் காணாமல் பழங்கதையாக என் காலம் கடந்து போனது.''

''இந்த உலகத்துக்கு தலைவனாக எல்லா உயிர்களிலும் உள்ளுறைந்திருப்பவன் இவன். கோபியரான் மின்னும் மென்முலைக் குவட்டினிலே காணப்படும் கஸ்தூரிப் பூச்சு இவன்!''

''கடல் மகள், கடைக்கண் வீச்சுகளில் கலந்தொளிரும் கண் மை இவன்! தாமரையிலமர்ந்தவளின் முகத்தாமரை நடுவில் அலர்ந்தொழுகும் பரமாமுதம் இவன்.''

''கலவி இன்பக் களிப்பினில் நன்னல நங்கையர் தம் பரவசமானவன் இவன். திருவேங்கடவன் தானாய் இருந்து பரிபாலனம் செய்யும் பாரமுடையவன் இவன்.''

''ஜீவன் அணுவானவன். கருமமோ கடல் போன்றது. மீண்டும் மீண்டும் மாயை தளிர்க்கிறது.''

''மாயையே தாயாரானால் தாயை விட்டுப் பிள்ளைகள் எங்கே போவார்கள்? கருமம் என்கிறார்! கருமமும், தருமமும் உனது கற்பனைகள் அல்லவா?''

''சகஜ வைஷ்ணவாசாரமுடையவர்கள் தொடர்பே எனக்கு சந்தியாவந்தனம்.''

''இராமானுஜ மதமே எனக்கு திறமையுடைய சந்தியா வந்தனம். திருமந்திர படலமே சந்ததமும் எனக்கு சந்தியா வந்தனம்.''

''ஜீவாத்மாவாக இருக்கும் கிளியே நீ
அப்பாலுக்கு பரமாத்மாக இருப்பாய் கிளியே!
நீ யென்றால் யார்? நான் என்றால் யார்?
நீயே நானாய் இருப்பேன் கிளியே!''

''இதற்காகவல்லவா இத்தனை பேர் இப்படியானார்கள். கீழே வீழ்ந்தபிறகன்றி வெற்றி பெற முடியாது. பல்வேறு சோதனைகளில் துன்புறுத்திப் பிறகல்லவா தெய்வம் வரம் அருளும்?''

''வெயில் இல்லாமல் நிழல் அருமை தெரியுமா?
தின்றாலல்லாது கசப்பும் இனிப்பும் தெரியாதல்லவா?''

''பருசவேதி என்றுதானே பொன்னாக மாற்றுவது, ஆராய்ந்தால் உலோகம் எப்படியிருந்தாலும் அதைப் பற்றி என்ன கவலை?''

தாமரைக் கண்ணனின் பக்தி விடாமல் இருந்தால் போதும். மனது எங்கு திரிந்தாலும் அதனாலென்ன? தோளில் முத்திரையிருந்தால் போதும். உடல் எவ்வளவு இழிந்ததாயினும் அதனாலென்ன? திருமகள் கேள்வனின் திருநாமம் நாவில் இருந்தால் போதும். எந்தக் குலத்தவனானால் என்ன? ஜீவன் எப்படி இருந்தால் என்ன? அந்தராத்மாவான ஸ்ரீவெங்கடேசனுக்கு அந்தக் கவலை எதற்கு? இகமானாலும் சரி, பரமானாலும் சரி! எமக்குப் போதும்! இவன் கைவசமான பிறகு மற்றதைப் பற்றி கவலை என்?

''என்ன இருக்கிறது இந்த உடலில்? எத்தனைக் காலமாயினும் பாமரத்தனமாக போகங்களின் ஆபத்துக்கள் நிறைந்தது. மலை போன்ற ஆசை. சுவர் போன்ற தளைகள் - உள்ளே சாரமற்ற தக்கை போன்றது. புண் போன்ற மேனி. அத்திப்பழம் போல மேலே மினுங்கி உள்ளே புழுத்துக் கிடக்கும்.''

''அடடா! ஹரி மாயை எப்படிப்பட்டது? தடாலெனத் தூர எறியும் எண்ணம் இல்லையே! அனந்த கோடியுகங்களாக, திருப்தியில்லாமல் விஷய சுகத்தில் சிக்கிச் சுழன்றும், தினமொரு ருசியாக இனிமை கொண்ட இந்த ஆத்மாவுக்கு திகட்டுவதே இல்லையே!''

''தண்ணீரில் இருந்து மூழ்கித் தவம் செய்வது பெரிதல்ல. மீன் தண்ணீரில்தானே இருக்கிறது. கொக்கு ஒரு கால் மேல்தூக்கி நின்று வானத்தை நோக்குகிறது. அது தவம் ஆகுமா? புலிகள் குகைக்குள் இருப்பதால் அவை துறவிகள் ஆகா. குரங்கு காட்டில் இருப்பது வனவாசம் ஆகாது. மரங்கள் பேசாதிருப்பது மௌன விரதம் ஆகாது. சிறுகுழந்தைகள் உடுப்பதில்லை. அவர்கள் முற்றும் துறந்த திகம்பரர் ஆய்விடுவதில்லை. திருவேங்கடத்தான் மீது உண்மையான பக்தியுள்ளவர் எது செய்யினும் உலகம் ஏற்றுக் கொள்கிறது.''

''பல ஆண்களின் மத்தியில் ஒரு அழகிய பெண் இருந்தால் எல்லார் பார்வையும் அவள்மேல் இருக்கும். எல்லாரும் அவளை அணைத்தின்புறவியலாது. ஆனால், அவள் ஆசையில் கட்டுண்டு தவிப்பர்.''

புளியிற் செய்த புளியங்கறி, மாவடு பார்த்தால் யாவருக்கும் வாய் ஊறும். ஆனால், அதனைத் தின்றாலன்றி புளிப்புச் சுவை தெரிவதில்லை. திருவேங்கடத்தான் திருத்தேரை இழுப்போ ரெல்லாம் தாங்களே இழுப்பதாக நினைப்பார்கள். ஆனால், அப்பெருமாள் அவர்களின் ஆன்மாக்களில் இருந்து காரியத்தை நடத்தியதை உணர மாட்டார்கள். ஓர் ஆணவத்துடன் மிதப்பார்கள். பொய்யான புற வேடங்கள் பயன் தராது. உண்மையான பக்தியும், அனுபவமும் வேண்டும்.

''கால்நடைகளை கட்டாமல் விட்டுவிட்டால் அவை பயிரை அழித்து விடும். ஆனால், அவற்றைக் கட்டி மேய்த்தால் செய்ய

வேண்டிய வேலைகள் செய்யும். அதேபோல் பிடிப்பு விட்டால் மனம் நிலையில்லாமல் சுற்றும். நியமங்களை, கட்டுப்பாடுகளை விடாமல் இருப்பவனுக்கு எல்லாம் நல்லபடியே கைகூடும்.''

''திருவேங்கடவா! நான் நீசன்தான். ஆனால் நான் உனக்குச் சொந்தமானவன். என்னை விட்டுவிடுவது அவ்வளவு எளிதல்ல. நீயும் என்னைக் காப்பாற்றாமல் தப்ப முடியாது. முறைப்படி திருமணம் புரிந்து கொண்ட மனைவியை அவள் அழகு சீர் குலைந்தாலும், கைவிடுவது முறையன்று. தன் வீட்டு நாய் எப்படி இருந்தாலும் இரக்கத்துடன் உணவு போடுவோம். தம் குழந்தைகள் தன்னிடம் வராமலிருந்தாலும் பெற்றோர் கோபப்படுவது இல்லை. தான் வளர்த்த கிளி தன்னை வைதாலும் அன்பு பாராட்டுவோம். திருவேங்கடத்தானே! நின் பக்தர்களின் தப்பிதத்தை மன்னிப்பது அறம் அல்லவா?''

''பிரம்மம் ஒன்றே! பரப் பிரம்மம் ஒன்றே! இதில் குறை நிறையில்லை. மனிதராயினும், விலங்காயினும் அனைத்தும் ஒன்றே. அனைவர் நெஞ்சிலும் திருமாலே குடிகொண்டிருக்கிறான். பலவகை வசதிகளுடன் பஞ்சணையிற் படுத்துறங்கும் அரசனின் தூக்கமும் ஒன்றே. தரையில் படுத்துறங்கும் பாமரனின் தூக்கமும் ஒன்றே. உயர் குலத்தவனான பார்ப்பான் திரியும் இடமும் ஒன்றே, தாழ்ந்தவர்கள் திரியும் இடமும் இதே பூமிதான்.''

''தேவர் அடையும் போக இன்பமும், புழுவும், விலங்கும் துய்க்கும் இன்பமும் ஒன்றேதான். இரவு பகல் பணக்காரனுக்கு மட்டுமா! ஏழைக்கும் தான். பசிக்கு அறுசுவை உண்டியானாலும், பழங்கஞ்சியானாலும் திருப்தி ஒன்றுதான். தீய நாற்றம் கொணரும் காற்றே நறுமணமும் சுமந்து வருகிறது. யானை மீது படும் வெயில் தான் நாய் மேலும் படுகிறது. நல்வினை தீவினை செய்தவர் அனைவரையுமே காப்பது திருவேங்கடவனின் திருநாமம் ஒன்றே.''
*(7-15)*

''வளர வளர நாம் பெரியவர்களாகிவிட்டோம் என நினைக்கிறோம். ஆனால், எந்தப் பொருள் பற்றும் நம்மை விட்டபாடில்லை. நேற்று, போதும் போதும் என்று தின்று ஒதுக்கிய உணவு இன்றைய பசியை உண்டாக்கி மீண்டும் உண்ணச் செய்கிறது. இரவில் புணர்ந்தின்பத்தில் மயங்கிய பெண்டிர் நலமே மீண்டும்

மீண்டும் துய்க்க ஆர்வமுற்று கேளிக்கைகளில் ஈடுபட ஆயத்தமாகிறார்கள். புறக்கணித்து எறிந்துவிட்ட அழுக்குத் துணிகளையே துவைத்த பிறகு மீண்டும் தேடி அணிந்து மகிழ்கின்றோம். அணிந்து கழற்றி பெட்டியில் வைத்துப் பூட்டிய அணிகளையே மீண்டும் அணிந்தழகு பார்க்க உள்ளம் விழைகிறது. நாங்கள் செய்த குற்றமோ நீ எங்களைக் கட்டிய பாசமோ இப்படி நாங்கள் உலகப் பொருள்களில் சிக்கிக்கொண்டுள்ளோம். இந்தப் பொறுப்பில் நாங்கள் மூழ்கித் தவிக்கிறோம். இந்த வாழ்வில் நாளும் நாளும் ஆசை வளர்ந்து கொண்டே போகிறது.''

*(9 - 63)*

''காலமோ கடந்து போயிற்று. வாழ்க்கைக் காட்டில் காய்ந்த நிலவாயிற்று'' சீற்றத்தால் சுற்றத்தாரைக் குறை கூறினேன். நெஞ்சம் நிலைகொள்ளாமல் தவித்தபோது என்னையே நான் வெறுத்துக் கொண்டேன். இப்போது எனக்குத் துணையாவாரை எவரையும் காணேன். இறுதியில் திருவேங்கடத்தனைச் சரண் புகுந்தேன். அவன் காத்தான். இப்படி அருள் புரிவார் யாரும் இவ்வுலகில் இல்லை.

*(9 - 55)*

எங்களுக்கு அறியாமை (மாயை) இயல்புதான். நீதான் எங்களைக் காத்தருள வேண்டும். தாய் மடி மீதமர்ந்து பால் குடிக்கும் குழந்தை தந்தை அழைத்தாலும் வருமா? அப்படியே மாயையில் மூழ்கிய உயிர்கள் உன்னிடம் தாமே வரத் தயங்குகின்றன. தாய்ப் பறவையின் சிறகினுக்குள் இருக்கும், ஒதுங்கி வாழும் சிறு குஞ்சு மேலே பறந்து வர இயலுமா? அப்படித்தான் மாயையின் சிறகணைப்பிலுள்ள உயிர்கள் வைகுந்தம் அடைய முடியுமா? நீர்த்தவளை தண்ணீரில் வாழவே விரும்பும் பஞ்சு மெத்தைமேல் இருக்கச் சிறிதும் விரும்பாது.

திருவேங்கடமுடையானே! உலகில் தங்களுக்குரிய சொத்தை யாராவது கைவிடுவார்களா? நான் உன் உடமையல்லவா? என்னைக் காப்பதும் உன் கடமையல்லவா?

''வத்தியில் உள்ள எண்ணை போன்றதே வாழ்க்கை
விதை மேலுள்ள உமி போன்றதே உடல்''

''சுமை தூக்குகிறவன் களைப்பு வரும்போது அந்தச் சுமையை ஆங்காங்கே இறக்கி வைத்துக் கொள்வான். ஆனால்,

பிறவிச் சுமைக்கு அதுவும் இல்லை. தொலையாத சுமை, எங்கேயும் இறக்கி வைக்க முடியாது.''

''வேளாண்மை செய்பவன் தன் பயிரைக் காத்து அறுவடை செய்து தன் களஞ்சியத்தில் சேர்ப்பது போல நீயும் என்னைப் பாதுகாத்து உன்னடிக்கீழ் சேர்த்துக்கொள்ள வேண்டும்.''

''கருவில் வளரும் குழந்தை தாயை காலினால் உதைத்தாலும், தாய் மகிழ்ந்து சேயைப் பாதுகாத்து வளர்ப்பது போல, நின் வயிற்று தித்த என்னையும் பிழை பொறுத்து அருளோடு காப்பது கடமையாகும்.''

''வெண்ணெய்யை கையில் வைத்துக்கொண்டு யாராவது நெய்க்கலைவார்களா? உன்னை நெஞ்சில் நிரப்பிய பிறகு சத்தியம் எது எனத் தேடி அலைய வேண்டுமா என்ன? விளக்கைக் கையில் ஏந்திக் கொண்டு எவனாவது கிணற்றில் விழுவானா? செல்வந்தனான பிறகு சந்தையில் எவனாவது பிச்சைக்குப் போவானா? ஆற்றுத் தண்ணீர் பருகி தாகந்தீர்ந்த பின் எவனாவது கால்வாய்த் தண்ணீரை நாடுவானா? ஆகாயத்தைப் பார்க்க ஏன் ஒருவரை மற்றொருவர் இடித்துக் கொள்ள வேண்டும். எங்கும் நீயே நிறைந்திருக்க வீணாக ஏன் இவரையும், அவரையும், இதையும், அதையும் கேட்டுப் பொழுது போக்க வேண்டும்.''

இவ்விதம் கருத்தாழமும், கற்பனை நயமும் மிக்க பல கீர்த்தனைகளில் சாளுவ நரசிம்மனின் இதயத்தை மிகவும் கவர்ந்த பாடலாக ஒன்றைக் குறிப்பிட்டு தாள்ளபாக சின்னன்னா தம் அன்னமாச்சாரியார் சரித்திரத்தில் குறிப்பிடுகிறார்.

''தோழிகளே! வேங்கடநாதனின் நங்கைக்கு கடைக்கண்ணில் தோன்றும் சிகப்பு வண்ணத்தெழில் எப்படியிருக்கிறது சொல்லுங்கள்?''

''காதலோடு பிராண நாயகனை மேல் நாட்டிய அக்கடைக்கண் (அம்பு) வீச்சினை மீண்டும் பிடுங்கிய போது தோய்ந்த குருதியன்றோ? வேறோ?''

''என்னவோ! தளிர் இதழ்களில் ஆங்காங்கே கஸ்தூரி நிறைந்தது.''

*''நங்கைக் காதலுக்கு எழுதிய கடிதமன்றோ? வேறோ?''*

*''நங்கை கொங்கைகள் பொங்கொளி மேன்மேலும் முந்தானை வெளியேயும், மிகுந்தொளிரும் விதமென்ன கண்டீரோ?''*

*''தணியாத வேட்கையுடன் காதலன் ஒற்றிய நகக்குறி சந்திர ரேகைகள் வெளிப்பட வேணிற்கால வெண்ணிலாவாயிற்றோ? வேறோ?''*

*''மங்கை கன்னத்தருகே முத்தமழை சேர்ந்தது போல அது வென்னவென்று ஊகித்தீரா தோழிகளே? திருவேங்கடவன் அணைத்திதழ் அமுதளாவிய கலவி வேளையின் கவின் அன்றோ? வேறோ?''*

இவ்வழகடிய அகப்பாடற் கிணையான புறப்பாடல் ஒன்றையும் நாம் சுவைத்தின்புறுவோம்.

*''பிறந்த இடத்திலேயே தேடிப் பாவிக்க வேண்டும். தீவிரமாக முயன்றால் அந்தர்யாமி கருணை புரிவான்! வீட்டுக்குள் இருக்கும் இருட்டு, அப்படியே தவறாது காண்போமானால், உடனே சிறிது நேரங்கழித்து ஒளிதரும். அதுபோன்றே தொட்டுக் காணரிய தனது ஆத்மாவைத் தவறாது முயன்று பார்த்தால் தனது ஆன்ம வெளிச்சமும் காணப்படும்.''*

கடினமான கல்லும் (எறும்பூரத் தேய்வது போல) நமக்கிசைந்து வருவது போல, ஹரிநாமம் எப்போதும் நம் நாவில் நுனியில் நினைந்து கருதிக் கருதிப் பார்க்க ஆன்மஞானம் வரும். ஒவ்வோரடியாக முன்னேறிச் சென்றோமானால் பெரிய மலையிலும், இறுதியில் ஏறிவிடலாம். அதேபோல திருவேங்கடவனை தினந்தோறும் அருகணைந்து வழிபட்டால் பிரம்ம பதத்தையே அடையலாம்.

மாபெரும் வைணவ ஆச்சாரியரும், தத்துவ ஞானியும், உலக அனுபவம் மிக்க கற்பனைக் களஞ்சியமான கவிஞரும் ஆகிய அன்னமாச்சாரியார், திருவுருவம் திருமலை வேங்கடவன் கோயிலில் ஸ்ரீஇராமானுஜருடைய விக்கிரகத்துக்கு அருகில் உள்ளது. அங்கேயே சங்கீர்த்தனைகள் பண்டாகாரம் உள்ளது. இங்கே பாடல்கள் பொறித்த

செப்புப் பட்டயங்கள் சேமித்து வைக்கப்பட்டிருந்தது. இதற்கருகே அன்னமாச்சாரியார் குமாரர் பெத திருமலாச்சாரியார் திரு உருவமும் உள்ளது. மங்காபுரத்தில் சின திருமலாச்சாரியர் ஒரு கோவில் நிறுவி அங்கும் அன்னமய்யா சிலையை நிறுவியுள்ளார்.

தாள்ளபாக மரபினர் அனைவரும் அன்னமய்யாவைப் பரவி பல கீர்த்தனைகள் பாடியுள்ளனர். திருப்பதி, திருமலை கோயில்களில் பல தான சாசனங்கள் இம்மரபினர் செய்துள்ளனர். பெத திருமலாச்சாரியார் எத்தனையோ கிராமங்கள் தானம் செய்துள்ளார். உற்சவங்களை நடத்தியுள்ளார். இன்றும் தாள்ளபாக மரபினர் கடப்பை மாவட்டத்தில் உள்ளனர். இவர்கள் அனைவரும் வைணவ சம்பிரதாயங்களைப் பாதுகாத்து வருகின்றனர்.

### தாள்ளபாக பெத திருமலாச்சாரியர்

அன்னமாச்சாரியாரின் இரண்டாம் மனைவி அக்கலாம்பவிற்கு பிறந்த மகன் பெத திருமலாச்சாரியார். கி.பி. 1458ல் அவதரித்தவர். இவருக்கு நரசிம்மா, திருமலம்மா என இரு சகோதரிகள் உண்டு. இவர் துளுவ நரசிம்மராயர், கிருஷ்ண தேவராயர், அச்சுத தேவராயர் ஆகிய மூவர் காலத்திலும் வாழ்ந்த மாமேதையாவார். தொண்ணூறு வயது வரை வாழ்ந்தவர்.

இவருக்கு அச்சுதராயர் தந்த பூண்டி, சங்கம கோல கிராமம் முதலியவற்றை வேங்கடேசுவரருக்கே சமர்ப்பித்து விட்டார். இன்னும் காவனூர், மருவாக்கரை, குப்பம், கீழங்குன்றம், மல்ல சமுத்திரம், ராயலபாடு, சோமயாஜுல பல்லி, சுத்த முவாரி பல்லி, எற்ற குண்டலபல்லி, பள்ளிபுரம், கண்டதிம்மாபுரம் முதலிய கிராமங்களும் தானம் பெற்று திருப்பதி, திருமலை கோவிலுக்கே தந்து பல்வேறு உற்சவங்களை நடத்தி வர ஏற்பாடு செய்தார். சுவாமி புஷ்கரணி ஜீரணோத்தாரம், படிக்கட்டுகள், மண்டபங்கள், சங்கீர்த்தன பண்டாரம் முதலியன கட்டுவித்தார். சங்கீர்த்தனை பாடும் வைணவர்கட்கு சம்பளம், ஆழ்வார் தீர்த்தம் அருகே ஸ்ரீலட்சுமி நாராயண சுவாமி பிரதிஷ்டை முதலிய பற்பல கைங்கரியங்கள் செய்தார். இவருடைய சாதானி சீடர்களாய ஸ்ரீபதி தொண்டைய்யா, குலசேகரபுர பல்லிபட்டுரய்யா எனும் இருவரும்கூட பல கைங்கரியங்கள் செய்தனர். இவ்விதம் திருப்பதி, திருமலை கோயில்களில் உற்சவங்கள், கட்டளைகள் நன்கு நடைபெற பெரிதும் உதவியுள்ளார்.

இவருக்கு கிருஷ்ணதேவராயர் அவ்வளவாக ஆதரவு தரவில்லை. நரஸ்துதி பாட மறுத்த வேதாந்தி என்பதாலும், கிருஷ்ண தேவராயரை உருவாக்கிய திம்மரசு பிற்காலத்தில் கருத்து முரண்பட்டு சிறைப்பட நேர்ந்தது கண்டு வருந்தியும், திம்மரசுவும், திருமலய்யாவும் நெருங்கிய நண்பர்கள் ஆதலாலும், திம்மரசுவுக்கு சிலகாலம் அடைக்கலம் தந்து ஆதரவு காட்டியதாலும், கிருஷ்ண தேவராயர் இவரை ஆதரிக்கவில்லை என்று கருதப்படுகிறது. இவரும் மன்னர்களைவிட இறைவனையே துதித்து இன்புறும் இயல்பினராக, ''யாமார்க்கும் குடியல்லோம்'' என்றிருந்த சான்றோராகத் திகழ்ந்தார்.

இவர் பெரும் புலமையும், இசை நூற்பயிற்சியும், வடமொழியிலும், தெலுங்கிலும் கவித்திறன் மிக்கவராகவும், வைணவ சம்பிரதாயத்தைப் பரப்பிய ஆச்சாரியராகவும் திகழ்ந்து, அரிய பல நூல்கள் அருளியுள்ளார்.

அவையாவன:

1. சிருங்கார சங்கீர்த்தனைகள்
2. அத்யாத்ம சங்கீர்த்தனைகள்
3. வைராக்கிய வசனகீதங்கள்
4. சிருங்கார தண்டகம்
5. சக்கரவாள மஞ்சரி
6. சிருங்கார விருத்த சதகம்
7. வெங்கடேசுவரோதாகரணம்
8. நீதி சீச சதகம்
9. சுதர்சன ரகட
10. ரேப றகாரமுலு
11. பகவத் கீதை தெலுங்கு வசனம்
12. துவிபத ஹரிவம்சம்.

இவற்றில் இறுதி நூலான ஹரிவம்சம் தற்போது கிடைக்க வில்லை. மற்றவை திருப்பதி, திருமலை தேவஸ்தானத்தார் வெளியிட்டுள்ளனர்.

பெத திருமலய்ய தமது தந்தையர் சங்கீர்த்தனைகளையும், தமது சங்கீர்த்தனைகளையும் செப்புத் தகட்டில் பதித்தார். கிருஷ்ண மாச்சாரியார் சிம்மகிரி வசனங்களை செப்புத் தகட்டில் செதுக்கியதாக

வரலாறு உண்டு. எனினும் அவை கிடைக்கவில்லை. செப்புத் தகடுகளை பிற்காலத்தார் உருக்கி உருக்குலைத்து பாத்திரங்களாக மாற்றிக் கொண்டனர் என்றும் கூறப்படுகிறது. பெத திருமலய்யா தாம் செதுக்கி வைத்த செப்புத் தகடுகளை எல்லாம் பத்திரமாக ஒரு பண்டாரத்தில் (அறையில்) பாதுகாத்து வைத்துச் சென்றார். அவை இன்றும் உள்ளன. அந்த பண்டாரம் (தாள்ளபாக அறை) திருமலை கோவிலில் உள்ளது. இந்த அறையின் இருபுறமும் அன்னமய்யா உருவமும் திருமலய்யா உருவமும்செதுக்கப்பட்டுள்ளது.

இவரது சிருங்கார சதகம் 103 பாடல்கள் கொண்ட அழகிய கவிதைகள் மிக்க நூலாகும். அகத்துறைப் பாடல்கள் கொண்ட இந்நூல் இனிய தெலுங்குச் சொற்களும், கற்பனை நயமும் மிகுந்த அரிய படைப்பாகும்.

*ஸ்ரீகலவாடவே மனின ஜெல்லுனு னேனிக நட்'ட' மாடி'னன்*
*பா'கு'லு காவு மௌனமுன ப'ந்தமு த'க்குனு மீரி பல்கினம்*
*தீ'கெ'லு சாகி' ஈரொகடி தீயக' பே னடுவச்சு நண்ட்ளு நீ*
*போ'தமு நாகுனிச் சிதிவி பொந்துக' தொல்தன வெங்கடேஸ்வரா.*

''திருவினையுடைய நீ என்ன சொன்னாலும் செல்லுபடியாகும். இனி மறுத்துப் பேசினால் நன்றாக இராது. மௌனமாக இருந்தால் விம்பு குறையும். மீறிப் பேசினால் ஒன்று பத்தாகி ஈர் ஒன்று வாங்கப் பேன் வந்தாற்போலாகும். உனது போகத்தை எனக்கு முன்பே தந்தருளினாய்! அதுவே போதும் வெங்கடேசுவரா!''

*சொசருசு மாடலாடுமனி கூரிமி குபெத வாகெ யுண்டகா'*
*னொசகு'னெ முச்சடலாட மன யிண்ட்டிகி வச்சினனட்ளுசே செதன்*
*சுசரமு காது' ஜண்ட்டமொன சூதி'னி ரெண்ட்டெமு*
*க்'ருவ்வ னொக்கட்டே*
*பொசகி'ன சோ'ட னேமயின பொ'ங்க்கக' வச்சனெ வேங்கடேஸ்வரா!*

''அவளிருக்கும்போதே கெஞ்சிப் பேசுமாறு அன்பு காட்டுகிறாய்! இது பொருந்துமோ? நம் வீட்டுக்கு வந்தால் பேசிக் களிக்கலாம். இரண்டு ஊசி முனைகளில் ஒரே நூல் இழை சொருக முடியுமோ? ஏதானாலும் பொய்யுரைக்கலாமோ? வேங்கடேசுவரா!''

இதுபோன்ற அழகிய கவிச்சுவை நிரம்பிய நூல் இது. இவரது நீதி சீச சதகம் மற்றொரு சிறந்த நூல். இது சீச பத்தியம் எனும் செய்யுள்

நடையில் இயன்றது. இதன் முதல் நான்கடிகள் கலித்தாழிசை போல வரும். இறுதியில் நான்கடிகள் உள்ள தேட்டகீத எனும் செய்யுள் இணையும். முதல் நான்கடிகளில் உள்ள உணர்ச்சி வெளிப்படும்; சிறந்த உவமைகளும் வந்து இறுதி நான்கடிகளில் கருத்தை விளக்கும் முடிப்புரையாக ஆசிரியர் சுரிதகம் கலிப்பாவில் வருவதைப்போல வந்தமையும், சீச பத்தியம் தெலுங்கு மொழிக்கே உரிய செய்யுள் அமைப்பாகும். இந்நூலில் அரச நீதிகள், மனிதன் ஆற்ற வேண்டிய கடமைகள், ஒழுக்கங்கள், பக்தி முதலிய யாவும் வற்புறுத்தப்பட்டுள்ளன.

> ''நன்கு கற்றுத் தெளியாமல் அவையில் வாதாடுதல் கூடாது. ஆற்றலுக்கு மிஞ்சிய காரியங்களில் புகுதல் கூடாது. தன் ஆற்றலின் அளவறிந்து அதற்கேற்ப நடந்து கொள்பவனே தகுந்த மனிதன் ஆவான்.''

> ''யானையின் வலிவு எவ்வளவு?
> மாவுத்தன் வலிமை எவ்வளவு?
> இருட்டின் வலிமை எழ்வளவு?
> விளக்கின் வலிமை எவ்வளவு?
> மலையின் வலிமை எவ்வளவு?
> பாயும் நீரின் வலிமை எவ்வளவு?
> சிவன் வலிமை எவ்வளவு?
> மென்மலரம்புகள் வலி எவ்வளவு?
> எப்போதும் பெரிது சிறிது என்றென்னக் கூடாது.''

''ஆயிரக்கணக்கில் எறும்புகள், கறையான், விட்டில் போன்றவை பிறக்கும். அப்படியே விரைவில் இறக்கும். அப்படித்தான் கயவரும் பிறந்து பிறரைத் துன்புறுத்தி விரைவில் அழிவர்.''

''பத்துப்பேர் பேசும் சொல்லே உலகில் செல்வாக்குப் பெறும். ஒருவன் பேச்சு எடுபடாது. உண்மைக்கு முன் பொய் என்றும் நிற்காது. உலகில் பிறர் மெச்சும்படியாக வாழ வேண்டும். அவைகளில் பிடிவாதம் பிடிக்கக் கூடாது.''

''கயவன், ஞாயிற்றின் மேல் புழுதி மண்ணைத் தூற்றினால் தன்மேல் விழுமன்றி அதற்கென்ன குறைவரும்? மலையோடு வரையாடு மோதினால் அதன் தலை உடையுமன்றி மலைக்கென்ன

குறை வரும்? எதிரியின் வலிமையும், தன் வலிமையும் அறியாமல் போரிடுபவன் அறிவிலியாவான்.''

''கற்புடைப் பெண்டிரை யார் விரும்பினும், தீயைக் கறையான் பிடிக்காதது போல மாசுற மாட்டார். புலனடக்கம் மிக்கவர் தனித்திருந்தாலும் மனஞ்சலியார். தவளை கடலைக் கலக்க முடியுமா?''

''தூரத்திலிருக்கும் மலை நுண்ணியதாக அழகாகத் தோன்றும், கிட்டச் சென்றால் முள்ளும் கல்லும் மிடைந்து கிடக்கும்.''

''எதிலும் அவசரப்படக்கூடாது. எல்லாவற்றிலும் பொறுமையோடிருந்தால் நலம் பயக்கும்.''

இதுபோன்ற அழகிய பல நீதிகள் இந்நூலில் அடங்கி யுள்ளன.

பெத திருமலாச்சாரியரின் மற்றொரு நூல் ஸ்ரீகிருஷ்ண சதகம். இது ஒரு இலக்கண நூல். தமிழிற் போலவே தெலுங்கிலும் ரகரமும் றகரமும் உண்டு. எனினும் தற்போது இரு எழுத்தில் உச்சரிப்பும் ஒன்றாகவே திரிந்து விட்டது. தமிழில் இரண்டின் உச்சரிப்பும், பொருளும் வேறு வேறு. தற்காலத் தெலுங்கில் றகரம் வருமிடத்திலும் ரகரமே உச்சரிப்பதோடு எழுதவும் செய்கின்றனர். ஆனால், இந்த திரிபு திருமலாச்சாரியார் காலத்தில் வந்தது போலும். எது ரகரம் எது றகரம் என்ற மயக்கம் கற்பார்கட்கும் இருந்தது. இதனைத் தெளிவுபடுத்தவே இந்த சதகம் எழுதினார். ரேப றகர நிர்ணயம் எனும் பெயர் இந்த நூலுக்கு உண்டு. இது சம்பந்தமாக முதல் நூல் இதுவே. இவரைப் பின்பற்றி பிற்கால இலக்கண ஆசிரியர்களான அப்பகவி, கூசிமன்சி, திம்மகவி, கணபவரபு, வேங்கடகவி, ஒசிரால ரங்கநாத கவி, பரதமு லட்சுமி பதி, ஆடிதமு சூரகவி முதலியோர் ரகர றகர பேதங்களைத் தெளிவுபடுத்தி எழுதியுள்ளனர். எந்தெந்தச் சொல் ரகரம், எந்தெந்தச் சொல் றகரம் என்பதைத் தெளிவுறுத்தும் இத்தகு நூல் தமிழில் இல்லை. தற்காலத் தமிழ் மக்கள் மயக்கமுடன் எழுதுவதையும் காண்கிறோம்.

இச்சிரி தெச்சிரி யனியெடி
அச்சதெலுங்குல க்ரியாபதாந்தம்புலமை

*வச்சினிவி யெல்ல ரேபலு*
*ரச்சல ஜட்'ட'லவி றால ரசனலு க்ருஷ்ணா!*

''இச்சிரி தெச்சிரி என்னும் தூய தெலுங்கு வினைச்சொல் இறுதியில் வருவன எல்லாம் ரகரம் ஆகும். ரகரம் இரட்டிக்கும் போது றகரமாக வரும்.''

தண்டகம், உதா ஹரணம் முதலிய தெலுங்கிலக்கிய உத்திகளைப் பயன்படுத்திய பெத திருமலாச்சாரியர் சிருங்கார தண்டகம், வெங்கடேச சாதாகரணம், சுதர்சன ரகட முதலிய சிறு நூல்களையும் இயற்றியுள்ளார். ஆயிரக்கணக்கான சங்கீர்த்தனை களும் அதன் இலக்கணமும் வரைத்துள்ளார். பகவத் கீதைக்கு எளிய நடையில் இனிய தெலுங்கு உரைநடையில் அன்றைய மக்கள் வழக்கு மொழியில் உரை வகுத்துள்ளார். இது அண்மையில் திருப்பதி திருமலை தேவஸ்தானத்தார் வெளியிட்டு உதவியுள்ளார்கள். திருமலாச்சாரியாரின் வைராக்கிய வசனங்கள் மிகவும் உயர்ந்த நடையில் கருத்தாழம் மிக்க வகையில் அமைந்துள்ளன. தாகூரின் கீதாஞ்சலியைப் போல நயமுடன் மிளிர்கிறது. திருப்பதி தேவஸ்தானத்தார் 1935ல் 'திரு மைனர் ஒர்க்ஸ் ஆன் அன்னமாச்சார்யா அண்ட் ஹிஸ் சன்ஸ்' என்ற வெளியீட்டின் பெத திருமலாச்சாரியரின் எட்டு நூல்கள் அடங்கியுள்ளன. அன்னமய்யா 1, சின திருமலய்யா 2 ஆக பதினொன்று சிறு படைப்புகள் அடங்கிய நூல் அது. அவையாவன.

1. சிருங்கார மஞ்சரி (அன்னமாச்சாரியர்)
2. சக்ரவாள மஞ்சரி (பெத திருமலாச்சாரியர்)
3. நீதி சதகம் (பெத திருமலாச்சாரியர்)
4. ஸ்ரீ வெங்கடேச உதாகரணம் (பெத திருமலாச்சாரியர்)
5. சுதர்சன ரக'ட (பெத திருமலாச்சாரியர்)
6. ஸ்ரீ கிருஷ்ண சதகம் (பெத திருமலாச்சாரியர்)
7. சிருங்கார தண்டகம் (பெத திருமலாச்சாரியர்)
8. வைராக்ய வசன மாலிகா கீதமுலு (பெத திருமலாச்சாரியர்)
9. சிருங்கார விருத்த பத்திய சதகம் (பெத திருமலாச்சாரியர்)
10. சங்கீர்த்தனலட்சணம்(சின திருமலாச்சாரியர்)
11. அஷ்டபாஷா தண்டகம் (சின திருமலாச்சாரியர்)

பெத திருமலாச்சாரியரின் வைராக்கிய வசன மாலிகாவில் இரண்டு வசனங்கள் காண்போம்.

''பரமபுருஷா! நான் கயவன் என்று யாரார் மறைவாகச் சொல்லிக் கொள்வார்களோ? இப்போதே நான் என் குற்றங்களைச் சொல்லிக் கொண்டு மன்றாடிக் கொள்வேன். அது எப்படி என்றால், நான் செய்த குற்றங்கள் (பாவங்கள்) என்னைச் சுற்றுமானால் உன் நாமம் உச்சரித்து தப்பித்துக் கொள்வேன். உன்னாற் கற்பிக்கப்பட்ட விஷயங்கள் (புலன்கள்) என்னை ஆட்கொள்ள வருமானால், என் மனத்தில் உன் திருவடிகளை நினைத்து அதன் மறைவில் ஒளிந்து கொள்வேன்! முன் செய்த வினைப்பயன் அனுபவித்துத் தீர வேண்டுமென என்னைப்பற்றுமானால், உன்னுடைய ஆள் என்று கூறி வலிதின் விலக்கிக் கொள்ளுவேன்.''

எமகிங்கரர்கள் என் வழியில் குறுக்கே வந்தார்களானால் என் தோளில் உள்ள சங்கு சக்கர முத்திரைகளைக் காட்டி பயமுறுத்துவேன்.

சம்சார பாசங்கள் என்னைப் பீடிக்குமானால், உன் கதைகளைக் கேட்டு அதை அலட்சியப்படுத்தி விடுவேன்! உன் மாயை என்னைச் சுற்றிலும் சூழ்கடிக்க வருமானால் உன் அடியாரிடம் கூறி உனக்கு விண் ணப்பம் செய்து கொள்வேன். இது குற்றமென்று மனதிற் கொள்ளார் ஸ்ரீ வெங்கடேசுவரா.

''நரசிங்கா! நான் எண்பத்து நான்கு லட்சம் பிராணிகளின் கருவில் உருக் கொண்டிருந்ததுமென்ன? அலுப்பே இல்லை! நீ எனது அந்தராத்மாவாக பின்தொடர்ந்து அலையும்போது தங்கள் திருவடிகள் எவ்வளவு நொந்ததோ என்று கவலைப்படுகிறேன்! அது மட்டுமன்றி முன்பு சுவர்க்க நரகங்களில் சுகதுக்கங்களை அனுபவிக்கும்போது என்னுள்ளே நீ இருந்து என்மீது இரக்கப்பட்டு என்ன நினைத்தாயோ என்று கவலைப்படுகிறேன். நான் உபவாசங்கள் (பட்டினி) கிடந்து வெப்பமும் தண்மையும் பொறுத்துக் கொண்டு தவம் செய்யும்போது களைப்பு உன்னையும் பீடிக்குமோ என்று கவலைப்படுகிறேன்.''

தங்களை திருவாராதனம் செய்யும்போது அழைத்து அமுதூட்ட முனையும்போது ருசி எப்படியோ, சமயம் எத்தகையதோ தெரியாது அயர்வேன்! மலையளவான நின்னை சூட்சுமமாகச் செய்து கொண்டு ஆன்மாவில் எண்ணும்போது உனக்கு இறுக்கமாகுமே என்று கவலையுறுகிறேன். என் எல்லாக் குற்றங்களையும் மன்னிக்க மாட்டாயா? ஸ்ரீ வெங்கடேசுவரா!

தாள்ளபாக பெத திருமலாச்சாரியாருக்கு ஐந்து குமாரர்கள். சின திருமலாச்சாரியா, அன்னய்யா, பெத திருவேங்களநாத சின்னன்ன என்னும் திருவேங்களநாத, கோனேடி திருவேங்களநாத எனும் ஐவரில் முதல்வரான சின திருமலாச்சாரியரும், நான்காவதான சின்னன்னாவும் மிகச் சிறந்த கவிஞர்களாவர். மற்றவர்களும் கவிஞர்களே. அவர்கள் படைப்புகள் கிட்டவில்லை. சின திருமலாச்சாரியார் சிறுவயதிலேயே சங்கீர்த்தனைகள் பாடிய மாமேதையாவார். இவரது தாத்தா அன்னமாச்சாரியரே உபநயனம் செய்வித்ததோடு பல கலைகளும் கற்பித்துள்ளார். சந்திரகிரி அருகிலுள்ள மங்காபுரத்தில் உள்ள வெங்கடேசுவரர் கோவிலில் ஜீரணோத்தாரணம் செய்தார். மேலும் ஆழ்வார்கள், அன்னமய்யா, ஸ்ரீ இராமானுஜர் சில விக்கிரகங்களும் பிரதிட்டை செய்தார். அங்குள்ள சாசனப்படி 22.3.1540ல் கோவில் கும்பாபிஷேகம் நடத்தி வைத்ததாகத் தெரிகிறது.

சித்தூர், அனந்தபுரம், கடப்பை, கர்னூல், நெல்லூர் மாவட்டங்களில் பயணம் செய்து ஆங்காங்குள்ள வைணவத் தலங்களை வழிப்பட்டு பல சங்கீர்த்தனைகள் பாடியுள்ளார். மேலும் அஷ்டபாஷா தண்டகம், சங்கீர்த்தன லட்சணம் என்னும் இரு நூல்களும் இயற்றியுள்ளார்.

இவரது கீர்த்தனைகள் திருமலை, திருப்பதி தேவஸ்தானத் தாரால் திரு. அர்ச்சகம் உதயகிரி ஸ்ரீனிவாசரால் 1962ல் பதிப்பிக்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளது. இவரது அஷ்டபாஷா தண்டகம் பிரசுரிக்கப்பட்டுள்ளது. சமஸ்கிருதம், பிராகிருதம், சௌரசேனி, மாகதி, பைசாசி, ப்ராசீ, அவந்தி, சார்வதேசீ என்பவையே அந்த எட்டு மொழிகள். பிராகிருத மொழிச் சிதைவுகளான ஆறு மொழிகளும் வடமொழி, பாகதம் இரண்டும் சேர்த்து எட்டெனப்பட்டது. தாள்ளபாக மரபினர் பல மொழிப் புலமை பெற்றவர்கள் என்பது தெரிகிறது. இசைப் பாடல்களைப் பாடியதோடு, இலக்கணப் புலமையுடன், காவியங்கள் படைக்கும் கவிஞர்களாகவும் திகழ்ந்தனர். ''ஸ்ரீமந் வேதமார்க்க பிரதிஷ்டாபனாச்சார்ய, ஸ்ரீராமானுஜ சித்தாந்த ஸ்தாபனாச்சார்ய, வேதாந்தாச்சார்ய, கவி தார்க்கிதகேசரி, சரணாகத வஜ்ரபஞ்சர'' முதலிய விருதுகள் பெற்றனர். இவ்விருதுகள் மிகையன்று என்பது இவர்களது படைப்புகளும், பணிகளும் விளக்குகின்றன. ஸ்ரீராமானுஜரின் சித்தாந்தத்தை ஆந்திர நாட்டில் பரப்புவதில் மிகப் பெரிய தொண்டாற்றியவர்கள் தாள்ளபாக மரபினரே எனலாம்.

தாள்ளபாக சின திருமலாச்சாரியர் தமது தாத்தா அன்னமாச்சாரியர் மேல் மிகுந்த பக்தியுடையவர். அவரைப் பற்றி பல கீர்த்தனைகள் பாடியுள்ளார்.

''விருது டெக்க முலுகா, பெக்கு சங்கீர்த்தனமுலு
ஹரி மீத வின்ன வின்செ னன்னமய்யா
விரிவி க'லிகி' நட்டி வேத'முல அர்த்தமெல்லா
அரசி தெலிபினாடு' அன்னமய்யா.

அந்தமைன் இராமானுஜா சார்யா மத முன
அந்துகொனி நிலிசினா டன்னமய்யா
வித்துவலெ மாகுன்னு ஸ்ரீ வெங்கடநாதுனி னிச்செ
அர்த்தரிலோ தாள்ளபாக அன்னமய்யா!''

''விருது, பட்டங்கள் பெற்று பல சங்கீர்த்தனைகள்
திருமால் மீது விண்ணப்பித்தார் அன்னமய்யா
விரிவாக உள்ள வேதத்தில் பொருள் எல்லாம்
ஆராய்ந்து தெரிவித்தார் அன்னமய்யா!

அழகான இராமானுஜா சாரியரின் மதத்தில் பற்றிக்
கொண்டு நின்றான் அன்னமய்யா!
விருந்தாக எமக்கும் ஸ்ரீவெங்கடேசுவரனைத் தந்தான்.
எல்லோரிலும் தாள்ளபாக அன்னமய்யா!''

இக்கூற்றிலிருந்து இராமானுஜரின் வைணவமும், திருப்பதி வேங்கடேசுவரின் பெருமையும் ஆந்திர நாட்டில் பரவ முக்கிய காரணமாக இருந்தவர் அன்னமாச்சாரியரே என்பது புலனாகிறது. ''விருந்தாக எமக்கும் தந்தான்'' என்பதாலும் அம்மதமும் வேங்கடமும் புதிய பொலிவோடு பரவியதாகக் கொள்ள வேண்டியுள்ளது.

மற்றொரு பாடலில் அன்னமாச்சாரியரே உபநயனம் செய்வித்து பிரம்மோபதேசம் செய்ததாகவும், ஸ்ரீ வெங்கடேசுவரரை உபாசிக்கும்படி கட்டளை இட்டதாகவும், தாயும், தந்தையும், குருவும் எல்லாமே அன்னமய்யாவே என்றும் போற்றிப் பாராட்டியுள்ளார். இவரது சங்கீர்த்தனைகளிலும் அன்னமாச்சாரியரின் செல்வாக்கு காணப்படுகிறது. இவரும் அன்னமாச்சாரியரைப் போன்றே ஆன்மீக கீதங்களும் சிருங்கார கீதங்களும் இசைத்துள்ளார்.

சில கீர்த்தனைகளின் கருத்துரைகள் காண்போம்.

''வெறும் கவலை என்? வருத்தமேன்? உடனே ஸ்ரீஹரியை சேர அறிய வேண்டுமேயன்றி, கவலை ஏன்? காலமென்ன செய்யும். கருமம் என்ன செய்யும், ஆட்கொண்ட திருமகள் கேள்வன் நெஞ்சில் இருக்கும்போது கவலை ஏன்? ஆராய்ந்தால் துருவனையும், அஜாமீளனையும், காலமும்,கருமமும் என்ன செய்தன?''

பாபம் என்ன செய்யும், பகை என்ன செய்யும் காக்கும் கடவுளே அருகில் இருக்கும்போது கவலை ஏன்? கண்டா கருணணையும் பிரகலாதனையும் பாவமும் பகையும் என்ன செய்தன?

குலமென்ன செய்யும்! குணமென்ன செய்யும்! சரணான ஸ்ரீ வெங்கடேசுவர நாதனிருக்கவே கவலை ஏன்? மகிழ்ந்து வால்மீகிக்கும், அகலிகைக்கும் குலமென்ன செய்தது குணமென்ன செய்தது?

''அரைக்க வேண்டாம்! குடிக்க வேண்டாம். வாய் கசக்க வேண்டாம். அருகிலோரிடத்தில் சஞ்சீவியுள்ள திதோ! காடெல்லாம் திரிந்தலைய வேண்டாம். இளைக்க கடப்பாரை வேண்டாம். தோண்ட வேண்டாம். வேண்டாத ஓடைகள், ஆறுகள் தேட வேண்டாம்.''

சேர்ந்தருகிலேயே சஞ்சீவியுள்ள திதோ! குளத்தில் மூழ்க வேண்டாம். புற்றுக்களை நாட வேண்டாம். ஆத்திரத்தில் கையிலுள்ள பொன்னை விலை கொடுத்து வாங்க வேண்டாம். எல்லா பிரச்சனைகளையும் தீர்த்தும் மருந்தாக சஞ்சீவி உள்ள திதோ! கப்பலேறி தீவுகட்குத் திரிய வேண்டாம். குகைகளில் நுழைய வேண்டாம். கிரகணாதி காலங்களைத் தேட வேண்டாம். ஸ்ரீ வெங்கடநாதனாகிய சஞ்சீவி உள்ளதிதோ.

- 54

''ஆண்டவனாக என்னொருவனை ஆட்கொள்வதால் உன் திருவிளையாடற் பெருமைக்கு ஒரு குறைவந்து விடுமோ? முயன்றென் பாவத்தை நீக்கினால், உன் சங்கல்பத்துக்கொரு குறைவுண்டாமோ?''

முயன்று நானே பூசனை செய்ய மெச்சினேன் என்றால், பார்த்துக் கொண்டிருக்கிறாய்! அதில் என்ன பயன் பெற்றுக் கொண்டாய்! தெய்வமாக எனது மனதைத்திறந்து பாதுகாப்பதற்கு கோவிந்தா! உன் மாயைக் கென்ன குறைவா?

சோதனையால் என் பக்தியைப்பார்த்து காப்பாற்றலாம் என்கிறாயா? அதனால் வேண்டி நீ எத்தனைக் களஞ்சியம் நிரப்பிக் கொண்டாயோ? மகிழ்ந்து என் இதயத்தில் தோன்றினால் உன் பெருமைக்கு இழுக்காகுமோ? செல்வத்துடன் என்னை ஸ்ரீ வெங்கட நாதா! சேர்ந்தாய்! உலகில் உனக்கு இப்போது எத்தனை புகழ் கூடியதோ.

- 34

கற்றதால் எவன் வாழ்ந்தான்? கல்லாமல் எவன் கெட்டான்? சுமப்பவர் எல்லாருக்கும் திருமகள் கேள்வன் அவ்வளவேயன்றி எல்லாம் அவன் பாரமே!

ஒருவர் குறைகள் என்றால் சும்மா தேடிப் பார்க்கிறேன். அந்தோ! என் குறைநிறைகள் ஆராய மாட்டேன். ஒன்றாக நினைத்தால் பிறர் என்ன? தான் என்ன? அங்கும் இங்கும் குறிக்கோள் ஸ்ரீஹரி அவ்வளவு தான்.

பிறரையென்றால் தனது காண முற்படுகிறேன். அப்படியே என் குற்றங்கட்கு தண்டனை எதுவோ? ஆராய்ந்து பார்த்தால் நான் என்ன? பிறர் என்ன? திருமால் ஒருவனே சுதந்திரனன்றி நாம் யார்?

சும்மா பிறரைப் பழி காண்கிறேன். முகில் மூட்டம் போன்ற எனது பொய்மையை எண்ணமாட்டேன். கௌரவித்து ஸ்ரீவெங்கடநாதன் என்னை மன்னித்ததனால் மாயையை வெல்ல முடியுமன்றி அவனருள் இன்றி இயலுமா?

- 36

தெரிவையர் எல்லோரும் கூடி திருத்தினார் உன்னையும்! மறதியும் அச்சமும் இன்றி எமக்காகவேதானோ? கண்களாலேயே மயக்கும் காரிகையர் இருக்கவே சின்ன வயதிலேயே குணத்தில் பெரியவனானாய்! முன்னித்தகையவரின் இதழ்த்தேன் தோய்ந்ததால், நேரான உன் பேச்சுக்களுக்கு இனிமை மிகுந்தது. இச்சகத்தில் சிங்காரிக்கும் நங்கையர் இருந்ததால் பெருமையுடன் இவ்வளவு

அழகனாகி விட்டாய்! அன்புடன் அதனை வேட்டு வருவதால் அல்லவோ புல்லாங்குழலிசையின் மிகுநேர்த்தி மிக்கவனாகி விட்டாய். மங்கையர் உன்னோடு சாமர்த்தியமாக பேசியதாலன்றோ பெருமைமிக்க பேச்சாளியாகி விட்டாய்! மனமுருகி அவர்கள் எல்லாம் கூடி வருவதால் அன்றோ ஸ்ரீ வெங்கடநாதா! பருவம் எனும் ஆற்றின் வழி செல்லும் ஓடம் போலாகி விட்டாய்.

- 36

பெத திருமலாச்சாரியரின் இரண்டாம் மகன் அன்னமய்யாவும் சிறந்த இசை மேதை. அன்னமய்யாவின் திறன் இவரிடமும் இருந்ததாக இவர் சகோதரர் சின்னன்ன தம் 'அஷ்டமஹிஷி கல்யாண' நூலில் புகழ்ந்துள்ளார். இவரது படைப்புகள் ஒன்றும் இன்று கிடைக்கவில்லை. இவ் வைணவ மதப் பிரசாரத்தில் தீவிரமாக ஈடுபட்டு ஆந்திர நாட்டில் சுற்றித் திரிந்ததாக தெரிகிறது. இவருக்கு சதாசிவராயர் என்னும் மன்னர் 'மின்னிகல்' எனும் கிராமம் தானம் தந்ததாக ஒரு சாசனம் உள்ளது. இவர் கி.பி. 1492ல் பிறந்து அறுபதாண்டுகள் வாழ்ந்து வைணவ சித்தாந்தத்தைப் பரப்பி புகழ் பெற்றார்.

இவரது மற்றொரு சகோதரர் பெத திருவேங்களநாதன் இசையிலும், நாட்டியத்திலும் மேதையாக திகழ்ந்தவர். இவருடைய சங்கீர்த்தனைகளும் கிட்டவில்லை.

பெத திருமலாச்சாரியரின் நான்காவது குமாரரும், சின திருமலாச்சாரியரின் சகோதரருமான சின திருவேங்களநாதன் எனும் சின்னன்ன மிகச் சிறந்த கவிஞராவார். துவிபத எனும் ஈரடிச் செய்யுள் வகையில் பல காவியங்கள் வரைந்து புகழ் பெற்றார். இவர் சங்கீர்த்தனைகள் இயற்றியதாகத் தெரியவில்லை. கி.பி. 1498ல் பிறந்து அறுபதாண்டுகள் வாழ்ந்து கி.பி. 1558ல் மறைந்தார்.

மிகச்சிறந்த கவிஞராகவும், அறிஞராகவும், பலமொழி கற்ற பண்டிதராகவும், வைணவத்தை பரப்பியவராகவும் யோக மார்க்க ரகசியங்களை உணர்ந்தவராகவும் இவர் திகழ்கின்றார். இவரது நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. திருப்பதி தேவஸ்தானத்தாரே வெளியிட்டுள்ளனர். இவர் காவியங்கள் ஆவன.

1. அன்னமாச்சாரிய சரித்ரமு (சரித்திரம்)
2. பரமயோகி விலாசமு (ஆழ்வார், ஆசாரியர் சரித்திரம்)

3. அஷ்டமகிஷி கல்யாணம் (காவியம்)
4. உஷா பரணயம் (காவியம்)

கி.பி. 1546ல் சதாசிவ ராயரிடம் 'கொரிஜவோலு' கிராமம் தானமாகப் பெற்ற, 'திருவேங்கள நாதய்யங்காரு' சின்னன்ன தான் என்று ஸ்ரீசாது சுப்பிரமணிய சாஸ்திரி ★ கூறுகிறார்.

வைணவ மதத்தை பிரச்சாரம் செய்து புகழ் பெற்றார். இவரை தெனாலி இராமகிருஷ்ணன், கணபவரபு வேங்கடகவி முதலியோர் புகழ்ந்துள்ளனர். இவர் பத்மசாலெ குலத்தவர்கட்கு ஆச்சாரிய குருவாகத் திகழ்ந்தார் என 1541ல் எழுதப்பட்ட ஒரு சாசனம் சான்று பகர்கின்றது.

சின்னன்னாவின் நூலாகிய 'அன்னமாச்சாரிய சரிதம்' தமது தாத்தாவாகிய (பாட்டன்) அன்னமாச்சாரியரின் சரிதத்தைக் கூறும் சிறிய நூல். கற்பனைகள் இன்றி ஒரு சரித்திர நூலாக அமைந்ததே தனிச் சிறப்புடைய அம்சமாகும். இதனை முதன் முதலில் வேரூரிபிரபாகர சாஸ்திரி பதிப்பித்து வெளியிட்டார். கௌரிபெத்தி, ராமசுப்'ப'சர்மா, மீண்டும் 1982ல் ஒரு பதிப்பு திருப்பதி தேவஸ்தானத்தினர் சார்பில் வெளியிடப்பட்டுள்ளது.

அன்னமாச்சாரியர் சரிதம் அவரது பேரனாலேயே எழுதப் பட்டதாலும், அவருடைய அண்மைக்காலத்தில் எழுதப்பட்டதாலும் பிரமாண நூலாகக் கருதப்படுகிறது. இந்த நூலால் தான் தாள்ளபாக மரபினர் பெருமையை உலகம் உணர முடிந்தது. இந்நூலால் அன்றைய சமுதாய வரலாறு, மன்னர்கள் வரலாறு கூட விளக்கம் பெற்றுள்ளது. இந்நூலில் தாள்ளபாக ஊர், அன்னமாச்சாரியர் மரபு, அவரது தாய் தந்தையர், திருமலைக்குச் சென்றது, வைணவ தீட்சை பெற்றது. அகோபிலம் சடகோப யதியிடம் வைணவ சித்தாந்தமும், சாத்திரங்களும் கற்றது. சாளுவ நரசிம்மன் பாராட்டியது, சிறையிட்டது, மீண்டும் அடிபணிந்தது. புரந்தரதாசரை சந்தித்தது, அன்னமாச்சாரியரின் படைப்புகள், அவருடைய சந்ததியினர் ஆகிய அனைத்து விவரங்களும் சுருக்கமாகவும், தெளிவாகவும், விளக்க மாகவும் கூறியுள்ளார். சரித்திர நூல்களை எழுதிப் பழக்கமில்லாத நம் நாட்டுக் கவிஞர்களிடையே இவர் ஒரு சரித்திர நூலாசிரியர் ஆகத் திகழும் சிறப்பினைப் பாராட்ட வேண்டும். சரித்திரம் என்ற பெயரில்

★ *T.T.D. Epi. Report p. 297.*

புராணப் புளுகுகள், நம்ப இயலாத கற்பனைகள் செய்து நூல்கள் படைக்கும் மரபுக்கு மாறாக இவர் உண்மை வரலாற்றை நூலாகப் படைத்துள்ளார். பால்குரிகி சோமநாதர் பசவ புராணம், பண்டிதா ராத்ய சரித்திரம் என்னும் இரு வரலாற்றுக் காவியங்களைப் படைத்தார். அதற்குப் பின் இந்த 'அன்னமாச்சாரிய சரித்திரம்' வரலாற்றுக் காவியமாக தெலுங்கிலக்கியத்தில் போற்றப்படுகிறது.

ஆபின்னப் ராயம்பு னத்து நா மேடி
ஏபார தனமதி' கிச்சயை நட்ளு
ஆடின மாடெல்ல அம்ருத காவ்யமுக'
பாடின பாடெல்ல பரம பா' னமுக'
தனகவித்வமுனகு தனகா'னமுலகு
க'னுகொ'னி சகலலோ கமுலு கீர்த்திப்ப
வேங்கட பதிமீத' விந்த விந்தலுக'
சங்கீர்த்த னம்புலு சவரின்சுனிச்ச'

''அந்தச் சிறுவயதிலேயே அந்த மேலானவன், தன் உள்ளம் உகக்கும்படியாக பேசிய பேச்செல்லாம் அமுத காவியங்களாக, பாடிய பாட்டெல்லாம் பரம கானங்களாக தனது கவித்துவமும், தனது கானமும், கண்டு உலகோர் புகழ்ந்து பாராட்ட வேங்கட பதியின் மேல் புதிது புதிதாக சங்கீர்த்தனைகள் விருப்புடன் படைத்தளித்தான்.''

இந்த நூலை 1949ல் பதிப்பித்த வேடூரி பிரபாகர சாஸ்திரி தம் முன்னுரையில் அரிய பல செய்திகளைத் தொகுத்துச் சொல்லி யிருக்கிறார்.

சின்னன்னாவின் மற்றொரு சிறந்த காவியம், 'பரமயோகி விலாசமு' ஆகும். பால்குரிகி சோமநாதர் 'பசவ புராணம்', 'பண்டிதாராத்ய சரிதம்' எனும் வீரசைவச் சான்றோர் வரலாறுகளை ஈரடிச் செய்யுள் (துவிபத) அமைப்பில் எழுதிப் புகழ்பெற்றது போல இவரும் அதே துவிபதத்தில் ஆழ்வார், ஆச்சாரியர்கள் வரலாற்றை எழுதி வைணவ இலக்கியத்துக்கு ஈடிணையற்ற சேவை செய் துள்ளார். ஆழ்வார்களைப் பற்றிய வரலாறுகள் மணிப்பிரவாள நடையில், 'குருபரம்பரா பிரபாவம்' முதலிய நூல்களில் தமிழில் உண்டு. இந்த வரலாறுகளை தெலுங்கிலக்கியத்தில் பெரும்பாலும் காவிய வடிவில் காண்கிறோம். தமிழில் காவிய அமைப்பில் இல்லை.

தெலுங்கில், பரமயோகி விலாசமு, கிருஷ்ண தேவராயரின் 'ஆமுக்தமால்யத', சா.ரங்கு தம்மய்யாவின் 'வைஜயந்தி விலாசமு' போன்ற பல காவியங்கள் அமைந்துள்ள சிறப்பினைக் காணலாம். ★

பரமயோகி விலாசமு முதலாழ்வார்கள் தொட்டு இராமானுஜர் வரையும் உள்ள ஆழ்வார், ஆசாரியர்கள் வரலாறு காவிய நடையில் விவரிக்கப்பட்டுள்ளது. 12,754 அடிகள் உள்ள காவியம். தமிழில் உள்ள 'ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம்' எனும் பின்பழகிய பெருமாள் ஜீயரின் நூலை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டதாகத் தெரிகிறது. குருபரம்பரையில் வரும் சில கற்பனைகள், நூல் அமைப்பு முறை முதலியன சில சொற்றொடர் அமைப்புகள் ஒத்து உள்ளது. இக்கருத்துக்குச் சான்று பகரும். இந்நூல் சுவை மிக்க இனிய நடையில் அணி நயங்களுடன் அமைந்துள்ளது. நூலின் தொடக்கத்தில் தன் தந்தையை வணங்குகிறார்.

*"ஸ்ரீகர வைஷ்ணவ சித்தாந்த விப'வ*
*பாக சா சனு தாள்ள பாக சாசனுரி*
*ஆசார விஜிதா மராசார்பு திரும*
*லாசார்யு"*

என்று திருநல்கும் வைணவ சித்தாந்தச் செல்வத்தில் இந்திரனாகத் திகழும் ஆசார சீலமுடைய தாள்ளபாக திருமலாச்சாரியர் என்று பாராட்டுகிறார். பின்னர் இராமானுஜரையும், ஆளவந்தாரையும் வணங்குகிறார்.

*"இராமானுஜாகாரு ராமானு ஜாசார்யு"*

*"வந்தாரு மா ஆள வந்தாரு' பொக'டி"*

என்று பாராட்டி நாதமுனிகள் தொடங்கிய பிற வைணவ ஆச்சாரியர் களையும் வணங்குகிறார்.

*"சடமத் ராத்'தா'ஸ்த சம்ஹாரி யைன*
*சடகோ'ப முனிபோலு சடகோ'ப மௌனி"*

---

★ *தாஞ்சாருபரிணயமு(ஆண்டாள் கல்யாணம்) கூரத்தாழ்வாரு சரித்ர எனும் பிரகரிக்கப்படாத தெலுங்கு யட்சகானங்கள் (ஏட்டுப் பிரதிகள்) இந் நூலாசிரியரிடம் உள்ளன இவை. 1987ல் இந்நூலாசிரியரால் வெளியிடப் பட்டுள்ளது.*

என்று பிற மதங்களை வென்ற நம்மாழ்வார் போன்ற ஆதிவன் சடகோப யதியையும் வணங்குகிறார். பின் தனது பாட்டனார் அன்னமாச்சாரியரையும் வணங்கி விட்டுப் பின் தம் நூலைத் தொடங்குகிறார்.

இதிலிருந்து தமிழக வைணவ ஆச்சாரியர்கள்பால் அவர் கொண்டிருந்த மதிப்பும் மரியாதையும் நன்கு புலனாகிறது.

தம் கனவில் அன்னமாச்சாரியர் வந்து தூண்டியதால் காவியத்தைப் படைக்க முனைந்ததாகக் கூறுகிறார்.

*பனுபட த்'ரவிட'ப் ப'த்தமு சூ'சி'*
*தெலுகு'ன ரசியிம்ப்பு த்'விபத' ரூபமுன*

என்று 'செய் நேர்த்தியுடன் தமிழ்ப் பிரபந்தங்களைப் பார்த்து தெலுங்கில் துவிபத உருவில் இயற்றுக' என்று கூறியதாகச் சொல்கிறார். ஆதலின் இவர் தமிழ் நாலாயிர பிரபந்தம், குருபரம்பரா பிரபாவம் முதலிய நூல்களைக் கற்றிருந்தார் என்பது விளங்கும். நூலின் தொடக்கத்தில் தமிழின் பெருமையை விளக்கும் முகத்தான திருமால் திருமகளுக்குச் சொல்வதாக அகத்தியர் வரலாறு கூறுகிறார். இது குருபரம்பரா பிரபாவத்தில் குறிப்பிடாவிடினும் சின்னன்னா தமிழ் அருமை உணர்த்துவதற்காகவே படைத்தார் எனலாம். சிவபெருமான் பார்வதியை திருமணம் முடிக்க கங்கைக் கரையில் காசியில் திருமண விழா ஏற்பாடு நடக்கிறது. தேவர்களும், முனிவர்களும் கூடியதால் வடதிசை சுமையால் தாழ்ந்து தென்திசை உயர்கிறது. இதைச் சமப்படுத்த வழியறியாது திகைக்கின்றனர். அப்போது பிரம்மா அகத்தியரை தென்திசை சென்று இருந்தால் சமமாகும் என கூறுகிறார். தாம் வெகுநாளாக எதிர்பார்த்த பார்வதி கல்யாண வைபவம் காண இயலாது இப்படிப் பணித்து இடையூறு செய்கிறாரே என்று பிரம்மாவைப் பார்த்து சினந்து, 'உமது குலத்தினர்கட்கு (பிராமணர்கள்) உழைப்பு அதிகமும், ஊதியம் குறைவுமாக பணிகள் அமையுமாக' என சாபமிட்டார். (ஆதலினால் தான் இன்றளவும் திருவேறு தெள்ளியராதலும், வேறு ஆக அறிஞர்கள் வறுமைப்பட்டுழல்கின்றனர் போலும்) பிரம்மா உடனே சினந்து, 'உலக நன்மையின் பொருட்டாகத் சொன்னதற்கு சினந்து சாபமிடலாமா?' என்று கூறி, 'நீர் தாங்கியுள்ள வேதங்கள் எல்லாம் திராவிட (தமிழ்) உருவம் அடையுமாக!' என்று பிரதிசாபம் இட்டார். பின் தேவர்கள் இருவரையும் சமாதானப்படுத்தினர். அகத்தியர்

தென்திசை போந்தார். அதன் மூலமாக தமிழ் வளம் பெற்றது. தமிழகத்தில் ஆழ்வார்களும், ஆச்சாரியர்களும் அவதரித்து தமிழில் வேதத்தை உருவாக்கினர்.

திருமகள் கேள்விக்கு பதில் கூறும் வகையில் இக்கதை அமைக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் சின்னன்னாவின் தமிழ்ப் பற்றும், சைவ சமய சமரச மனோபாவமும் விளங்குகிறது.

*''அதுலமுல் த்'ரவிட பாஷானு ரூபமுலு'*
*கே'யமுல் நித்யசங் கீர்த்தனாத் மகமு*
*லாயத ரச போஷணானுபாவ முலு''*

''இணையற்ற தமிழ் மொழி உருவில், இசையும் பாட்டும் நிறைந்துள்ளதான, பரந்துபட்ட சுவைகளும் அனுபவ வெளியீடுகள் நிறைந்ததாகவும்.''

*''நீவு தால் சின யட்டி நிக'ம சந் ததுலு*
*த்'ராவிட ரூபமுல் தால்சு கா'க!''*

''நீ வைத்திருக்கும் வேதங்களின் மரபெல்லாம் தமிழ் உருவை அடையுமாக.''

*''ஆ வித்வகர்ம சா பாவந்த மைன*
*த்'ராவிடந்வமு வச்செ தன வேத' முலனுன,*
*ஏமீ சேயுது வித்தக இந்திரா நாத*
*ஈமனோ வித்தகம் பெட்கு மாற் பெத'னொ*
*அன்னம் ப்ரசண்துடை' த்'ராவிடத்வ*
*மொனரிவ த்ருதுலெ சந்வோத்வதந்னவன்,*
*கணின்' மதீ'ப ப'த்தின்ரேஸி சே'த*
*வெலவுனட்குக' ஜேசி விவரிந்து வேனு''*

''அந்த பிரம்மனின் சாபத்தால் என் வேதங்களுக்குத் தமிழ் தன்மை வந்துவிடும். திருமகள் கேள்வனே! இனி நாம் என்ன செய்வது? என் மனக்கவலை எப்படியாற்றுவாய்? என்னாளும் மகிழ்ந்தது'' தமிழ்தன்மை வந்தால் வேதமே மிக்க உயர்வடைந்தது. எம்பக்தர்களால் புகழ்பெறுமாறு செய்வோம் நாம் என்று திருமால் கூறுகிறார்.

வடமொழி வேதங்கட்கிணையானது தமிழ் திவ்யப் ப்பந்தம் என்ற கருத்தை சின்னன்னா மிக அழகாக இக்கதை மூலம் விளச்குகிறார்.

தமிழகத்திலுள்ள காஞ்சி, திருவரங்கம் முதலிய திருத்தலங்களை வருணக்கும் போதும் அவர் தமக்கு தமிழகத்தின் பால் உள்ள ' றினை வெளிப்படுத்துகிறார்.

புத்த மதத்தினர் புத்த கயாவையும், இந்துக்கள் காசியையும், மகம்மதியர் மக்காவையும் மதிப்பது போலவே, வைணவர்கள் அனைவரும் திருவரங்கத்தை மதிப்பர். அந்த மதிப்புணர்ச்சியோடு சின்னன்னா திருவரங்கம், காஞ்சி முதலிய புனிதத் தலங்களையும் உணர்ச்சிப் பெருக்கோடும், பகதியோடும், கற்பனை நயமுடனும் வருணித்துள்ளார். ஆழ்வார்களை வருணிக்கும்போதும் அவர்களது திவ்விய பாசுரங்களைய்ம் கற்றறிந்து பயன்படுத்தி அந்த வரலாறுகளை விளக்குகிறார். ஆதலின் சின்னன்னா வடமொழி, தெலுங்கு போலவே தமிழிலும் நற்புலமை பெற்றிருந்தார் என்பதில் ஐயமில்லை.

பின்பழகிய பெருமாள் ஜீயர் நம்பிள்ளையின் சீடர் ஆதலின் சின்னன்னாவிற்கு இருநூறாண்டுகள் முற்பட்டவராகலாம். அவருடைய குரு பரம்பரைப் பிரபாவம் கூறும் தொடக்கவுரை கருத்துக்களை அப்படியே பயன்படுத்தியுள்ளது இக்கூற்றை மெய்ப்பிக்கும்.

''ஸ்வ சரண கமல ஸமாத்ரயணத்துக்கு உறுப்பாகக் கொடுத்த கர சரணாம்'' ப'வயன - ஸந்காதாந் மகமான சரீரத்தைக் கொண்டு அவர் நினைவிற்படி செய்யாதே. ஸ மித்தைத் தறிக்கக் கொடுத்த கத்தியைக் கொண்டு பசுவின் வாலைத் தறிப்பாரைப் போலவும், என்ற குரு பரம்பரா பிரபாவ ப்ரவேசம் உரைகளை,

*தனு கொல்வுமணியா த்ம' தவசி' யான்மலகு*
*தனு விந்தி'ரியமுலு தா'ன யின்சிதினி*
*இன்சிவ னனி தா'ழ்ச்சி ஹீன பா'வ முல*
*வின்சலோ நாமூர்த்தி வெறுக'றக' லேக*
*எனய வித்'மமுல தே'வின் சின கந்தி*
*கொ'னி யால தோகலு கோ'சிவ நீதி*

தன்னை வணங்குமாறு ஆன்மாக்களுக்கு உடல், இந்திரியங்கள் தானே தந்தேன். கொடுத்ததைப் பெற்று இட்டு கருத்துடன் விரும்பி என் மூர்த்தியைத் தொழுது கொள்ளாமல், தருப்பை (சமித்து) வைக் கொண்டு வரக் கொடுத்த சுத்தியால் ஆவின் வாலை அறுத்தாற்போல, என்று தெலுங்காக்கம் செய்துள்ளார்.

''ஓலைப் புறத்துச் செல்லாத நாட்டை எடுத்துவிட்டுக்
குறும்பறுக்கும் ராஜாக்களைப் போல''

என்ற வாக்கினை

*''தனயாக்கு மீறின தாகல மீத*
*கனனி பூபதி த'ண்டு கத'வின நீதி''*

''தன் ஆணை மீறிய ஆட்பட்டவர்கள் மேல் சினந்து அரசன் படை கொண்டு செல்லுவது போல'' என்று வழிமொழிந்து உரைக்கின்றார்.

*''தன்னை வந்து கிட்டாமை யற்றிற்கே 'அஹம் மே'*
*(நான் எனது) என்று எதிரிட்டுக் கொண்டு அத'மமான க'தி*
*கனிலே விழுகின்றபடியைக் கண்டு, மனிசரும்*
*மற்றும் முற்றுமாய்*
*மாயப் பிறவி பிறந்த தனியாகையாலே வி சஜாதீயரான*
*நமக்கு இது வைத்'யமன் றென்று பாய்ந்து, பார்வை வைத்து*
*ம்ருண'ம் பிடிப்பாரைப் போலே மனுஷ்ய ஜாதீயரான*
*ஆழ்வார்களைவிடுவித்து ஜகத்தைத்*
*திருத்தியருள வேணுமென்று*
*பார்த்தருளி''*

என்று குருபரம்பரா பிரபாவ வாக்குகளை,

*''அரயக சம்சம்சாரமனு கானலோன*
*திரிகெடு கருலபொந்திக னுன்னவாரி*
*கட்டுகம்பமுல கதியங்க ஜேர்ச்சி,*
*கட்டு னேனுங்குல கரணி''*

*''செலகெடி தனஇன்ட்ட பெரிகின இந்ரிகுபி*
*கானலோ திரிகிர்ரி கைகொன்னகரணி*

*அரய சஜாதீயுலகுவாரி சேத*
*சிரஜீவ ததுலை...''*

''ஆராய்ந்து பிறவி எனும் காட்டிற் திரியும் யானைகள் போன்றுள்ளவர்களை கட்டுத்தறியிற் உய்த்துக் கட்டும் (பழக்கப்பட்ட ஒரே இணையாகிய) யானைகள் போலவும்''

''தன் வீட்டிற் வளர்ந்த மானைக் கொண்டு காட்டி, காட்டில் உள்ள மான்களைப் பிடிப்பாரைப் போலவும், சஜாதீயரான (ஒரே இணையாகிய) (ஆழ்வார்) அவர்களைக் கொண்டு ஆன்மாக்களைக் கவர்கின்றேன்,'' என்று கூறுகிறார். சஜாதீயர் (ஒரே இனத்தவர்) என்ற குரு பரம்பரா பிரபாவத்தில் கூறப்பட்ட அதே சொற்றொடரையும் பயன்படுத்தினார். குரு பரம்பரா பிரபாவ பிரவேசம் எனும் தொடக்க உரையும், பிரமயோகி விலாசத்தின் அவதாரிகை எனும் தொடக்க உரையும் ஒரே போல உவமை, கருத்து, சொற்றொடரமைப்புகள் இருப்பதைக் காண்கிறோம். இதிலிருந்து சின்னன்னா இந்நூல் தமிழில் கற்றுத் தெரிந்துணர்ந்த பின்னரே தம் நூலைப் படைத்தார் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை. முதலாழ்வார் ஆகிய பொய்கை ஆழ்வார் வரலாற்றை குரு பரம்பரா பிரபாவம் பதினைந்து வரிகளே சொல்லப்பட்டுள்ளது. ஆனால், பரமயோகி விலாசத்தில் காஞ்சிபுரம் வருணனை, பொய்கை வருணனை முதலிய காவிய நயங்களோடு நூற்றைம்பது அடிகளில் வருணித்துப் பொன்மலர் மனம் பெற்றது போல அழகுப்படுத்தி உள்ளார்.

பொய்கை ஆழ்வார் அவதரித்ததை வருணிக்கும்போது பொய்கை கருக்கொண்ட விதத்தை இயல்பான கவியழகுடன் வருணிக்கும் நயம் காண்க.

''பாஞ்சசன்னிய அம்சம் வந்து, பொற்றாமரையின் கருவிலே புகுந்தது. பொய்கைத் திருமகளுக்கு கருச்சின்னங்கள் நாள்தோறும் சிறந்து காணப்பட்டன. கடினமான தாமரை மொட்டு எனும் முலைதுளியில் கருவண்டெனும் கருமை சேர்ந்தது. பூங்கொடி மேனி தளர்வுற்றது. அருட்குவளை மலர்கள் எனும் மயிரொழுங்கு நன்கு காணப்பட்டது. வெண்டாமரை மலர் என்னும் முகம் வெளுத்தது. அலைகள் என்னும் வயிற்றின் மும்மடிப்புகள் மெலிந்தன. மண் வாசனையே இன்பம் தந்தது. நேரான அன்ன நடை தடுமாறியது. தாமரைக் கண்ணனான திருமாலின் நாபித் தாமரையில் உதித்த

*பிரம்மனைப் போல அந்தப் பொய்கையில் பொய்கையாழ்வார் உதித்தார்.''*

இவ்விதமே ஆங்காங்கு இடத்திற்கேற்ற வருணனைகளும், கற்பனை நயங்களும், காவிய உத்திகளும் பெற்று சின்னன்னா தம் காவியத்தை நன்கு இயற்றியுள்ளார். இந்நூல் வைணவ மதப் பிரச்சாரத்திற்குப் பெரிதும் உதவியுள்ளது. இவருக்குப் பின் பலர் தெலுங்கில் ஆழ்வார்களின் கதைகளை காவிய வடிவிலமைத்துள்ளனர். முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவிலூரில் இடைகழியொன்றில் சந்தித்தபோது தம்மை நெருக்கும் நான்காவது ஆள் யார் என்று விளக்கேற்றிப் பார்த்து பரம்பொருளை நாலாவது ஆளாகக் கண்ட வரலாற்றில் அவர்களது அந்தாதிகளின் முதற் பாடல்களாகத் திகழும் வெண்பாக்களையும் சின்னன்னா குறிப்பிடத் தவறவில்லை.

*''வையத் தகளியா வான்கடலே நெய்யாக*
*வெய்ய கதிரோன் விளக்காக - செய்ய*
*சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொல்மாலை*
*இடராழி நீங்குகவே என்று''*

என்ற வெண்பாவை சின்னன்னா,

*''தரணி பந்த்திய சமுத்'ரம் பு'லு நேயி*
*அருணு தீ'பமுஜேவி யருணாம்சு ததுல*
*காராபு சக்ரம்பு கை பூன்சினட்டி*
*நீராஜா க்ஷுனகிச்சி நீராஜனம்பு''*

*''உலகமே தகளியாக, கடல்கள் நெய்யாக,*
*கதிரவனே விளக்காக, கதிர்க் கற்றைகள் கூடிய*
*அழகிய சக்கரத்தை ஏந்திய தாமரைக் கண்ணனுக்கு*
*அஞ்சலி செய்து''*

என்று மொழி பெயர்க்கிறார். பின் பூதத்தாழ்வார் கூறிய,

*''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக*
*இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி*
*ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு*
*ஞானத் தமிழ் புரிந்த நான்''*

என் தை சின்னன்னா,

*. . ................ ப்ரேம*
*பந்த்திய மித்லேனி ப'க்தியே சமுரு*
*ானந்த பரிதஹ்ரு தப்ஜம்பெ வத்தி*
*கா மானிசி விசாசமை யாத்மன்*
*திரமொந்து க்ஞானம்பு தீ'பமபு ஜேஸி*
*ரிமெ நாராயணா பிதமுகா' ின் செ.*

*"அன்பே தகளியாக, எல்லையற்ற பக்தியே எண்ணெயாக*
*இன்பம் நிறைந்த இதயத் தாமரையே வந்தியாக செய்து*
*. ாசமுடைய ஆன்மாவில் நிலையான ஞானமாகிய தீபம்*
*உருவாக்கி நாராயணனுக்கு அர்ப்பணம் செய்தார்*

என்று மூலத்தின் கருத்தோடும் சொல்லமைப்போடும் பொருந்து மாறே மொழிபெயர்க்கும் நயம் காணலாம்.

பேயாழ்வார் அருளிய பாடலாகிய,

'திருக் கண்டேன் பொன் மேனி கண்டேன் திகழும்
 நக்கண் ணிநிறமும் கண்டேன் - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக் கண்டேன்
என்னாழி வண்ண பா லின்று''

என்ற பாடலை தெலுங்கில் நயமாக,

*"ரிகண்டடி சென்னின் சினமேறு கண்டடி*
*ாரமொப்பு வதனை சம்பு க'ண்டடி"*

என்று தொடங்கி, ''திருவைக் கண்டேன். அழகிய மேனி கண்டேன். முக எழில் கண்டேன், பாதங்கள் கண்டேன். மறு கண்டேன். சங்கு க்கரமேந்திய தோள்கள் கண்டேன். தாள் கண்டேன் தாமரைக் கண்கள் கண்டேன், கதிரவன் ஒளி திகழும் முகமலர் கண்டேன்'' என்று அழகாக வருணித்துள்ளார்.

இவ்விதமாக சின்னன்னா ஆறாயிரப்படி குரு பராம்பரா பிரபாவம். நாலாயிர திவ்விய பிரபந்தம் முதலிய மூல நூல்களை

நன்குணர்ந்து தான் 'பரமயோகி விலாசமு' எனும் காவியத்தைப் படைத்து வைணவ மதப் பிரச்சாரத்துக்கு உதவியுள்ளார்.

சின்னன்னா (திருவேங்களநாத)னின் மற்றொரு காவியம், அஷ்ட மஹிஷி கல்யாணமு' இந்நூலும் துவிபத என்னும் தமிழ் செய்யுட்களில் அகவலை யொதத ஈரடிச் செய்யுள் அமைப்பிலேயே இயற்றியுள்ளார். மணிமேகலை, பெருங்கதை முதலிய தமிழ்க் காவியங்கள் அகவலாகவே முழுதும் அமைந்துள்ளன. அதுபோலவே இந்நூலும் அமைந்துள்ளது. நாற்சீரடிகள் இரண்டிரண்டாக எதுகை மோனைகள் பெற்று இணைந்து வரும். கண்ணன் எட்டுத் தலைவியரை மணந்த வரலாறு இதில் கூறப்பட்டுள்ளது. இந்நூலை திருப்பதி திருமலை தேவஸ்தானத்தாரால் 1935ல் பண்டிதர் வி. விஜயராகவாச்சாரியாரால் பதிப்பித்து வெளியிட்டுள்ளனர். 7365 அடிகள் உள்ள இக்காவியம் தெலுங்கிலக்கியத்தில் நல்லொரு காவியமாக மதிக்கப்படுகிறது. இந்த நூல் அலர்மேல் மங்கையம்மனுக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. ருக்குமணி, சத்தியபாமா, ஜாம்பவதி எனும் மூவரின் கதைகள் விரிவாகவும் மற்றத் தலைவியர் கதைகள் சுருக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. இலக்கிய மரபில் காணப்படும் எண் வகை மணங்களினையே பிரதிநிதித்துவப்படுத்தும் கதைகள் இவை என்பது ஆன்றோர் கருத்து. கண்ணன் பிள்ளைத் திருவிளையாடல்களை வருணித்துவிட்டு, ருக்மினி, ஜாம்பவதி, சத்யபாமா, காளிந்தி, மித்ரவிந்தா, சத்யகீர்த்தி தேவி, பத்ரா, லட்சணா ஆகிய என்மர் தலைவியரை மணந்த வரலாறு கூறப்படுகிறது. தமிழ் பெரும் காவியங்களில் ஒன்றான சீவக சிந்தாமணி, சீவகன் பத்துத் தலைவியரை மணந்த வரலாறு கூறப்படுவது போலவே இந்நூல் சொல்லழகும், பொருட் செறிவும் மிக்க நல்ல நடையில் எழுதப்பட்டுள்ளது. கி.பி. 1545ல் எழுதப்பட்டது நூலின் தொடக்கத்தில் இறைவனைத் துதித்துவிட்டு,

"மானுத த்'ராவிடா கமசார்வபௌமு
லைன மாவரலனா ளுவாரனு
மானித சித்தாந்த மார்க்கசல் லலித
மானுஜாசார்யு ராமானுஜாசார்யு"

என்று உலகு புகழும் தமிழ் வேதச் சக்கரவர்த்திகளாகிய எம்மவர்களான ஆழ்வார்களையும், உலகம் மதித்துப் போற்றும் சித்தாந்த நெறியில் சிறந்த மானுசாசாரியரான இராமானுஜா சாரியரையும் வணங்குகிறார். பின் தமது மரபினர்களைப் பற்றியும்

(அன்னமாச்சாரியர், அவர் குமாரர்கள் முதலியோர்) கூறி வணங்குகிறார். பின் தன்னைப் பற்றிக் கூறும்போது, ''திருவேங்கடவன் அருள் பெற்று, மகர குண்டலங்கள் சன்மானிக்கப் பெற்று தினம் ஒன்றின் ஆயிரம் துவிபத வீதம் வர்ணனைகளுடன் காவியம் படைக்கும் திறனுடையவன்'' என்றும் கவிஞர்கள் தலையசைத்துச் சுவைத்து மகிழ்ந்து பாராட்டும் காவியம் என்றும் தன்னம்பிக்கையுடன் கூறுகிறார்.

சின்னன்னாவின் மற்றொரு காவிய நூல், 'உஷாபரிணயமு' ஆகும். இரண்டாயிரம் அடிகள் உடைய சிறிய காவியம் இது. வாணாசுரன் மகள் உஷாவும், கண்ணனின் பேரனாகிய அனிருத்தனைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்ட கதையை விவரிக்கின்ற காவியம். கண்ணன் மகன் பிரத்யும்னன், அவன் மகன் அனிருத்தன். அனிருத்தனைக் கனவில் கண்டு காதலித்த உஷை அனிருத்தனைக் கனவிற் கலந்து பின் திருமணமான புராண வரலாறு மணிமேகலைக் காலத்திலேயே தமிழகம் நன்குணர்ந்த கதையாகும்.

''வானன் பேரூர் மறு கிடைத்தோன்றி
நீனில மளந்தோன் மகன் முன் னாடிய
பேடிக்கோலத்துப் பேடு காண்குணரும்''

-மணிமேகலை மலர்வனம் புக்க காதை

''வானன் பேரூர் மறுகிடை நடந்து
நீனில மளந்தோ னாடிய''

- சிலப்பதிகாரம் (6-54)

என்று இரட்டைக் காப்பியங்களில் இக்கதைச் செய்தி வருகின்றது. ஹரிவம்சத்தில் வரும் இக்கதையைச் சிறிது மாற்றியும், சேர்த்தும் பாத்திரப் படைப்பிற் சிறப்புகள் செய்தும் இக்காவியம் படைக்கப் பட்டுள்ளது.

இத்தகு நான்கு காவியங்களும் சின்னன்னா துவிபத நடையிலேயே செய்துள்ளார். இவர் தம் மரபுரிமையாகப் பெற்ற இசை ஞானத்தால் சங்கீர்த்தனைகள் செய்திருக்கக் கூடும் என்றும், அவை கிடைக்கவில்லை என்றும் சிலர் கருதுவர். சிலர் இவர் சங்கீர்த்தனைகள் படைக்கவே இல்லை என்றும் கூறுவர்.

சின்னன்னா பல அறக்கட்டளைகள் நிறுவி வைணவ மதப் பிரச்சாரமும், தம் மரபினரின் இசைப்பாடற்கள் பரவவும் வழி வகுத்தார்.

1546ல் கொண்டவீடு சீமையில் உள்ள செந்தலூரு, மல்லவரமு ஆகிய கிராமங்களை வெங்கடேசுவரர் ஆலயத்துக்கே சமர்ப்பித்தார். அந்தக் கிராமங்களில் இருந்து ஆண்டு வருமானமாக 620 கட்டி வராகன்கள் வந்ததாகவும், அதிலிருந்து அன்னமாச்சாரியர், பெத திருமலய்யங்கார், நரசன்ன, தன் தமையனார் திருவேங்களப்பர், தாயார் திருமலம்மா ஆகியவர்களின் பிறந்த நாள், மறைந்த நாள்களில் பூசனைகள் முதலியன நடத்தவும் ஏற்பாடுகள் செய்தார். சின்னன்னா காவிய கர்த்தராகவும், வைணவ மதத்தைப் பரப்பிய ஆச்சார்யராகவும் திகழ்ந்து நன்றொண்டாற்றியுள்ளார். சின்னன்னாவின் மரபினர் இன்றும் திருப்பதி, தாள்ளபாக பிராந்தியங்களில் உள்ளனர் என்ப.

அன்னமாச்சாரியரின் பேருருள், பெத திருமலாச்சாரியரின் கடைசிக் குமாரரும், சின்னன்னாவின் தம்பியுமான கோனேட்டி திருவேங்கள நாதன் அக்காலத்தில் மிகப் பிரசித்தமான வைணவ ஆச்சாரியராகத் திகழ்ந்தார். இவர் சதாசிவராயர் காலத்தில் கி.பி. 1544 - 1564 ஆகிய காலகட்டத்தில் பல அக்கிரகாரங்களை மானியமாகப் பெற்றவர். கி.பி. 1559ல் புஷ்பகிரி சென்னராய சுவாமி கோயிலுக்கு சில தானங்கள் செய்துள்ளார். கடப்பை மாவட்டத்தில் புஷ்பகிரி உள்ளது. அந்தங்கி சீமையில் பொல்லாபம்லி, ஓலபல்லி, கொண்ட வீடு சீமையில், மோரிஜவோலு, குண்டூர் மண்டலத்தைச் சேர்ந்த ஈமணி, உண்குடூரு, தந்தலூரு, குண்டவரமு முதலிய ஊர்களை அக்கிரகாரமாகப் பெற்றார். அளிய ராமராயரின் மரபினரான சித்திராஜு வெங்கடராஜு வெனும் குறுநில மன்னன் இவரை ஆதரித்து வந்தான். அந்த மன்னின் ஆசாரியராகத் திகழ்ந்தார். மிகுந்த செல்வாக்குடனும், யோகவித்தையில் கை தேர்ந்தவராகவும், வைணவ ஆசார சீலராகவும், ஆசாரியராகவும் இவர் திகழ்ந்தார். 1504ல் அவதரித்து எழுபதாண்டுகள் வாழ்ந்து நன்றொண்டாற்றிய மகான் ஆவார்.

சின்ன திருமலாச்சாரியர் (அன்னமாச்சாரியர் பேரர்) குமாரரான திருவேங்களப்ப மிகப்பெரும் பண்டிதராகத் திகழ்ந்தார். சிறந்த கவிஞரும் ஆவார். சங்கரர் பரகாயப் பிரவேசம் (கூடு விட்டு

கூடு பாய்தல்) சென்று அமருக மன்னன் உடலில் இருந்து இன்ப நூற் சிறப்புக் கதையின்படி சங்கரரே இயற்றியதாகக் கூறும் அமருகம் எனும் அகப்பொருட்சுவை மிகுந்த வடமொழிக் கவிதை நூலை தெலுங்கில் மொழி பெயர்த்தார். வடமொழியில் சிறந்த நிகண்டாக மதிக்கப் பெறும் அமரம் எனும் 'நாமலிங்கானுசா சனம்' என்னும் நூலுக்கு தெலுங்கில் வியாக்கியானம் எழுதியுள்ளார். அணி இலக்கண நூலாகிய காவியப் பிரகாசிகைக்கு வடமொழியில் உரை வகுத்துள்ளார். கி.பி. 1554ல் அம்பத்தூர், தூப்பில் கிராமங்களில் சில பகுதிகளை திருப்பதி கோவிந்தராஜ ஸ்வாமி கோயில் மானியக் கட்ட்ளைக்காக சமர்ப்பித்துள்ளார். கி.பி. 1553ல் சின்ன காஞ்சியில் அருளாளப் பெருமாள் கோயிலுக்கு வல்லாந்ரஞ்சேரி, பேரீச்சம் பாக்கம் எனும் கிராமங்களை மானியங்கட்கு சமர்ப்பித்துள்ளார். அமருகம் தெலுங்காக்கம், அமர நிகண்டுவுக்கு தெலுங்கில் பாலபிரபோதிய எனும் உரை, மம்மடனின் காவியப் பிரகாசிகைக்கு வடமொழியில் வியாக்கியானம் ஆகிய சிறந்த படைப்புக்களை அருளிய இவர் 'இராமச்சந்திரோபாக்கியானம்' எனும் காவியம் இயற்றியுள்ளார். இக்காவியம் இப்போது கிட்டவில்லை.

அன்னமாச்சாரியரின் மகள் திருமலாம்பாவின் குமாரர் ரேவணூரி வெங்கடாச்சாரியர் ஆவார். அன்னமய்யாவின் மகள் வயிற்றுப் பேரனாகிய இவரும் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார். சகுந்தலா பரிணயம், ஸ்ரீபாதரேணு மகாத்மியம் எனும் காவியங்களை இயற்றியுள்ளார். ஸ்ரீபாதரேணு மகாத்மியம் திருமால் திருவடித்துகளின் பெருமையை விளக்கும் வகையில் அமைந்தது. நான்கு உல்லாசங்கள் (அத்தியாயங்கள்) ஆக அமைந்துள்ளது. முதல் உல்லாசத்தில் மன்மதனும் நாரதனும் விவாதம் செய்வதாகவும், இரண்டாவதில் தத்தில தும்புரு முனிவர்கள் சம்வாதம் செய்வதாகவும், மூன்றாவதில் ரம்பை, இந்திரர்கள் விவாதிப்பதாகவும், நான்காவது உல்லாசத்தில் சரஸ்வதி பிரம்மாதிகள் விவாதம் செய்வதாகவும் அமைத்து இக்காவியம் புதிய உத்தியில் சிறப்புடன் திகழ்கின்றது.

மற்றொரு காவியமான சகுந்தலா பரிணயம் சகுந்தலை துஷ்யந்தரின் காதல் கதையை காவியமாக்கிய நூலாகும். பாரதத்தில் வரும் இக்கதை காளிதாசனால் நாடமாக்கப்பட்டு, இந்திய இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றுள்ளது. தெலுங்கில் நன்னயர் தமது பாரதத்தில் இக்கதையை அழகுற வருணித்துள்ளார். காளிதாசனைப்

பின்பற்றி பில்லமர்ரி பிணவீரன்ன எனும் கவிஞர் 'சிருங்கார சாகுந்தலம்' இயற்றினார். அதுபோல வெங்கடாச்சாரியரும் இக்கதையை அழகிய காவியமாகப் படைத்துள்ளார். இராமச் சந்திரோபாக்கியானம் என்னும் இவரது மற்றொரு நூல் இப்போது கிடைக்கவில்லை. தமது ஸ்ரீபாதரேணு மகாத்மிய நூலில் இவர் தம்மைப் பற்றி ''ஸ்ரீசங்கீர்த்தனாச்சாரியரின் மகள் வழிப் பேரனாகிய ரேவலூர் திருமல கொண்டையாசாரியரின் குமாரன்'' என்று கூறியுள்ளார். சகுந்தலா பரிணயத்தில் எனது தாய்வழி மரபின் பெரியவராகிய அன்னமாச்சாரியர் என்றும், பெத திருமலாச்சாரியர் மாமா என்றும், சின திருமலாச்சாரியர் ஆகியவர்களைப் பற்றியும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். கந்துகூரி வீரேசலிங்கம் பந்துலு தம் ஆந்திர கவிஞர்கள் சரிதம் என்ற நூலில் இவர் அன்னமாச்சாரியர் மகளின் மகன் அன்று எனவும், மகளின் மரபில் வந்த கவிஞர் என்றும், இவரது காலம் பதினேழாம் நூற்றாண்டு என்றும் கூறியுள்ளார் என்றும் டாக்டர் வேடூரி ஆனந்த மூர்த்தி போன்ற அறிஞர்கள் ஆய்ந்து அன்னமய்யாவின் மகள் திருமலாம்பாவின் குமாரரே ரேவலூரி வெங்கடாச்சாரியர் என்று நிறுவியுள்ளார். இலக்கிய உலகில் இரண்டு மூன்று தலைமுறையினரும் ஒரே குடும்பத்தினைச் சேர்ந்த பலரும் கவிஞர்களாகவும், மேதைகளாவும் திகழ்வது மிக அபூர்வமாகும். இத்தகு பெரும்பேறு அன்னமாச்சாரியர் மரபுக்கு கிடைத்துள்ளது. திருமாலை வழிபட்டு வைணவ நெறியை ஆந்திர நாட்டில் பரப்பி தெலுங்கு இலக்கியத்துக்கு அரிய படைப்புகளையும், இறையுலகுக்கு அளப்பரிய காணிக்கைகளையும் தந்து சிறந்து விளங்கும் அன்னமாச்சாரியர் மரபு இந்திய வரலாற்றில் சிறப்பிடம் பெற வேண்டிய ஒன்றாகும். திருப்பதி தேவஸ்தான சாசனங்கள் பெரும்பாலும் தமிழிலேயே உள்ளன. கிருஷ்ணதேவராயர் சமஸ்கிருதம், கன்னடம், தெலுங்கு, தமிழ் மொழிகளில் சாசனங்கள் பொறித்தார். தாள்ளபாக மரபினரின் சாசனங்களும் தமிழிலேயே உள்ளன. திருமலைக்கருகே உள்ள மங்காபுரத்தில் சின திருமலாச்சாரியர் தாம் கட்டிய கல்யாண வெங்கடேசுவர தேவாலயத்திலுள்ள சாசனங்கள் அனைத்தும் தெலுங்கிலே பொறித்தார். ஆந்திரர்களான சாளுவ திம்மன்ன, கோவிந்தன்ன, பயகார ராமய்ய முதலியவர்கள் பொறித்த சாசனங்கள் தமிழில் உள்ளன. திருமலாச்சாரியர் காலத்தில் இந்த சாசனங்கள் பொறித்த அதிகாரியாக, 'திரு நின்றார் உடயர்' என்ற தமிழரே இருந்தார் எனத் தெரிகிறது. சுவாமி புஷ்கரிணி அருகில் பெத திருமலாச்சாரியர் ஒரு தெலுங்கு கற்சாசனம் வரைவித்துள்ளார். இச்சாசனங்கள் தாள்ளபாக

மரபினர் திருமலை, திருப்பதி கோவில்கட்கு கட்டளைகள் ஏற்படுத்தி மானியங்களாக நிலம், அக்கிரகாரங்களைத் தந்த செய்திகளை புலப்படுத்துகின்றன.

தாள்ளபாக மரபினரில் திருப்பதியில் சுவாமிக்கு சங்கீர்த்தன கைங்கரியம் செய்து வந்த தாள்ளபாக சேஷா சாரியரின் மரபினர் இன்றும் வைணவ ஆசார சீலர்களாக இருந்து வருகின்றனர். கடப்பை மாவட்டம் முடும்பாடு, ஊடுகரு, மாசனூரு, ராஜு பாலெம், எர்ரவாரி பாலெம் எனும் கிராமங்களில் பெத திருமலாச்சாரியரின் ஐந்து குமாரர்களின் மரபினர்களும் வாழ்ந்து வருகின்றனர்.

தாள்ளபாக மரபினர் தெலுங்கிலக்கியத்துக்கும், இசையுலகுக்கும், வைணவ சமயத்துக்கும் உயர்ந்த தொண்டாற்றியது போலவே தமிழக ஆந்திர வைணவத் தொடர்புக்கு ஆதார புருஷர்களாகவும் திகழ்ந்துள்ளனர்.

# 11. கிருஷ்ண தேவராயரும் அவர் கால வைணவமும்

ஆந்திர நாட்டில் வைணவம் பரவியதற்கு முன்சொன்ன ஆச்சாரியர்களும், அகோபிலம் முதலிய மடத்து ஜீயர்களும், அன்னமாச்சாரியர் மரபினரும் மூலகாரணமாக இருந்தார்கள். எனினும் வைணவம் செழித்தோங்கிச் செல்வாக்குடன் திகழ்வதற்கு காரணமானவர் விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்கள் ஆவர். அவர்களுள் கிருஷ்ண தேவராயரின் பங்கு குறிப்பிடத் தகுந்ததாகும். வடநாட்டிலிருந்து வந்த முஸ்லீம் படையெடுப்புகளுக்கு ஈடு கொடுத்து, தன் பிரதாபத்தால் இந்து மதத்தையும், வைணவ தருமத்தையும் பாதுகாத்து, தென்னகத்தை ஒரு குடைக்கீழ் ஆண்ட சக்கரவர்த்தி கிருஷ்ண தேவராயர் ஆவார். இந்திய சரித்திரத்தில் ஒப்பற்ற மாமன்னர்களாக விளங்கும் அசோகன், விக்கிரமாதித்தன், ஸ்ரீஹர்ஷன், அக்பர் ஆகியோருக்கிணையாக கிருஷ்ணதேவராயரும் திகழ்கிறார். புவியரசராக மட்டுமல்லாமல் கவியரசராகவும் திகழ்ந்த ஸ்ரீகிருஷ்ண தேவராயர், கர்நாடகம் மட்டுமன்றி ஆந்திரம், தமிழகம் ஆகிய நாடுகளையும் செங்கோலோச்சி அமைதியான அரசியல் நிர்வாகம் தந்து, கலைகளைப் பேணி வளர்த்து, எல்லா மதங்களையும் சம நோக்குடன் பார்த்த பெருந்தன்மை மிக்க மன்னராவார். எனினும் இவர் வைணவ தருமத்தில் ஆழ்ந்த பற்றுடன் விளங்கினார். ஆதலின் இவரது அவைக் களப் புலவர்கள் பலரும் முதலில் சைவ மதத்தினையோ, அத்வைத மதத்தினையோ

சார்ந்தவர்களாக இருந்தாலும், பின்னர் வைணவர்களாகவே மாறிவிட்ட செய்தி தெலுங்கிலக்கிய வரலாறு நன்குணர்த்துகிறது. ஸ்ரீகிருஷ்ண தேவராயர் இயற்றிய 'ஆமுக்தமால்யத' எனும் ஆண்டாளின் சரிதத்தை உணர்த்தும் தெலுங்கு காவியம் இவரது வைணவ மத ஈடுபாட்டைத் தெளிவுறுத்துகிறது. ஆதலின் நாம் விஜயநகர சாம்ராஜ்ய வரலாற்றை அறிவது இன்றியமையாததாகும். எந்த சாம்ராஜ்யம் தென்னகம் முழுவதும் தன் குடைக்கீழ் கொண்டு திருமகளுக்கும், கலைமகளுக்கும் உறைவிடமாகத் திகழ்ந்து, மேனாட்டினர்கள் கண்டு வியப்புற்று பாராட்டினரோ அந்த விஜயநகர சாம்ராஜ்யம் இருந்த இடம் இன்று அழிவுற்று சிதிலமடைந்து போயிருப்பதைக் கண்டால் வள்ளுவர் கூறுவது போல அற்கா இயல்பிற்றாகிய செல்வத்தின் நிலையாமை எளிதில் புலப்படும்.

ஹொய்சல மன்னர்கள் ஆண்ட ஹளேபீடு, பேலூர் பகுதியாயினும், கலிங்க மன்னர்கள் ஆண்ட கொனார்க் பகுதியாயினும், தேவகிரி ராஜதானியாக ஆண்ட யாதவ மன்னர்களின் எல்லோரா, அஜந்தா பகுதியானும், மத்தியப் பிரதேசத்தில் மன்னர்கள் ஆண்ட கஜுரோகா பகுதியாயினும் இன்று தன் பொலிவிழந்து பாழ்பட்டுக் காணப்படினும், தன் முன்னைய பெருமையை தன் சிற்பக்கலை எழில் மிக்க கோயில்கள் மூலம் விளக்கிக் கொண்டிருப்பதைக் காண முடிகிறது. அதுபோலவே இன்று கர்நாடக மாவட்டத்தில் உள்ள பெல்லாரி மாவட்டம், ஹாஸ்பேட் அருகே 'ஹம்பி' என்ற கிராமமாகப் பாழ்பட்டு நிற்கும் விஜயநகர சாம்ராஜ்ய வரலாறு மிகவும் சிறப்புடைய வரலாறு ஆகும்.

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மகம்மதியர்கள் படையெடுத்து வந்து இந்திய நாட்டின் பல பகுதிகளையும் கைப்பற்றி அரசாளத் தொடங்கினர். அக்காலக் கட்டத்தில் மதுரையில் பாண்டியர்களும், தஞ்சையில் சோழ மன்னர் மரபும், ஆந்திர நாட்டின் வாரங்கல் பகுதியில் பிரதாபருத்திரனும் ஆண்டு வந்தார்கள். கர்நாடக நாட்டில் ஹொய்சலர்கள் அரசாண்டு வந்தனர். கி.பி. 1293ல் அலாவுதீன் கில்ஜி தேவகிரியைக் கைப்பற்றினான். 1303ல் வாரங்கல் மகமதிய மன்னர்கள் கைவசமாகி விட்டது. 1309ல் மாலிக்கபூர் படையெடுத்து வந்து ஆந்திர நாட்டினைக் கைப்பற்றினான். தமிழகத்தினையும் தாக்கினான். 1315ல் முபாரக் எனும் மகமதிய சேனாதிபதி படையெடுத்து வந்து மகாராட்டிரத்தை ஆண்டு வந்த தேவகிரியில் இருந்த ஹரிபால மன்னனை சிறைப்

பிடித்து உயிரோடிருக்கும்போதே தோலை உரித்து, தலையைக் கொய்து கோட்டை வாசலில் தொங்கவிட்டான். 1323ல் மகாராட்டிரம், ஆந்திரம் மகம்மதியர் வசமாயிற்று. எனினும் ஆங்காங்கே ரெட்டி அரசர்கள் முதலியோர் சுதந்திரமாக ஆண்டு வரினும் அவர்கட்கு அடங்கியே கிடந்தனர். 1342ல் ஹொய்சல மன்னர் பல்லாள தேவன் துவார சமுத்திரத்தை விட்டு தமிழகத்தின் தென்னாற்காடு மாவட்ட திருவண்ணாமலைக்கு தன் தலைநகரை மாற்றிக்கொண்டான்.

இவ்விதமாக தென்னகம் மகம்மதிய மன்னர்களின் படையெடுப்புகட்கு ஆற்றாமல் நிலைகுலைந்து, பீடழிந்து, இருக்கும் காலத்தில் விடிவெள்ளியாகத் தோன்றிய, ஆந்திர மன்னன் பிரதாப ருத்திரனின் கோசாதிகாரிகளாகிய, 'ஹரியப்ப, புக்கப்ப' எனும் சகோதரர்கள், ஆனைகொந்தி, குறுநில மன்னனாகிய ஜம்புகேசவ ராயரிடம் அடைக்கலம் புகுந்தனர். பின்னர் அமைச்சர்களாகி அரசினை விரிவுறச் செய்தனர். முகம்மது பின் துக்ளக்கை எதிர்த்த சிற்றரசனாகிய தன்ராஜப் பிரதிநிதியாக இருந்த 'பகா உத்தீன்' என்பவனுக்கு ஜம்புகேசவரராயர் அடைக்கலம் தந்தமையால் சினமுற்ற துக்ளக் மன்னன் 1334ல் படையெடுத்து பெல்லாரி அருகே 'கம்பிலா' நகரில் முற்றுகையிட்டுப் போர் செய்து வெற்றி பெற்றான். ஜம்புகேசவ ராயர் மரணமுற்றார். டில்லி சக்கரவர்த்தி துக்ளக் மன்னன் 'ஆனைகொந்தி'யைத் தன் வசமாக்கிக் கொண்டு 'மல்லிச்சாயபு' எனும் பிரதிநிதியை நியமித்தான். ஆனால், மக்கள் மல்லிச் சாயபுவை எதிர்த்து கலகம் புரிந்து வரவே, அவன் அரசாள முடியாமல் அந்த நாட்டை ஹரிஹரருக்குத் தந்து தன் சாமந்த மன்னனாக நியமித்து விட்டு திரும்பிச் சென்று விட்டான். ஹரிஹர ராயர் அந்த 'ஆனெகாந்தி' குறுநில மன்னரானார். மகம்மதிய படையெடுப்புகளும் ஓய்ந்து சிறிது அமைதி நிலவிற்று. ஹரிஹரராயர் 'ஆனெகொந்தி' ஆண்டு வந்த காலத்தில் வேட்டைக்காக தூங்கத்திரா நதிக் கரையில் தென்பகுதிக் காட்டில் வேட்டையாடும்போது வேட்டை நாய்களை முயல் எதிர்க்கவும், நாய் பயந்தோடவே இந்த நிலம் வீரமிக்க மண் என்று கருதி, அந்தச் செய்தியை சிருங்கேரி மடாதிபதியாய் இருந்தவரும் அத்வைத வேதாந்த ஆச்சாரியரும் ஆகிய மாதவ வித்யாரன்யரிடம் கூறினார். வித்யா ரண்யர் அந்த இடத்தில் நகர் உருவாக்கி அதைத் தலைநகராகக் கொண்டு பரிபாலிக்கும்படி ஆணையிட்டார். ஹரிஹரர் அவருடைய பெயரிலேயே முதலில் 'வித்யா நகர்' என்று பெயரிட்டார்.

கி.பி. 1336ல் இந்நகர் உருவாயிற்று. ஹரிஹர ராயரின் காபலூரு சாசனம் இந்த வரலாற்றை மெய்ப்பிக்கும் சான்றாகத் திகழ்கின்றது. இந்த வித்யா நகரமே, பின்னர் விஜயநகரம் என்று வழங்கப்படலாயிற்று. மாவத வித்யாரண்யர் வேத விற்பன்னர். கவிஞர், தத்துவ மேதையுமானவர். இவரது 'பஞ்சதசி' எனும் வேதாந்த நூல் பிரசித்தமுடையது. இவரது சகோதரர் சாயணர் வேதங்களுக்கு உரை வகுத்த பெருமை உடையவர். ருக்வேத சாயன பாஷ்யம் மாக்ஸ்முல்லரால் பதிப்பிக்கப்பட்டது. காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் கோயில் சாசனம் ஒன்றிலும் சாயனர் குருவாக ஸ்ரீகண்டநாதர் என்பவரைப் பற்றி ஒரு குறிப்பு உள்ளது. ★

மாதவரின் குருக்களான வித்யாதீர்த்தர், பாரதி தீர்த்தர், ஸ்ரீகண்டர் என்ற மூவரைப் பற்றியும், மாதவரும், சாயனரும் தமது நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். மாதவர் ஹரிஹரர், அவரது சகோதரர் புக்கராயர் இருவருக்கும் அமைச்சராக இருந்து விஜய நகர சாம்ராஜ்யம் உருவாவதற்குரிய அடிப்படையை ஏற்படுத்தினார். பராசர ஸ்மிருதிக்கு உரை வகுத்தும், மனு ஸ்மிருதி வியாக்கியானம், பஞ்சதசி, சங்கரவிஜயம் எனும் காவியம், சர்வதரிசன சங்கிரகம் எனும் தத்துவ நூல் முதலிய நூல்களைப் படைத்தும் பெரும் புகழுடன் திகழ்ந்தார்.

கி.பி. 1362 முதல் கி.பி. 1387 வரைக்கும் மாதவ வித்யாரண்யர் 85 ஆண்டுகள் வரை வாழ்ந்து இந்து தருமத்தை நிலை நாட்டப் பாடுபட்ட பெருந்தவச் செல்வராவார். அவருடைய அறிவுரைகளின்படி ஹரிஹரர் விஜயநகர சாம்ராஜ்யத்தை உருவாக்கி விரிவாக்கி வந்தார். அவருக்குப் பின் அவரது சகோதரர் புக்கராயர் மன்னரானார்.

ஹரிஹர புக்கர்கள் சங்கம வம்ச மன்னர்கள். கர்நாடக நிலத்தில் ஆந்திர நாட்டின் மேற்கெல்லையில் இந்த விஜயநகரம் அமைந்துள்ளது. இவர்கள் தெலுங்கு நாட்டை ஆண்ட தெலுங்கரச னான பிரதாப ருத்திரனிடம் இருந்த தெலுங்கர்களே என்று குத்தூரு ஈஸ்வரத்தை நிறுவியுள்ளார். புக்கராயர் தெலுங்கு கவிஞர்களில் சிறந்தவர் ஆன நாசன சோமனாவை ஆதரித்து தான சாசனம் கொடுத்துள்ளார். புக்கராயர் குமாரர்கள் எழுவருள் குமாரகம்பராயர் பிரசித்தி பெற்ற மன்னர். கம்பராயரின் மனைவி கங்காதேவி

---

★ ஜீர்ண விஜய நகர சரித்ரமு - குத்தூரி ஈஸ்வரதத் 1927. தெலுங்கு, பக்கம் 32.

இயற்றிய கம்பராய சரித்திரத்தில் இவரது படையெடுப்பு களையும், வெற்றிகளையும் நன்கு சித்தரிக்கப்பட்டுள்ளது. 1361ல் கம்பராயர் மதுரையை ஆண்ட மகமதிய மன்னனைத் துரத்தியடித்து தமிழகத்தை ஆண்டார் என்று தெரிகிறது. சாளுவ மங்கு என்னும் சேனாதிபதி கம்பராயருக்குத் துணையாகி தென்னாட்டை படையெடுத்து வென்று மதுரைச் சுல்தானைக் கொன்று திருவரங்கத்தில் எம்பெருமானை பிரதிஷ்டை செய்ததாக சாளுவாப் யுதயம், ராமாப்யுதயம், பிரபன்னாம்ருதம், ஆசாரிய சூக்தி முக்தாவளி (நம்பூரி கேசவாச்சாரியர் இயற்றிய நூல்) ஆகிய நூல்கள் மூலம் தெரிகிறது. இவருக்குத் துணையாக கோபன மந்திரி எனும் அந்தண சேனாதிபதியும் இருந்தார். அவரே ஸ்ரீரங்கநாதரை பிரதிஷ்டை செய்தார் என்றும் தெரிகிறது. புக்கராயர் காலத்தில் வடக்கே கிருஷ்ணா நதியும், தெற்கே மதுரையும், கிழக்கும் மேற்கும் கடல்களும் உடைய சாம்ராஜ்யம் உருவாகியிருந்தது. புக்கராயர் கி.பி. 1377ல் பரமபதம் உற்றார்.

அவரது மூத்த குமாரர் இரண்டாவது ஹரிஹர ராயர் கி.பி. 1377 முதல் கி.பி. 1404 வரை அரசாண்டார். இவரிடத்து முத்தப தண்டநாதன், குண்டப்பா எனும் சேனாதிகாரிகள் இருந்து அரசாட்சியை விரிவுறச் செய்தனர். இவருடைய அவையில் சமண மத மந்திரிகளும் இருந்தனர். இருகப்பா எனும் சமண மதத்தைச் சேர்ந்த சேனாதிபதி இருந்தார். அவர் பொறுப்புடன் மந்திரியாக இருந்து வந்தார். இவர், 'நானார்த்த ரத்ன மாலா' எனும் வடமொழி நிகண்டு இயற்றியுள்ளார். இவரது குமாரர் முதல் தேவராயர் உதயகிரியை இளவரசாக ஆண்டு வந்தார். இவரது சகோதரர் மல்லிநாதரின் குமாரர் வீர சென்னப்ப உடையர் மகம்மதியரை புறமுதுகிட்டோடச் செய்து, அதோளி கோட்டையை ஹரிஹரருக்குச் சமர்ப்பித்த பெருவீரர் ஆவார். ஹரிஹர ராயருக்கு மல்லாம்பா மூலம் பிறந்த குமாரர்களில் ஒருவராகிய விரூபாட்ச ராயலு தொண்டை மண்டலம், சோழ, பாண்டிய மண்டலங்களையும் வென்று தம் தந்தையிடம் சமர்ப்பித்தார். தமிழகத்தை தாமே அரச பிரதிநிதியாக இருந்து ஆண்டார் என்று விரூபாட்ச ராயரின் ஆலங்பூடி சாசனம் கூறுகிறது. இராஜமஹேந்திர வரத்தை ஆண்டு வந்த காடய வேமா ரெட்டி (1386 - 1410) வின் குமாரன் காடய பிரபுவுக்கு ஹரிஹர ராயர் தம் மகளை ஈந்து உறவு பூண்டிருந்தார். ஹரிஹரருக்குப் பின்னர் முதல் தேவராயர் (1406 - 1422) பதவியிலமர்ந்தார். இவருக்கு மாதவ சாயனர்களின் மருமகனாகி லட்சுமிதரன் மந்திரியாக இருந்தார். இவர் காலத்தில் கி.பி. 1420ல் இத்தாலிய யாத்திரிகர், 'நிக்கோலோ கோண்ட்டீ'

என்பவர் விஜயநகரத்தைத் ★ தரிசிக்க வந்தார். விஜய நகர வைபவம் குறித்தும் இந்த நாட்டின் கலாச்சாரம் குறித்தும் விரிவாக எழுதியுள்ளார். முதலாம் தேவராயருக்கு ஹரிஹரன், விஜயன், மல்லன் என மூன்று குமாரர்கள். அவர்களின் விஜய புக்கராயர் ஓராண்டு மட்டும் அரசாண்டு பரமபதமுற்றார். இவருக்கு தேவராயர், பர்வதராயர் எனும் இரு குமாரர்களும் ஹரிஹராம்பா எனும் மகளும் இருந்தனர். தேவராயர் பின்னர் பதவிக்கு வந்தார். பிரபுடதேவராயர் (1423 - 1447) என்று சிறப்பிக்கப்பட்ட இம்மன்னன் கவிஞர்களை ஆதரித்தான். அருணகிரி நாதரை இம்மன்னன் ஆதரித்துள்ளான். தெலுங்கு கவிஞர்களுள் சிறந்தவரான ஸ்ரீநாத கவியை ஆதரித்தான். அப்துல் ரஜாக் என்னும் பாரசீகத் தூதர் வந்து விஜயநகரத்தைத் தரிசித்து வியப்புடன் பாராட்டி எழுதியுள்ளார். பிரபு தேவராயர் சமண மதத்தையும் ஆதரித்து பல சமணப் பள்ளிகள் நிறுவித் தந்துள்ளார். இவர் காலத்தில் கொண்டவீடு, வினுகொண்ட ரெட்டி ராஜாக்களும் இவருக்குக் கப்பம் கட்டி வந்தனர். மிகச் சிறப்புடன் தமது ஆட்சியை நிறுவி கலைகளை வளர்த்து வந்தார். கி.பி. 1446ல் இவர் பரமபதம் அடைந்தார். பிரபு தேவராயருக்கு பொன்னலதேவி மூலம் மல்லிகார்ஜுன ராயரும், சிங்களதேவி மூலம் விரூபாட்ச ராயரும் பிறந்தனர். தந்தை இறந்த பின் மல்லிகார்ஜுன ராயர் பதவி ஏற்றார். மல்லிகார்ஜுன ராயர் (1446 - 1465) காலத்தில் கிழக்கே ஆந்திர நாட்டினை ஆண்டு வந்த கபிலேஸ்வர கஜபதியும், பாமினி சுல்தான் அஹமது ஷாவும் விஜயநகரத்தின் மேல் படையெடுத்து வந்தனர். எனினும் தோற்றோடினர். இச்செய்தி கங்காதரகவியின் கங்காதர பிரதாப விலாசம் எனும் வடமொழி காவியத்தில் விவரிக்கப் பட்டுள்ளது எனத் தெரிகிறது. மல்லிகார்ஜுனருக்குப் பின் அவரது சகோதரர் விருபாட்ச ராயர் (1465 - 1485) பதவிக்கு வந்தார். இவர் சுகபோகப் பிரியராக இருந்தவர். தமது சகோதரர் குமாரருக்குப் பதவி தராமல் தாமே வலிதின் அரசாண்டார். மக்களின் ஆதரவை அதனால் இழந்து விட்டார். கஜபதி மன்னர்கள் இவரது ஆட்சியை வலிவிழக்கச் செய்துவிட்டனர். கபிலேஸ்வர கஜபதி உதயகிரியை வென்று, காஞ்சிபுரத்தையும் தன் கைவசமாக்கிக் கொண்டான். விரூபாட்ச ராயரின் இரு குமாரர்கள் ஆன இராஜசேகர் ராயரும், பிரவுட தேவராயரும் தம் தந்தையின் திறனின்மையை ஓர்ந்து அவரை ஒழித்துவிட எண்ணினர். இராஜசேகர ராயர் தந்தையைக் கொன்று தன் தம்பிக்குப் பட்டம் அளித்தான். தம்பி பிரவுடதேவராயர் பட்டம் ஏற்றதும் தந்தையைக் கொன்றவன், தமையன் தன்னையும்

---

★ *தற்போது விசாகப்பட்டினம் அருகே உள்ள விஜயநகரம் வேறு. விஜயநகர சாம்ராஜ்யம் வேறு. இது பூசப்பாடி ராஜவம்ச சமஸ்தானம் ஆகும்.*

கொல்லலாம் என ஐயுற்று இராஜசேகர ராயரையும் கொன்றான். தந்தையையும் தமையனையும் கொன்றுவிட்டு வந்த மன்னனை மக்கள் வெறுக்கத் தொடங்கினர். பிரவுடதேவராயரின் சேனாதிபதிகளில் பிரசித்தயுடைய சாளுவ நரசிம்மராயர் தம் மன்னனின் திறனின்மையையும், மக்கள் ஆதரவு இன்மையையும் உணர்ந்து அரசனைக் கைது செய்துவிட்டுத் தானே அரசனாக சிம்மாசனம் ஏறினான். அத்துடன் சங்கம வம்சம் முடிவுற்றது.

குமாரகம்பனருக்கு மதுரையை வெல்லத் துணைபுரிந்த சாளுவ மங்கு எனும் சேனாதிபதியின் மரபினனே சாளுவ நரசிம்ம தேவராயர் (1486 - 1493) ஆவார். பில்லலமர்ரி பினவீரன்ன எனும் தெலுங்குக் கவிஞர் தமது 'ஜைமினி பாரதம்' எனும் தெலுங்கு காவியத்தில் சாளுவ மங்கதேவனைப் பாராட்டியுள்ளார். இந்த சாளுவ மங்குவின் குமாரன் கௌதமராஜுவும், அவன் மனைவி மல்லாம்பிகாவும் அகோபில நரசிம்ம சுவாமி பக்தர்களாகத் திகழ்ந்தனர். நரசிம்மர் அருளால் பிறந்தவனே சாளுவ நரசிம்ம தேவராயர் ஆவார். இவர் எழுதிய இராமாப்யுதயம் எனும் வடமொழிக் காவியத்திலும், பில்லலமர்ரி பினவீரன்னரின் ஜைமினி பாரதத்திலும், இராஜநாத டிண்டிமகவி எழுதிய 'சாளுவாப்யுதயம்' எனும் வடமொழிக் காவியத்திலும் இவரது வரலாறு கூறப்பட்டுள்ளது. பல சாசனங்களும் உள்ளன. கவிஞர்களை ஆதரித்துப் பேணிய இம்மன்னன் விஜயநகர சாம்ராஜ்யத்தை மீண்டும் விரிவுபடுத்தி பொலிவுறச் செய்தான். அன்னமாச்சாரியரை கௌரவித்து மானியங்கள் தந்தான். அன்னமாச்சாரியரின் செல்வாக்கினால் திருப்பதி வெங்கடேசுவரர் மீது பக்தி செலுத்தினான். திருப்பதிக்கு அருகிலுள்ள சந்திரகிரியில் சில காலம் அரசாண்டிருந்தான் என்றும் தெரிகிறது.

வெங்கடேசுவரர் அருளாலும், அன்னமய்யா ஆசியாலும் விஜய நகர சாம்ராஜ்ய சிம்மாசனம் ஏறிய நரசிம்ம ராயர் கும்பகோணம், ஸ்ரீரங்கம், திருவானைக்காவல் ஆகிய இடங்களையும் தரிசித்தார். விஜயநகர அரசாட்சியை தமிழகம் வரையும் விரிவாக்கி பொலிவுறச் செய்தார். இவரிடம் சேனாதிபதியாக இருந்து சாம்ராஜ்ய வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்தவர் துளுவ வம்சத்தைச் சேர்ந்த ஈஸ்வர நரசிம்மராயர் ஆவார். இவர் கிருஷ்ண தேவராயரின் பாட்டனார் ஆவார். ஈஸ்வர நரசிம்ம ராயரின் குமாரர் நரசிங்க நாயகர் சாளுவ நரசிம்ம ராயரிடம் சேனாதிபதியாக இருந்தார். சாளுவ நரசிம்மராயருக்கு பில்லலமர்ரி

பின வீரன தமது காவியமான ஜைமினி பாரதத்தைச் சமர்ப்பணம் செய்துள்ளார். நரசிம்மராயர் வேண்டுகோலின்படி மூன்று மாதங்களில் காவியம் முடித்துத் தருவதாக வாக்களித்தாராம் பின வீரன்ன. ஆனால், சோம்பலாலும், அலட்சியமாகவும் இருந்துவிட மூன்று மாதங்கள் கடந்து போயின. தவணை நாள் கடந்து போன வருத்தத்தில் வீட்டுக்கதவைத் தாளிட்டுக்கொண்டு ஒன்றும் தோன்றாமல் தூங்கிவிடவே சரஸ்வதி தேவியே வந்து காவியத்தை எழுதி முடித்துத் தந்ததாகக் கதை வழங்குகிறது. 'வாணி நா ராணி' (சரஸ்வதி எனது ராணி) என்று தன்னம்பிக்கையுடன் கூறிய மாகவிஞன் பினவீரன்ன. இக்கவிஞனால் பாராட்டப்பட்டவர் சாளுவ நரசிம்மராயர். இவர் கி.பி. 1493ல் பரமபதம் அடைந்தார்.

சாளுவ நரசிம்மனின் குமாரன் இரண்டாம் நரசிம்ம ராயர் கி.பி. 1493 - 1505 ஆண்டுகளில் விஜயநகர சாம்ராஜ்யத்தின் பட்டத்தரசனாக ஆண்டார். ஆனால், உண்மையில் இவரது சேனாதி பதியாகிய துளுவ நரசிம்மராயரே (கிருஷ்ண தேவராயரின் தந்தை) நிர்வாகம் செய்து வந்தார். இரண்டாம் நரசிம்ம ராயர் மறைவுக்குப் பின் துளுவ நரசிம்மராயரே பதவியை ஏற்றுக்கொண்டார். விஜயநகர சாம்ராஜ்யம் சாளுவ வம்சத்தாரிடமிருந்து துளுவ வம்சத்தினர் கைக்கு வந்து சேர்ந்தது. நந்தி மல்லய்யா, கண்ட்ட சிங்கய்யா எனும் இரட்டைக் கவிஞர்கள் 'வராஹ புராணமு' எனும் தெலுங்கு காவியத்தை துளுவ நரசிம்மராயருக்கு சமர்ப்பணம் செய்துள்ளனர். துளுவ நரசிம்மராயர் காவிரியில் அணைகட்டி, நதியைக் கடந்து ஸ்ரீரங்கப்பட்டணத்தை முற்றுகையிட்டும், சோழ, பாண்டிய நாட்டினை வென்று கப்பம் கட்டச் செய்தும், மகமதிய மன்னர்களை தோற்றோடச் செய்தும், வீரமுடனும், திறனுடனும் அரசாட்சி செய்தார். இவர் கி.பி. 1503ல் பரமபதம் அடைந்தார். துளுவ நரசிம்ம ராயருக்கு மூன்று மனைவியர் இருந்தனர். திப்பாம்பா, நாகமாம்பா, ஓபமாம்பா எனும் மூவர். திப்பாம்பாவிற்கு வீர நரசிம்ம ராயரும், நாகமாம்பாவிற்கு கிருஷ்ண தேவராயரும், ஓபமாம்பாவிற்கு அச்சுத தேவராயர், ரங்கராயர் இருவரும் பிறந்தனர்.

நரசிம்மராயர் கி.பி. 1505ல் மறைந்தார். அவருக்குப் பின் வீர நரசிம்மராயர் பட்டத்துக்கு வந்தார். 1509 வரை ஆண்டு பல தான தருமங்கள் செய்தார். ஸ்ரீ சைலம், அகோபிலம், மகாநந்தி, திருப்பதி, ஸ்ரீகாளகஸ்தி, காஞ்சி, சிதம்பரம் ஆகிய கோயில்கட்கு தான தருமங்கள் வழங்கினார். 1509ல் மறைந்த பின் ஸ்ரீகிருஷ்ண தேவராயர் பட்டாபிஷேகம் செய்து அரசோச்சினார். வீரநரசிம்மர் தமது தம்பி

கிருஷ்ண தேவராயரையும் ஒழிக்கத் திட்டமிட்டபோது, அப்போது மந்திரியாக இருந்த அப்பாஜி என்னும் திம்மரசுவே பாதுகாத்து அவர் மறைந்த பிறகு பட்டம் சூட்டுவித்தார் என்று வரலாறு கூறுகிறது.

## கிருஷ்ண தேவராயர்

1510 ஜனவரி 10ம் தேதி பட்டாபிஷேகம் செய்து கொண்டார். சிம்மாசனம் ஏறியதுமே அரசியல் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்திக் கட்டுதிட்டங்கள் ஏற்படுத்தினார். இரண்டாண்டுகள் அயல் நாடுகளின் சூழ்நிலைகளை நன்கு தெரிந்துகொண்டு, படை பலத்தை விரிவுபடுத்தி பின் திக்விஜய யாத்திரையை மேற்கொண்டார். தெற்கே உம்மத்தூர் நாயக்கர்கள் கப்பம் கட்ட மறுக்கவே அதனை அடக்கி, உம்மத்தூர், சிவசமுத்திரங்களை வசப்படுத்தினார். பின் ஸ்ரீரங்கப்பட்டினத்தை கைவசமாக்கி தென்திசை திக்விஜய யாத்திரை செய்தார். தென்திசை முழுவதும் வென்று பிரதிநிதிகளை வைத்துவிட்டு தம் இராஜதானிக்கு வந்தார். பின் 1515ல் கீழ்திசை திக் விஜய யாத்திரையை மேற்கொண்டார். நெல்லூர் மண்டலத்திலிருந்த உதயகிரி, கொண்டவீடு முதலிய கோட்டைகளை கஜபதி மன்னர்களிடமிருந்து மீட்டு தன்வசம் ஆக்கிக் கொண்டார். பின்னர் அத்தங்கி, வினுகொண்ட, பெல்லம் கொண்ட, நாகார்ஜுன கொண்ட, தங்கேடு, கேதவரம் முதலிய மலைக் கோட்டைகளையும் கைவசமாக்கினார். இந்தப் போரில் பிரதாபருத்ர கஜபதி மகன் வீரபத்திர ராயரைச் சிறைப்பிடித்து பின் சரண் தந்து விடுவித்து விட்டார். அவனை மைசூர் பகுதியில் சிட்டலதுர்க்கப் பிரதிநிதியாக நியமித்தார். இச்செய்தி, உதயகிரி, கொண்டவீடு, திருப்பதி, காளஹஸ்தி, தரணிகோட்ட சாசனங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதன்பின் கொண்டபல்லி, இராஜஹேந்திரவரம் முதலியவைகளை கைப்பற்றி வடக்கு நோக்கிச் சென்றார். பின் சிம்மாசலம் சென்று 1516ல் சிம்மாசல நரசிம்ம சுவாமிக்கு தரும சாசனங்கள் தந்தார். பின் 1519ல் கிருஷ்ணதேவராயர் கஜபதி மன்னனை வென்று சில கிராமங்களை சிம்மாசல சுவாமிக்கு பூதானம் செய்தார். கிழக்கடற்கரை முழுவதும் வென்றார். பின் 1520ல் பீஜப்பூர் சுல்தான் வசம் இருந்த ராய்ச்சூரை முற்றுகையிட்டு தன்வசமாக்கினார். பீஜப்பூர் சுல்தான் ஆதில்ஷா முதலில் கிருஷ்ண தேவராயருடன் நேயமாக இருந்தார். பின் சய்யத் எனும் குதிரை வியாபாரி ராயரிடம் குதிரைகள் தருவதாக வாக்களித்து பெரும் பணம் பெற்றுக்கொண்டு போய், மீண்டும் வராமல் பீஜப்பூரிலே இருந்து விட்டான். அவனைப் பிடித்துத் தருமாறு கிருஷ்ணதேவராயர் ஆதில்ஷாவைக் கேட்டார். ஆதில்ஷா தன் இனத்தவனைக் காட்டிக் கொடுக்க விரும்பாமல்

அவன் தன் நாட்டில் இல்லை என்று கூறிவிட்டான். அதனால் சினமுற்ற ராயர் பீஜப்பூர் சுல்தானை ராயசூரில் முற்றுகையிட்டு வென்றார். அப்போது கல்பரிகெ (குல்பர்க்கா)வையும் கைப்பற்றிக் கொண்டார்.

கிருஷ்ணதேவராயர் அதன்பிறகு தம் அவைக்களத்தில் தமிழ், தெலுங்கு, கன்னட, வடமொழிக் கவிஞர்களை ஆதரித்து பல நூல்கள் இயற்றச் செய்தார். தாமே கவிஞராகத் திகழ்ந்து வடமொழியில், 'ஜாம்பவதி பரிணயம்' என்ற காவியமும், தெலுங்கில் 'ஆமுக்த மால்யத' என்ற காவியமும் இயற்றினார். அலசானி பெத்தன்ன 'மனுசரித்ர', முக்குதிம்மன்னா 'பாரிஜாத பாஹரணம்' என்னும் இரு காவியங்களும் சமர்ப்பணம் செய்யப் பெற்றார். சிற்பம், சங்கீதம் முதலிய கலைகளை வளர்த்தார். வைணவ மதத்தைச் செழித்தோங்கச் செய்தார். திம்மன்ன என்ற கன்னடக் கவிஞர் பாரதம் எழுதி சமர்ப்பணம் செய்துள்ளார். இருசமய விளக்கம், சூடாமணி நிகண்டு முதலிய தமிழ் நூல்களிலும், பல தனிப்பாடல்களிலும் கிருஷ்ணதேவ ராயரைப் பாராட்டி பல கவிஞர்களும் பாடியுள்ளனர். கஜபதியை (ஒரிசா மாநில கட்டாக் பகுதி) வெ‘ ற பின்னர், 'விஜய சௌதம்' ஒன்றைக் கட்டினார். துங்கபத்திரையில் அணைக்கட்டு கட்டினார். கிருஷ்ண தேவாலயம், ஹஜாரம் ராமசாமி தேவாலயம், உக்கிர நரசிம்ம சுவாமி ஆலயம் முதலியன விஜய நகரத்தில் கட்டி முடித்தார். தன் மனைவியின் பெயரில் 'நாகலாபுரம்' உருவாக்கினார். இந்த ஊர் ஹோஸ்பேட் என்னும் ஊரேயாகும். பின் தென்னாட்டிலுள்ள கோயில்களைப் பழுதுபார்த்து கோபுரங்கள் கட்டி வைத்தும், மானியங்கள் தந்தும் பக்திமிக்க மன்னராக மக்கள் பாராட்டும்படி நடந்து கொண்டார். காளஹஸ்தி நூற்றுக்கால் மண்டபம், கோபுரம், சிதம்பரம் வடக்கு கோபுரம், திருப்பதி ஆயிரக்கால் மண்டபம், தெப்பம், கருவறை, தேர், பதினோருமாடிக் கோபுரம் முதலியன நிறுவினார்.

கிருஷ்ண தேவராயருக்கு உற்ற துணைவராகவும், அமைச்சராகவும் திகழ்ந்தவர் சாளுவ திம்மரசு என்னும் அப்பாஜி ஆவார். இவர் நியோகி பிராமணர். வேமய்யா என்பவரின் பேரர். ராசய்யா என்பவரின் குமாரர். திம்மரசு மனைவி பெயர் லட்சுமாம்பா.

பாபட்ள தாலுகாவில் ஒரு சாசனத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது போல ராயரும், திம்மரசுவும் உடலும் உயிருமாக இருந்து

வந்தார்கள். ராயர் அப்பாஜி கதைகள் பல வழக்கில் பிரபலமாக உள்ளன. அப்பாஜி எனும் திம்மரசுவின் புத்திக் கூர்மையை அக்கதைகள் விளக்குகின்றன. திம்மரசுவின் தம்பி கோவிந்தாராஜு குத்தி துர்க்காபதியதியாவார். இவர் மகள் திருமலாம்பாவின் கணவர் அப்பா மாத்தியர்; திம்மரசுவின் தங்கை கிருஷ்ணாம்பிகையின் புதல்வரே அப்பாமாத்தியர். இவர் மாதயகாரி மல்லன என்னும் தெலுங்குக் கவிஞரின் 'இராஜ சேகர விலாசமு' காவியத்தைச் சமர்ப்பணம் செய்யப் பெற்றவர். திம்மரசுவின் தங்கையின் மற்றொரு மகன் கோபமந்திரி. பிரபோத சந்திரோதயத்துக்கு வியாக்கியானமும், கிருஷ்ணார்ஜுன சம்வாதம் எனும் துவிபத தெலுங்கு காவியமும் படைத்தவர். இவ்விதம் திம்மரசுவின் உறவினர்களும், அரசியல் புலமையிலும் சிறந்து விளங்கினர். திம்மரசுகூட புலமை மிக்கவரேயாவார். அகத்திய கவி இயற்றிய சம்பு பாரதத்துக்கு வியாக்கியானம் இயற்றினார். அதன் கத்தியம் இவ்விதம் உள்ளது.

*"இதி ஸ்ரீமன்மஹா ராஜாதி ராஜராஜ பரமேஸ்வர*
*கர்ணாடேஸ்வர ஸ்ரீக்ருஷ்ணராய சிரஃப்ரதா'ன*
*சகலாகம பாராவரபாரீத சாள்வதிம்மய தண்ட*
*நாத விரசிதாயாம் பா'ல பா'ரத வ்யாக்யாயாம்*
*மனோஹராக் யாயாம் பஞ்சமஸ்ஸர்க்'க'க:"*

இத்தகு இணையற்ற புலமையும், அறிவாற்றலும் உடைய திம்மரசு அன்னமாச்சாரியரின் புதல்வர் பெத திருமலாச்சாரியரின் நண்பருமாவார். திம்மரசுவே கிருஷ்ணதேவராயரை பதவியில் அமர்த்தி பல வெற்றிகட்கும் உறுதுணையாக அமைந்து இருந்தார். எனினும் இறுதிக்காலத்தில் கிருஷ்ணதேவராயரின் ஒரே குமாரரான திருமலராயர் இளம் வயதிலேயே திடீரென மரணமுற்றார். இந்தச் சாவு கிருஷ்ண தேவராயருக்கு பேரிடியாக அமைந்தது. தமது மகன் சாவுக்கு அரசியல் சதி காரணமாக இருக்குமெனவும், அதில் திம்மரசுவுக்கு தொடர்பிருக்கும் என்றும் ராயர் ஐயமுற்றார். திம்மரசுவைச் சிறையிட்டு கண்களைப் பிடுங்கினார் என்றும் கூறுவர். இது நம்பத்தகுந்த ஆதாரமுடைய செய்தியல்ல. சிறையிட்டிருக்கலாம். பின் கருத்து முரண்பாட்டால் திருமலாச்சாரியர் திம்மரசுவை ஆதரித்தாலும், கிருஷ்ணதேவராயர் திருமலாச்சாரியரை ஆதரிக்கவில்லை என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. திருமலாச்சாரியர் அரசவை போகங்களை வெறுத்தவர். ஆதலின் ராயர் ஆதரவை நாடவில்லை என்பதே உண்மையாக இருக்கலாம்.

கிருஷ்ணதேவராயரின் காலத்தில் பெகரிமோ என்னும் போர்ச்சுக்கிசிய தூதுவன் விஜயநகரம் வந்தான். 1520ம் ஆண்டில் வந்ததாகத் தெரிகிறது. அவனுடன் பேய்ஸ் என்னும் ஆசிரியனும் வந்தான். அவன் விஜயநகர வைபவத்தைப் பற்றி விரிவாக எழுதியுள்ளான். ரோமாபுரியைப் போல விஜயநகரத்தின் ஒரு பகுதி மட்டுமே தோன்றியது என்றும் முழு நகரமும் காண இயலாத பரப்புடையது என்றும் எழுதியுள்ளான். தெலுங்குப் பெருங்கவிஞரான பெத்தன்னா தமது நூலில் விஜயநகரைப் பற்றி ஒரு பாடல்கூட வருணிக்கவில்லை. பிற தெலுங்குக் கவிஞர்களும் வருணிக்கத் தவறிவிட்டனர். கிருஷ்ண தேவராயரை வர்ணித்துள்ளார் களேயன்றி விஜயநகரை வர்ணிக்கவில்லை. எனினும் பானுகவியின் 'பஞ்சதந்திரம்' எனும் தெலுங்கு நூலை சமர்ப்பணம் பெற்றவரும், 'சங்கீத சூரியோதயம்' என்ற நூலை எழுதியவருமான லக்ஷ்மி நாராயண என்பவர் ஒரு சுலோகமும், பஞ்சதந்திரத்தில் ஒரு சேபத்தியமும் விஜயநகரை வருணித்து எழுதியுள்ளார்கள்.

ஸ்ரீகிருஷ்ண தேவராயர் வைஷ்ணவராக இருந்தும் பிற மதங்களை சமமாக மதித்துப் போற்றி மானியங்கள் அளித்துள்ளார். ஸ்ரீவெங்கடேசுவரரை இஷ்ட தெய்வமாகக் கொண் இவர், 'ஆமுக்த மால்யத' எனும் சூடிக் கொடுத்த ஆண்டாள் சரிதத்தில் வைணவ தத்துவங்களை விளக்கிக் கூறியிருப்பது இவரது வைணவப் பற்றைப் புலப்படுத்துகிறது.

கிருஷ்ணதேவராயரின் அவையில் பெத்தன்ன, இராமலிங்கம் முதலிய வைணவ கவிஞர்களும், தூர்ஜடி, முக்கு திம்மன்ன, மாதயகாரி மல்லன்ன முதலிய சைவமத கவிஞர்களும் இருந்தனர். இரங்கநாத தீட்சிதர், சிவா தீட்சிதர் எனும் புரோகிதர்கட்கு இரு கிராமங்கள் தானம் செய்துள்ளார்.

கிருஷ்ண தேவராயரின் குமாரன் திருமலராயர் பட்டத்துக்கு வராமலே இளவயதில் இறந்துபோனார். இராயருக்கு திருமலாம்பா என்றொரு மகள் இருந்தாள். இவளை ஆரவீடு அரச மரபில் அளிய இராமராயருக்குத் தந்து மணம் முடித்து வைத்தார். இராமாப்யுதயம், சாம்போபாக்கியானம், இராமராஜீயம் என்னும் தெலுங்கு காவியங்களில் திருமணச் செய்தி தெளிவாகவே குறிப்பிடப் பட்டுள்ளது.

கிருஷ்ணதேவராயரைப் பற்றிய 'இராயவாசகமு' எனும் வசன நூலும் அதே நூலைச் செய்யுள் வடிவில் அமைக்கப்பட்டுள்ள 'கிருஷ்ணராய விஜயம்' எனும் நூலும், ராயர் இயற்றிய 'ஆமுக்த மால்யத' எனும் நூலும், பெத்தனா இயற்றிய மனுசரித்ர, திம்மன இயற்றிய 'பாரிஜாதாபஹரணம்' என்ற நூல்களும் கிருஷ்ண தேவராயரின் வரலாற்றை நன்கறியத் துணை செய்யும் நூல்களாகும். கிருஷ்ண தேவராயரின் வைணவ குருமாரில் தாத்தாசாரியார் பிரசித்தமானவர். தளவாய் அரியநாத முதலியார் தமிழக அரசியல் விவகார அமைச்சராக இருந்தவர். தமிழில் தனிப்பாடல்கள் பல கிருஷ்ணதேவராயரைப் பற்றி புகழ்ந்துரைக்கின்றன. சூடாமணி நிகண்டு, 'கொடை மடம்' என்பது 'கிருட்டிணராயன் போல் வரையாது கொடுத்தலாமே' என்று கூறுகிறது. கடகம் (கட்டாக் என்னும் நகர், வளை என்று இருபொருள்படும்) கலிங்கம் (கலிங்க நாடு, சேலை என்று இருபொருள்படும்) என்னும் இருபொருட் சொற்களைக் கொண்ட ஒரு கவிதை கிருஷ்ணதேவராயரைப் புகழ்கிறது. சிலைத்திருட்டைக் கண்டுபிடிக்குமாறு ஒரு கவிதை கேட்டுக் கொள்கிறது. இவ்விதம் தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், கேரளம் ஆகிய நான்கு மாநிலங்களையும் ஒரு குடைக்கீழ் ஆண்டு, தமிழ், தெலுங்கு, கன்னட, வடமொழிகளை ஆதரித்து கலைகளையும், வைணவத்தையும் செழிக்கச் செய்த கிருஷ்ண தேவராயர், புத்திரசோகத்தால் மெலிவுற்றும், இறுதி நாட்களில் அரசியல் சூழ்நிலைகளால் நலிவுற்றும் கி.பி. 1530ஆம் ஆண்டில் பரமபதம் அடைந்து அழியாப் பெரும் புகழுடன் அமரராகிவிட்டார்.

கிருஷ்ணதேவராயர் காலத்தில் தமிழக ஆந்திர நாட்டுறவுகள் நெருக்கமடைந்தன. ஆந்திர நாட்டிலிருந்த பல அந்தணர்கள், படை வீரர்கள், தொழில் வல்லுநர்கள், கலைஞர்கள் தமிழகத்துக்கு வந்து சேர்ந்தனர். கிருஷ்ண தேவராயரின் அரசப் பிரதிநிதிகளாக பாண்டிய நாட்டை விசுவநாத நாயக்கரும், சோழ மண்டலத்தை செவ்வப்ப நாயக்கரும் ஆண்டனர். மதுரையிலும், தஞ்சையிலும் நாயக்க மன்னர்களது ஆட்சி நிறுவப்பட்டது. தஞ்சை மன்னர்கள் வரலாறு எளிய தெலுங்கு நடையில் உரைநடையாக 'தஞ்சாவூரு ராஜுல சரித்ர' என்று கைப்பிரதி ஒன்று கிடைத்தது. இதுவும் 'இராய வாசகமு' போல தானாபதிகளால் எழுதப்பட்டதே.

இதனை வேடூரி பிரபாகர சாஸ்திரி ஆய்வு முன்னுரையுடன் வெளியிட்டுள்ளார். தஞ்சை நாயக்க மன்னர்களின் சரித்திரம்

விளக்கமாகவும், தெளிவாகவும் எழுதப்பட்டுள்ளது. இந்நூல் தமிழாக்கம் பெறின் தமிழக வரலாற்று ஆய்வுக்கு உதவும்படியாகும். மதுரை நாயக்க மன்னர்களும், தஞ்சை நாயக்க மன்னர்களும் திருமண உறவுகள் கொண்டிருந்தனர். பல ஆந்திர நாட்டுக் குடும்பங்கள் இவர்களது ஆதரவை நாடி வந்து தமிழகத்தில் குடியேறினர். தெலுங்கிலக்கியம் தஞ்சை, மதுரை, புதுக்கோட்டை, இராஜ பாளையம் ஆகிய தமிழ் மண்ணில் செழித்து வளர்ந்தது. தஞ்சை நாயக்க மன்னர்கள் சிறந்த கவிஞர்களாகவும், கலைஞர்களைப் பேணும் வள்ளல்களாகவும் திகழ்ந்தனர். மராட்டிய மன்னர்கள் கைக்கு சிவாஜியின் தம்பி ஏகோஜியிடம் சோழ நாடு சிக்கியது. பாண்டிய நாடும் மகம்மதியர் வசமும், இறுதியில் ஆங்கிலேயர் வசம் ஆனது. தஞ்சையும் ஆங்கிலேயர் வசம் ஆனது. அதுவரையும் ஏறத்தாழ இருநூறாண்டுகள் விஜயநகர சாம்ராஜ்யம் செழிப்புடன் திகழ்ந்தது. அப்போது வைணவமும் தழைத்தோங்கியது.

கிருஷ்ண தேவராயர் தம் மகன் மறைந்ததும் திம்மரசுவை சிறையிட்டபோது, திம்மரசுவின் மகன் திம்மதண்டநாதனையும் சிறையிட்டார். திம்மதண்ட நாயகன் சிறையிலிருந்து தப்பித்து ஓடி கலகம் விளைவிக்கவே, கிருஷ்ணதேவராயர் தம் மகளின் கணவனான அளியராமராஜுவை அவனை அடக்குமாறு அனுப்பினார். அவரும் அப்படியே கலகங்களை அடக்கி அமைதி ஏற்படுத்தினார். எனினும் கிருஷ்ணதேவராயர் தமக்குப் பின் தனது தம்பியாகிய (சிற்றன்னை மகன்) அச்சுத தேவராயருக்குப் பட்டம் சூட்ட ஏற்பாடு செய்தார். சந்திரகிரியில் சிறையிலிருந்த அவரை விடுவித்துப் பட்டம் சூட்டப்பட்டது. இந்த ஏற்பாடு இராமராஜுவுக்குப் பிடிக்கவில்லை. தாமே பட்டம் சூட்ட விரும்பியும் இயலவில்லை. பின் அச்சுததேவராயரின் மகன் சில ஆண்டுகள் ஆண்டார். அவரும் மரணமுறவே அச்சுத வேதராயரின் தம்பி ரங்கராயரின் மகன் சதாசிவராயர் (1543 - 76) பட்டம் எய்தினார். அளிய ராமராஜுவே இதற்குக் காரணம் ஆவார். சலகம் திம்மய்யா எனும் சேனாதிபதியுடன் போரிட்டு வென்று ஆட்சியை சதாசிவராயருக்குத் தந்து, தானே எல்லா நிர்வாகங்களையும் பார்த்து வந்தார். அளியராமராஜு ஆரவீடி க்ஷத்திரிய வம்ச பரம்பரையில் வந்தவர். கிருஷ்ண தேவராயரின் மகளைத் திருமணம் முடித்தார். அளிய என்றால் மாப்பிள்ளை என்று கன்னடச் சொல்லுக்குப் பொருளாகும். சதாசிவ ராயர் 1571ல் மறைந்தார். அவருடன் துளுவ வம்சம் முடிவுற்றது. ஆரவீடி வம்சம் விஜய நகர சாம்ராஜ்யத்தை ஆளத் தொடங்கியது. இராஜநாத டிண்டிட கவி வடமொழியில்

இயற்றிய 'அச்சுதராயாப் யுதயம்' எனும் காவியத்தில் அச்சுத தேவராயருக்குத் திருப்பதியில் பட்டாபிஷேகம் செய்த வரலாறும், அவரது திக்விஜயங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அளிய ராமராஜு வரலாற்றுக் குறிப்புகள் தெலுங்கு காவியமாகிய 'வசு சரித்ர'வில் உள்ளன.

சதாசிவ ராயர் பேருக்கு மட்டும் அரசராக இருந்தார். அளிய ராமராயரே எல்லாக் காரியங்களையும் நிர்வாகம் செய்தார். அவர் காலத்தில் விஜயநகர சாம்ராஜ்யம் நன்னிலையில் இருந்தது. மிக உயர்ந்த நிலை எய்தியமைக்கு ராமராயரே காரணம். அதேபோல அதன் வீழ்ச்சிக்கும் அவரே காரணமாக அமைந்தார். கி.பி. 1543ல் இராமரர்யர் அகமத் நகர், கோல்கொண்டா நவாப் இப்ராஹிம் குதுப்ஷா ராமராயரை வீழ்த்த சமயம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். இந்த இப்ராஹிம் தெலுங்குக் கவிஞர்களை ஆதரித்து பல நூல்கள் சமர்ப்பணமாகப் பெற்றவர். பீஜப்பூர் சுல்தானாக ராமராயரால் முன்பு ஆதரிக்கப்பட்ட அலீ ஆதிம்ஷா வந்து சேர்ந்தான். இராமராயரும் ஆதிம்ஷாவும், தந்தையும் குமாரனும் போல நேச உறவுடன் இருந்து வந்தனர். இவர் சுல்தானானதும் வஞ்சகமாக மற்ற முகமதிய மன்னர்களை ஒன்றிணைத்து இராமராயரோடு போராடினான். 1565ல் ராட்சச தங்கடியில் விஜயநகர சைனியர்கட்கும், மகம்மதிய அரசர்கள் சேனைக்கும் பயங்கர சண்டை நடந்தது. இந்தப் போரில் விஜய நகர சைனியம் தோற்றது. இராமராயர் போரில் கொல்லப்பட்டார். அவர் சகோதரர் திருமலை வெங்கடாத்திரி பெனு கொண்டாவிற்கு ஓடிச் சென்றார். மகம்மதிய சேனை விஜயபுரம் புகுந்து பாழ்படுத்தியது. இத்துடன் விஜயநகரப் பேரரசு வீழ்ச்சியுற்றது.

விஜயநகர அரசு சிறப்புடன் இருந்த காலத்தில் வைணவம் தழைத்தோங்கியது. தெலுங்கிலக்கியமும் செழித்து வளர்ந்தது. விஜயநகர அரசு வீழ்ச்சியுற்றதுமே தமிழகத்தை ஆண்ட நாயக்க மன்னர்கள் சுதந்திர அரசுகளாக இயங்கி தஞ்சை, மதுரையில் இருந்து கொண்டு அரசுபுரிந்து வைணவத்தையும் பேணி, தெலுங்கிலக்கியத்தையும் வளர்த்து வந்தார்கள்.

விஜயநகர சாம்ராஜ்ய காலத்தில் தமிழகத்தில் வைணவம் தெலுங்கு நாட்டில் தீவிரமாகப் பரவியது. இராமானுஜரின் விசிஷ்டாத்துவிதக் கொள்கையை ஸ்ரீகிருஷ்ண தேவராயர் ஆர்வமுடன் ஏற்றுக்கொண்டதோடு, அதனைப் பரப்பவும் செழித்தோங்கச் செய்யவும் ஆதரவு தந்தார். தமிழகத்தோடு

தொடர்புடைய வைணவம் பரவுவதற்கு ஆதரவாக இருந்ததோடு அதைப் பரப்பும் நோக்கோடு, 'ஆமுக்த மால்யத' என்ற அரிய தெலுங்குக் காவியத்தைப் படைத்தார் என்ற விவரங்கள் முன்பே கூறப்பட்டுள்ளது. தமிழகத்துக்கும் ஆந்திர நாட்டுக்கும் உள்ள வைணவத் தொடர்புக்கு மற்றொரு சான்றாக, 'ஆமுக்த மால்யத' திகழ்கிறது. 'ஆமுக்த மால்யத' கிருஷ்ணதேவராயர் இயற்றியருளியது. அலசானி பெத்தன்னாவின் படைப்பு என்று சிலர் கருதினர். இக்கருத்து தவறு என்பதை வாவிள்ள வெங்கடேசுவர சாஸ்திரி, வேதம் வெங்கராய சாஸ்திரி போன்றோர் நிறுவியுள்ளனர். பெத்தன்னாவின் கவிதை நடை கதளிபாகம் (வாழைப்பழம் உள்ளது போல) என்றால், கிருஷ்ணதேவராயரின் நடை நாரிகேள பாகம் (தேங்காயை உடைத்துத் தின்பது போல) ஆகும். இந்த நடை முரண்பாடே இருநூலும் ஒருவர் இயற்றியதன்று என்பதை தெளிவாக்கும். 'இராயவாசகம்' எனும் விசுவநாத நாயக்கரின் ஸ்தானாதிபதி எழுதிய தெலுங்கு வசன நூலில் கிருஷ்ண தேவராயர் சரித்திரம் உள்ளது. அதில் 'ஆமுக்த மால்யத' எழுதியதாக குறிப்பிடவில்லை என்று கூறி சில அறிஞர்கள் ஐயுறுவர். இராயவாசகம் கி.பி. 1586 - 1614 காலகட்டத்தில் எழுதப்பட்டதாகலாம். இந்நூலை ஆந்திர சாஹித்ய அகாடமியினர் டாக்டர் வி. இராமச்சந்திரராவ் அவர்களின் முன்னுரையுடன் அண்மையில் பதிப்பித்துள்ளனர். இந்நூல் கிருஷ்ண தேவராயரின் வரலாற்றையும், அக்கால சமுதாய நிலைமைகளையும் கூறும் சரித்திர நூலாகும். இந்த நூலையே குமார தூர்ஜடி 1630ல் 'கிருஷ்ணராய விஜயம்' என்ற காவியமாக்கியுள்ளார். இந்த இரு நூல்களும் கிருஷ்ணதேவ ராயருடைய வாழ்க்கையை விவரிக்கும் சரித்திரச் சான்றுகளான நூல்களாகும். இந்த நூலில், 'ஆமுக்த மால்யத' குறித்து கூறப்படாவிடினும் கிருஷ்ணதேவராயரின் இலக்கியப் புலமையைப் பற்றிச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. ஆமுக்த மால்யத மிகச் சிறந்த தெலுங்கு காவியம் ஆகும். பாண்டி மண்டலத்தில் உள்ள ஸ்ரீவில்லிபுத்தூர் வருணனையுடன் கதை தொடங்குகிறது. மதுரைப் பாண்டிய மன்னன் இரவில் பரத்தையர் இல்லம் செல்லும்போது ஒரு வீட்டு முற்றத்தில் ஓர் அந்தணன் ஒரு சுலோகம் பாடம் கேட்கிறான். ''மழைக்காலத்துக்கு வேண்டியதை மற்ற எட்டு மாதங்களிலும், இரவுக்கு வேண்டியதை பகலிலும் சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும். அதுபோலவே மறுமைக்கு வேண்டியதை இம்மையிலேயே செயலாற்றிப் பெற வேண்டும்'' என்ற அந்த சுலோகக் கருத்தைக் கேட்ட மன்னன் தனக்கு மறுமை தரும் வழி காட்டுபவர்க்குப் பொற்கிழி தருவதாக பறை சாற்றினான்.

வில்லிபுத்தூர் பட்டர்பிரான் ஆகிய விஷ்ணுசித்தன் எனும் பெரியாழ்வார் வடபத்திர சாயியின் அருள் பெற்று பாண்டியன் அவைக்குச் சென்று விசிஷ்டாத்வைதக் கருத்துக்களைக் கூறி, பிற மதத்தினரை வாதத்தில் வென்று பொற்கிழி அறுத்துக் கொண்டு வருகிறார். இந்த வாதம் நடக்கும்போது சொல்வதாக 'காண்டித்ய கேசித்வஜன்' கதையைப் புகுத்தியுள்ளார். கிருஷ்ணதேவராயர் பின் பொற்கிழி பெற்று யானை மீதேறி ஊர்வலம் வரவே திருமால் பிரத்தியட்சமாகவே பல்லாண்டிசைத்துப் பரவுகிறார். நாள்தோறும் நந்தவனத்தில் பூக்கொத்து பூத்தொடுக்கும் பெரியாழ்வாரைப் பார்த்து திருமால், லட்சுமி தேவியிடம் ''யாமுனாச்சாரியரும், இவரும்தான் நமது தரிசனத்தை செழிக்கச் செய்தவர்கள்'' என்று பாராட்டினார். அது கேட்ட லட்சுமிதேவி ''யாமுனாச்சாரியார் யார்?'' என்று கேட்க ஸ்ரீமந் நாராயணனே யாமுனாச்சாரியராகிய ஆளவந்தாரின் கதையைச் சொல்கிறான். ஆளவந்தார் கதையில் கிருஷ்ண தேவராயர் அரசியல் கருத்துக்களையும், வைணவ தத்துவச் சிறப்புக்களையும் தகுந்த முறையில் விளக்கியுள்ளார். பெரியாழ்வார் துளசி வனம் தோண்டும்போது ஒரு பெண் மகவு கிடைத்தது. அக்குழந்தையை தம் மனைவியிடம் தரவே அவர்கள் அன்போடு வளர்த்து வந்தனர். ஆண்டாள் ஆகிய அக்கோதை பருவம் வந்ததும் திருமாலை விரும்பி காதல் நோய் கொண்டார். பெரியாழ்வார் தொடுத்த பூமாலைகளைத் தாம் சூடி கிணற்று நீரில் பார்த்து தன் அழகு திருமாலுக்கு ஏற்றதாமோ? என்று சிந்தித்துப் பின் மீண்டும் பூக்குடலையில் வைத்து விட்டாள். ஆண்டாளின் தோழிகள், ''நீ சத்தியபாமை'' என்று உண்மை கூறிவிட உணர்ந்து தோழிகள் நாக கன்னியர் என்பதையும் உணர்ந்தார். திருவரங்கச் செல்வனைக் காதலித்தாள். தன் மகள் காதல் நோய் உணராத பெரியாழ்வார் தன் மகளுக்குப் பித்துப் பிடித்துவிட்டதெனவும், அதை நீக்கும் வழி காட்டுமாறும் வடபத்திரசாயியை வேண்டவே, இறைவன் கோதா தேவியின் முன் ஜன்மக் கதையைக் கூறுகிறார். இங்கு வராக புராணத்திலுள்ளபடி வராக சுவாமி பூதேவிக்குச் சொன்ன சண்டாள பிரம்மராக்ஷஸ் கதையை பெரியாழ்வாருக்குச் சொல்லி பூதேவியே ஆண்டாள் என்றும் கூறி திருவரங்கம் போகுமாறும் கூறி அருள்புரிகிறார். பின் அப்படியே திருவரங்கத்துக்கு மகளுடன் போன பெரியாழ்வார் திருவரங்கக் கோயிலையடைந்து வணங்கி வழிபடுகிறார். திருவரங்கநாதன் அவரை குசலம் விசாரித்து ஆண்டாளின் அழகில் ஈடுபட்டு, அவளை யாரும் அறியாமல் தன்பக்கம் சேர்த்துக் கொண்டு மாயா கன்னிகையை அங்கு வைத்து விட்டான். பெரியாழ்வாரும் அந்தக் கன்னியை பல்லக்கில் ஏற்றி வீடு வந்து சேர்ந்ததும், அந்தப்

பல்லக்குத் திரை விலக்கிப் பார்க்கவே அங்கு மாயா கன்னிகையான ஆண்டாள் உருவம் மறைந்து விடவே, வருந்தி, ''பிராமணனான என்னை மோசம் செய்யலாமோ? என் மகளைக் காணோமே?'' என்று புலம்ப, திருமால் காட்சிதந்து ''எம்மை வைவானேன்? உமது மகள் உன் வீட்டில்தான் இருக்கிறாள். சரியாகப் பார்த்துச் சொல்லும்'' என்று கேலி செய்யவே, அவரும் வீட்டில் புகுந்து பார்க்க அங்கு ஆண்டாள் இருக்கக் கண்டு மகிழ்ந்தார். பின் திருவரங்கநாதர் பிரம்ம ருத்திரர்களை அனுப்பி பெண் கேட்கவே, பெரியாழ்வார் இசைந்து, ''நீங்கள் என் ஊர் வந்து திருமணம் புரிந்து கொள்ள வேண்டும்'' என்று வில்லிபுத்தூர் வந்து ஆண்டாளைத் திருமணம் புரிந்து திருவரங்கத்துக்கு அழைத்துச் செல்கிறார்.

குருபரம்பரா பிரபாவக் கதைக்கும், இக்கதைக்கும் சிறிது வேறுபாடு உள்ளது. மேலும், காண்டித்ய கேசித்வஜன், சண்டாள பிரம்மாரக்ஷசன் கதைகளும் வேண்டுமென்றே இணைத்துள்ளார். ஆண்டாளுக்குப் பிற்காலத்திலிருந்த ஆளவந்தாரின் கதையையும் சேர்த்துள்ளார். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான ஆண்டாளின் வரலாற்றைக் கூறும் இக்காவியத்தில் வைணவத்தின் அடிப்படைத் தத்துவங்களை விளக்கும் வகையில் சில புராணக் கதைகளை இடையே சேர்த்துள்ளார். அவையாவன.

விஷ்ணுபுரானத்தில் உள்ள காண்டிக்ய கேசித்வஜன் கதை பெரியாழ்வார் பாண்டியன் அவையில் கூறியதாக உள்ளது. காண்டிக்கியனும், கேசித்வஜனும் ஒன்றுவிட்ட சகோதரர்கள். இவர்கள் இருவருக்கும் அரசியல் விவகாரங்களில் பகைமை ஏற்பட்டது. கேசித்வஜன் போரில் வென்றதால் காண்டிக்யன் காட்டில் வசித்து வந்தான். காண்டிக்கியன் கரும யோகத்தில் பற்றுள்ளவன். கேசி ஞான யோகத்தில் பற்றுள்ளவன். கேசித்வஜன் யாகம் செய்ய முனைந்தபோது யாகபசுவை புலி கொன்று விட்டது. அதனால் யாகம் முற்றுப்பெறவில்லை. அதற்குப் பிராயச்சித்தம் செய்ய வேண்டினான். யாருக்கும் என்ன செய்வதென்று தோன்றாமல், எல்லோரும் கேசித்வஜனை காண்டிக்கியனிடமே சென்று கேட்குமாறு கூறிவிட்டனர். கேசித்வஜன் காண்டிக்கியனிடம் சென்று செய்தி கூறி யாக பசு இன்றி யாகம் முடிவுறாததால் பிராயச்சித்தம் செய்வித்து குருதட்சணை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினான். காண்டிக்கியன் மந்திரிகள் பகைவன் ஆன கேசி வந்துள்ளதால் அவனைக் கொன்று பதவியை மீட்குமாறு தூண்டினர். காண்டிக்கியன் அதற்கு இசையாமல் பிராயச்சித்தம் உபதேசித்து,

அதற்கு குருதட்சணையாக தனக்கு ஆத்ம தத்துவம் உபதேசிக்குமாறு கேட்டுக் கொண்டான். அதன்படி கேசியும் ஆத்மதத்துவம் உபசேதித்து காண்டிக்கியன் மகனுக்கே தான் அபகரித்த நாட்டை மீண்டும் தந்து பட்டமும் சூட்டினான்.

இங்கு கருமயோக ஞான யோக தத்துவங்களையும், வைணவ சித்தாந்தங்களையும் கிருஷ்ணதேவ ராயர் சுருக்கமாகவும், தெளிவாகவும் விளக்கியுள்ளார். மற்றொரு கதையான ஆளவந்தார் சரித்திரம் குருபரம்பரா பிரபாவத்தில் உள்ளபடியே சிறிது மாற்றத்துடன் விளக்கியுள்ளார். இந்நூல் இணைத்துள்ள மற்றொரு கதை மாலதாசரி கதையாகும். பறையர் குலத்துதித்த விஷ்ணு பக்தன் ஒருவன் பிரம்மராட்சதனாகிய பிராமணனுக்கு உபசேதித்து முக்தியளித்த கதையாகும். இராமானுஜர் தாழ்ந்த குலத்தினரை 'திருக்குலத்தால்' எனப் பாராட்டி அவர்களையும் வைணவ மதக் கருத்துக்களை உபதேசம் செய்யும் ஆற்றலும் தன்னம்பிக்கையும் பெறுமாறு செய்தார். அந்த அடிப்படையில் இக்கதையை கிருஷ்ண தேவராயரும் அமைத்துள்ளார். இக்கதை வராக புராணத்திலுள்ள தாகும். மாலதாசரி (பறைக்குல வைணவன்) திருக்குறுங்குடி நம்பி கோயிலுக்குச் சென்று இசை பாடி வருவது வழக்கம். அப்படி ஒருநாள் தன் ஊரில் இருந்து போகும்போது வழி தப்பி வேறொரு வழியே செல்லவே அங்குள்ள ஆலமரத்தில் இருந்த பிரம்மராக்ஷஸ் இவனைக் கொன்று தின்ன வேண்டிப் பிடித்துக் கொண்டது. அதற்கு தாசரி, ''தான் சுவாமி கோயிலுக்குப் போய் இசை பாடி விட்டு கட்டாயம் மீண்டும் வருவதாகவும், வந்தபின் தன்னை உண்ணலாம்'' என்று கூறினான். அதற்குப் பிரம்மராக்ஷஸ் இசையவில்லை. தாசரி, ''இன்று கார்த்திகை துவாதசி கைசிக விரதமாதலினால் சுவாமி கோயிலில் இசை பாடி புண்ணியம் பெற வேண்டும் என்றும், கட்டாயம் திரும்புவதாகவும் சபதம் கூறினான்.'' இதற்கும் பிரம்மராக்ஷஸ் மசியவில்லை. இறுதியில், ''தான் திரும்பி வராவிட்டால் ஸ்ரீமந் நாராயணனை பிற தெய்வங்களோடு இணை கூறும் பாவத்திற்கு ஆளாவேனாக'' என்று கூறியதும் பிரம்ம ராக்ஷஸ் விட்டுவிட்டான். தாசரி கோயிலுக்குச் சென்று இசைபாடி இறைவனை மகிழ்வித்து விட்டு மீண்டும் பிரம்ம ராக்ஷசிடம் வந்து, ''இனி என்னைக் கொன்று உண்ணலாம்'' என்று கூறினான். அதற்கு பிரம்ம ராக்ஷஸ், ''குருவின் ஆணை மீறி மக்கள் கடைத்தேற உபதேசித்த இராமானுஜரே இனிமேல் ஆதிவண்ட சடகோபராக அகோபலத்தில் இருந்து ஆந்திர நாடு முதலிய நாடுகட்கு வைணவம் உபதேசிப்பார். ஹயக்கிரீவனை உபாசித்து வேதாந்த தேசிகராக பல நூல்கள் இயற்றி மக்களைக்

கடைத்தேற்றுபவர். அதுபோல நீயும் நீ பாடிய இசைப் பாடலின் புண்ணியத்தில் கால் பகுதி தந்தாவது என்னைக் கடைத்தேற்ற வேண்டும்'' என்றது. தாசரி அதற்கு மறுக்கவே, அப்பாடல் பாடிய புண்ணியத்தில் பாடலின் கடைசி அடி பாடிய பலனாவது தருமாறு கேட்கவே, தாசரி இசைந்து கொடுக்கவே பிரம்மராக்ஷஸ் பேய் வடிவு நீங்கி அந்தணனாக நின்றான். தான் பூர்வ ஜன்மத்தில் சோமசர்மா என்ற பிராமணன் என்றும், தான் இயற்றிய வேள்வி முடியுமுன்பே சூலை நோயால் இறந்துவிட்டதால் பிரம்ம ராக்ஷசாக இருந்ததாகவும், உன் புண்ணியத்தால் மீண்டும் அந்தணனாகி புனர்ஜன்மமடைந்த தாகவும் கூறி திருமாலுக் கடியனாகினான்.

இக்கதையில் இராமானுஜர் திருக்கோட்டியூர் நம்பியிடம் பெற்ற சரமசுலோக ரகஸ்யார்த்தத்தை எல்லோரும் அறிய கோபுரத்தில் நின்று உபதேசித்த வரலாறும், சடகோபர் வேதாந்த தேசிகர்களைப் பற்றியும் இணைத்திருப்பது கிருஷ்ணதேவராயர் அவர்களிடம் கொண்டிருந்த பக்தியையே காட்டுகிறது. இந்நூலில் பெரியாழ்வார் பொற்கிழி பெற்ற பாண்டியன் அவையில் உபதேசித்ததாக விஷிஸ்டாத்வைத தத்துவத்தையும் வாதிட்டபோது, அத்வைதம், மீமாம்சம், தர்க்கம், பௌத்தம் முதலியவற்றை மறுக்கும் வகையில் கிருஷ்ணதேவராயர் தமது அறுவகைச் சமயமும், தத்துவமும் குறித்த புலமையை வெளிப்படுத்தியுள்ளார். அதுபோல கோடை, கார், இளவேனில், பனிக்காலங்களைப் பற்றியும், அக்காலங்களில் மக்களின் வாழ்க்கை நடைமுறைகளைப் பற்றியும் யதார்த்தபூர்வமாகவும், கற்பனை நயத்துடனும் அற்புதமான கவிச் சித்திரங்களைத் தீட்டியுள்ளார். இவரது நடை வடசொற்கள் மிகுந்ததும், கடின சொல் பிரயோகங்களையும் கொண்டதாகும். எனினும் கற்பனை வளமும், கருத்துச் செறிவும் மிக்க கவிதைகளாக உள்ளன. பாத்திரப் படைப்பிலும் தொனியிலும் இவர் காவியம் சிறந்துள்ளது. இக்காவியத்தில் பல தமிழ்ச் சொற்களும் பயன்படுத்தியுள்ளார். வைணவத்துக்குரிய சொற்கள் மட்டுமன்றி மக்கள் பேசும் வழக்காற்றிலிருந்தும் பல சொற்களை ஏற்றுப் பயன்படுத்தியுள்ளார். சைவக் கவிஞரான தூர்ஜடி காளஹஸ்தி மகாத்மியத்தில்,

*''உண்ணாமுலெ ஜகதம்பிகள்*
*அண்ணாமலெ விஸ்வநாது னாராதின்சென்*
*மண்ணாசயு பொன்னாசயு*
*பெண்ணாசயு லேனி வாரி பென்னிதி'லகுடன்''*

என்று தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். இவர் கிருஷ்ணதேவ ராயர் காலத்துக் கவிஞராவார்.

இதுபோன்றே கிருஷ்ணதேவராயரும் பல சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். பெரிவிளங்காய், பணியாரம், தேடு, உடமை, எரி, சாப்பிடு, முறம், நஞ்சு முதலிய தமிழ்ச் சொற்களை ஆங்காங்கே பயன்படுத்தியுள்ளது, அவருக்கு தமிழில் நல்ல பயிற்சியுண்டு என்பதையே காட்டுகிறது. ஆமுக்தமால்யதவிலும், அவருக்கு பல மொழிகள் பேசத் தெரியும் என்று கூறிக் கொள்வதால் தமிழ்மொழி அவருக்கு நன்கு தெரியும் என்பதில் ஐயமில்லை.

'ஆமுக்த மால்யத' பீடிகையில் திருமாலையும், லட்சுமி தேவி, விஸ்வக்சேனர், கருடாழ்வார், நந்தகம், சார்ங்கம் முதலிய ஆழித் திருச்சங்குகளை முதலில் வணங்கிவிட்டு, துவாதச ஆதித்தியர்களை (பன்னிரு சூரியன்களை)ப் போன்ற பன்னிரு ஆழ்வார்களையும் ஒரு பாடலில் பரவுகிறார். பின், ''தாம் கலிங்கத்துக்குப் படையெடுத்துச் செல்லும்போது விஜயவாடாவில் சிலநாள் இருந்து ஸ்ரீகாகுளம் உறையும் ஆந்திர விஷ்ணுவை ★ சேவிக்கச் சென்றதாகவும், அங்கு உபவாசம் இருந்தபோது கனவில் தோன்றி, நீ வடமொழியில் மதாலச சரித்ர, சத்யவதி பரிணயம், சலகதாசார சங்கிரகம், ஞானசிந்தாமணி, ரசமஞ்சரி முதலிய காவியங்களைப் படைத்துச் சிறப்புப் பெற்றிருக்கிறாய். தெலுங்கில் காவியம் படைப்பது உன்னால் இயலாததன்று. ஒரு காவியம் படைத்துத் தருக. இது என் விருப்பம்'' என்று தான் சூடிக் கொடுத்த பூமாலையைத் தந்த ஆண்டாள் ரங்கமன்னார் திருமணக் கதையைக் கூறுவாயாக! நான் தெலுங்குராயன்! நீ கன்னடராயன்! ஆதலின் இக்கதையைக் காவியம் செய்க! 'ஏன் தெலுங்கில் செய்யுமாறு கூறுகிறேன் என்றால் இந்த தேசம் தெலுங்கு ஆகும். நான் தெலுங்கு வல்லபன். தெலுங்கு தனிச்சிறப்புடையது. எல்லா மன்னர்களும் கூடியிருக்க பல்வேறு மொழிகளில் பேசியறிந்துள்ளாய். தேச பாஷைகளில் தெலுங்கே சிறந்தது (தேச பாஷலந்து தெலுகு' லெஸ்ஸ) சமர்ப்பணம் யாருக்குச் செய்வதென்று கருதுவாய். உனக்கு இஷ்ட தெய்வம் திருவேங்கடேசுவரன் ஆகும். அவனுக்கே சமர்ப்பணம் செய்க. பெயர் வேறுபாடேயன்றி அவன் நானேயல்லவா?'

---

★ விசாகப்பட்டினம் அருகே உள்ள ஸ்ரீகாகுளம் அன்று. விஜயவாடா அருகே உள்ள சிற்றூர் ஸ்ரீகாகுளம்.

''இந்த நூல் எழுதினால் உனக்கு மேன்மேலும் நலங்கள் வளருமெனச் சொல்லி'' மறையவே வியப்போடு கண் விழித்து காலைக் கடன்கள் தீர்த்து அவைக்கு வந்து தன் கனவைப் பற்றிக் கூறவே, அங்குள்ள அவையோர் பாராட்டிக் காவியம் படைக்குமாறு தூண்டினார். இதன்பின் அலசானி பெத்தன்னா தமது, 'மனு சரித்ர' எனும் காவியத்தில் கிருஷ்ணதேவராயரைப் புகழ்ந்து பாராட்டிய சமர்ப்பணப் பாடல்களை இணைத்துள்ளார். பொதுவாக தெலுங்குக் கவிஞர்கள் தம் மரபினைப் பற்றியும், தம்மைப் பற்றியும், தாமே கவிதைகள் புனைந்து சேர்த்திருப்பர். ஆனால், கிருஷ்ணதேவராயர் வைணவ மரபுக்குரிய தன்னடக்கத்துடன் தம்மைப் பற்றி தாம் கூறாமல் பெத்தன்னா கூறிய பாடல்களையே சேர்த்திருப்பது பாராட்டற் பாலதாகும்.

வெங்கடேசுவரனைத் துதித்து விட்டு கதை தொடங்குகிறார். ''நான் வின்னவிம்பம் ஸ்ரூ' ஆமுக்த மால்யதா மகாபிரந்தமுனகு கதா கிரமம்பெட்டி த'ன்ின''' எனத் தொடங்கி முதலில் ஸ்ரீவில்லிபுத்தூர் வருணனை செய்துள்ளார். வில்லிபுத்தூர் வருணனைப் பாடல்கள் இராயரின் கற்பனை நயமும், வருணனைத் திறமும் புலப்படுத்தும் பாடல்களாகும். திருவில்லிபுத்தூர் வருணனையில் வரும் சில பாடல்கள் மிகச் சுவையுடையவை.

''திருவில்லிபுத்தூரில் வீட்டு வாசலில் மணிகள் நிறைந்த நிலத்தில் தென்னை மரத்தின் பசிய ஓலைகள் பிரதிபலித்து இயற்கையே மெழுகிக் கோலம் போட்டது போல உள்ளது.''

''திருவில்லிபுத்தூரில் தமிழ்ப் பெண்கள் (த்ராவிடாங்கனல்) உத்யானவனத்தில் செங்கழுநீர்ப் பூக்கள் நிறைந்த பொய்கையில் குளித்துவிட்டு, சுவாமி திருமஞ்சனத்துக்காகத் தீர்த்தம் நிறைந்த குடத்தை இடையில் ஏந்தி, கையில் தாளினை ஏந்தியிருக்க குடத்தில் மலர்கள் அசைந்தாடவும், திவ்ய பிரபந்தம் பாடியபடி (திவ்ய பிரபந்த'யுகர்'ஸ்யல்) வழி நடந்து போவார்கள்.''

*1- 55*

வீட்டில் உள்ள உறை கிணற்றில் நீர் மேலே நிறைந்து ததும்பியபடி இருக்கவே, அங்குள்ள மீனைக் கண்டு ஆங்குள மரத்தின் கிளையில் மறைந்திருந்து குபீரெனப் பாய்ந்து மீன் கொத்திப் பறவை வீழ்ந்தும், எழுந்தோடியும் செல்வதானது, தமிழ்ப்

பெண்களின் பழக்கத்தால் (த்'ராவிபீ பரிசிதின்) வீடு என்ற பெண் பந்தாடுகிறாளோ என்னும்படியாக இருந்தது.

*1- 57*

மனித தம்பதிகள் உருவில் செதுக்கப்பட்ட பொம்மைகள் உடைய திருத்தேர்கள் இரண்டும், மேருமலையும், மந்தர மலையும் தம்மில் புண்ணியத்தில் உயர்ந்தவர் யார் என்று தெரிந்துகொள்ள திருவில்லிபுத்தூர் வந்துள்ளன போல் உள்ளன.

*1- 58*

தமிழ்ப்பெண்கள் (த்ராவிட குடும்பினுல்) இல்லத்தருகே உள்ள பொய்கையில், படிக்கட்டுகளில் மஞ்சள் அரைத்துப் பூசிக் குளிக்கவே, அலை பாய்ந்து படியருகே உறங்கும் அன்னங்கள் மீது மஞ்சள் நீர் படியவே, அந்த அன்னங்கள் பொன்னிறகுகளை உடைய ஆகாய கங்கையன்னங்களோ எனும் படியாக மருளூட்டியது.

*1- 64*

வில்லிபுத்தூர் நெல்வயலின் கால்வாய் மதகுக்கருகே இறக்கைகளுக்குள் தலையை நுழைத்துக் கொண்டு வாத்துக்கள் தூங்கவும், அதிகாலையில் வந்து குளித்து விட்டுப் போன பிராமணர்கள் தமது உடையைத் துவைத்துப் பிழிந்து வைத்து மறந்து போனார்களோ என்று கருதிய தலையாரி (கரையாளர்) அந்தத் துணியை அவர்கள் வீட்டில் கொடுத்து விடலாம் என்று எடுக்கச் செல்லவும், வாத்துக்கள் பறந்தோட ஏமாற்றமுற்ற அவர்களைக் கண்டு வயலில் வேலைபார்க்கும் பெண்கள் சிரித்துக் கேலி செய்வார்கள்.

*1 - 65*

தென்றல் காற்று திருமால் கோயில் மணியை அசைக்கவும், கதவிற் கோத்த சிறுமணிகளின் ஒலி கேட்டு, அக்கோயில் பிரகாரத்திலுள்ள சம்பங்கி மரக் கிளைகளில் தூங்கும் பறவைகள் திடுக்கிட்டு விழித்து ஓசை எழுப்பவும், அதுகேட்டு, விடிந்து விட்டதெனக் கருதிய தம்பதிகள் புலவி தீர்ந்து களித்தின்புறுவார்கள்.

*1 - 74*

வில்லிபுத்தூரில் தமிழ் நங்கையர் (த்'ரவிட கன்யலு) வீட்டு முன்றிலில் காயப்போட்ட நெல்லுக்கு காவலிருப்ப, அங்குள்ள

கோவிலில் வளர்க்கப்படும் மான்குட்டி அடிக்கடி வந்து நெல்லைத் தின்னவே, ஆங்கு, தலையில் கொணர்ந்து வேம்புக் கூடையில் செங்கழுநீர்ப் பூக்களை வைத்துக்கொண்டு கிராமப் பெண்கள் விற்பதற்காக இறக்கி வைத்த மலர்களைக் கொண்டு மெல்ல ஓச்சி விரட்டுவார்கள்.

*1 - 75*

இதுபோன்ற அழகிய கற்பனை நயமும், வருணனைத் திறமும் மிக்க பாடல்கள், 'ஆமுக்த மால்யத'வில் நிறைந்துள்ளன. பெரியாழ்வார் இல்லத்தில் ஒவ்வொரு பருவகாலத்துக்கும் ஏற்ப சமையல் செய்து விருந்தினர்க்கு அமுது படைக்கும் திறனை கலை நயத்துடன் சித்தரித்துள்ளார்.

மதுரையை வருணிக்கும் பாடல்களில் பல கற்பனைகள் செய்யப்பட்டுள்ளன.

''சிறிய விண்மீன்கள் சன்னல் வழியாக உள்ளே நுழையவும், அந்த விண்மீன்களைப் பிடிக்க நங்கையர் கதவுகளை மூடி விட்டனராம். அந்த விண்மீன்கள் தம்மை முத்துக்கள் என நினைத்து ஒட்டை போட்டு விடுவார்கள் என அஞ்சி, மேல் விதானத்தில் தொங்கும் பூமாலைகளில் பூக்கள் போல ஒளிந்து கொண்டன, பின் கதவு திறந்ததுமே மாளிகையை விட்டு வெளியேறிச் சென்றன.''

*2 - 13*

''இந்தா'' என்று கூறும்போதே முல்லைப் பற்களின் ஒளி படர நிலைத்த பார்வையோடு பார்த்து, விலை சம்மதிக்காமல் செல்லும் ஆடவரைப் பார்த்து, இதழ் மடித்து, சினத்துடன் பார்த்து முனங்க, திரும்பி வந்த அந்த ஆடவனை புன்முறுவலுடன் வரவேற்று, ''அவள் பூதான் பிடிக்குமா? என் பூ பிடிக்காதோ?'' என்று தொனிப்பொருளோடு சாதுரியமாகப் பேசி மயக்கிப் பூவிற்கும் பெண்கள், மன்மதனுக்கு மலரம்புகளை எடுத்துக் கொடுக்கும் ரதிதேவி போலிருந்தனர்.

*2 - 23*

ஆமுக்த மால்யத'வில் பருவ கால வருணனைகள் மிகச் சிறந்த கற்பனைகளோடும், இயல்பாகவும் வருணிக்கப்பட்டுள்ளன. கோடையில் சூரிய கிரணங்கள் கிணற்று நீரை எல்லாம் உறிஞ்சிக் கவர்ந்து விடவே, அது பொறாத பாழும் கிணறுகள் வானத்தரசனிடம்

முறையிடச் செய்வது போல தூசி தும்புகளுடன் பறக்கும் சூறாவளிக் காற்று வட்டமிட்டுத் திரிகிறது.

*2- 48*

இலவ மரங்கள் உடைந்து பஞ்சு ஆகாயத்தில் பறப்பது, சூரியனின் கதிர் வெம்மையால் சுட்டெரிக்கப்பட்ட நிலம், நீராகி காற்றில் பறப்பது போலத் தோன்றுகிறது

*2 - 50*

'ஆமுக்த மால்யத' வில் தத்துவக் கருத்துக்களும் ஆங்காங்கே சிறப்பாக எடுத்தாளப்பட்டுள்ளன. ஒரு சில காண்க.

''ஆத்மாவல்லாத உடம்பை ஆத்மாவாகவும், தனக்கு உடைமையற்ற பொருள்கள் மேல் தன்னுடையது என்ற உணர்வும், அஞ்ஞானமாகிய பெருமரத்திற்கு மூலமான விதையாகும்.''

*3-66*

உயிர்த்தொகைகட்கு பந்தமும், வீடு பேறும் பெறுவதற்கு காரணம் மனமேயாகும். புலன்களில் மனம் பற்று வைத்தால் பந்தமாகும். அதில் விடுபட்டு நின்றால் வீடு பேறாகும்.

*3 - 73*

''மீன் வலைப்பெட்டியில் நீரும், சிலந்தியின் நெசவும், காற்றில் பறக்கும் இலவம் பஞ்சும், வெயிலில் போட்ட மஞ்சளும், நீர்மேல் எழுத்தும் போன்ற நிலையற்ற இவ்வுடலுக்காக புண்ணியத்தை விற்பது கற்பூரத்தை விற்று விட்டு வெறும் உப்பை வாங்குவது போலாகும்.''

*6 - 62*

கருத்தாழமும், கற்பனை நயமும் மிக்க 'ஆமுக்த மால்யத' காவியம் ஆறு ஆஸ்வாசங்களாகப் பிரிக்கப்பட்டு எண்ணூற்றெழுபத்தொன்று பாடல்கள் கொண்டதாக அமைந்துள்ளது. முதல் மூன்று ஆஸ்வாசங்களில் (அத்தியாயம்) பெரியாழ்வார் வரலாறும், பின் மூன்று ஆஸ்வாசங்களில் கோதை வரலாறும் கூறப்பட்டுள்ளன. ★

---

★ *கிருஷ்ணதேவ ராயரின் ஆமுக்த மால்யத - தெலுங்குக் காவியம் இந்நூலாசிரியர் தமிழாக்கம் செய்துள்ளதை ஹைதராபாத் தெலுங்குப் பல்கலைக்கழகம் 1988ல் வெளியிட்டுள்ளது. 1989ல் சாகித்ய அகாடமி விருது பெற்றுள்ளது.*

சாஹித்ய சமராங்களா சார்வ பௌமன் ஆகிய கிருஷ்ணதேவ ராயர் இலக்கியத்திலும், போரிலும் இணையற்ற திறனுடையவராக, எழுதுகோலும், செங்கோலும் ஏந்தி தென்னக வரலாற்றில் பொற்காலத்தை நிறுவிப் புகழ்பெற்று வைணவத்தையும் வளர்த்து, தமிழக ஆந்திர வைணவத் தொடர்புக்கும் உரிய பெருமன்னராகத் திகழ்ந்துள்ளார். கிருஷ்ண தேவராயரின் அவையிலும், அவர் காலத்தும் இருந்த கவிஞர்களும் 'அஷ்டதிக் கஜங்களும்' கூட வைணவ சம்பிரதாயத்தை ஏற்றிப் போற்றிப் பரவியர்கள் என்பது சரித்திரம் கண்ட உண்மையாகும். கிருஷ்ணதேவராயரின் அவைத் தலைமைப் புலவராகத் திகழ்ந்த அலசானி பெத்தன்ன 'மனுசரித்ர' என்ற அழகிய காவியம் படைத்துள்ளார். தெலுங்கு ஐம்பெருங் காவியங்களில் முதன்மையானதாக மதிக்கப் பெறும் காவியம் இது. பெத்தனா, மனுசரித்ர, இராமானுஜ பூஷணரின் வசு சரித்ர, கிருஷ்ணதேவராயரின் 'ஆமுக்த மால்யத', தெனாலி ராம கிருஷ்ணனின் 'பாண்டுரங்க மகாத்மியம்', 'ஸ்ரீநாத கவி நைஷதம்' இந்த ஐந்தும் பஞ்ச கா்வியங்களாகும்.

'மனுசரித்ர' காவியம் இயற்றிய ஆந்திர நாட்டு கவிதா பிதாமகர் அல்லசானி பெத்தன்னா முதலில் சுமார்த்தராக இருந்தவர். அகோபில மடம் முதல் ஜீயராகிய ஆதிவண் சடகோபரின் சீடராகி வைஷ்ணவராக ஆனார். கிருஷ்ணதேவராயரின் ஆஸ்தானக் கவிஞராகத் திகழ்ந்தார். தமது 'மனுசரித்ர' பீடிகையில் தம் குருவை வணங்கும் பாடலில் கூறுவதாவது

*''கொலுதுன் மத்'கு'ரு வித்'யா*
*நிலயுன் கருணா கடாக்ஷ நிபி'டஜ்யோத்ஸ்னா*
*ந'ளி தாஸ்ரித ஜன து'ரிதச்*
*சல கா'டத்ரவாந்த ஸமிதி சடகோப யதின்''*

என்று ''எனது குருவாகிய கல்விக்கு நிலைக் களனாயவனும், கருணை மிக்க கடைக்கண் நிலவால், தன்னை அடைந்தவர்களின் பால இருட்கூட்டத்தைப் போக்குபவனும் ஆகிய சடகோப யதியை வணங்குகிறேன்'' எனத் துதித்துள்ளார்.

ஆதிவண்சடகோப ஜீயர் வைணவம் மட்டுமன்றி கலைகளையும் கற்பித்த குருவாகப் பாவித்துள்ளார். 'மனுசரித்ர' கதையை மார்க்கண்டேய புராணத்திலிருந்து தேர்ந்தெடுத்து, முதன் முதலில் காவியப் பாங்கில் புதிய பிரபந்த முறையை பெத்தனா

உருவாக்கினார். 'அருணாஸ்பதம்' என்ற ஊரில் பிரவரன் என்ற அந்தணன் இருந்தான். வேள்வியியற்றி விருந்தோம்பும் பண்புடைய அவனுடைய இல்லத்திற்கு ஒரு சித்தர் வருகிறார். அவரிடம் பிரவரன் பேசியபோது அவர் ஒரு மருந்து பூசிக் கொள்வதால் வான்வழியாக பல நாடுகட்கும் விரைவில் சென்று வருவதாகத் தெரிந்து தானும் இமயமலையைத் தரிசிக்க வேண்டும் என்ற விருப்பத்தை அவரிடம் தெரிவிக்கின்றான். சித்தரும் அருள்கூர்ந்து அவன் பாதத்தில் பசிய மருந்தைப் பூசிவிடவே அதன் ஆற்றலால் இமயமலையை அடைந்து அதன் இயற்கை எழிலைக் கண்டு மகிழ்கின்றான். சிறிது நேரம் கழித்து மீண்டும் தன் ஊர் திரும்ப நினைக்கும்போது வான்வழிச் செல்ல கால்கள் வரவில்லை. பனிமலையின் நீர்க்கசிவினால் அவன் பாதங்களில் பூசிய மருந்து கரைந்துபோய்விட்டது.

திரும்ப வழியறியாது திகைத்த பிரவரன் மலைச்சாரலில் ஒரு மணிமயமான இல்லத்தைக் கண்டான். அது பூங்கொடிகள், கனிமரச் சோலைகள் உள்ள அழகிய இடம். அங்கே 'வரூதினி' என்ற கந்தருவப் பெண் தனித்திருந்தாள். பிரவரன் அவளைப் பார்த்துத் தான் வழி தவறி வந்து விட்டதாகவும், வழிகாட்டுமாறும் வேண்டினான். இளநங்கையான அவளோ இவனழகில் ஈடுபட்டவளாக ''இவ்வளவு பெரிய கண்களை வைத்துக்கொண்டு யாரிடம் வழி கேட்கிறாய்! அந்தணனே! இளநங்கையிடம் பேச்சுக் கொடுக்கும் சாக்கில் கேட்கிறாயன்றி வந்த வழி தெரியாமலா போகும்? பயமில்லாமல் கேட்கும் அளவுக்கு தனித்திருக்கும் நான் எளியவளாகிவிட்டேன். அதிகம் பேசி என்ன பயன்? களைப்பு நீங்க தங்கியிருந்து விருந்தோம்பலை பெற்றுச் செல்க'' என்று காதல் புலப்படுமாறு கூறினாள். பிரவரன் புலன்களை அடக்கிய புனிதன் ஆகையால், ''பெண்ணே! நன்றி, நான் விரைந்து ஊருக்குப் போக வேண்டும். நீ நினைத்தால் வழி காட்ட முடியும்! என் வீட்டார் காத்துக் கொண்டிருப்பார்கள்'' என்றான். அதற்கவள் புன்முறுவல் பூத்தவாறு, ''எந்த ஊரோ? கால் நிற்காமல் போகிறேன் என்கிறாய்! இந்த இடம் உங்கள் குடிசை வீடுகட்கு இணையாகவில்லையா? ரத்தின மேடைகளும், கங்கை மணற் பரப்பும், சந்தனச் சோலைகளும் உடைய இந்த இடம் பிடிக்கவில்லையோ? உண்மையை ஏன் மறைக்க வேண்டும்? அந்தணனே! உன்னிடம் என் மனம் மையல் கொண்டு விட்டது. என்னை மன்மதன் மலரம்புகட்கு ஒப்படைப்பாயோ? மதுவுண்டு மயங்கிப் பாடும் வண்டுகள் சூழ்ந்த இந்தப் பூம்புதரில்லங்களில் இணைத்தின்புறுவாயோ?'' என்று தன் காதலை வெளிப்படுத்தி

னாள். அவளது வேட்கையைப் புரிந்து கொண்ட பிரவரன் அவளது விருப்பத்தை மறுத்து தான் விரைந்து ஊர் போய்ச் சேரவேண்டும் என்று கூறினான். வருதினி முகம் வாடி விட்டது. ''குருடனுக்கு வெண்ணிலவும், கூகைக்கு வெளிச்சமும் போல உனக்கு கந்தருவ கன்னியர் கூட்டுறவு பிடிக்கவில்லையோ? தானாக விரும்பி ஓர் இளநங்கை வந்து கண்மயங்க, வெண்ணெய் போல் உருகி அருகணைதல் எத்தனைப் பிறவித்தவம் செய்தால் வருமோ?'' என்று கூறி கெஞ்சினாள். அவன் மனம் சஞ்சலம் அடையாமல் திடசித்த முடன் இருந்தான். அவள் மீண்டும் கூறலானாள்.

> ''எங்கே மனம் குடத்திலிட்ட தீபம் போல அசையாமல் நிலைத்து நிற்குமோ, எங்கே புலன்கள் அலையாமல் ஒரே இடத்தில் அடங்கி இன்புறுமோ, அந்த இன்பமே பிரம்மமாகும். 'ஆனந்தோ பிரம்மம்' என்று வேதம் கூறியிருக்கிறது. அந்த இன்பம் நான் தரும்போது எதை விரும்பி மறுக்கிறாய்.''

இதைக் கேட்டும் பிரவரன் மசியவில்லை. ''இந்தப் பாண்டித்தியம் உன்னையன்றி வேறு யாருக்கும் இல்லை. காம சாத்திர உபாத்தியாயர் போலப் பேசுகிறாய்! உன்னோடு தர்க்கம் எதற்கு? மீசையிற்பட்ட தேன் போன்ற இந்த இழிந்த சுகங்களைப் பற்றிப் பேசாதே. உனக்கு வேள்வியியற்றிப் பெறும் ஆன்மீக இன்பங்கள் புரியுமா?'' என்று சொல்லி மறுத்துரைத்தான். வருதினி அவன்மேல் விழ வரவே கைகளால் அப்புறம் தள்ளிவிட்டு பிரவரன் அவ்விடம் நீங்கி வந்து, தன் தவவலிவால் அக்னி பகவான் அருள்பெற்று தன் இல்லம் வந்தடைந்தான். புறக்கணிக்கப்பட்ட வருதினி புலம்பினாள். அவமானத்தால் நெஞ்சுடைந்தாள். இந்நிலையில் ஒரு கந்தருவன் அவளை விரும்பினான். ஆனால், அவளோ இவனை விரும்பவில்லை. அவளுடைய காதலுக்கு ஏங்கிக் கிடந்தான். அவன் பிரவரனுடைய வேடம் புனைந்து, 'மாயா பிரவர'னாக வந்து ''வழி தெரியவில்லை என் செய்வது. உன் விருப்பப்படியே இருக்கிறேன்'' என்று கூறி வருதினியைக் கலந்து இன்புற்றான். இந்த மாயா பிரவரனுக்கும் 'ஸ்வரோசி' பிறந்தான். இந்த ஸ்வரோசியின் மகனே இரண்டாவது மனு ஆக இருந்தான். ஆறு ஆஸ்வாங்கங்களும் அறுநூற்றுபத்தாறு பாடல்களும் கொண்ட 'மனு சரித்ர' மிகச் சிறந்த சுவைமிகுந்த காவியம் ஆகும். இவ்வழகிய காவியம் படைத்து தெலுங்கிலக்கியத்தில் பிரபந்த வகைக்கு முன்னோடியாகத் திகழ்ந்த பெத்தனா தமிழக வைணவ மரபினராகிய

ஆதிவன் சடகோபர் சீடர் என்பதால் தமிழர்கள் பெருமிதம் அடைவது பொருத்தமுடையதே ஆகும்.

கிருஷ்ண தேவராயரின் அவையிலிருந்த மற்றொரு பெருங் கவிஞரான நந்தி திம்மன்னா 'பாரிஜாதாபஹரணம்' எனும் அழகிய காவியத்தைப் படைத்துள்ளார். கிருஷ்ணதேவருடன் அவர் மனைவி திருமலாதேவி ஊடல் கொண்டு பேசாமல் இருந்ததாகவும், அது காரணமாக கிருஷ்ணதேவராயர் ஊடல் நீட்டித்து பாராமுகமாக இருந்ததாகவும், இவ்விருவரது ஊடல் தீர்க்கவே திம்மன்னா 'பாரி ஜாதாபஹரணம்' இயற்றினார் என்றும் சொல்லப்படுகிறது. பாரிஜாதாபஹரணம் ஸ்ரீ கிருஷ்ணன் சத்தியபாமையின் ஊடல் தீர்க்கவே இந்திரனை வென்று பாரிசாத மரம் கொணர்ந்த கதையாதலின் குறிப்பாக கணவர் மனைவியரை ஊடல் தீர்க்க வேண்டும் என்பதை உணர்த்தினார் என்பர்.

இக்காவியம் வைணவ சம்பந்தமான காவியமேயாகும். இந்நூலின் முதல் கடவுள் வாழ்த்துப்பாடல் திருவேங்கடேசு வரனைத் துதிக்கிறது. அடுத்து சிவன், விநாயகன், லட்சுமி, சரஸ்வதி, சந்திரன் ஆகிய தெய்வங்களையும் துதித்துள்ளார். பின் கிருஷ்ண தேவராயரை வருணித்து அவர் மரபினைப் பாராட்டிவிட்டுத் தம் கதையைத் தொடங்குகிறார். திம்மன்னா சைவ பக்தராயினும், தம் நூலைத் தொடங்கும் முதல் பாடலில் வெங்கடேசுவரனைத் துதித்து ஸ்ரீ கிருஷ்ணனது கதையை எடுத்துக் கொண்டது ஸ்ரீ கிருஷ்ண தேவராயர் காலத்தில் வைணவத்துக்கு இருந்த செல்வாக்கினையே குறிப்பிடுகிறது.

தெலுங்கு ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான 'பாண்டுரங்க மஹாத்மியம்' சிறந்த வைணவ இலக்கியமாகும். இது சாதாரணமான ஸ்தல புராணம் அன்று. காவியமாக மதிக்கப்பட்ட சிறந்த நூல். இந்நூலை இயற்றியவர் தெனாலி இராமகிருஷ்ண கவி. இவர் கிருஷ்ணதேவராயர் அவையில் இருந்த தமிழகம் நன்கறிந்த நகைச்சுவைக் கவி (விகடகவி) தெனாலிராமன் தான் என்பது அறிஞர்கள் முடிபு. இவர் இளமைக் காலத்தில் சைவ சமயத்தைச் சார்ந்திருந்தார். அப்போது இராமலிங்கம் என்றே பெயர். அப்போது, 'உத்படாராத்ய சரித்திரம்' என்றொரு காவியம் இயற்றினார். இவரது தமையனார் தெனாலி அன்னமய்யா, 'சுதக்ஷிணா பரிணயம்' என்றொரு காவியம் இயற்றியுள்ளார். இவர் கி.பி. 1535ல் உத்படா ராத்ய சரிதமும், 1565ல் பாண்டுரங்க மகாத்மியமும் இயற்றியுள்ள

தாகக் கூறுவர். பாண்டுரங்க மகாத்மியம் 'விரூரி வேதாத்திரி மந்திரி' என்னும் அமைச்சருக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டது. விரூரி வேதாத்திரி கந்தாடை அப்பளாச்சாரியார் சீடன். சாரங்கு தம்ம கவியும் இந்த அப்பளாச்சாரி சீடனே. தம்மகவி 'வைஜயந்தி விலாசமு' என்ற 'தொண்டரடிப் பொடி ஆழ்வார்' சரிதத்தைத் தெலுங்கில் இயற்றியுள்ளார். கி.பி. 1542ல் கண்டிக்கோட்டை அரசன் கந்தாடை அப்பளாச்சாரியருக்கும் பூதானம் அளித்த சாசனம் ஒன்று உள்ளது. தமிழகத்திலிருந்து சென்ற வைணவ ஆச்சாரிய மரபினரான கந்தாடை அப்பளாச்சாரியர் மிகுந்த செல்வாக்குடன் வைணவத்தைப் பரப்பியவராவார்.

தெனாலி இராமலிங்கம் வைணவ மதத்தை ஏற்றுக்கொண்ட பின் தன் பெயரை தெனாலி இராமகிருஷ்ணகவி என்று மாற்றிக் கொண்டார். இராமகிருஷ்ண கவியுடைய வைணவ குரு பட்டர் சிக்காச்சாரியர் என்பவராகும். இந்த சிக்காச்சாரியருக்கு பல சீடர்கள் இருந்தனர். சாதுர்வாடிகா மஹாத்மியம், ஆனந்த கானை மஹாத்மியம் முதலிய நூல்களை இயற்றிய இராமகிருஷ்ணரின் மருமகனாகிய லிங்கமகுண்ட இராமகவியும், இவரது தம்பி லிங்ககுண்ட விலாசமு என்ற 'தொண்டரடிப் பொடி ஆழ்வார்' சரிதத்தைத் தெலுங்கில் இயற்றியுள்ளார். கி.பி. 1542ல் கண்டிக் கோட்டை அரசன் கந்தாடை அப்பளாச்சாரியருக்கும் பூதானம் அளித்த சாசனம் ஒன்று உள்ளது. தமிழகத்திலிருந்து சென்ற வைணவ ஆச்சாரிய மரபினரான கந்தாடை அப்பளாச்சாரியர் மிகுந்த செல்வாக் குடன் வைணவத்தைப் பரப்பியவராவார்.

தெனாலி இராமலிங்கம் வைணவ மதத்தை ஏற்றுக் கொண்ட பின் தம் பெயரை தெனாலி இராமகிருஷ்ண கவி என்று மாற்றிக் கொண்டார். இராமகிருஷ்ண கவியுடைய வைணவ குரு பட்டர் சிக்காச்சாரியர் என்பவராகும். இந்த சிக்காச்சாரியருக்கு பல சீடர்கள் இருந்தனர். சாதுர்வாடிகா மஹாத்மியம், ஆனந்த கானை மஹாத் மியம் முதலிய நூல்களை இயற்றிய இராமகிருஷ்ணரின் மருமக னாகிய லிங்கமகுண்ட இராமகவியும், இவரது தம்பி லிங்ககுண்ட திம்மகவியும் சிக்காச்சாரியரின் சீடர்களாகும். கொண்ட்ராஜு திம்மராஜு குமாரனும், 'காமந்தக' நூலை சமர்ப்பணம் பெற்றவனு மாகிய வேங்கடாத்ரி என்ற குறுநில மன்னனும் சிக்காச்சாரியரின் சீடனேயாகும். 'பாண்டுரங்க மகாத்மியம்' கடவுள் வாழ்த்துப் பாடல் ஸ்ரீகிருஷ்ண பகவானை வணங்கித் தொடர்கிறது. தம் நூல் சமர்ப்பணம் செய்யப்பட்ட விரூரி வேதாத்திரியை வாழ்த்தும்போது,

*"ஸ்ரீவைஷ்ணவ ஸ்வீகாரார்ஹு விரூ ரிப்பட்டணபதின்*
*வேதாத்ரி மந்திரீஸ்வருன்"*

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வமைச்சன் ஸ்ரீ வைஷ்ண வத்தை சுவீகரித்தவன் என்பது தெளிவு. லட்சுமி, பிரம்மா, சரசுவதி, சிவன், பார்வதி, விஷ்வக்சேனர், கருடன், அனந்தன் ஆகிய துதிப் பாடல்களில் கவிஞனது வைஷ்ணவ பக்தி புலப்படுகிறது. வால்மீகி, வியாசர், நன்னய ஆகிய மூன்று கவிகளை மட்டுமே பாராட்டும் இக்கவிஞன் அவையடக்கமாக,

*"தப்பு கலிகின சோடனே ஒப்புகலுகு.*
*சரச கவிதா வசோக்துல சரணியந்து*
*மப்பு கலிகி'ன நீ ஹார கருணி யந்து*
*ணம்புருத தா' ரா ப்ரவாஹம்பு லடரு காதெ"*

என்று குறையிருக்கும் இடத்தில்தான் குணம் இருக்கும் என்றும், மறுவுடைய மதியிடம் அமுதவெள்ளம் பரவி யிருக்குமன்றோ? எனக் கூறுகிறான். பின் தன் குருவாகிய சிக்காச்சாரியரை வணங்கி,

*"வாக்கான்தாஸ்ரயு ப'பட்டரு*
*சிக்காச் சார்யுல மஹாத்மு ஸ்ரீகு'ருமூர்த்தின்*
*நிக்கபு ப'க்தி ப'ஜின்செத'*
*னிக்காவ்யகலா கலாப மீடேறுடகுன்"*

சொல் மடந்தைக் குறைவிடமான பட்டர் சிக்காச்சார்யர் எனும் மகானாகிய குருமூர்த்தியை மெய்யான பக்தியுடன் இக்காவியக் கலைப்படைப்பு ஈடேறுவதற்கு வணங்குகிறேன் என்று கூறுகிறான். பின் விரூரி வேதாத்திரி மரபினரைப் பற்றிக் கூறி அவர்களுள் ரங்கராஜுவை அறிமுகப்படுத்தும்போது "ஸ்ரீமத் அஷ்டாக்ஷரீ சேவையில் நிபுணனும், கீதார்த்த சாரம் உணர்ந்தவனும், நன்கறியப்பட்ட திவ்யப் பிரபந்த அனுசந்தானம் உடையவனும், சுதர்சன மந்திரத்தை அறிந்தவனும், புதிய வைஷ்ணவ புராணங்கள் (விஷ்ணு, வராக, வாமன, வாயு புராணங்கள்) நான்கும் தெரிந்த வனும், தன் மதத்தைப் பேணுவதில் திறமுடையவனும், இராமா யணம் ஏழு காண்டமும் அறிந்தவனும், ஆளவந்தார் ஸ்தவத்தால் புகழ் பெற்றவனும், கடல் தாண்டிய படைபலத்தில் தூசி எழுந்து புகைபோலத் தோன்றச் செய்த தனது பிரதாபம் என்ற நெருப்பினை உடையவனும் ஆகிய கங்கம்மை கணவன் ரங்கராஜு" என்று

புகழப்பட்டுள்ளான். இந்த ரங்கராஜு திவ்விய பிரபந்தம், ஆளவந்தார் ஸ்தவம், விஷ்ணு புராணம், முதலியவற்றில் புலமை பெற்றவனாக இருந்திருக்கிறான் என்று தெரிகிறது. இவன் மரபில் வந்த வேதாத்திரி மந்திரியும் சிறந்த வைணவ பக்தனாக மட்டுமன்றி வள்ளலாகவும் திகழ்ந்தான். இவனது வள்ளன்மையை இராம கிருஷ்ண கவி புகழும் நயம் காண்போம்.

*''மாத்'ரி மீறுவி ரூரிவே தாத்'ரி ராஜு*
*தா'ன தாரார்த்த மகிலப்ர தா'ன நதுல*
*வெச்ச பெட்டுட தலகியோ விபுத'தடினி*
*தருண சசிமௌளி ஜடலலோ தா'கி'யுண்டு''*

''இணையற்ற வகையில், விரூரி வேதாத்ரி மன்னன், தானம் தருவதற்காக தாரை வார்க்க வேண்டி எல்லா முக்கியமான நதிகளை யும் செலவிடுவது கண்டு, அஞ்சியோ, ஆகாய கங்கை இளம் பிறை சூடியின் சடைகளில் ஒளிந்து கொண்டது?'' என்று பாராட்டுகிறான். இந்த வள்ளலின் குருவாகிய கந்தாடை அப்பளாச்சாரியரையும் கவிஞன் புகழ்ந்து சிறப்பித்துள்ளான்.

*''வேதமார்க்க ப்ரதிஷ்டா தைவத ஜேஷ்டு*
*டப்'யஸ்த ஷட்தர்ச னார்த்த ராசி*
*யதிராஜ ரசித பா'ஷ்ய க்'ரன்தநிர்ணேத*
*யகில புராணேதி காச கர்த்த*
*ப'ந்துர தி'வ்யப் ரபந்தானு சந்தா'த*
*பஞ்ச ஸம்ஸ்காரப்ரபஞ்ச சணுடு''*

*''வாதூ'ல முனி சந்த்ர வம்ச வர்த்'த'ன மூர்த்தி*
*சகலதே சா சார்ய நிகர கு'ருவு*
*பட்டமேனுங்கு ஸ்ரீரங்க பதிகி, னண்ணு*
*கா'ரி க'ர்பா'ம்பு ராசி நீ ஹார ரஸ்மி*
*சரச சாஹித்ய ஸௌஹித்ய சய்ய, நேடி*
*ஆனு வந்தாரு கந்தாள அப்ப கா'ரு''* -77

*''தத் தாத்'ருக் விப'வ ப்ரபா'வநிதி' க'ந்தாளப்ப கா'ரின் த'யா யத்தஸ்வான்து நிதாந்த சாந்தியுது லோகாச்சார்ய வர்யுன் சுதீ, சித்தாம் போ'ருஹ பா'னு கொ'ல்சுசு ததா'ஸீர்வாத'லப்'தோ'ன்ன தின் ஹத்தென்மீறி விரூரி மன்த்ரி மணி வேதா'த்'ரீ சுடு'த்'யத்'ருசி'ன்''*

-78

''வைதிக நெறி நிலை நிறுத்துவதில் பிரம்மாவும், ஆறு தரிசனங்களைக் கற்றறிந்தவனும், யதிராசர் (இராமானுஜர்) இயற்றிய ஸ்ரீபாஷ்ய நூலை பொருள் விளக்கம் செய்து முடிவு கூறுபவனும், எல்லாப் புராண இதிகாசங்களையும் தெரிந்தவனும், சிறப்புடைய திவ்யப் பிரபந்த அனுசந்தானம் செய்பவனும், பஞ்ச சம்ஸ்காரம் (தாப, புண்ட்ர, நாம, மந்திர, யாகங்கள்) செய்வதில் நிபுணனும், வாதூல முனிமரபில் சிறந்தவனும், எல்லா நாட்டு ஆச்சாரியர்களுக்கும் குருவானவனும், ஸ்ரீரங்கநாதனுக்குச் சேவை செய்பவனும், அண்ணாச்சாரியர் குமாரனும், இலக்கிய மேதையும், இன்றைய ஆளவந்தார் எனத் தகையவனுமான, கந்தாள அப்பலாச்சாரியார். இறையற்ற செல்வாக்குடையவர். அந்த கந்தாள அப்பலாச்சாரியர் சாந்த சித்தமுடையவர். உலகாசிரியர். நல்லோர் உள்ளம் எனும் மலர்கட்குக் கதிரவன். அவரை வணங்கி, அவரது வாழ்த்தின் பெருமையால் வீருரு மந்திரி வேதாத்திரி மிகு புகழ் பெற்றிலங்கினான்.''

இத்தகு இராமானுஜரின் ஸ்ரீபாஷ்யம், திவ்வியப் பிரபந்தம் ஆகியவற்றில் பெரும்புலமையுடனும், செல்வாக்குடனும் இருந்த கந்தாள அப்பலாச்சாரியரின் சீடர் வேதாத்திரிக்கு, பட்டர் சிக்காச்சாரியர் சீடர் தெனாலி இராமகிருஷ்ண கவி தமது நூலைச் சமர்ப்பணம் செய்துள்ளார்.

இதன்மூலம் அந்நாளில் தமிழக மரபினராகிய வைணவாச்சாரியர்கள் சிறப்பும், செல்வாக்கும் மிக்கவர்களாக இருந்தோடு, அவர்களது சீடர்கள் தெலுங்கிலக்கியத்துக்குச் சிறந்த சேவை செய்தவர்களாகவும் திகழ்ந்தனர் என்பது தெளிவாகிறது. பாண்டுரங்க மஹாத்மியம் நூலின் தொடக்கத்தில் தென்திசை போந்த அகத்தியர் சுவாமிமலைக்கு வந்து குமாரசுவாமியை (முருகனை) வணங்கி, தீர்த்தம், தெய்வம், க்ஷேத்திரம் இம்மூன்றும் சிறந்துள்ள தலம் எதுவெனக் கேட்க, முருகன் சிவனிடம் கேட்க, சிவன் திருமாலை நினைத்து 'பண்டரிபுரம்' என்று சொல்லி அந்த ஸ்தல மான்மியம் கூறுவதாக அமைந்துள்ளது.

நிகமசர்மன் என்ற அந்தணன், ஒழுக்கமற்றவனாக சூதாடியும், இல்லத்தில் இருந்த பொருட்களை விற்றும், வீட்டுக்கு வராமலும், திரிந்து கொண்டு இருந்தான். அவனது தமக்கை வந்து அவனுக்கு புத்திமதி கூறி தாய்வீட்டில் தங்கி இருக்கவே நிகமசர்மா அவளது நகைகளையும் திருடிக் கொண்டு ஊரை விட்டே ஓடிவிட்

டான். போகும் வழியில் காட்டில் திருடர் கூட்டம் வந்து இவனை அடித்துப் போட்டு நகைகளைப் பறித்துக் கொண்டு போய் விட்டனர். அடிபட்டுக் கிடந்த இவன் மேல் இரக்கம் கொண்ட குடியானவன் ஒருவன் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று சிகிச்சை செய்வித்துக் காப்பாற்றினான். அங்கிருக்கும்போதே, குடியானவனின் மரு மகளோடு நேசம் கொண்டு, திருவிழா நடந்த நாளில் எல்லோரும் தூங்கும்போது அவளையும் அழைத்துக் கொண்டு ஓடிவிட்டான். சென்றவன் வேடர்கள் கூட்டத்தில் சேர்ந்து விட்டான். சில நாட்கள் கழிந்ததும் அவள் இறந்து போனாள். பின்னர் ஒரு பறைச்சியைத் திருமணம் செய்து கொண்டு குழந்தைகளையும் பெற்றான். ஒருநாள் அவன் வீடு தீப்பற்றிக் கொள்ளவே மனைவி, மக்களும் இறந்தனர் அதனால் மதிகலங்கிச் சென்றவன் பண்டரிபுரம் அருகே நரசிம்ம க்ஷேத்திரத்தில் இறந்தான். அத்தனைக் கொடிய செயல்கள் செய்த பாவியாயினும் விஷ்ணு க்ஷேத்திரத்தில் இறந்தமையால் விஷ்ணு அருள் பெற்று புண்ணியலோகம் சென்றான். சுசீலை என்ற பெண், கருமியான தன் கணவன் ஊரிலில்லாத போது விருந்தாளிக்கு அமுது படைத்த புண்ணியத்தால் நற்பேறுற்றாள். இதுபோல பல சிறிய கதைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு கதையும் திருமாலின் அருளைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது. தெனாலி ராமகிருஷ்ணனின் தெலுங்குப் பாடல்கள் கற்பனை வளமுடன் அழகிய தேர்ந்தெடுத்த சொற்களுடன் மிளிருகின்றன.

*"தல லோபல நாலுக பூ*
*சல லோ தா'ரம்பு பால ஜல்லின நீரும்*
*ப'லெ வெலி யெறுக'க மனசுலு*
*க்லசி யபே'த'முன காபு கடனத னுண்டென்"*

"தலையில் நாக்குப் போலவும், மணிகளில் நூல் போலவும், பாலில் தெளித்த நீர் போலவும், பிறருக்குத் தெரியாமல் மனம் இணைந்து, வேறுபாடற்று குடியானவப் பெண்ணுடன் இருந்தான்."

தெனாலி ராமகிருஷ்ண கவியே தெனாலிராமன் என்று தெலுங்கறிஞர்கள் கூறியுள்ளனர். தெனாலிராமன் கதைகள் தமிழ் நாட்டில் வெகு பிரசித்தமான கதைகள் ஆகும். சிந்திக்கச் செய்து, சிரித்து மகிழச் செய்யும் தெனாலிராமன் செயல்கள் சீர்திருத்தக் கருத்துக்களை எடுத்துக் காட்டுவனவாக அமைந்துள்ளன.

சமுதாயத்தில் காணும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்டி, பகுத்தறிவோடும், பண்போடும் நடந்துகொள்ளுமாறு உபதேசம் செய்பவையாக அக்கதைகள் அமைந்துள்ளன. ஒரு சமயம் தெனாலிராமன் ஓர் ஆற்றங்கரையில் இருந்து தண்ணீரை எடுத்து வந்து மேட்டு மணலில் கொட்டிக் கொண்டிருந்தானாம். அதைக் கண்ட ஒருவன், "ஏன் இங்கே வீணாக தண்ணீரைப் பாய்ச்சுகிறாய்" என்று கேட்டான். அதற்கு அவன், "என் வயலுக்கு தண்ணீர் பாய்ச்சுகிறேன்" என்றான். "உன் வயல் எங்கே இருக்கிறது? இந்த இடம் களர்மேடாக அல்லவா இருக்கிறது?" என்றான் வந்து கேட்டவன். "என் வயல் இங்கிருந்து ஐந்தாறு மைல் தூரத்துக்கு அப்பால் உள்ளது" என்றான் தெனாலிராமன். "அங்கே கிடக்கும் வயலுக்கு இங்கே தண்ணீர் இறைத்து என்ன பயன்? தண்ணீர் அங்கே எப்படிப் போகும்?" என்றான் அவன். அதற்கு உடனே தெனாலிராமன், "ஏன் போகாது? நேற்று பிராமணர் திவசம் கொடுக்கும்போது இங்கே வைத்த பிண்டமும், இறைத்த எள்ளும், தண்ணீரும் எங்கோ சுவர்க்கத்தில் இருக்கிற நம் மூதாதையருக்குப் போகவில்லையா? அதை விடவா இது தூரம்?" என்று நையாண்டியாக பதில் கூறினான். (இக்கதை நானக் வரலாற்றிலும் உண்டு)

இதுபோன்ற பல கதைகள் நகைச்சுவையுடன், நயமான சீர்திருத்தக் கருத்துக்களையும் கொண்டிருக்கின்றன. கிருஷ்ண தேவராயர் தெனாலிராமனை ஆதரித்ததாகக் கதைகள் வருகின்றன. அந்தக் கதைகளில் அரசனைக் கண்டும் அஞ்சாமல், புலமைச் செருக்குடன் புத்தி புகட்டிய உண்மையான கவிஞனாகவே தெனாலிராமன் தென்படுகிறான்.

கிருஷ்ண தேவராயருக்குச் சிறிது முன்பு இருந்த கவிஞரான வென்னலகண்ட்டி சூரன்ன தனது 'விஷ்ணுபுராணம்' தெலுங்கு காவியத்தை, பாக நடுவில், குட்ளூரு ராஜதானியாக ஆண்ட ராவூரி ராகவ ரெட்டிக்குச் சமர்ப்பணம் செய்துள்ளார். இந்த ராகவரெட்டி வைணவத்தில் பற்று மிக்க மன்னன். இவர் திருமல தாதாசாரியார் சீடராகும்.

*"திருமல தாதய தேசிக*
*வரசிஷ்யுன கனுப மேய வைதுஷ்யுனகுன்*
*பர பூ'பால தம்ஸ்ஸம்*
*ஹரணததி'த்யுனகு' பல்லவாதித்யு னகுன்"*

என்று, ''திருமலை தாதாச்சாரிய குருவின் சிஷ்யனும், இணையற்ற பாண்டித்தியம் உள்ளவனும், பகை மன்னர் எனும் இருளைப் போக்கும் கதிரவனானவனும் ஆகிய பல்லவாதித்தன்'' என்று கூறுவதால், தாதாசாரியார் சீடர்களாகப் பல மன்னர்கள் இருந்தனர்.

விஜயவாடாவுக்கருகில் இருந்த ஸ்ரீகாகுளம் ஆந்திர விஷ்ணு கோவில் முன்னாளில் பிரசித்தி பெற்றிருந்தது. பதினைந்தாம் நூற்றாண்டுச் சிறந்த கவிஞர். அனந்தாமாத்தியன் போஜராஜீயமு என்ற பல கதைகள் அடங்கிய சிறந்த காவியத்தில் இக்கோவில் சிறப்புடன் திகழ்ந்த நிலையை வருணித்துள்ளான். ஸ்ரீநாதரும் ஸ்ரீகாகுளம் ஆந்திர விஷ்ணு திருநாளை வர்ணித்துள்ளார். கிருஷ்ண தேவராயரும் சென்று வணங்கி 'ஆமுக்த மால்யத' காவியம் பாடத் தூண்டுதல் பெற்றார். இச்சிறப்பு மிக்க ஆந்திர விஷ்ணுவைவிட வேங்கடசரே சிறப்பு மிக்கவராக பதினைந்தாம் நூற்றாண்டுக்குப் பின்னர் ஆனதாகத் தெரிகிறது. திருமலை வேங்கடேசுவரர் சம்பந்தமாக பல கதைகள், காவியங்கள் பிற்காலக் கவிஞர்களால் இயற்றப்பட்டன. சில சமர்ப்பணம் செய்யப்பட்டன.

கூசிமன்சி எர்ரன எனும் கவிஞன் பதினாறாம் நூற்றாண்டில் 'சகல நீதிகதாநிதானம்' எனும் காவியத்தில் திருவேங்கடத்தைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

*கடகனக பாபகாஷ்டம்பு வெம்பன*
*தஹன நாமமய்யெ த்ரவிட பா'ஷ*
*பாப கடமுவெம்ப ப'ஸ்மம்பு சேயுட*
*வெங்கடாத்ரியனக' வெலஸெபேரு*

என்று கடம் என்றால் பாவக்கட்டைகள், வெம்பென்றால் எரித்தல் என்று தமிழ்மொழியில் பேராயிற்று. பாவங்களாகிய கடம் எரித்தலால் வேங்கடமென்று பெயர் என அச்சொல் தமிழ்ச்சொல் என்று கூறியுள்ளார். ராயசம் வெங்கட மந்திரியின் 'லட்சுமிவிலாசம்' எனும் காவியமும், எர்ரகுடிபாடி வேங்கடகவியின் 'விஷ்ணுமாயா விலாசமும்', சல்லபல்லி வெங்கடார்யனின் 'ஸ்ரீகிருஷ்ண விலாசமும்', சிரேஷ்டனூரி வெங்கடாசாரியரின் 'ஸ்ரீனிவாச விலாச சேவதியும்', தரிகொண்ட வெங்கமாம்பாவின், 'வெங்கடாசல மஹாத்மியமும்', 'வெங்கட ரமணசதகம்', 'அலமேலு மங்கா விலாசம்', 'திருமல வெங்கடேச சதகம்', 'வெங்கடேச சதகம்', 'வெங்கட நாயகிப சதகம்' முதலியவை பதினேழு, பதினெட்டாம்

நூற்றாண்டுகளில் திருமலை வெங்கடேசு வரனைத் துதித்து இயற்றப்பட்ட வைணவ இலக்கியங்களாகும்.

இன்னும் போதனாவின் நாராயண சதகம், நரசிம்ம சதகம், கிருஷ்ண சதகம், தேவகி நந்தன சதகம், ராம சதகம் போன்ற வைணவ சதகங்கள் பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டில் இயற்றப் பட்டவை நூற்றுக்கணக்கில் உள்ளன. இவை வைணவம் சிறப்புற் றிலங்கி வருவதை மெய்ப்பிக்கின்றன. பதினாறாம் நூற்றாண்டில், சாரங்கு தம்மய்யா எனும் கவிஞர் தொண்டரடிப் பொடியாழ்வாரின் சரித்திரத்தை, 'வைஜயந்தி விலாசமு' என்றொரு காவியமாக இயற்றியுள்ளார். ஆழ்வார் திருமாலின் வைஜயந்தி எனும் பூமாலையில் அம்சமாகப் பிறந்தவர் ஆதலின், 'வைஜயந்தி விலாசம்' என்று இந்நூலுக்குப் பெயரிட்டுள்ளார். இது நான்கு ஆஸ்வாசங் களையுடைய 568 பாடல்கள் உள்ள சிறந்த காவியம் ஆகும்.

இந்தக் காலத்தில் மிகச் சிறந்த கவிஞனாகத் திகழ்ந்தவர் பிங்களி சூரணர். உலப் பெருங் கவிஞர்களில் ஒருவர் எனத்தகைய மகா கவி. இவரும் வைணவத்தில் பற்றுடைய கவிஞராவார். ஆந்திர நாட்டின் வடக்கெல்லையில் மராட்டிய மாநிலத்தை ஒட்டியுள்ள 'பிங்களி' எனும் ஊரில் பிறந்த அந்தணர் மரபில் சூரணர் பிறந்தார். இவருடைய பாட்டனாரைப் பற்றி ஒரு கதையுண்டு. அவர் பெயர் கோகன்ன. அவர் ஒருநாள் காட்டில் போகும் வழியில் அவருக்கு ஒரு வளையல், பாசிமணி கிடைத்தது. மின்னும் அதனை ஏதோ மணியாக இருக்கும் என நினைத்து பொறுக்கி எடுத்துக்கொண்டு வந்து தன் வீட்டில் ஒரு பக்கம் ஒளித்து வைத்துவிட்டு மறந்துவிட்டார். ஒருசில நாளில் 'பேகி' என்ற ஒரு பெண் அவருடைய இல்லத்தில் அடிமையாகி எல்லா வேலைகளும் மிக எளிதாகச் செய்து கொண்டிருந்தாள். ஒருநாள் அவள் தான் இருக்கும் இடத்திலிருந்து கொண்டே நாக்கை நீட்டித் தூரத்தில் இருந்த விளக்கைத் தூண்டினாள். அதைப் பார்த்து விட்ட கோகன்னா, இவள் ஒரு பேய் என்று கருதி அவளை வேலையிலிருந்து விலக்க என்ன பாடுபட்டும் இயலவில்லை. எந்தக் கடினமான வேலை தரினும் அதை உடனே செய்து விடுவாள். இவளை விரட்ட முடியாதென்று அஞ்சிய கோகன்னா வேறொரு ஊரில் குடிபுகுந்தார்கள். மறுநாள் காலையே பத்துப் பேராலும் தூக்க முடியாத பெரிய ஆட்டுரலைத் தலையில் தூக்கிக் கொண்டு வந்து புது வீட்டில் இறக்கி, "இதை ஏன் விட்டு வந்தீர்கள்?" என்று கேட்டவாறே வந்து நின்றாள். கோகன்னா விரக்தியுற்று, "எங்களை விட்டுப் போகமாட்டாயா?" என்று

கூறவும். பேகி, ''என் வளையல் மணியைத் தந்தால் போக மாட்டேனா?'' என்று கேட்டாள். தான் என்றோ மறந்துவிட்ட அந்த வளையல் பாசி மணியை அவளிடம் தரவும், அவள் வந்த வழியே போய்விட்டாள். பிங்களிச் சூரணர் இச்செய்தியைத் தம் கவிதையிலும் குறிப்பிட்டிருக்கிறார்.

''பேர் வெலயங்க நாக 'னுடு' பிங்களி கோ'கபு தோ'த்த முண்டுக்ந் தர்வி நொகர்ந்து பேகி யனுதா' னினி தா'சிக'னேலெ'' பெயர் விளங்குமாறு அந்த பிங்களி கோகன எனும் சிறந்த அறிஞன். கந்தருவ மடந்தையான ஒருத்திபேகி என்பவளை வேலைக்காரி யாகப் பரிபாலித்தான் என்று தமது பிரபாவதி பிரத்யும்னமு என்ற காவியத்தின் பீடிகையில் கூறியிருக்கிறார். கோகன்னா சூரனாவின் முப்பாட்டனார் ஆவார்.

பிங்களி சூரனா கி.பி. 1530ல் பிறந்து ஐம்பதாண்டுகள் வரை வாழ்ந்து, 1580ல் மறைந்ததாகக் கருதப்படுகிறது. இவர் மிகச் சிறந்த படைப்பான ராகவ பாண்டவீயம் எனு ் இரு பொருட் காவியத்தை தெலுங்கில் இயற்றினார் இவருக்கு முன்பு வேமுல வாட பீமகவி 'ராகவபாண்டவீயம்' எனும் இருபொருட் காவியம் இயற்றியதாகச் சொல்லப்படுகிறதென்றும், ஆனால், அது தம் காலத்தில் கிடைக்கவில்லை என்றும் சூரனா கூறியிருக்கிறார். ஒரே பாடலை இரு பொருள்படும் படி சிலேடை நயத்தால் பிரித்தால் இராமாயணமும், வேறு வகையாகப் பிரித்தால் பாரதமும் வரும். இந்தக் காவியம் தெலுங்கியத்துக்கு ஒரு வரப் பிரசாதமேயாகும். வடமொழியில் இதே போன்ற காவியம் உள்ளது. கி.பி. 1177ல் சோமபிரபாசார்யர் எனும் சமணக் கவிஞர் ஒரே சுலோகம் எழுதி அதை நூறுவிதமாகப் பிரித்துக் பொருள் கொண்டால், இருபத்து நான்கு தீர்த்தங்கரங்கள், திரிமூர்த்திகள், சில மன்னர்கள், கவிஞரின் குரு ஆகியோரின் துதி அடங்கி இருந்த வகையில் அமைத்திருப்ப தாகவும், அதன் பெயர் 'சதார்த்தக காவியம்' என்னும் ஈயுண்ணி வெங்கடவீரராகவாச்சாரியர் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். ★

பிங்களி சூரணரின் 'ராகவ பாண்டவீயமும்' இத்தகைய ஒரு சாதனை மிக்க நூலேயாகும். மற்றொரு அரிய சாதனையாக பிங்களி சூரணர் 'களாபூரணோதயம்' என்ற காவியம் படைத்துள்ளார்.

---

★ ஆந்திர சாஹித்ய பரிஷத் பத்திரிக்கை. சமக்ர ஆந்திர சாஹித்யம் எட்டாம் பாகம் ஆருத்ரா 1965.

வடமொழியில் 7ம் நூற்றாண்டில் பட்ட பாணர் 'காதம்பரி' எனும் வசன காவியம் புனைக்கதையாக அமைத்துள்ளது போன்றே தெலுங்கிலும் தம் சொந்தக் கற்பனையில் கதையை உருவாக்கி புதிய புனைகதைக் காவியமாக 'களாபூரணோதயம்' படைத்துள்ளார். தென்னிந்திய மொழிகளில் புனைகதைக் காவியம் இது ஒன்றேயாகும். மற்றவை எல்லாம் இதிகாச புராணங்களிலிருந்தோ, வரலாற்றிலிருந்தோ, ஐதீகங்களிலிருந்தோ வந்த கதைகளே காவியமாக்கப்பட்டுள்ளனவாகும்.

பிங்களி சூரணர் முதலில் சைவராக இருந்து பின்னர் வைணவராக மாறியவர். தம் 'களாபூரயோதயத்தில்' வைணவத்தைப் பாராட்டியும், தமிழகத்தைப் பாராட்டியும் எழுதியுள்ளார். இந்நூல் அளிய ராமராஜுவின் தயாதிகளில் ஒருவரான நந்தியால கிருஷ்ணம ராஜுவுக்கு சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. வைணவ மதத்துக்கு மாறிய பிறகு தமிழகமும், கேரளமும் கூட தரிசிக்க வந்ததாகத் தெரிகிறது. இவரது இலக்கியத்தில் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை ஒரே உணர்வோடும், சிறப்போடும் சித்தரித்து தேசிய ஒருமைப்பாட்டைப் பற்றி சிந்தித்தவராகத் தெரிகின்றார்.

கிருஷ்ணர் துவாரகையில் இருந்த காலத்தில் நடந்ததாகக் கதை கற்பனை செய்யப்பட்டுள்ளது. கணிகையர் குலத்தில் பிறந்த கலபாஷிணி, தன் உடன் இசை பயின்ற மணிகந்தரனை மானசீகமாக காதலித்து இருந்தாள். ஆனால் வான்வழிச் சென்ற குபேரன் மகன் நளகூபரன் எழிலைக் கண்டு மனம் பறி கொடுத்தாள். இப்படியிருக்க ஒரு நாள் வான்வழிச் செல்லும் சிங்கவாஹனத்தில் ஒரு சித்தன் வந்தான். கலபாஷினி உபசரித்தாள். அவன் தன் யோக மகிமையால் வெகு தொலைவில் இருக்கும் நளகூபரணிருக்கும் இடத்துக்கு அழைத்துச் செல்வதாகச் சொல்லி தன் வாகனத்தில் கலபாஷினியை ஏற்றிக்கொண்டு வான்வழியே சென்று நடுக்காட்டில் ஒரு காளி கோயில் முன் இறக்கினான். கோயிலில் வணங்கி வழிபடுமாறு கூறிவிட்டுக் குளிக்கச் சென்றான். அக்கோவிலில் இருந்த கிழவி ஒருத்தி கலபாஷினியைக் கண்டு இந்த சித்தன் உன்னைக் கொன்று பலியிடவே வந்துள்ளான் என்ற செய்தியைக் கூறுகிறாள். காதலனைக் காணும் ஆசையோடு வந்தவளுக்கு நடுக்காட்டில் சாக நேர்ந்ததே என்ற கவலை. சித்தன் வந்து அவளைக் கொல்ல முயலும் போது அந்தக் கிழவி தடுக்கிறாள். சித்தன் கிழவியைக் கொல்லக் கை தூக்குகிறான். காளியருளால் சித்தன் வான்வழி வீசி எறியப் படுகிறான். இதுபோன்ற பல அற்புத நிகழ்ச்சிகளைக் கற்பித்து கதை

நடக்கிறது. கதையில் வரும் துணைக் கதைகள் பல. அவை சாதுரியமாகவும், மனித மன நுண்ணுணர்வோடும், வேட்கைகளையும் விளக்குவதாக அமைந்துள்ளன. களாபூரணோதயம் கற்பனைக் களஞ்சியமான கதையாகும். ★

இந்நூலில் மணிகந்தரன் தீர்த்த யாத்திரை செய்யும்போது காஷ்மீர் முதல் திருவனந்தபுரம் வரை செல்கின்றான். ஆங்காங்குள்ள வைணவத் தலங்களை சிறப்பித்துள்ள பாடல்கள் வருகின்றன. குறிப்பாக தமிழகத்தில் திருமலைக்குச் சென்று வெங்கடேசுவரனைத் தரிசித்து மகிழ்கின்றான்.

''பாதங்களாகிய தாமரையில் சிக்குண்ட பார்வையை எவ்விதம் கனகாம்பரத்திற்கு மீளக் கொணர்வது? கனகாம்பரத்தில் பொருந்திய பார்வை அசையாமல் நிற்க, வயிற்றினைக் காண எவ்விதம் கொணர்வேன்? வயிற்றின் எழில் கண்ட கண்கள் இன்புற்று நிலைத்து விடுவதால் எவ்விதம் திருமறுவைக் காணப்பெயர்ப்பது? மார்பின் திருமறுவில் நின்ற பார்வை திரும்பி வராது. கரமலர்களை எப்படிக் கண்டின்புறுமாறு திருப்ப முடியும்? கைத்தாமரை, கழுத்தழகு, இதழ், மகரகுண்டல முகவிலாசம், கண்கள், புருவம், கூந்தல், எங்கு நோக்கினும் அதை விட்டு விலக முடியாம லிருக்கிறேன். என் சொல்வது?'' என்று கூறும் இப்பாடல், 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற கம்பன் பாடலை நினைவூட்டு கிறது. பின் காஞ்சிபுரம் வருகிறான். பின் சோழமண்டல வருணனை செய்த கவிஞன் காவேரி நதியைப் போற்றிப் புகழ்கின்றான்.

''சோழமண்டல மஹாக்'ராம்பு லீக்ஷின்சு சு'ன்'' வந்த மணி சுந்தரன், ''கரும்பும், நெய்வயலும், நெருங்கிய பாக்கு மரங்களும், பூந்தோட்டங்களும், தாமரைப் பொய்கைகளும், ஆற்று வாய்க்கால் களும், தென்னை மரக்காடுகளும், மாந்தோப்புகளும் உள்ள சோழநாடு மனதிற்கு மகிழ்ச்சியும், வியப்பும் தரப் பாராட்டினான்.''

காவேரி நதியை வருணித்த கவிஞன் திருவரங்கச் செல்வனை வருணிக்கிறான். காவிரி நதி மகள் தன் இரு கரங்களாலும் திருவரங்கத்தை அணைத்துக் கொண்டிருப்பதாக கற்பனை செய்கிறான். காவிரி, கொள்ளிடம் எனும் இரு ஆறுகளும்

---

★ களாபூரணோதயம் நூல் இந்நூலாசிரியரால் மொழி பெயர்க்கப்பட்டு, தஞ்சாவூர், சரஸ்வதி மஹால் நூலகத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

நடுவேயுள்ள திருவரங்கத்தைச் சூழ்ந்திருந்து அழகுறுவதை கவிஞன் வருணித்துள்ளான். பின்னர் கும்பகோணம் வந்து சாரங்கபாணியைக் கண்டு, கும்பேசுவரனையும், இராமபத்திரனையும் வணங்குகிறான். பின் அங்கிருந்து இராமேசுவரம் வந்து அங்கிருந்து திருவனந்தபுரம் செல்கின்றான். இவ்விதம் தமிழக வைணவ ஸ்தலங்களைத் தரிசித்த மணி கந்தரன் மூலம் பிங்களி சூரணர் தமிழகத்தின் எழிலை சிறப்பித்துப் பாடியிருக்கிறார்.

இராமராஜபூஷணர், அய்யலராஜு ராமபத்ர கவி முதலிய மகா கவிகளும் வைணவத்தைச் சிறப்பித்துள்ளனர். மரிங்கண்டி சிங்கராச்சாரியர் வர்தராஜ ஸ்துதி, ஸ்ரீரங்க சதகம், தசரத ராஜ நந்தனம் முதலிய இருபது நூல்கள் இயற்றிய கவிஞர். தசரதராஜ நந்தனம் நிரோட்டகக் காவியம். பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த மரிங்கண்டி சிங்கராச்சாரியர் தமிழகத்திலிருந்து சென்ற வைணவ மரபினர். இராமானுஜரின் குலமான 'ஆசூரி' குல மரபினர். தம் நூலில்,

*"அனகு' டாசாது பட்டாரகாஹ்வயுண்டு*
*கூர நாயக தேசிக குஞ்சரம்பு*
*முதலியாண்டானு டீப'னுல் முகு'ருகொல்வ*
*அவனி விலசில்லெ லட்சுமண யதி வருடு"*

கூரேசர், முதலியாண்டார் முதலியோர் சேவிப்ப நின்ற லட்சுமணயதி (இராமானுஜர்) மரபில் வந்ததாகக் கூறியுள்ளார். இவரது முன்னோரில் சென்னயாசார்யர், அப்பலாச்சாரியார், ஜகந்நாதாச்சாரியர் முதலிய வைணவாசாரியர்கள் இருந்தனர். வெங்கட நரசிம்மாசாரியர், 'இராமானுஜாப்யுதம்', கோதா வது'டி பரிணயம் எனும் ஆண்டாளின் வரலாறு, செவ்வப்பிள்ளைராய சரித்திரம் முதலிய பதின்மூன்று காவியங்கள் இயற்றியவர். இத்தகு வைணவ ஆசாரியர்கள் குடும்பத்தில் பிறந்த மரிங்கண்டி சிங்கராச்சாரியர் பல நூல்கள் இயற்றி தெலுங்கு இலக்கியத்துக்கு குறிப்பிடத்தக்க சேவை செய்தவர். இவரது மரபினர் இன்றும் தெலுங்கானாவில் தேவர கொண்ட, கரீம் நகர் மாவட்டம், மஹபூப் நகர் மாவட்டம் ஆகிய இடங்களில் வைணவ பக்தியில் சிறந்தவர்களாக உள்ளனர். விஜயநகர சாம்ராஜ்ய காலத்தில் வைணவ ஆச்சாரியர்கள் ஆந்திர நாட்டில் வைணவத்தைப் பரப்பியதோடு மட்டுமன்றி தெலுங்கிலக்கியத்துக்கே அரிய பல சேவை செய்துள்ளனர். தெலுங்கு ஐம்பெரும் காப்பியங்களில் மூன்று

தமிழகத்திலிருந்து சென்ற வைணவ ஆச்சாரியார்களின் சீடர்களால் இயற்றப்பட்டவை. தமிழகத்திலிருந்து சென்ற வைணவ மரபினராகிய மரிகண்டி சிங்கராச்சாரியர் போன்றோரும், சிறந்த இலக்கியத் தொண்டாற்றியுள்ளனர். விஜயநகர மன்னர்களும், அவர்களையடுத்து வந்த மன்னர்களும் வைணவத்தைப் போற்றி யுள்ளனர். பல மானியங்கள் தந்து வளப்படுத்தியுள்ளனர்.

# 12. தமிழக – ஆந்திர தொன்மைத் தொடர்புகள்

தமிழகத்துக்கும், ஆந்திர நாட்டுக்கும் தொன்னெடுங் காலமாகவே தொடர்புகள் இருந்து வந்துள்ளன. அரசியல், மதம், கலை, இலக்கியம், பண்பாடுகளில் இத்தொடர்பு காணப்படுகிறது. ''வட வேங்கடம், தென்குமரி'' ஆயிடைத் தமிழ் கூறு நல்லுல கத்திற்கு மிக அண்மையில் அமைந்திருந்த ஆந்திர நாடு, வட இந்திய மன்னர்கள், முஸ்லிம் மன்னர்கள் படையெடுப்புகளில் ஏற்பட்ட போர்களைத் தானே முன்னின்று தியாகம் புரிந்து தமிழ் எல்லைக்குப் பாதுகாப்பாகவும் இருந்து வந்துள்ளது. திராவிட மொழிகளில் ஒன்றாக மொழி வழியில் நெருங்கிய தொடர்புள்ள ஆந்திர இனம், ருக்வேத காலத்தே குறிப்பிடப்பட்ட இனம் ஆதலின் அதன் தொன்மை புலப்படும்.

ஆந்திரர், தெலுங்கர், வடுகர் என்றும் வழங்கப்படுவர். தமிழ்நாட்டின் வடபுலத்தவராதலின் வடுகர் எனப்பட்டனர். வடுகப்பட்டி, வடுக வேளாளர், வடுகநாதர் முதலிய இட, இன, சுட்டுப் பெயர்கள், வடுக நம்பி முதலிய பெயர்கள், வடுகர் தெலுங்கரே என்பதை புலப்படுத்துகிறது. நச்சினார்க்கினியர், நன்னூல் உரைகாரர் மயிலை நாதர் முதலியவர்களும் வடுகு என்பது தெலுங்கு என்றே கொண்டனர். தெலுங்கர்களாகிய வடுகர்களைப் பற்றி பழமையான சங்க இலக்கியத்தொகை நூல்களில் பல குறிப்புகள் வருகின்றன.

—— குறுந்தொகை பதினொன்றாவது பாடலில்,

"............. மூனாது
குல்லைக்கண்ணி வடுகர்
வல்வேற்கட்டி நல்நாட்டும்பர்
மொழிபெயர் தே எத்தர்........"

என்றும்,

நற்றிணை இரு நூற்றுப்பன்னிரண்டாம் பாடலில்,

"கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர்
நெடும்பெருங்குன்றம்................"

என்றும்,

அகநானூறு நூற்று ஏழாம் பாடலில்,

"............... வா அல்வெண்சோறு
புகரரைத் தேக்கின் அகலிலை மாந்தும்
கல்லா நீள் மொழிக் கதநாய் வடுகர்"

என்றும்,

அகநானூறு இருநூற்றுப் பதிமூன்றாம் பாடலில்,

"ஓங்குவெள்ளருவி வேங்கடத் தும்பர்
..................................
வால் நிணப் புகவின் வடுகர் தே எத்து"

என்றும்,

அகநானூறு இருநூற்று ஐம்பத்து மூன்றாவது பாடலில்,

"நேரா வன் தோள் வடுகர் பெருமகன்"

என்றும்,

அகநானூறு இருநூற்று எண்பத்தொன்றாம் பாடலில்,

"................ விரைசெலல் கடுங்கணை
முரண்மிகு வடுகர்"

என்றும்,

அகநானூறு இருநூற்றித் தொண்ணூற்றைந்தாம் பாடலில்,

"................ நோன் சிலைத்
தொடையமை பகழித்துவன்று நிலை வடுகர்
பிழி ஆர் மகிழர் கலி சிறந்தார்க்கும்
மொழி பெயர் தே எம்"

என்றும்,

அகநானூறு முன்னூற்று எண்பத் தொன்றில்,

"கற்றுரிக் குடம்பைக் கதநாய் வடுகர்
வில் சினம் தணிந்த வெருவரு கவலை"

என்றும்,

அகநானூறு முன்னூற் றெழுபத்தைந்தில்,

"வம்ப வடுகர் பைந்தலை சவட்டி"

என்றும் கூறப்படும் செய்திகளைத் தொகுத்துப் பார்த்தோமானால், வேங்கடமலைக்கு அப்பாலிருந்து வந்த, மொழி வேறுபட்ட நாட்டினரான, தமிழ் கல்லாத, நீட்டிப் பேசும் மொழியுடைய, புதிதாக வந்துள்ள, ஆனிரையுடனும், கதநாயுடனும் திரிந்து, வில்தொழில் சிறந்த வடுகர்களைத் தமிழர்கள் நன்கறிந்துள்ளனர் எனத் தெரிகிறது.

கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து மூன்றாம் நூற்றாண்டு வரை இருந்த ஆந்திர சாதவாஹன மன்னர்கள் தமிழ் நாட்டுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தார்கள் என்று தெரிகிறது. சாதகர்ணி, சதகர்ணி, சாலிவாஹன என்றும் அழைக்கப்பட்ட அம்மன்னர்கள் வெளியிட்ட

நாணயங்களில் ஒருபக்கம் பிராகிருதமும், ஒருபக்கம் தமிழும் இருப்பதாகக் கல்வெட்டறிஞரும், காரைக்குடி கம்பன் கழகம் கண்ட இலக்கியத் தொண்டருமான கம்பன் அடிப்பொடி சா. கணேசன் கூறுகிறார். சிலப்பதிகாரத்தில் கால்கோட் காதையில் சேரமன்னன் செங்குட்டுவன் சதகர்ணி மன்னர்கள் நட்புடன் இருந்த செய்தி வருகிறது.

*"வேற்றுமையின்றி நின்னொடு கலந்த*
*நூற்றுவர் கன்னரும் கோற்றொழில் வேந்தே*
*வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது*
*கடவுள் எழுதவோர் கற்கே யாயின*
*ஓங்கிய இமையத்துக் கற்கால்கொண்டு*
*வீங்கு நீர்க் கங்கை நீர்ப்படை செய்தாங்கு*
*யாந்தரும் ஆற்றலம் என்றனர் என்று*
*வீங்குநீர் ஞாலம் ஆள்வோய் வாழ்கென"*

நூற்றுவர் கன்னராகிய சதகர்ணி மன்னர், ''பத்தினிக் கடவுள் படிமம் சமைக்க வடபுலம் செல்வதாயின் தாமே இமயமலைக் கல்லைக் கொண்டு வந்து கங்கையில் நீர்ப்படை செய்து கொணரும் ஆற்றல் உடையேன்'' என்று சஞ்சயன் எனும் தூதன் கூறியதாகச் செய்திவருகிறது. இந்த நூற்றுவர் கன்னர் ஆந்திர நாட்டு மன்னர்களாகிய சதகர்ணிகளே. சதம் என்பது நூறு என்றும் கர்ணி என்பது கன்னர் என்றும் மொழி பெயர்த்துக் கூறப்பட்டுள்ளது. இச்செய்தி மூலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஆந்திர மன்னர்களும், தமிழக மன்னர்களும் நட்புடன் இருந்து வந்தனர் என்பது தெளிவாம். காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தின் வடபகுதியை ஆண்டு வந்த பல்லவ மன்னர்கள் ஆந்திரர்களே என்று கருதப்படுகிறது. மகேந்திர வர்மன், நரசிம்ம வர்மன் காலத்தில் தமிழகத்தில் கலை மறுமலர்ச்சியும், சமயப் போராட்டங்களும் நிகழ்ந்தன. சமண மதமும், பவுத்த மதமும் ஆந்திர நாட்டில் சிறப்போடிருந்தது. நாகார்ச்சுணர் முதலிய பவுத்த தத்துவ ஞானிகள் ஆந்திராவில் இருந்தனர். தமிழகத்தும் சமண பவுத்த மதங்கள் செழித்திருந்தது. சமண, பவுத்த மதங்கள் போதித்த ஒழுக்கக் கட்டுப்பாடுகளும், துறவு மனப்பான்மையும், புலன்களை ஒடுக்குதலும், மக்களின் செல்வாக்கை இழந்துவிட்டது. ஆழ்வார்களும், நாயன்மாரும் போதித்த பக்தியியக்கம், எளிய கடவுள் நம்பிக்கை மூலமும், பக்தி மூலமும் ஆன்ம விடுதலை பெற முடியும் என்று போதித்ததால் அதற்கு செல்வாக்கு மிக்கது. இந்த

தமிழகத்தில் உதித்த சமய மறுமலர்ச்சி ஆந்திர நாட்டையும் பாதித்தது. அங்கிருந்த பவுத்த, சமண மதங்களும் வலுவிழந்தன. சங்கரரின் திக்விஜயமும் இதற்குப் பயன்பட்டது. வைதீக மதம் மீண்டும் செல்வாக்குற்றது. சோழ மன்னர்கள் கீழைச் சாளுக்கிய ராகிய ராஜ மஹேந்திரபுரம் பகுதியான வேங்கி நாட்டரசர்களுடன் திருமண உறவுகள் வைத்துக் கொண்டனர். ராஜராஜன் தன் மகள் குந்தவையை வேங்கியரசன் விமலாதித்தனுக்கு மணம் செய்வித்தான். ராஜேந்திர சோழன் தன் மகள் அம்மங்க தேவியை ராஜராஜ நரேந்திரனுக்கு மணம் புரிவித்தான். இதன் விளைவாக உபயகுலத்துக்கும் உயர்வளித்த குலோத்துங்க சோழன் உதித்தான்.

இந்த மண உறவுகள் ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் நெருங்கிய பிணைப்பை ஏற்படுத்தியது. ஆந்திர நாட்டினை ஆண்ட வெலநாடிசோடர்கள், நெல்லூர் (விக்கிரமசிங்கபுரம்) ஆண்ட மன்னர்கள் எல்லாம் தம்மை கரிகால சோழன் மரபினர் என்று கல்வெட்டுக்களிலும், காவியங்களிலும் பொறித்துக் கொண்டனர். ராஜராஜ நரேந்திரன் (1019 - 1061), ராஜமஹேந்திரவரத்தில் இருந்து கொண்டு ஆந்திர நாட்டை ஆண்டான். அவனது அவையில் இருந்த கவிஞர் நன்னையா ஆவார். இவரே தெலுங்கிலக்கியத்தில் முதற் கவிஞர். ஆதி கவியாகப் பாராட்டப் பெற்றவர். இவர் தமக்கு முன்பிருந்த சமண இலக்கியங்களை (ஏட்டுச் சுவடிகளை) எரித்துப் பொசுக்கிவிட்டார் என்றும், அதனால் பிற்காலத்தே மனநோய் கண்டு மரணமுற்றார் என்றும் ஒரு கதை வழங்கி வருகிறது.

ஆந்திர நாட்டில் வைதீக மதம் தழைக்கக் காரணமாக இருந்த நன்னய்யா மகாபாரதம் மூன்று பருவங்கள் மட்டும் தெலுங்கில் தழுவலாக மொழிபெயர்த்துப் புகழ் பெற்றார். இவர் தமிழகத்திலிருந்து ஆந்திர நாடு சென்ற அந்தணரே என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். ஸ்ரீநாதகவியின் 'பல்நாட்டி வீர சரித்திர' என்ற காவியத்தைப் பதிப்பித்த பேரறிஞர் பண்டித அக்கிராஜு உமாகாந்த, வித்யாசேகரர் தமது முன்னுரையில் கூறுவதாவது. ''நன்னய தெலுங்கரன்று என்றே தெரிகிறது. ஆந்திர நாட்டை வென்ற சாளுக்கியருக்கும்சோழர்கட்கும் உறவு உண்டான போது இவர் தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. ஆந்திர நாட்டிற்கு சோழர் சம்பந்தம் உண்டான பிறகு, தமிழர்கள் சிலர் இங்கு வந்ததாகக் காணப்படுகிறது. அவர்களில் ஒருவராக நன்னயவும் இருக்கலாம். ஆதலால்தான் தமது பாரதத்தில் தமிழ்ச் சொற்கள் பலவற்றை அனாவசியமான இடங்களில்கூட கலந்திருக்கிறார். இவர்

உபயோகித்த சொற்கள் சில தெலுங்கு நாட்டில் வழக்காற்றில் இல்லாதது மட்டுமன்றி இன்றும் தமிழ்நாட்டில் சாதாரண மக்களிடமும் வழக்காற்றில் உள்ளது.''

இவர் குறிப்பிடும் 'உம்மை' பிரயோகங்கள், எல (இளம்), தொட்டி (தொட்டு), பேர்மி (பெரிது), மனமு (மனது), போலெ (போல) என்ற சொற்கள் திராவிட குடும்ப மொழிக்குப் பொதுவானது. அதுகொண்டு இவை தமிழ்ச் சொற்கள் சொற்பிரயோகம் என்று கூறி நன்னயர் தமிழர் என்று கூறுவது பொருந்தாது. எனினும் நன்னய என்ற பெயர் வழக்கும், அவர்கால அரசியற் சூழ்நிலையும், அவரது பாரத மொழி பெயர்ப்புக்குத் துணை புரிந்த நாராயணப்பட்டுவைக் குறிப்பிடுவதாலும், இவர் கையாண்ட விருத்தப்பாக்களில் கன்னடத்தில் பம்ப பாரதத்தில் இல்லாத மோனையை, தமிழ் மரபுப்படி பயன்படுத்தியுள்ளமையாலும், இவர் தமிழ் நாட்டிலிருந்து சென்ற அந்தணராக இருக்கலாம்.

செய்யுட்களில் எதுகையுடன் மோனையை ஓரடிக்குள் தமிழ், தெலுங்கு மட்டுமே பயன்படுத்துவது குறிப்பிடத்தகுந்ததாகும். 'கோணக்கை மதியில்ல கன்னடக்கெ யதியில்ல' என்ற பழமொழி குரங்குக்கு மதியுமில்லை, கன்னடத்தில் மோனையுமில்லை என்று கூறுவது காண்க.

ராஜராஜ நரேந்திரன் அவைப்புலவரான நன்னய, அம் மன்னனின் தாயாராகிய குந்தவையுடன் தஞ்சையிலிருந்து சென்ற பிராமணர்களில் ஒருவராக இருக்கக் கூடும் என்ற கருத்து ஏற்கக் கூடியதே.

தெலுங்கு இலக்கிய வரலாற்றில் நமக்குக் கிட்டும் முதல் நூல் 'நன்னய பாரதமே'. அஃது தமிழ்நாடு தந்த பரிசு என்று கொண்டால் தமிழகம் பெருமைப்படத்தக்க செய்தியே ஆகும்.

நன்னயருக்கு அடுத்த பழமையான கவிஞர் நன்னெசோடர். நன்னெ சோடர் முதலில் இருந்தாரா? நன்னய முதலிலா? என்று வாதங்கள் பண்டிதர்களிடையே தீவிரமாக நடந்தன. இறுதியில் நன்னயவுக்குப் பின் வந்தவரே நன்னெ சோடர் என்று முடிவாகி யுள்ளது. நன்னெ சோட, நன்னி சோட என்றும் வழங்குவர். இப்பெயரும் தமிழ்ப் பெயர் தான் என்பதில் ஐயமில்லை. சோட என்று சோழன் என்பதன் தெலுங்கு மரூஉ ஆகும். நன்னெசோடர்

'குமாரசம்பவம்' என்ற காவியம் படைத்தவர். காளிதாசனின் வடமொழிக் குமார சம்பவத்தை ஆதரிசமாக வைத்துக் கொண்டு இயற்றப்பட்டாலும், அதன் மொழிபெயர்ப்பன்று. சுதந்திரமான தெலுங்குக் காவியமாகும். இவரது காலம் கி.பி. 1130 முதல் 1150 ஆகும். இவர் சோழமன்னர் பரம்பரையில் வந்தவர். ஆந்திர நாட்டை ஆண்ட சோழமன்னர் மரபினர். இவரது ஆட்சியில் தமிழகத்தில் சில பகுதிகளும் இருந்திருக்கலாம். தன்னைக் கரிகாலன் மரபுடையவன் என்றும் உறையூர் அதிபதி என்றும் கூறிக் கொண்டார்.

குமாரசம்பவம் சிறந்த தெலுங்குக் காவியம். வடமொழியில் உத்படர் என்னும் கவிஞரும் குமார சம்பவம் இயற்றியுள்ளார். அவருக்கு முன்பே காளிதாசனும் இயற்றினான். இவ்விரு நூல்களின் சில கவிதைகளின் சாயல் இதில் உள்ளது. இந்நூலில் பல தமிழ்ச் சொற்களும் உள்ளன. குமார சம்பவம் முதல் ஆஸ்வாசம் 54-வது பாடலில்,

*"கலுபொன்ன விருல பெருக'ம்*
*க'லு கோடி ரவம்பு தி'ஸல க'லயக' ஜெலக'ன்*
*பொலுசு னொரயூரி கதி'பதி*
*னலகு'பராக்ரமுட டெங்கணாதித்யுண்டன்"*

என்று தன்னைப் பற்றிக் கூறியுள்ளார்.

*"கல்லான புன்னைப் பூக்கள் மிகுந்திருக்கவும்*
*கல்கோழியின் குரல் திசைகள் கலக்கும்படி*
*பரவவும், புகழ்மிகு உறையூரின் அதிபதியும்*
*சிறந்த பராக்கிரமும் உடைய டெங்கணாதித்தன்"*

என்று தம்மை அறிமுகம் செய்துள்ளார்.

உறையூருக்குக் கோழி என்ற பெயர் உண்டு. யானையுடன் ஒரு கோழி போரிட்டு கோழி வென்றதாகவும், அத்தகு வீரம் மிக்க நிலம் என்றும் உறையூருக்கு கோழி என்ற பெயர் தமிழ் இலக்கியத்தில் வழங்குகிறது. எனினும் இந்தப் பாடலில் "கல்கோழி கூவிய குரலைச் சிறப்பித்துள்ளார்." இது ஏதோ ஒரு புராண ஐதீகத்தின் அடிப்படையில் வந்த கற்பனையாகலாம். இந்தக் கதை எதுவோ தற்போது தெரியவில்லை. குமாரசம்பவத்தில்,

*''ஜலதி' மஹிபதி மொலனுலகா' ஜுட்டி*
*பாலின் செ கரிகால சோடுடு''*

என்று கடலுடுத்த நிலவுலகம் ஆண்ட கரிகால சோழனைப் பாராட்டி, அம்மன்னன் மரபினன் என்கிறார். குமார சம்பவத்தில் நாயி (நாய்), நீறு (சாம்பல்), கட்டாயமு (கட்டாயம்), குளிருகொலு (குளிர்கொல்), மலருலு (மலர்கள்), முடி (முடி), எறகு (இறங்கு), அடிசிரி (அடித்தனர்) முதலிய பல தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன.

''குமார சம்பவம் ஏட்டுப் பிரதி ஒன்றே ஒன்று மட்டுமே கிடைத்தது. அதுவும் தஞ்சாவூர் சரசுவதி மஹாலில் மட்டுமே உள்ளது. மானவல்லி ராமகிருஷ்ணய்யா என்னும் அறிஞர் அதனைக் கண்டு பதிப்பித்து வெளியிட்டார். 1907ல் முதல் பதிப்பாக முதல் பாகம் வெளியிட்டார். இதனைக் கண்ட தெலுங்கறிஞர்கள் பல விமரிசனங்களை எழுதினர். சிலர் இது மானவல்லி ராமகிருஷ்ண கவியே எழுதி பழமையான கவிஞருடையதாகச் சொல்கிறார்'' என்றும் ஐயமுற்றனர். முதலில் நன்னயவுக்கு முன்னே இருந்தவர் நன்னெசோடர் என்று மானவல்லி ராமகிருஷ்ணய்யா கூறியதால் கருத்து வேறுபாடுகளும், விவாதங்களும் எழுந்தன. ஆய்வுகள் நடந்தன. பின் நன்னயவே முதல்வர் என்று நிலைநாட்டினர். 1914ம் இரண்டாம் பாகம் வெளியிட்டபோது அதன் முன்னுரையில், ''நன்னெ சோடன் உறையூரில் இருந்து ஆண்ட தெலுங்கு சோழ மன்னர் மரபினன் என்றும், வைணவம் வட நாட்டிலிருந்து பிறந்தது என்றும், தான் இந்த நூலைப் படைக்கும் திறன் உள்ளவனும் அல்ல. படைக்கவும் இல்லை'' என்று எழுதினார்.

நன்னெசோடர் தமிழகத்தில் உறையூரில் தங்கியிருந்த போதுதான் இந்த நூலைப் படைத்தாரா? ஆந்திர நாட்டில் ஆண்ட கரிகாலனுடைய மரபினரான தெலுங்கு சோழ மன்னரா என்பது முடிவாகவில்லை. எப்படியாயினும் இந்த நூல் தமிழகத்தில் பிறந்து தமிழகத்தில் மட்டுமே கிடைத்ததனால் ஆந்திர நாட்டிற்குத் தமிழகம் தந்த பெரும் பரிசாகக் கருதலாம்.

வீரசைவ மதக் கவிஞர்களுள் மிகப் பிரசித்தமானவர் பால்குரிகிசோமநாதர். இவர் கி.பி. 1130 முதல் 1190 வரை வாழ்ந்தவர். தெலுங்கிலக்கியத்தில் முதன் முதலில் 'ஜானுதெலுகு' எனும் தூய நல்ல தெலுங்கு மொழியில், மக்களுக்காக புரியும் நடையில், துவிபத என்னும் ஈரடிச் செய்யுள் வகையில் 'பசவபுராணம்', 'பண்டிதா

ாத்யசரித்ர' எழுதியவர். அறுபத்து மூன்று நாயன்மார்களைப் பற்றியும் சம்பந்தர், அப்பர், சுந்தரர் வரலாறுகளை பசவ புராணத்திலும், பண்டிதாராத்ய சரிதத்திலும் ஆங்காங்கே தெரிவித்துள்ளார். இவர் காலத்தில் காகதீய மன்னன் பிரதாப ருத்திரன் இருந்தான். ஒருசமயம் ஓரங்கல் (வாரங்கல்) நகரில் சிலர் சோமநாதரியற்றிய பசவபுராணம் படித்துக் கொண்டிருந்தனர். அவ்வழியே வந்த பிரதாபருத்திரன் என்ன என்று கேட்க, அக்கூட்டத்தில் கயவனான ஒரு பிராமணன், ''பால்குரிகி சோமநாதன் எனும் பதி தன்(இழிந்தவன்) அண்மையில் நடுவே மோனை வைத்து ஈரடிச் செய்யுள் நூல் செய்தான். பிரமாணிகமானதல்ல, படிக்கத் தக்கதல்ல'' என்று கூறவே மன்னன் சென்றுவிட்டான். இதுகேட்ட சைவ பக்தர்கள் அவனைக் கொல்லக் கருதி சோமநாதரிடம் சென்று நடந்த கதையும் சொன்னார்கள். அதற்குச் சோமநாதர் அவனை ஒன்றும் செய்ய வேண்டாம் என்று தடுத்துத் தாமே ஒரு வண்டியில் ஓரங்கல் வந்தார். அதைக் கேட்ட சிலர் அவரைத் தடுக்கவும், கேலி செய்யவும், அங்கஹீனமான குருடு - முடவர்களை ஒன்றுதிரட்டி விபூதி பூசி அனுப்பி வரவேற்கச் செய்தனர். சோமநாதரைக் கண்டதுமே அங்கஹீனர்கள் குறை நீங்கி நல்லுடம்பு பெற்று அவரை வணங்கினர். ஏற்படுத்திய தடைகளும் அகன்றன. மன்னனும் செய்தியறிந்து வந்து அடிபணிந்தான். முக்காலமும் உணர்ந்த சோமநாதர் இந்நாடு மகம்மதியர் வசப்படும் என்பதை அங்குள்ள பக்தர்கட்கு உணர்த்தி பிரதாப ருத்திரனின் மந்திரியும், தமது சீடருமான இந்துடூரி அன்னயவிடம் சொல்லி, ''டோகிபர்ரு'' என்னும் ஊரைப் பெற்று அதில் சில காலம் இருந்து முதுமை வரவே சமாதியுற்றார்.

ஒரு தடவை சக்ரபாணி ரங்கநாதன் என்பவர் வைணவ மதமே பெரிதென வாதம் செய்யவே, சோமநாதர் தன் மகன் சதுர்முக பசவேசர் மூலம் வாதப் போர் செய்து வெல்வித்தார். அந்த ரங்கநாதர் ஸ்ரீசைலம் வழியே சென்றும், அங்குள்ள மல்லிகார்ச்சுனதேவனை வணங்காததால் கண்களை இழந்தார். அகோபிலம் வந்து பின் சிவனடி பணிந்து கண்களைப் பெற்று சோமநாதரிடம் வந்து மன்னிப்புப் பெற்றார் என்றும் கூறப்படுகிறது.

சோமநாதர் அந்தண குலத்தவர். பல மொழிகளை நன்கறிந்த கவிஞர். பசவரின் வீரசைவ மத பிரவர்த்தகர். வேதங்களுக்கு 'சோமநாத பாஷ்யம்' எழுதிய மேதை. கன்னடத்திலும் நூல்கள் இயற்றிய பெருங்கவிஞர். தம் வாழ்நாள் முழுவதும் சுயநலமின்றி

சைவமதப் பிரச்சாரத்தில் ஈடுபட்டவர். தெலுங்கு மொழியில் புதிய நடையை உருவாக்கிய தொல்பெருங் கவிஞர். இவர் தமிழ் மொழியையும் நன்கு அறிந்திருந்தார். நாயன்மார் சரிதங்களை ஆந்திர நாட்டுக்கு அறிமுகப்படுத்திய பெருமை இவருக்குண்டு. அது மட்டுமின்றி தமது 'விருஷாதிப சதகம்' எனும் நூலில் ஒரு தமிழ்க் கவிதை பாடியுள்ளார். பசவரைப் புகழும் இந்த நூலில் தாம் பல மொழிப் பாடல்களை எழுதியுள்ளார். கன்னடம், மணிப்பிரவாளம், மகாராஷ்டிரம், பிராகிருதம், சமஸ்கிருதம் முதலிய மொழிப் பாடல்களோடு தமிழிலும் ஒரு பாடல் அழகாக வரைந்துள்ளார். விருஷாதிப சதகம் ஐம்பத்தாறாவது பாடல் இது.

*"பரமனே யென்னை யாண்டவனே*
*பன்னகத்தானே யனாத நாதனே!*
*பெரியனே புனிதனே பேருடையானே*
*பிரானே அப்பனே*
*தரிமுறி அய்யனே"*

*அனுசு 'த்'ராவிட பா'ஷ னுதின்து மன்மனோ*
*வர கருணா விதேய! பஸவா*
*'ப'ஸவா! பஸவா வ்ருஷாதி'பா!*

இப்பாடல் மூலம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஒரு தெலுங்குக் கவிஞர் தமிழிலும் புலமை பெற்று பாப்புனையும் ஆற்றலும் பெற்றிருந்தார் என்பது பெருமை தருவதாகும்.

கன்னட நாட்டில் உதித்த பசவரின் சரிதம் இயற்றியது போலவே, ஆந்திர நாட்டில் உதித்த பசவரின் சமகாலத்தவரான 'பண்டிதா ராத்யரின் சரிதமும்' சோமநாதர் இயற்றியுள்ளார். இந்நூலில் திருப்பருப்பதம் என திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற ஸ்ரீசைலம் (கர்னூல் மாவட்டத்தில் உள்ளது) மல்லிகார்ஜுனரை தரிசிக்க வந்த பல்வேறு மொழி பேசும் மக்களை வருணித்துள்ளார். அதில் தமிழர்கள் பாடிப் பரவியதை இவ்விதம் வருணித்துள்ளார்.

*"அருதொந்தனட்ள அய்யருவதே' னம்பு*
*வருசயு த்'ராவிட பா'ஷ சாங்கமுக'*
*அருளு கிரிதியென்னெ அரனே பிரானே!*
*சிரிகிரி நிலையனே சிவனேயாண்டவனே*
*அங்கமாறும்தானே யாயிருந்தவனே*

*மங்கயர் பாங்கனே மல்லிகார் ஜுனனே!*
*யானுனக் கடியனே அகிலநாயகனே*
*யேனமில் லாலானெ யில்லவில் லியனே,*
*அறுபத்து மூவருக் காத்ம நாயகனே*
*மறுநாலுமறியாத மல்லிகார்ஜுனனே*
*ஆலால கண்டனே ஆதியற்றவனே*
*சூலியே மல்லிகார்ஜுனனே யென்னவனே*
*எல்லையில்லாதானே எங்குமுள்ளவனே*
*சொல்லவல்லாதானே மல்லிகார்ஜுனனே,*
*ஆறுமிடற்றிரு நீறுமுள்ளவனே*
*ஏறேறு மீசனே எல்லமல்லயனே (எல்லாம் வல்லவனே?)*
*வேதியர் துதிக்கும் ஆதியே சிவனே*
*சோதியே மல்லிகார்ஜுனனே யென்னவனே*
*அனுசு சிந்தலு வெட்டியாடுசு பாடு சு"*

தமிழக பக்தர்கள் ஸ்ரீசைலம் சென்ற காட்சியை வருணித்துள்ளார். இதில் வரும் துவிபதவில் அமைந்த தமிழ்ப் பாடல் நிலை மண்டில ஆசிரியப்பாவாகவே அமையும் நயம் கண்டு வியப்பும் மகிழ்வும் உற நேர்கிறது. சோமநாதர் பெரியபுராணம், தேவாரம், நம்பியாண்டார் நம்பிகளின் திருவந்தாதி முதலிய தமிழ் நூல்களையும் நன்கு கற்றறிந்தவர் எனத் தெரிகிறது. சேக்கிழாரின் சம காலத்திலோ, சிறிது பின்னோ வாழ்ந்த சோமநாதர், சேக்கிழாரைப் போலவே மாணிக்கவாசகரைப் பற்றிய கதைகளையும் வருணிக்கவில்லை. பெரிய புராணத்தையும், பசவபுராண, பண்டி நாராத்ய சரிதங்களையும் ஒப்பிட்டாய்ந்து வரலாற்றுண்மைகளை வெளிக் கொணர்வது அறிஞர் கடன் ஆகும்.

பதினைந்தாம் நூற்றாண்டில் பிடுபர்த்தி சோமநாத கவி பால்குரிகி சோமநாதரின் பசவபுராணத்தை அது துவிபத (ஈரடி) செய்யுளில் அமைந்ததால் விருத்தப்பாக்களில் அமைத்தார். இந்த நூலிலும் தமிழக நாயன்மார் சரிதங்கள் வருகின்றன.

பிடுபர்த்தி பசவன்ன (1495 - 1500) என்னும் கவிஞர் 'பில்லநயனாரு சரித்ர' என்ற நூலில் திருஞானசம்பந்தரின் வரலாறு காவியமாகப் படைத்துள்ளார். இந்நூல் தற்போது கிட்டவில்லை. சிறுத்தொண்டரின் கதையைத் தெலுங்கில் பல கவிஞர்கள் காவியமாக வரைந்துள்ளனர். அதுபோலவே மெய்ப்பொருள் நாயனார் கதையும் காவியமாக வரைந்துள்ளனர். கிரிப்பாட்டி

திம்மய்யா, சித்தாரு கங்காதர கவி, வாலெகோடய்யா என்பவர்கள் 'சிரியாளசரித்ர' என்று காவியங்கள் படைத்துள்ளனர். தெலுங்கிலக்கியத்தில் மாபெரும் கவிஞர்களில் ஒருவராகிய ஸ்ரீநாதகவி (1370 - 1445) பிரபுட தேவராயரின் அவையில் கனகாபிஷேகம் செய்யப்பட்டவர். பாகவதம் இயற்றிய பம்மெரபோதனாவின் மைத்துனர். பல்நாடி வீரசரித்ர, சிருங்கார நைஷதம், காசிகண்டம், கிரீடாபிராமம் முதலிய பல காவியங்களைப் படைத்தவர். இவர் பிராகிருதப் பேரிலக்கியமான 'காதாசப்த சதி'யை தெலுங்கில் மொழி பெயர்த்திருந்தார். இரு பாடல்களே இன்று கிடைக்கிறது. நூல் கிடைக்கவில்லை. அருணகிரி நாதரின் முன்னோரான டிண்டிம கவியை வாதில் வென்றவர். பாண்டித்தியம் மிக்க பெருங்கவிஞர். இவரது 'ஹரவிலாசம்' என்னும் தெலுங்கு காவியம் சிவபெருமான் திருவிளையாடலைக் குறிக்கும் நயமிக்க காவியம் ஆகும். இந்நூலில் சிறுத்தொண்டர், சிரியாளன் கதைகளை அழகாக வருணித்துள்ளார். தக்குப்பல்லி துக்கய்யா (1480) காஞ்சிபுர மஹாத்மியமும், பைரவகவி (1490) யின் ஸ்ரீ ரங்க மஹாத்மியமும் தமிழகத்தின் பெருமையை உணர்த்தும் காவியங்கள். பிற்காலத்திலும் பல கவிஞர்கள் சைவ நாயன்மார் வரலாறுகளை காவியங்களாகவும், யட்சகானங்களாகவும் இயற்றியுள்ளார்கள். சைவ சமயம் போன்று வைணவமும், தமிழகத்திலிருந்து ஆந்திர நாட்டிற்குப் பரவியது. ஆழ்வார்கள், இராமானுசர் முதலிய ஆசாரியர்கள் தெலுங்கு நாட்டில் வைணவம் பரவக் காரணமாக இருந்தனர். திருமங்கை ஆழ்வார் அகோபிலம் (சிங்கவேள் குன்றம்) சென்றவர். இராமானுசரும், ஸ்ரீகூர்மம், சிம்மாசலம், அகோபலம் ஆகிய ஆந்திர நாட்டிலுள்ள வைணவ க்ஷேத்திரங்கட்குச் சென்றார். தமிழகத்திலிருந்து சென்ற அந்தணராகிய கிருஷ்ணமாச்சாரியர் பன்னிரண்டாம் நூற்றாண்டில் சிம்மாசலத்தில் இருந்து 'சிம்மகிரிவசனமுலு' எனும் வசன இலக்கிய மூலவராகத் திகழ்ந்து வைணவம் பரப்பினார். அகோபல மடத்தை நிறுவிய வேதாந்த தேசிகரின் சீடர் மரபினரான ஆதிவண் சடகோபர் ஆந்திர நாட்டில் வைணவம் பரப்பிய மூலவர்களில் ஒருவர். வேதாந்த தேசிகர் குமாரர் வரதாச்சாரியரும் ஆந்திர நாட்டில் வைணவம் பரப்பியவராவர்.

ஆதிவண்சடகோபரின் சீடராகிய தாள்ளபாக அன்னமாச்சாரியர் திருப்பதியில் இருந்து திருவேங்கடவனின் புகழை ஆந்திர நாட்டில் பரப்பி இசையுலகின் பிதாமகர் ஆகத் திகழ்ந்தார். ஆழ்வார் பாசுரங்களும், இராமானுசரின் நூல்களும் கற்றறிந்த கவிஞர்.

ஆயிரக்கணக்கான தெலுங்குக் கீர்த்தனைகளைப் படைத்தார். இவரது குமாரர் தாள்ளபாக பெத திருமலாச்சாரியரும் தந்தையைப் போன்ற சிறந்த கவிஞராகவும், இசைப்பாடல்கள் இயற்றிய மேதையாகவும், வைணவ ஆசாரியராகவும் திகழ்ந்தார். இவருடைய குமாரர் தாள்ளபாக திருவேங்கள நாதர் (1498 - 1561) என்னும் சின்னன்னா 'பரமயோகி விலாசமு' என்ற காவியத்தை ஆறாயிரப்படி குருபரம் பரா பிரபாவம் என்ற மணிப்பிரவாள நடை நூலின் அடிப்படையில் ஆழ்வார் ஆசாரியர்கள் சரிதத்தை 'துவிபத' செய்யுளில் இயற்றி யுள்ளார். ஆதிவண் சடகோபரின் மற்றொரு சீடரான அலசானி பெத்தன்னா தெலுங்கு இலக்கியத்தில் பிரபந்த வகைக் காவியம் எழுதிய முதல்வராக திகழ்ந்தார். இவரது 'மனுசரித்ர' மிகச்சிறந்த காவியம் ஆகும்.

தமிழக ஆந்திர உறவுக்கு மிகச் சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தவர் ஸ்ரீகிருஷ்ண தேவராயர் (1509 - 1530), சூடிக்கொடுத்த நாச்சியரின் சரிதத்தையும், பெரியாழ்வார் வரலாற்றையும், 'ஆமுக்தமால்யத' என்ற காவியமாக அமைத்தார். தெலுங்கு ஐம் பெரும் காவியங்களில் ஒன்றான 'ஆமுக்தமால்யத'வில் ஸ்ரீவில்லி புத்தூர் வருணனை மிக அழகாகச் செய்துள்ளார். ராயர் தமிழகத்தை யும் ஆண்டார். ஆதலின் இவர் காலத்தில் தமிழக ஆந்திர மக்கள் ஆந்திராவிற்கும், தெலுங்கர்கள் தமிழ்நாட்டிலும் வந்து நிரந்தரமாகத் தங்கினார்கள். கிருஷ்ணதேவராயர் தமிழ்க் கவிஞர்களையும் ஆதரித்தவர் ஆவார். இருசமய விளக்கம் என்னும் தமிழ் நூல் இயற்றிய அரிதாசர் கிருஷ்ண தேவராயரால் சிம்மாசலத்தில் நட்டிய ஐயம்ஸ்தம்பத்தைக் குறிப்பிட்டுள்ளது. பெத்தன்னாவின் மனுசரித்திரத்திலும் இச்செய்தி வருகிறது. வரலாற்றுச் சான்றான அப்பாடல் இது.

*"கிரிபோல் விளங்கிக் கிளரும் புயக் கிட்ணராயர்*
*தரைமீது சிங்காத்திரியிற் சமயத்தம்பம் நாட்ட*
*வரம் ஆதரவா அளித்தே வடகூவம் மேவும்*
*கருமா மணிவண்ணனை நீடுகருத்துள் வைப்பாம்."*

இந்த ஐயம்தம்பம் கிருஷ்ணதேவராயர் கீழ்த்திசை திக் விஜயத்தில் கலிங்க நாட்டு வெற்றிக்குப்பின் நாட்டியதாகும். இந்த வெற்றியை மற்றொரு தமிழ்ப் பாடலும் சிலேடை நயத்துடன் விளக்குகிறது.

*"கலிங்க மிழந்து நுதிக் கைச்சங்கந் தோற்று*
*மெலிந்து கடகம் நழுவ விட்டாள் - மலிந்த மலர்ப்*
*பொன்னிட்ட மானக்ருஷ்ண பூபாலா! உன்றனக்குப்*
*பின்னிட்ட ஒட்டியன் போற்பெண்"*

என்பது அந்தப் பாடல். ஒரிசா நாட்டை ஒட்ரதேசம் என்பது. ஒட்டியர் என்பது ஒரியா நாட்டினர் ஆகும். கலிங்கம் என்பது கலிங்க நாட்டையும், சிலேடையாக சேலை என்றும், கடகம் என்பது ஒரியா நாட்டுத் தலைநகர் கடகம் (கட்டாக்) என்றும் சிலேடையாக வளையல் என்றும் பொருள்படும் நயம் காண்க. கிருஷ்ண தேவராயருக்குத் தோற்ற கஜபதி மன்னன் கலிங்க (நாடும்) கடகம் (கட்டாக்) இழந்து விட்டாற்போல இப்பெண்ணும் மன்னன் மேல் காதலுற்று மெலிந்து கலிங்கம் (சேலை) இழந்து கடகம் (வளை) நழுவ தன் மானத்தைத் தோற்றுவிட்டாள் என்பது பொருள். இன்னொரு பாடல் கிருஷ்ணதேவராயரிடம் தமிழ்நாட்டுக் கோயில் ஒன்றில் நாயன்மார் செப்புச் சிலைகள் திருடப்பட்ட வரலாறு கூறுகிறது. சிலைக் கடத்தல் அந்நாளிலும் நடந்து வந்திருக்கிறது என்று தெரிகிறது. இச்செய்தியை கவிநயத்துடன் சொல்கிறார் கவிஞர்.

*"முன்னாள் அறுபத்து மூவரிருந்தாரவரில்*
*இன்னாள் இரண்டுபேர் ஏகினார் - கன்னான்*
*நறுக்குகின்றான் விற்றுவிட்ட நாகராச நம்பி*
*இருக்கின்றான் கிருட்டிணரா யா"*

மன்னனிடம் முறையிடும் பாங்கில், தீயன கண்டெதிர்க்கும் தார்மீகமான கோபத்துடன் திருடரைத் தண்டிக்க வேண்டும் என்ற ஆத்திரத்துடன் இக்கவிஞர் நகைச்சுவையோடும், நயமோடும் இக்கவிதையைப் படைத்திருக்கிறார். கிருஷ்ண தேவராயருக்கும் தமிழும், கவிச் சுவையும் தெரியும் என்பதால் தான் இவ்விதம் பாடியுள்ளார் எனலாம்.

சமண சமயத்தைச் சார்ந்தவரான மண்டல புருடர் இயற்றிய சூடாமணி நிகண்டுவில், 'கொடைமடம்' என்ற சொல்லுக்குப் பொருள்கூற வந்த ஆசிரியர், பாரி முதலிய கடை ஏழு வள்ளல்களைப் பற்றிக் கூறாமல் கிருஷ்ணதேவராயரை உதாரணமாகக் காட்டுவது இவர் பெருமையை விளக்குகிறது.

"படைமயக் குற்றபோதும் படைமடமொன்றிலாதான்
மடைசெறி கடகத் தோளான் மதிக்குடை மன்னர் மன்னன்
கெடி மன்னர் வணங்கும் தாளான் கிருட்டிணராயன் கைபோல்
கொடைமடம் என்ப தம்ம வரையாது கொடுத்தலாமே."

கொடைமிக்க கிருஷ்ணதேவராயர் தமிழகக் கோவில்கட்குத் தந்த கொடைகளை சாசனங்களும், 'ராயவாசகமு' எனும் தெலுங்கு உரை நடைநூலும் விளக்குகின்றன. பதினோராம் நூற்றாண்டில் புத்தமித்திரர் இயற்றிய 'வீரசோழியம்' எனும் தமிழ் இலக்கண நூல் பவுத்த மத நூலாகும். அதன் உரையில் வரும் உதாரணப் பாடல் ஒன்று ஆந்திர நாட்டைச் சேர்ந்த வேங்கி பகுதியில் ஆண்ட மன்னனைப் பாராட்டுகிறது. இவ்வுரை பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டதாகும்.

"வேங்கை வளநாடன் விசயவாடைக் கதிபன்
ஓங்குபுகழ் உதயாதித்தனுக்குத் - தாங்கு கடல்
நேராம் என்றாலும் நிறத்தால் அவன் செய்யன்
காரார் நிறமக் கடல்."

விசயவாடை என்பது விஜயவாடா ஆகும். பெஜவாடா என்றும் அழைப்பர். வேங்கி நாட்டை ஆண்ட சாளுக்கிய மன்னனை இத்தமிழ்க் கவிஞன் பாராட்டுவது, இரு நாடுகட்கும் இருந்த நெருக்கமான உறவைப் புலப்படுத்துகிறது. யாப்பருங்கல விருத்தி எனும் குணசாகரரின் உரை நூலில் 'வாஞ்சியார் செய்த வடுகச் சந்தம்' என்று ஒரு குறிப்பு வருகிறது. பதினோராம் நூற்றாண்டில் அமுத சாகரனார் யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்று இரு நூல்கள் இயற்றினார். பன்னிரண்டாம் நூற்றாண்டில் முதற்பகுதியில் அவரது சீடராகக் கருதப்படும் குணசாகரர் உரை வரைந்தார். இவ்விருவரும் சமண மதத்தவர்கள். விருத்தியுரையில் சமஸ்கிருத - பிராகிருத - கன்னட செய்யுள் இலக்கண நூல்களையும் குறிப்பிட்டு விட்டு வடுகச் சந்தம் என்று தெலுங்கில் செய்யுள் இலக்கண நூலைப் பற்றியும் கூறியுள்ளார். இச்சொற் குறிப்பிலிருந்தும் 'வடுகு' என்பது தெலுங்கு மொழிதான் எனத் தீர்மானமாகிறது. இந்த நூல் எது என்று தெரியவில்லை. நன்னயவிற்கு முன்பிருந்த சமண நூலாக இருக்கலாம். சில தெலுங்கு அறிஞர்கள் வேமுலவாட பீமகவியின் பெயரில் வழங்கியதும், உண்மையில் 'மல்லியரேசன' என்னும் சமணர் இயற்றிய 'கவிஜனுஸ்ரயம்' என்ற நூலாக இருக்கலாம் என்று கருதுவர். வேடூரி பிரபாகர சாஸ்திரி இக்கருத்துடையவரே.

கவிஜனாஸ்ரய இறுதி க'த்தியத்தில் ''இதி' வாதீந்த்ர சூடாமணி சரசிருஹமத' கராயமான கவிஜனாஸ்ரய ஸ்ராவகாபரணாங்க விரசிதம்பனை கவிஜனாஸ்ரய சந்தம்'' என்று குறிப்பிடுவதால் இவர் சமணரே என்பது தெளிவு. இவர் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டாக இருக்கலாம். தமிழ் யாப்பருங்கல உரைகாரர் கூறும் நூல் இதுவா? இதற்கு முன்னைய ஒரு நூலா என்பது தெரியவில்லை. எனினும் அவ்வுரைகாரர் தெலுங்கு இலக்கண நூலைக் கற்றிருந்தார் என்பது தெரிகிறது. இந்த உரைநூல் குறிப்பின் மூலமே கவிஜனாஸ்ரய நூலின் கால நிர்ணயம் செய்யவும், பல விமரிசனங்கள் எழவும் உதவின.

ஆந்திர நாட்டை ஆண்ட புகழ்மிக்க மன்னர் மரபில் காகதீயர்கள் முக்கியமானவர்கள் கரவபாடு என்னும் இடத்தில் காகதிகணபதி தேவன் என்னும் மன்னனின் சாசனத்தில் தான் 'கரிகால சோழனின்' மரபினன் என்று குறிக்கப்பட்டுள்ளது. இவர்கள் ஆண்ட தெலிங்கானா பகுதியில் ஓரங்கல் (வாரங்கல்) நகர் பிரசித்தமாக இருந்தது. காகதீய மன்னர்களில் ருத்ரதேவன் *(1158 - 195)* காலத்தில் கம்பன் அவனிடம் சென்று பரிசில் பெற்றதாகக் கதை ஒன்று வழங்கி வருகிறது. கம்பன் ஒன்பதாம் நூற்றாண்டினன் என்றும், பன்னிரண்டாம் நூற்றாண்டினன் என்றும் இரு கருத்துக்கள் தமிழறிஞரிடையே உண்டு. மு. வரதராசன் 'தமிழ் இலக்கிய வரலாற்றில்' சேக்கிழாருக்குப் பின்னர் பன்னிரண்டாம் நூற்றாண் டில் தோன்றியவராகவே குறிப்பிட்டுள்ளார். சடகோபரந்தாதி பாடிய கம்பன், சேக்கிழார், திருத்தக்கத் தேவர் முதலிய தொன்மைக் காவியக் கவிஞர்களின் சொற்பிரயோகங்களையும், கருத்துக்களையும் கையாண்டிருப்பதையும், சொல்நடை யாப்பமைதி கொண்டும் பன்னிரண்டாம் நூற்றாண்டினராகவே கொள்வது பொருத்தமாகும். ''கம்பர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலியவர்கள் சம காலத்தவர்கள் என்று கதைகள் பல கூறப்படுகிறது. குலோத்துங்க மன்னன் ஆதரிக்காததால் இம்மன்னன் அவையை நீத்து ஆந்திர நாட்டிற்குச் சென்று பிரதாபருத்திரன் அவைக்குச் சென்று அவனால் ஆதரிக்கப் பட்டார் என்று 'தமிழ் நாவலர் சரிதை'யில் கூறப்பட்டுள்ளது.''

''மன்னவனும் நீயோ! வளநாடும் உன்னதோ?
உன்னையறிந்தோ தமிழை ஓதினேன்''

என்று தன்னம்பிக்கையுடன் எதிர்த்துரைத்து

"உண்டோ, குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு"

என்று சொல்லிவிட்டு கம்பன் ஆந்திர நாட்டை அடைந்தான். கம்பன், "வெண்ணெய் நல்லூர் சடையன், ஆதரிக்கப் பெற்று இராமாவதாரம் பாடியதாக அகச்சான்றுகளுளதேயன்றி தமிழ் மரபினர் ஆதரவைப் பெற்றதாகக் குறிப்பில்லை. தமிழகம் நீத்து ஆந்திரம் சென்ற கம்பன் ஓரங்கல் சென்று முதலாம் ருத்திரதேவனைக் கண்டு அவனை தனக்கு அடைப்பை (வெற்றிலைப்பை) சுமக்கும் படி செய்து சோழ மன்னனிடம் தன் பெருமையை விளக்கியதாக ஒரு கதையுண்டு. இது மிகைப்படுத்தப்பட்ட கற்பனையாகவே இருந் தாலும் ருத்திரதேவன் ஆதரித்தான் என்பதற்குச் சான்றுகள் உள்ளன."

"அவனி முழுதுண்டும் அயிரா வதத்துன்
பவனி தொழுவார் படுத்தும் - புவனி
உருத்திரா உன்றன் ஓரங்கல் நாட்டில்
குருத்திரா வாழைக் குலம்."

என்று ஒரு தனிப்பாடல் கம்பன் பாடியதாக தனிப்பாடல் திரட்டு களிலும் 'தமிழ் நாவலர் சரிதை'யிலும் காணப்படுகிறது. கவிநயம் காணும் போது கம்பன் பாடலாக இருக்க முடியும். இப்பாடல் 'ஓரங்கல் நாட்டு புவனிருத்ரதேவனே', உன் நாட்டில் விருந்தோம்ப லாலும், உன் பவனியில் உன்னைக் கண்டு மோகித்த கன்னியர் விரக தாபத்திற்கு சைத்தியோப சாரத்திற்காகவும், வாழைக் குருத்துக்கள் அறுக்கப்பட்டுவிட்டன. வாழைக் குருத்துக்கள் கூட இல்லை என்று கூறுகிறது. கம்பன் தன் இராமாயண காவியத்தின் பாயிரத்தில், "வடமொழி தென் தொழி வடுகு கன்னடம்" ஆகிய நான்கு இலக்கிய வளமார்ந்த மொழிகளைக் குறிப்பிட்டுள்ளான். ஆதலின் தெலுங்கு மொழியிலும் பயிற்சி இருந்திருக்கும். அது மட்டுமன்றி சில தூய தெலுங்குச் சொற்களையும் கம்பன் தன் இராமாயணத்தில் பயன்படுத்தியுள்ளான்.

"தான் மிடைந்தன தம்பி மிடைந்தென"

"அக்கட' இராவணற் கமைந்த ஆற்றலே"

"மசரதம் அனையவர் வரமும் வாழ்வும்"

என்ற சொற் பிரயோகங்களில் தம்மி (தாமரை), அக்கட (அந்தோ), மசரதம் (கானல்நீர்) ஆகிய தெலுங்குச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளதாக பேராசிரியர் மு. இராகவையங்கார் கூறுகிறார். மாணிக்க வாசகர் காலம் தெளிவாக தெரியவில்லை. மறைமலையடிகள் ஐந்தாம் நூற்றாண்டுக்கு முன்னவராகக் கருதுவார். மு. வரதராசன் எட்டாம் நூற்றாண்டென்பர். மு. அருணாசலம் ஒன்பதாம் நூற்றாண்டென்பர்.

மாணிக்கவாசகர் ஆந்திர நாட்டிலிருந்து தமிழகம் வந்து குடி அமர்த்திய பிராமணர் என்று சிலர் கருத்து தெரிவித்தனர். தக்க சான்றுகள் இன்றி நிறுவுதல் இயலாது. பிரபுட தேவராயன் பதின்மூன்றாம் நூற்றாண்டில் அருணகிரி நாதரை ஆதரித்தான்.

பதினாறாம் நூற்றாண்டில் இருந்த பிரபலமான தெலுங்குக் கவிஞர் பிங்களி சூரணர். இராமாயணக் கதையும், பாரதக் கதையும் இணைத்து ஒரரிய சாதனையாக 'ராகவபாண்டவீயம்' எனும் சிலேடைக் காவியம் அமைத்தவர். நந்தியால கிருஷ்ணமராஜு (1560)வின் ஆதரவைப் பெற்ற கவிஞர். இணையற்ற பெரும் புலமையும், கற்பனைத் திறனும் வாய்ந்த சூரணர், 'களாபூர்ணோதயம்' என்றொரு சுய கற்பனைக் காவியம் படைத்துள்ளார். ★ இந்திய நாட்டில் பெருங்காவியங்கள் பெரும்பாலும் மூல ராமாயண, பாரத, பிருகத் கதைகளிலுள்ள கதைகளையே தேர்ந்து காவிய நாடகங்கள் படைத்தனர். ஒருசிலரே சுய புனைவுக் கதைகள் இயற்றினர். பாணபட்டரின், 'காதம்பரி' அவற்றுள் சிறந்தது. தென்மொழிகளில் சுய புனைவுக் காவியங்கள் இல்லை.தெலுங்கு மொழியில் மட்டும் பிங்களி சூரணர் 'களாபூர்ணோதயம்' இயற்றித் தனிச் சிறப்புடையவர் ஆகின்றார். இந்நூலில் வைணவத் தத்துவக் கருத்துகளும், விஷ்ணு தோத்திரங்களும் ஆங்காங்கே மிளிர்கின்றன. களாபூரணோதயக் கதையில் கதாநாயகியின் காதலனான மணிகந்தரன் தீர்த்த யாத்திரையை வருணிக்கும்போது 'காஞ்சிபுரம்', கும்பகோணம், திருவரங்கம், இராமேசுவரம் ஆகிய தமிழக க்ஷேத்திரங்களை அழகுடன் வருணித்துள்ளார்.

---

★ *ராகவ பாண்டவீயம் சுருக்கமாக 'இரவிசர்காதை' என்று மாரய ஆசாரி என்பவரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. மூலத்தின் எழில் சிறிதும் இல்லை. களாபூர்ணோதயம் - சுருக்கமாக 'ரத்தின மாலை' என்று சீதாதேவியாலும், முழுவதும் உரைநடையில் என்னாலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.*

தமிழகத்தை விஜயநகர மன்னர்கள் ஆண்டு வந்த காலத்தில் ஏற்பட்ட தொடர்புகள், ஆந்திர நாட்டில் சமய மறுமலர்ச்சியையும், தமிழகத்தில் கலை மறுமலர்ச்சியையும் தோற்றுவித்தன. தமிழகக் கோயில்களிலுள்ள பெரும்பாலும் கோபுரங்கள், சிற்பக் கலை நுணுக்கச் சிறப்புக்கள் எல்லாம் இக்காலத்திலேயே ஏற்பட்டன. வைணவமும், சைவமும், இலக்கியம், இசை, நாட்டியம் முதலிய கலைகளும் செழிப்புற்றன. விஜயநகர சாம்ராஜ்யம் அழிவுற்றதுமே தஞ்சையை ஆண்ட நாயக்க மன்னர்களும், மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்களும் சுதந்திரர்களாகி தமிழகத்தை ஆட்சி புரிந்தனர். இவர்கள் ஆண்ட இருநூறாண்டுக் காலத்தில் தமிழகத்தில் கலைகள் செழிப்புற்றன. தமிழகத்தில் தெலுங்கு மொழி அரசியல் அந்தஸ்துடைய மொழியாகத் திகழ்ந்தது. ஆந்திர நாட்டிலிருந்து பல கலைஞர்களும், கவிஞர்களும் நாயக்க மன்னர்களின் ஆதரவை நாடி தமிழகம் வந்தனர். ஆந்திர நாட்டில் ஏற்பட்ட மகம்மதியர்களின் படையெடுப்புகளும், மக்கள் தமிழகம் வரக் காரணமாயிற் றெனலாம். இக்காலத்தில் தெலுங்கு மக்கள் கூட்டம் கூட்டமாக தமிழகத்தில் குடியேறினர். அப்படி வந்த இனங்களில் பெரும் பாலோர் வைணவ சமயத்தைப் பின்பற்றியவர்களேயாவார். ராஜு, கம்ம, வெலம, பலிஜநாயுடு, நாயக்கர், கவரசெட்டி, மாதிக, (செருப்பு தைத்து மாட்டூண் உண்பவர்) தொ'ம்மர (கழைக்கூத்தாடி, கூடை முடைபவர்), பிராமணர் முதலிய பல இன (சாதி) மக்களும் தமிழகத்தில் குடியேறி நிலை பெற்றனர். நானூறு ஆண்டுகட்கு முன்வந்த இம்மக்கள் இன்றளவும் தம் தாய்மொழியாகிய தெலுங்கையே பேசி வருகின்றனர். இவர்கள் ஆந்திர நாட்டுடன் யாதொரு உறவுமின்றி தமிழ் நாட்டினராகவே, தமிழ் மொழி மட்டுமே எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக வாழ்ந்து வருகின்றனர். இதுபோலவே ஆந்திர நாட்டிலும் வைணவ, ஸ்மார்த்த பிராமணர்கள் குடும்பங்கள் தமிழ் நாட்டிலிருந்து குடியேறி இன்றும் வீட்டில் தமிழும், வெளியே தெலுங்கு மொழி பேசியும், தெலுங்கில் படித்தும் அறிஞர்களாகியும் வாழ்கின்றனர். இந்த இனங்களின் பரஸ்பர பரிமாற்றம் தமிழக ஆந்திர தொடர்புகளின் வலிவான அடிப்படையாக இன்றும் திகழ்கிறது. விஜயநகரை ஆண்ட அச்சுதராயரின் மனைவியின் தங்கை கணவரான செவ்வப்ப நாயக்கர் (1535 - 61) தஞ்சையை ஆண்ட முதல் நாயக்க மன்னர். இவரது பேரர் ரகுநாத நாயக்கர் (1614-1633) காலத்தில் ஆந்திர நாட்டில் செழித்து வளர்ந்த தெலுங்கிலக்கியத் திருமகள் அவ்விடத்தை விட்டு அகன்று வந்து தமிழகத்திற்கு வந்து பாதுகாப்பாகவும், சிறப்புடனும் உறைவான்

ஆனாள். ரகுநாத நாயக்கரும் தாமே கவிஞர். இவர் வடமொழியிலும், தெலுங்கிலும் பல காவியங்களும், யட்சகானங்களும் இயற்றினார்.

ரகுநாத நாயக்கருக்கு முன்பே பத்ரகவிலிங்க கவி (1530 - 40) தேவாங்க புராணம், சானந்த சரித்ர எனும் காவியங்களை இயற்றியுள்ளார். பச்ச கப்புர திருவேங்கள கவி (1530) 'சொக்கநாத சரித்திரம்' என்று ஒரு காவியம் இயற்றியுள்ளார். இவர் புரயுட தேவராயரின் அவையில் பச்சைக் கற்பூரம் பரிசில் பெற்ற திம்மராசு என்னும் கவிஞரின் பேரர். மதுரையில் சொக்கநாதக் கடவுள் இயற்றிய அறுபத்து நான்கு திருவிளையாடல்களை விவரிக்கும் நூல், 'சொக்கநாத சரித்திர' ஆகும். 'துவிபத'வில் தெலுங்கில் இயற்றிய மதுரையின் மகாத்மியம் கூறும் முதல் நூல் இது. இதனையே மைசூரில் இருந்த தளவாய் களுவெநஞ்சராஜு வசனமாக பதினெட்டாம் நூற்றாண்டில் இயற்றினார். ரகுநாத நாயக்கர் தம் தந்தை அச்சுதப்ப நாயக்கரின் சரிதத்தை 'அச்சுதாப்யுதயம்' என்ற துவிபதகாவியமாக இயற்றினார். பாரிஜாதா பஹரணம் எனும் காவியமும், கஜேந்திர மோட்சம், ருக்மணி கிருஷ்ணவிவாகம், ஜானகி கல்யாணம் எனும் யட்சகானங்களும் ★ இயற்றினார். நல சரித்திர, வால்மீகி சரித்ர எனும் கவிநயம் மிக்க காவியங்களும், ராமாயணமும், தெலுங்கு மொழியில் படைத்தார். இந்த ராமாயணம் முழுவதும் கிடைக்கவில்லை. பாலகாண்டம் மட்டுமே கிடைத்திருக்கிறது. இவருடைய தெலுங்கு கவிதை நடை திராட்சாபாகமாக இனிமை மிக்குள்ளது.

ரகுநாத நாயக்கரின் இலக்கியப் பேரவைக்கு 'விஜயபவனம்' என்று பெயர். கிருஷ்ணதேவராயரின் பேரவையாகிய 'புவன விஜயம்' போலவே இந்த விஜயபவனமும் சிறப்புடன் திகழ்ந்தது. கோவிந்த தீட்சிதர், அமைச்சராக இருந்தார். வைணவமதப் பற்றுடைய ரகுநாதர் பிற மதங்களையும் மதித்துப் போற்றினார். இசையிலும் பெரும் புலமை பெற்றிருந்தார். கலைகளை நன்கு ஆதரித்தார். இவர் காலத்தில் பெண்பாற் புலவர்கள் பலர் திறமையுடன் கவிஞர்களாகத் திகழ்ந்தனர். ராமபத்திராம்பா என்ற கவியித்ரி (பெண்பாற் கவிஞர்) 'ரகுநாதாப்யுதயம்' எனும் வடமொழிக் காவியம் இயற்றியுள்ளார். இந்த நூலில் சோழநாட்டு வருணனை,

---

★ *தமிழ்நாட்டில் தஞ்சையில் தோன்றிய புதிய தெலுங்கிலக்கிய வடிவம் யட்சகானம். இசைப்பாடல்கள் கலந்து கதாகாலாட்சேபம் செய்யும் வகையில் இயற்றிய சிறு காவிய வடிவம்.*

தஞ்சை வருணனை, ரகுநாத நாயக்கரின் நாட்கடன்கள், அவைக்கள வருணனை, திருமணம், தொண்டை மண்டலம், ஈழம், பாண்டிய நாடுகளை வென்றமை, அந்நாட்களில் பெண்களின் கல்வி, பண்பாடு ஆகியன விளக்கப்பட்டுள்ளன. இதில் வரும் கத்தியம் ★ ''இதி ஶ்ரீராமபத்ர கருணாகடாட்ச லப்த' சாரஸ்வத ப்ரவர்த்தமான சதலேகினீசம சமயலேகினீய அஷ்ட பா'ஷ கல்பித சதுர்வித' கவிதானுப் பாணித ஸாஹித்ய ஸாம்ராஜ்ய ப'த்'ர பீடாரூட ராமப'த்' ராம்பா விரசிதே ரகுநாதப்யுத யே ப்ரதமஸ்ஸர்க'.''

இவர் காலத்திலிருந்த மற்றொரு பெண்பாற் கவிஞர் மதுரவாணி. இவர் வடமொழி ராமாயணம் இயற்றியுள்ளார். ரகுநாத நாயக்கர் தெலுங்கில் இயற்றிய ராமாயணத்தில் வடமொழி மொழிபெயர்ப்பு இதுவாகும். மதுரவாணி தெலுங்கிலும் காவியங்கள் செய்து புகழ் பெற்றிருந்தார். எனினும் அந்நூல்கள் இப்போது கிடைக்கவில்லை. ரகுநாத நாயக்கரின் வால்மீக சரித்திரத்தில், ''தாமிரபர்ணி நதி, ராமேஸ்வரம், மதுரை, ஶ்ரீரங்கம், தஞ்சாவூர், மன்னார்குடி, கும்பகோணம், ஶ்ரீமுஷ்ணம், சிதம்பரம், திருப்பதி, ஶ்ரீசைலம் ஆகிய தமிழக, ஆந்திர க்ஷேத்திரங்கள் வருணிக்கப்பட்டன. தானே கவிஞராகவும் பல கவிஞர்களை ஆதரித்ததாகவும், கிருஷ்ண தேவராயரைப் போன்ற சிறப்புடனே ரகுநாத நாயக்கர் திகழ்ந்தார்''. இவரது அவைக்களத்தில் இருந்த பெரும் கவிஞர் சேமகூர வேங்கடராஜு ஆவார். இவர் இயற்றிய விஜய விலாசமு மிகச் சிறந்த காவியமாக மதிக்கப்படுகிறது. கி.பி. 1656ல் இருந்த அப்பகவி எனும் இலக்கணப் புலவர் இந்த நூலிலிருந்து மேற்கோள் காட்டியுள்ளார். அப்பகவி பல்நாடி சீமை (குண்டூர்) பகுதியில் வாழ்ந்தவர். தஞ்சையில் விளைந்த ஓர் இலக்கிய நூலை ஒரு நூற்றாண்டுக்குள் மேற்கோள் காட்டுவதை ஆராய்ந்தால் அக்காலத்தில் ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் இடையே போக்குவரத்துத் தொடர்புகள் மிகவும் நெருங்கியபடி இடையறாமல் இருந்திருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. 'விஜய விலாசமு' பாண்டவர்களில் ஒருவனாகிய அர்ஜுனன் ஶ்ரீகிருஷ்ணரின் தங்கை சுபத்திரையை மணந்த வரலாறு கூறுவதாகும். கவித்துவம் மிக்க இந்தக் காவியம் தெலுங்கிலக்கியத்தில் மிகச் சிறந்த காவியங்களில் ஒன்றாகும். தெலுங்கிலக்கியத்துக்கு தமிழ் மண் தந்த தலைசிறந்த பரிசு இக்காவியம் எனலாம்.

---

★ கத்தியம் - நூலில் படலம், காண்டம் ஆகிய ஆஸ்வாசங்களின் இறுதியில் கவிஞன் தன்னைப் பற்றிக் கூறும் பகுதி.

சேமகூர வேங்கடகவி இயற்றிய மற்றொரு நூல் 'சாரங்கதர சரித்திரம்' ஆகும். கி.பி. 1480ல் கௌரன என்ற கவிஞர் தெலுங்கில், 'நவநாதசரித்ர' என்றொரு காவியம் இயற்றியுள்ளார். அதில் வரும் சௌரங்கி என்ற சித்தனின் கதையே இது. இக்கதை மகாராஷ்டிரத்தில் நடந்ததாகவும், 'நாதபந்த்' எனும் சித்தர் பரம்பரையைப் பற்றியது, என்றும் அதனையே கௌரன தெலுங்கில் இயற்றினார் என்றும் தெரிகிறது. இக்கதையே சேமகூர வேங்கடகவி ஆந்திர நாட்டில் ராஜமஹேந்திரவரத்தில் ராஜராஜ நரேந்திரன் ஆண்டபோது அவன் மகன் சாரங்கதரன் கதையாக மாற்றியுள்ளான். சாரங்கதரன் கதை தமிழகத்தில் நாடக மேடைகளில் பிரபலமாக நடிக்கப்பட்ட கதையாகும். சாரங்கதரன் சிற்றன்னையின் காதலை மறுக்கவே, அவள் தன் கணவனிடம் மகனைக் குற்றம் கூறி கை, கால் வெட்டு வித்ததாகவும், மச்சேந்திரநாதன் எனும் சித்தர் அருளால் மீண்டும் கை, கால் வரவே மகன் பேரில் குற்றமில்லை என்று தந்தை அறிந்ததாகவும், சாரங்கதரன் சித்தர் ஆகிவிட்டதாகவும் இக்கதை கூறுகிறது. ''மலர் மொக்கு தானே பிணியவிழ்ந்து மணம் பரப்புவது போன்ற சிலேடை நயமும், திராட்சாபாகமான இனிய நடையும் உடைய காவியம் இலக்கிய உலகில் உயர்ந்த இடத்தில் உள்ளது'' என்று வேதம் வேங்கடராய சாஸ்திரி பாராட்டுவார். இந்த சாரங்கதர சரித்திரத்தை மதுரை நாயக்க மன்னர் உறவினரும், கவிஞருமான சமுகம் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர் தெலுங்கு வசன நூலாக படைத்திருக்கிறார். பிங்களி சூரணர், 'ராகவபாண்டவீயம்' இயற்றி சிலேடைக் காவியங்கட்கு புதுநெறி காட்டவே அவரைப் பின்பற்றி பல சிலேடைக் காவியங்கள் தெலுங்கு மொழியில் வந்தன. மூர்த்திகவி எனப்படும் ராமராஜ பூஷணரின் 'ஹரிஸ்சந்திர நலோபாக்கியானம்' சிறந்த சிலேடைக் காவியம். மற்ற சிலேடைக் காவியங்கள் அத்துணைச் சிறப்பில்லை. அவற்றுள் ஒன்று ரகுநாத நாயக்கரின் அவைக்களக் கவிஞர் கிருஷ்ணாத்வரி எழுதிய 'நைஷத பாரிஜாதீயம்' ஆகும். இந்நூல் ரகுநாதருக்கு சமர்ப்பணம் செய்யப் பட்டுள்ளது. நளன் கதையும், கண்ணன் பாரிசாத மரம் கொணர்ந்த கதையும், இக்காவியத்தில் சிலேடை மூலம் கோக்கப்பட்டுள்ள நயம் பாராட்டத்தக்கதாகும்.

ரகுநாத நாயக்கரின் ஆதரவைப் பெற்ற நகைச்சுவைக் கவிஞரான கவிசௌடப்பாவும் பிரசித்தமான இசைக் கவிஞரான க்ஷேத்திரய்யாவும் தெலுங்கிலக்கிய உலகில் பிரபலமானவர்கள் ஆவர்.

ரகுநாத நாயக்கரைப் போலவே அவரது குமாரரான விஜயராகவ நாயக்கரும் தானே கவிஞராவார். பல கவிஞர்களையும், கலைஞர்களையும் ஆதரித்தவருமாவார். இவர் ராஜகோபால விலாசம் உஷாபரிணயம், ருக்மணி கல்யாணம் முதலிய இருபது யட்சகான நாடக நூல்கள் இயற்றியுள்ளார். தம் தந்தையார் சரிதத்தை ரகுநாதப்யுதயம் என்று காவியமாக்கினார். பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய தொண்டரடிப் பொடியாழ்வார் சரிதத்தை 'விப்ரநாராயண சரித்ர' என்று யட்சகான நாடமாக்கியுள்ளார்.

விஜயராகவ நாயக்கர் வீரவைஷ்ணவர் ஆவார். தினந் தோறும் திருவரங்கத்திற்கு பல்லக்கில் சென்று சுவாமி தரிசனம் செய்துவிட்டு வந்து உணவருந்துவாராம். வயதானதும் அப்படிச் செய்ய இயலாமையால் தஞ்சையில் ஏழடுக்கு மாளிகை கட்டி, அதன் மேலேறி இங்கிருந்து சுவாமி கோபுர தரிசனம் செய்த பின்பு உணவருந்துவாராம். ஒருதடவை திருவரங்கக் கோயிலில் கற்பூர சேவை காணச் சென்றாராம். அவர் கோயில் சேருவதற்கு முன்பே சேவை முடிந்துவிட்டது. மீண்டும் கற்பூர சேவை அடுத்த ஆண்டு இதே தினம் நடக்குமென்றும், அதற்கு முன்பு காண இயலாது என்றும் அர்ச்சகர்கள் கூறிவிட்டனர். அரசனும், ஆண்டியும் ஆண்டவன் சன்னதியில் ஒன்று என்று அந்த அர்ச்சகர்கள் கருதியிருக்கக் கூடும். இராமானுசர் கற்பித்த ஆசாரம் அத்துணை வலிமையாக இருந்திருக்கிறது. ஆதலின் மன்னன் கோயிலிலேயே தங்கி ஓராண்டுக் காலம் இருந்து கற்பூர சேவை பார்த்து மகிழ்ந்து பின்னரே தஞ்சைக்குச் சென்றாராம். இத்தகைய வைஷ்ணவ பக்தரான இவர் இயற்றிய யட்சகான நாடக நூல்கள் தெலுங்கிலக்கியத்துக்கு வளம் சேர்க்கும் படைப்புகளாகும்.

செங்கல்வ காளகவி 'ராஜகோபால விலாசம்' எனும் காவியம் தெலுங்கில் இயற்றியுள்ளார். இந்த காளகவியின் சீடர்களே ராமபத்திராம்பா, கிருஷ்ணம்பா என்ற பெண்பாற் கவிஞர்கள்.

'ராஜகோபா விலாச' காவியம் விஜயராகவ நாயக்கருக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. இக்காவியம் கண்ணனின் எட்டு மனைவியரான ருக்மணி, சத்தியபாமா முதலியவர்களின் திருமண வரலாற்றினை விளக்கும் கதைகளாகும். கோனேடி திக்ஷதசந்த்ருடுவின் 'விஜயராகவ கல்யாணமு' புருஷோத்தம தீக்ஷிதுடுவின் 'தஞ்சாவூர் அன்னதான மகாநாடகம்', காமரசு வெங்கடபதி சோமயாஜியின், 'விஜயராக, சந்திரிகா விலாசமு' என்ற

நூல்கள் விஜராகவரின் கொடைச் சிறப்பு, வைபவங்களை விளக்குவனவாகும்.

விஜய ராகவநாயக்கரின் அவையில் சிறப்புடன் இருந்த பெண்பாற் கவிஞர் ரங்காஜம்மா; பசுபுலேடி ரங்காஜம்மாவை ரங்காஜி என்றும் மக்கள் அபிமானத்துடன் அழைத்தனர். இவர் தந்தை வெங்கடாத்திரி, தாய் மங்கம்மாள். இவர் சிறந்த கவிஞர். மன்னாரு தாச விலாசமு, உஷா பரிணயமு என்று இரு காவியங்களும், மன்னாரு தாசவிலாச நாடகமும், ராமாயண, பாரத, பாகவத சுருக்கங்களும் இவரது படைப்புக்கள். பன்மொழிப் புலமையும், அஷ்டாவதானத் திறமையும், சகல சாஸ்திரப் பாண்டித்தியமும், இசைப் புலமையும் உடைய இப்பெண் கவிஞர், இந்திய நாட்டுப் பெண்களுக்கோர் திலகமாகவும், வழிகாட்டியாகவும், சரித்திரத்தில் சிறப்பிடம் பெறத் தக்கவராவார். இவருக்கு விஜயராகவ நாயக்கர் கனகாபிஷேகம்★ செய்வித்தார். இது எல்லாக் கவிஞர்க்கும் கிடைத்தலில்லை. விஜயநகர சாம்ராஜ்யத்தில் பிரபுடவேதராயன் காலத்தே ஸ்ரீநாத கவியும், சர்வக்ஞ சிங்கபூபாலன் அவையில் மல்லிநாதசூரியும் கனகாபிஷேகம் பெற்றவர்கள் என்று சரித்திரம் கூறுகிறது. இவ்வுயரிய கௌரவம் ரகுநாதர் காலத்தில் மதுரவாணி என்னும் பெண் கவியும், விஜயராகவர் காலத்தில் ரங்காஜம்மாவும் பெற்றுள்ளனர். பெண்களும் பெருமைப்படத் தக்கவர்கள் இக்கவிஞர்கள் என்பதில் ஐயமில்லை.

சமஸ்கிருதம், பிராகிருதம், சௌரசேனி, மாகதி, பைசாசி, சூளிக, அபப்பிரம்சம் என்னும் பிராகிருத பேதங்கள் ஆறும் ஆக எட்டு மொழிகளிலும் கவியியற்றும் ஆற்றல் இவர்கட்கிருந்தது. ரங்காஜம்மாவின் மன்னாருதாசவிலாச நாடகம் நகைச்சுவையுடனும், சமகால மக்கள் வாழ்க்கையைச் சித்தரிப்பதாகவும் அமைந்து சிறப்புறுகிறது.

உஷாபரிணயம் இனிய ஆற்றொழுக்கான நடையில் அமைந்த நல்ல காவியம். மன்னாருதாச விலாசம் விஜயராகவ நாயக்கர்; ராஜசந்திரனின் மகள் காந்திமதியை திருமணம் செய்த

---

★ *கனகாபிஷேகம் என்பது பொற்காசுகளால் தலைமீது அபிஷேகம் செய்து கௌரவிப்பது. அபிஷேகம் செய்து விழுந்த பொற்காசு களை அவையில் உள்ளோர் பங்கு பிரித்துக் கொள்வார்களாம். கவிஞனுக்கு மிஞ்சுவது கௌரவம் மட்டுமே. கனகம் (பொன்) கிடைக்காது என்று பேரறிஞர் நிடதவோலு வெங்கட்ராவ் கூறியுள்ளார்.*

வரலாற்றைக் காவிய நடையில் கூறுகிறது. இக்காவியமும் உயர்ந்த நடையில் கவிநயத்துடன் அமைந்துள்ளது. இது தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நிர்வாகிகள் பதிப்பித்துள்ளனர். ரங்காஜம்மா விஜயராகவரின் மனைவியருள் ஒருவரும் ஆவார்.

ரங்காஜம்மா தஞ்சாவூரில் இருந்த வேசியர் குலத்துதித்து மிகச் சிறந்த கவிஞராகவும், கற்புடைக் குல மகளிராகவும் திகழ்ந்தார். இவர் 'மோஹினி தண்டகம்' என்றொரு நூலும் இயற்றியுள்ளார். இவரது புலமையில் ஈடுபட்ட மன்னர், பின்னர் தம் மனைவியாக ஏற்றுக்கொண்டார் என்று தெரிகிறது.

விஜயராகவர் காலத்தில் க்ஷேத்திரய்யா இசைப் பாடலில் சிறந்த கவிஞராகத் திகழ்ந்தார். மதுரை திருமலை மன்னன் மேல் இரண்டாயிரம் இசைப் பாடல்கள் புனைந்து ஆதரிக்கப்பட்டார் என்பர். ஆந்திர நாட்டில் பிறந்த க்ஷேத்திரய்யா மதுரையிலும், தஞ்சையிலும் ஆதரிக்கப்பட்டார். இவரது இசைப் பாடல்கள் தெலுங்கு மொழியின் இனிமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன. அகச்சுவைப் பாடல்கள் எனினும் முவ்வ கோபாலனுக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. பெத்ததாஸ் என்னும் இசைப் பாடல் கவிஞரும் இக்காலத்தில் தஞ்சையில் புகழ்பெற்றிருந்தார். விஜயராகவ நாயக்கரின் குமாரர் மன்னாரு தேவ நாயக்கர் மகாராஷ்டிரர்களுடன் நடந்த போரில் வீரசுவர்க்கம் புகுந்தார். இவர் தன் தந்தையின் சரிதத்தை 'விஜயராகவாப்யுதயம்' என்று காவியம் இயற்றினார். அந்நூல் இன்று கிடைக்கவில்லை. 'ஹேமாப்ஜநாயிகா ஸ்யம்வரம்' எனும் யட்சகான நாடகம் இவருடைய படைப்பாகும். இந்நூலில் பாற்கடல் கடைந்தபோது எழுந்த திருமகளை மன்னாரு தேவனாகிய திருமால் திருமணம் புரிய விஜயராகவ நாயக்கர் துணைபுரிந்ததாக கற்பித்து, சுவையுடனும், இனிய நடையிலும் இயற்றியுள்ளார். தஞ்சை நாயக்க மன்னர்கள் ஆட்சியை மராட்டியர் கைப்பற்றினர். சிவாஜியின் தம்பி ஏகோஜி (1676-1683) தஞ்சையை ஆண்ட முதல் மன்னன். இவர் குமாரர்கள் சஹஜி, சரபோஜி, தலஜாஜி மூவரும் முறையே தஞ்சையை ஆண்டனர். இவர்கள் வடமொழி இலக்கியத்தை வளர்த்தநோடு தெலுங்கிலக்கியத்தையும் நாயக்க மன்னர்கள் போலவே வளர்த்தனர். இவர்கள் காலத்தில் ராமபத்ர தீக்ஷிதர், பதஞ்சலி சரித்திரம், சிருங்காரதிலகபாணம், ஜானகி பரிணயம் முதலிய வடமொழி காவிய நாடகங்கள் இயற்றி சிறப்புற்றார்.

ஸ்ரீதர வெங்கடேசன் என்னும் அய்யாவாள் வடமொழியில் சிறந்த கவிஞர். பாஸ்கர தீக்ஷிதர் தமது சீடர் கிருஷ்ணானந்த சரஸ்வதி இயற்றிய 'சித்தாந்த சித்தாஞ்சனம்' எனும் வேதாந்த நூலுக்கு 'ரத்த மாலிகா' எனும் உரை வரைந்தார். இவர் சஹாஜிமேலி 'சஹேந்திர விலாசம்' எழுதியவர். பெரியப்ப கவி கிருஷ்ணானன்தரின் சீடர். இவர் சிங்கார மஞ்சரி, சஹாஜீயம் எனும் நூல்களை இயற்றினார். வேத கவி வித்யா பரிணயம், ஜீவானந்தம் எனும் நாடகங்கள் இயற்றினார். மஹாதேவகவி 'அத்புத தர்ப்பணம்' எனும் உருவகக் காவியம் எழுதியவர். 'வீரராகவ கவி, வள்ளிபரிணயம்' முதலிய நாடகங்கள் எழுதியவர். நல்லா தீக்ஷிதர் 'சுபத்ரா பரிணயம்' நாடகமும், 'தர்ம்விஜயம்' எனும் காவியமும் படைத்தவர். இந்தக் கவிஞர்கட்கு சஹஜீ ஆதரவளித்துச் சிறப்புச் செய்தான். இவரது ஆதரவில் தெலுங்கு கவிஞர்களும் இருந்தனர். சஹஜீயே தெலுங்கு மொழியில் புலமை பெற்று பல யட்சகான நூல்கள் இயற்றினார்.

தாய்மொழி மராட்டி, தமிழ் நிலத்தரசன், தெலுங்கில் புலமை பெற்று நாடகங்கள் பல இயற்றியுள்ளான். இதுவன்றோ தேசிய ஒருமைப்பாடு. நமது தொன்மையான பண்பாடு, கிராத விலாதும், கிருஷ்ணலீலா விலாசம். கங்காபார்வதி சம்வாதம், துரௌபதி கல்யாணம் முதலிய யட்சகான நாடகங்களும், சிறு காவியங்களுமாக இருபது நூல்கள் இம்மன்னன் தெலுங்கில் இயற்றினான். இவர் ஆதரித்த தெலுங்குக் கவிஞர்கள் பலர். கிரிராஜகவி வாதவிஜயமு, சர்வாங்க சுந்தரிவிலாசம், சஹேந்திர சரித்திரம், ராமமோகன குறவஞ்சி, ராஜகன்யா பரிணயம், லீலாவதி கல்யாணம் முதலிய யட்சகான நாடகங்கள் இயற்றினார். கிரிராஜ கவியின் தம்பி வேங்கடகிரி ருக்மாங்கத சரித்ர, அபிநயத்தர் பணம் கடிகாசல மகாத்மியம் (வட ஆற்காடு மாவட்டம், சோளிங்கர் எனும் புண்ணிய தல மகிமை) முதலியன இயற்றினார். பாலகவி சுப்பண்ணா 'லீலாவதி சஹாராஜீயமு', அக்கணாமாத்ய கவி, 'பாலகிருஷ்ண லீலாவிலாசமு' இயற்றினார். போலூரி கோவிந்த கவி இசை இலக்கண நூல் வரைந்தவர். சல்லப்பல்லி வெங்கனார்யர், 'கிருஷ்ணவிலாசம்' காவியம் படைத்தவர். இத்தனை வடமொழி தெலுங்குக் கவிஞர்களை ஆதரித்த சஹாஜீயே முதன் முதலில் ஏட்டுச் சுவடிகளைச் சேகரித்து நூலகம் ஏற்படுத்தினார். அதுவே பின்னர் 'சரஸ்வதி மஹால்' நூல் நிலையமாகியது.

நன்னெசோடவின் குமார சம்பவ ஏட்டுப்பிரதி கூட சஹாஜியின் காலத்தில் எழுதப்பட்டதாகும். இவ்விதம் பல ஏட்டுப்

பிரதிகள் தயாரித்து நூல் நிலையம் அமைத்த சஹாஜியின் இலக்கியத் தொண்டு பாராட்டுக்குரியது. சஹாஜீயின் தம்பி துலஜாஜி (1728 - 1736) காலத்திலும் தெலுங்கிலக்கியம் வளம் பெற்றது. துலஜாஜியை துக்கோஜி என்றும் அழைப்பர். இவர் தெலுங்கு வடமொழிகளிலும், இசையிலும் புலமை பெற்றவர். 'சங்கீதசாராம்ருதம்' என்ற நூல் இயற்றியவர். தெலுங்கில் 'சிவகாமசுந்தரி பரிணயம்' எனும் நூல் இயற்றினார். சில தெலுங்கு இசைப் பாடல்களும் இயற்றியுள்ளார். இவரது மனைவியர் சுந்தரி, கமலா என்பவர்கள். இவர்கள் வடமொழி நாடகங்கட்கு உரை வரைந்தனர். இவர் ஆதரவில் மனமபட்டு, கனஸ்யாமன் எனும் வடமொழிக் கவிஞர்களும் இருந்தனர். கனஸ்யாமன் இருபத்து நான்கு நூல்கள் வடமொழியில் இயற்றினார். இவர்கள் வடமொழி இலக்கிய நூல்களைச் சேகரித்தனர். தெலுங்குக் கவிஞர்களில் ஆலூரி குப்பன்ன கவி ஆசார்ய விஜயம் முதலிய நூல்களை இயற்றியவர். கஸ்தூரி ரங்ககவி மற்றொரு பிரபலமான கவி. புதுவை பிரஞ்சுக்காரரான டுப்ளேவுக்கு துவிபாஷியாக இருந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற ஆனந்தரங்கம் பிள்ளை தெலுங்குக் கவிஞனை ஆதரித்தார். 'ஆனந்தரங்கம் பிள்ளை டயரி' சரித்திரப் பிரசித்தமானது. கஸ்தூரி ரங்ககவியின் மற்றொரு நூல் தூய தெலுங்கு நிகண்டுவான 'சாம்பவ நிகண்டு'வாகும். இவர் திருச்சியில் சிறுசேனைத் தலைவராக இருந்துகொண்டு தெலுங்கில் இலக்கண நூல்களை வரைந்தார். இவரையும் துக்கோஜி ஆதரித்தான். துக்கோஜியின் மகன் இரண்டாம் ஏகோஜியும் தெலுங்கில் துவிபத ராமாயணம் எழுதியுள்ளார். ஏகோஜிக்குப் பின் அவர் மனைவி சுஜனாபாய் ஓராண்டு ராணியாக இருந்தாள். பின் ஏகோஜியின் பெரிய தந்தை சரபோஜியின் மகன் ஜயசிம்மன் பட்டம் ஏறினான். கி.பி. 1704ல் இவனது ஆதரவில் நெல்லூரி சிவராம கவி இருந்தார். ஜயசிம்மனின் தம்பி பிரதாப சிம்மனின் (1769 - 1792) காலத்தில் தஞ்சை நகரில் இருந்த பிரபலமான பெண் கவிஞர் முத்துபழனி தெலுங்கிலக்கியத்தில் தனியிடம் பெற்ற சிறப்புடையவர். இவருடையது 'ராதிகா சான்த்வனமு' என்னும் காவியமாகும். தாதாசாரியர் என்ற வைணவ குருவிடம் தீட்சை பெற்ற விஷ்ணு பக்தி மிக்கவள். இக்காவியம் ராதையின் விரக வேதனையை வருணிப்பது. காதற்சுவை நனி கொட்டும் கவிநயம் மிக்க காவியம். மதுரை சமூகம் வெங்கடகிருஷ்ண நாயக்கர் இயற்றிய 'ராதிகா சான்த்வனமு' நூலின் பாதிப்பு இந்நூலில் உள்ளது. முத்து பழனி ஆண்டாள் இயற்றிய திருப்பாவையை 'சப்தபதுலு' என்ற ஏழடிச் செய்யுள் நடையில் மொழி பெயர்த்துள்ளார். தற்போது பத்துப் பாடல்கள் மட்டுமே கிட்டியுள்ளது. சில அறிஞர்கள் இது சாவர சமஸ்தான வித்வான்

ஸ்ரீனிவாச குரு என்பவர் திருப்பாவையை மொழி பெயர்த்ததாகவும், அதுவே இது என்றும் கூறியுள்ளனர்.

"ஸ்ரீ நிவாசகு'ருடு விஷ்ணு சித்து கூர்மி முத்து'பட்டி
பூணிசே'யுத்'ரவிட பாடலோனி பா'வலு
செ'லகி' தெவியகா'னு நாது' ஜிஹ்வனொனது நிலசிமிடுவ
பலிகெ திருப்பாவு சப்த பதி பதம்பு கா"

என்று மூல பாடம் உள்ளதாகக் கூறி ஸ்ரீனிவாச குருவே செய்ததாக புலுசு வெங்கடரமணய்யா கூறியுள்ளார்.

"ஸ்ரீநிவாசகுருனி தலசி சித்தமுனனு" என்ற பாடபேதம் கொண்டு முத்துப் பழனியின் பாடலாக சிலர் கருதினர். பிரதாப சிம்மன் மகன் அமரசிம்மன் ஆதரவில் மாத்ருபூதகவி 'பாரிஜாதாபகரணம்' என்னும் யட்சகானம் நாடகம் இயற்றினார். இவர் புதுக்கோட்டையைச் சார்ந்தவராக இருக்கலாம். தஞ்சாவூரை ஆண்ட மராட்டிய மன்னன் இரண்டாம் சரபோஜி மிகப் பிரசித்தமானவர். கி.பி. 1798 - 1833ல் ஆண்ட இம்மன்னன் பெயரில்தான் இன்றைய சரஸ்வதி மகால் திகழ்கிறது. இவரது சிலை இங்குள்ளது. இவர் வடமொழியில் 'குமாரசம்பவம்' என்ற காவியம் படைத்தவர். இவர் கலைகளையும், மருத்துவம் முதலிய சாத்திரங் களையும் நன்கு ஆதரித்தவர் ஆவார். இவரும் தெலுங்கு மொழிக்கு ஊக்கம் தந்த வள்ளல் ஆவார். இவர் காலத்தில் இசையுலகில் தன்னிகரற்ற சிறப்பினையுடைய தியாகராஜ சுவாமிகள் இருந்தார். தியாகராஜர் ஆயிரக்கணக்கான தெலுங்குக் கீர்த்தனைகளை இயற்றி தெலுங்கு மொழிக்கே ஏற்றம் தந்தவர். கர்னாடக இசைக்கு அன்னமய்யா, க்ஷேத்திரய்யா, தியாகய்யா, இம்மூவருமே மும்மூர்த்திகள் எனத் தகையவர்கள். இவர்களது கீர்த்தனைகள் பக்தி வைராக்கியம், சிருங்காரம் ஆகிய சுவைகளில் மிகச் சிறந்து விளங்குகின்றன. தமிழ்நாட்டில் திருவையாறு அருகில் பிறந்த இவர் பக்தியில் சிறந்து நாதோபாசனை மூலம் ராமனையடைந்த மாபெரும் இசை மேதையாவார். ராமதாசரின் கீர்த்தனைகளைப் போல இவருடைய கீர்த்தனைகளும் ராமபக்தி மிக்கவையாக மிளிர்கின்றன. 1847ல் இவர் பரமபதம் அடைந்தார். இவருடைய கீர்த்தனைகள் பாடாத இசைக் கச்சேரிகள் இல்லை எனலாம். தமிழ்ப்பாடல்கள்தான் பாடவேண்டும் என்ற கிளர்ச்சிகள் நடந்தும்கூட இன்றும் தமிழகத்தில் தியாகராஜரின் கீர்த்தனைகளே பிரதான இடம் வகிக்கிறது. உயிர்த்துடிப்பும், உன்னதமான பக்தி பாவமும் உடைய

இவரது கீர்த்தனைகள், மொழி, இனங்களைக் கடந்து இன்று உலகம் முழுவதும் வியாபித்துப் போற்றிப் பாராட்டப்படுகிறது. தமிழகம் தந்த உயர்ந்த பரிசுகளில் தியாகராசரும் ஒருவர். ஆந்திர நாட்டில் இவருடைய கீர்த்தனைகள் விரும்பிப் பாடப்படுகிறது. தமிழக ஆந்திர உறவுக்கு இசை மூலம் ஒரு தொடர்புடைய பாலமாக தியாகராஜர் திகழ்கின்றார்.

சரபோஜிக்குப் பின் கடைசி மராட்டிய மன்னரான சிவாஜி மகாராஜா (1833 - 1855) தெலுங்கில் 'அன்னபூர்ணா பரிணயம்' இயற்றினார். இவர் காலத்தில் வெங்கட கிருஷ்ண கவி 'சிலபாரிஜாதம்' என்ற நூலும், திருமலநாதகவியின் 'நாசிகேத புராணம்' ஆகியன இவர் ஆதரவில் வந்தன. படகல நாடி நரசகவி, சல்லா சூரய கவி முதலிய பல கவிஞர்கள் இருந்தனர். வடமொழியில் 'கிருஷ்ணலீலா தரங்கிணி' இயற்றிப் புகழ்பெற்ற ஸ்ரீ நாராயண தீர்த்தர் கி.பி. 1560ல் தஞ்சையருகே மெறத்தூர் என்னும் 'அச்சுதாப்தி'யில் வாழ்ந்து தெலுங்கில், 'பாரிஜாதாபஹரணம்' என்னும் காவியம் படைத்திருக்கிறார். இன்னும் எத்தனையோ சதகங்கள், உரை நூல்கள், யட்ச கானங்கள், கீர்த்தனைகள், இசை நூல்கள் பல இயற்றப்பட்டுள்ளன. மெறத்தூர் பின்னர் மெலட்டூர் என வழங்கப்பட்டது. மேலத்தூர் வெங்கடராம சாஸ்திரி (1807 - 1860)யும் மேலட்டூர் பாகவதர்களும் பிரசித்தமானவர்கள்.

இவ்விதம் தஞ்சையில் நாயக்க மன்னர்களும், மராட்டிய மன்னர்களும் ஆண்ட காலத்தில் இங்கு தெலுங்கு மொழியே அதிகார மொழியாகத் திகழ்ந்தது. விஜய நாயக்கர் நாகப்பட்டினம் துறைமுகத்தை டச்சுக்காரர்களுக்கு வியாபாரம் செய்துகொள்ள தந்த சாசனம் தெலுங்கு மொழியிலேயே உள்ளது. வெள்ளித் தகட்டில் எழுதப்பட்ட இந்தச் சாசனம் இன்னும் மலேசியாவில் படோவியா மியூசியத்தில் உள்ளதாக பேரறிஞர் நிடதவோலு வெங்கடராவ் தமது 'தக்ஷிண தேசியாந்திரவாங்மயமு' என்ற நூலில் கூறுகிறார். மதுரை நாயக்க மன்னர்களின் சாசனங்களும் தெலுங்கில் உள்ளன. தமிழ் மன்னர்களான புதுக்கோட்டை மன்னர்கள் சாசனங்களும் தெலுங்கில் உள்ளன. புதுக்கோட்டை சமஸ்தானக் கொடியில் 'பிரமராம்பா சகாயம்' என்று தெலுங்கில் பொறித்துக் கொண்டார்கள். அண்மைக் காலம் வரை இக்கொடிச் சின்னத்தில் தெலுங்கு எழுத்துக்கள் இருந்தன. இதனால் அக்காலத்தில் தெலுங்கு அரசியல் விவகார மொழியாக இருந்தது எனலாம்.

தஞ்சாவூரைப் போலவே மதுரை நாயக்க மன்னர்களும் தெலுங்கிலக்கியத்தைப் பேணி வளர்த்தனர். கிருஷ்ண தேவராயர் பாண்டிய நாட்டை வென்று கப்பம் கட்டச் செய்யுமாறு நாகம நாயக்கரை அனுப்பினார். நாகம நாயக்கர் பாண்டிய மன்னனை வென்று பிறகு தானே அரசாள நினைத்தான். பாண்டிய மரபினன் இச்செய்தியை கிருஷ்ண தேவராயரிடம் சென்று கூறினான். கிருஷ்ண தேவராயர் நாகம நாயக்கரை திரும்பி வருமாறு கூறியும், மறுத்து சாக்குப் போக்குச் சொல்லி வரவே நாகம நாயக்கரை சிறைப் பிடித்து வருமாறு தம் சேனைத் தளபதிகளை நோக்கிக் கட்டளையிட்டார். அவருள் எல்லோரும் தயக்கம் காட்டினர். நாகம நாயக்கரின் குமாரரான விசுவநாத நாயக்கர் தாமே முன்வந்துபடைகொண்டு சென்று தமது தந்தையைச் சிறைப்பிடித்துக் கொணர்ந்தார். அவரது ராஜ விசுவாசத்தை மெச்சிய கிருஷ்ணதேவராயர் ஏதாவது பரிசு தர விரும்பி 'எது வேண்டும்?' என்று வினவ, விசுவநாத நாயக்கர் தம் தந்தையைச் சிறையிலிருந்து விடுவித்து அருளுமாறு கோரினார். அப்படியே விடுவிக்கப்பட்டார். அரசனுக்கும், தந்தைக்கும் இடையே கடமை வீரராக இருந்து சரித்திரத்தில் புகழ் பெற்ற விசுவநாத நாயக்கரே மதுரையில் அரசப் பிரதிநிதியாக அரசாள நியமனம் பெற்றார். விசுவநாத நாயக்கர் (1520 - 1564) தம் அமைச்சர் அரியநாத முதலியாருடன் இணைந்து செயலாற்றி தமிழ்நாட்டில் எழுபத்திரண்டு பாளையங்களை உருவாக்கி அரசியல் சீர்திருத்தங்கள் மூலம் நிலையான, அமைதியான ஆட்சியை நிறுவினார். விசுவநாத நாயக்கரிடம் தானாதிபதியாக இருந்த ஒருவர் 'ராயவாசகமு' என்ற தெலுங்கு வசன நூலை படைத்திருக்கிறார். கிருஷ்ண தேவராயர் வரலாற்றுக்கு மிக்க துணைபுரியும் இந்த நூல் அக்கால மக்கள் வாழ்வையும், மன்னன் கடமைகளையும் விவரித்து, விஜயநகர சாம்ராஜ்யம் உருவான வரலாற்றையும், கிருஷ்ணதேவராயரின் இளமை, போர்கள், திக்விஜய வெற்றிகள் முதலியவற்றைக் குறிப்பிடுகிறது. சரித்திரச் சான்றாகத் திகழும் இந்நூலை அண்மையில் ஆந்திரப்பிரதேச சாஹித்திய அகாடெமியினர் வெளியிட்டுள்ளனர். விசுவநாத நாயக்கருக்குப் பின் அவர் மரபினர் மதுரையை ஆண்டனர். மதுரை நாயக்கர்கட்கும், தஞ்சை நாயக்கர்கட்கும் போரும், திருமணச் சீரும் நிகழ்வதுண்டு. விசுவநாதரின் மகன் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர், அவருக்குப் பின் வீரப்ப நாயக்கர், அதன்பின் கிருஷ்ணப்ப நாயக்கர் (1591- 1601), முத்துகிருஷ்ணப்ப நாயக்கர் (1621 - 1609) முதல் முத்து வீரப்ப (1609 - 23) ஆகியோர் முறையே மரபுப்படி மதுரையை ஆண்டனர்.

அதன்பின் முத்து வீரப்பரின் சகோதரர் திருமலை நாயக்கர் (1623 - 1659) ஆட்சிக்கு வந்தார். திருமலை நாயக்கர் கலைகளை வளர்த்தார். காளமேகம் முதலிய தமிழ்க் கவிஞர்களையும், லிங்கமகி, காமேஸ்வர கவி முதலிய தெலுங்கு கவிஞர்களையும் ஆதரித்தார். இவர் கட்டிய திருமலை நாயக்கர் மகால் இவருடைய புகழுக்கு நிரந்தரச் சான்றாக நிலைத்திருக்கிறது.

திருமலை நாயக்கர் குமாரர் இரண்டாம் முத்து வீரப்பர் (1629 - 59) அவர் குமாரர்கள் சொக்கநாத நாயக்கர் (1659 - 1682), முத்தளகிரி (1675 - 78), ராணி மங்கம்மாள் (1689 - 1766), மூன்றாம் முத்து வீரப்பர் (1682 - 1689) ஆகியோர் ஆட்சி புரிந்தனர். இவர்கள் காலத்தில் தெலுங்கிலக்கியத்தில் குறிப்பிடத்தக்க நூல்கள் படைக்கப்பட்டன. முத்தளகிரி, தஞ்சையைப் படையெடுத்து மராட்டிய மன்னன் சஹஜி மகன் ஏகோஜியைத் தோற்கடித்து ஓராண்டு ஆட்சி புரிந்தான். இந்த வெற்றியைப் புகழ்ந்து கணபவரபு வேங்கடகவி, ''பெத்தளகிரி விஜயம்'' என்று ஒரு காவியம் வரைந்துள்ளான். மீண்டும் தஞ்சை மகாராட்டியர் வசமானது. முத்தளகிரி ஓராண்டு தஞ்சையை ஆண்டபிறகு மீண்டும் மதுரைக்கு வந்தபின் தஞ்சை மன்னர்கள் போலவே தெலுங்கிலக்கியத்தை ஆதரிக்க வேண்டும் என்ற படிப்பினைப் பெற்றிருக்க வேண்டும். அதன் பிறகு மதுரை நாயக்க மன்னர்களும் இலக்கிய ஆதரவாளர்களாக அமைந்தார்கள்.

மதுரையில்தான் தெலுங்கு மொழி இலக்கியத்தில் முதல் வசன நூல்கள் தோன்றின என்பது குறிப்பிடத்தக்கது. 'ராயவாசகம்' வசன நூல். லிங்கன மகி ஸ்ரீ காமேஸ்வர கவியின் 'ஸ்ரீதேனுமாகாத்மியம்' முதலில் தோன்றன. காமேஸ்வர கவி 'சத்தியபாமா சாந்த்வனமு' என்று ஒரு காவியம் படைத்தார். இது காதல் சுவை ததும்பும் நூலாகும். 'சான்ஸ்வனமு' நூல்களில் இதுவே முதன்மையானது. இதற்குப் பின் சமூகம் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர் 'ராதிகா சாந்த்வனமு', அதன்பிறகு முத்துபழனி 'ராதிகா சாந்த்வனமு' இயற்றப்பட்டன.

முத்தளகிரியின் ஆஸ்தான கவிஞரான கணபவரபு வேங்கடகவி இருந்தார். 'வித்யாவதி தண்டகம்', 'பெளத்தளகிரி விஜயம்', 'பிரபந்தராஜ வெங்கடேஸ்வர விஜய விலாசமு', 'சர்வலக்ஷண சிரோமணி' முதலிய நூல்கள் இயற்றினார். வேங்கட கவி தெலுங்கிலக்கிய வரலாற்றில் பிரபலமான கவிஞர் ஆவார்.

ராணி மங்கம்மாள் தமிழக வரலாற்றில் புகழ் மிக்க அரசியாவார். தன் பேரன் விஜயரங்க சொக்கநாதன் பாலிய வயது ஆகையால் அவனுக்காக தானே முன்னின்று அரசாட்சியை நடத்தினார்.

மங்கம்மா சரித்திரம், மங்கம்மா சாலைகள் தென் தமிழகத்தில் அவளது ஆட்சிச் சிறப்பும், நேர்த்தியும் விளக்கும். இவள் காலத்திய நூலாக 'மதுராமங்கபும்ஸ்சலீ லீலா விலாசமு' என்றொரு நூல் உள்ளது. இந்த நூலை இயற்றிய கவிஞர் சின்ன வெங்கன்ன என்று நேலடூரி வெங்கடரமணய்யாவும், விகடகவி கோபாலராயர் என்று டாக்டர் சல்லாராதாகிருஷ்ண சர்மாவும் கூறியுள்ளனர்.

இதில் மங்கம்மாள் காதல் களியாட்டத்தில் சுயேச்சையாக ஈடுபட்டதாக வருணிக்கப்பட்டது. இதில் சில சரித்திரச் சான்றுகள் இருப்பதால் இந்நூல் வரலாற்றுக்கு உதவும் என்பர். மங்கம்மாவின் தளவாய் நரசயாமாத்தியன் துதியாக ஒரு நூலும் உள்ளது.

விஜயநகர மன்னர்களுள் கிருஷ்ணதேவராயரும், தஞ்சை நாயக்க மன்னர்களுள் ரகுநாத நாயக்கரும் போல மதுரை மன்னர்களுள் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் (1706 - 32) பேராற்றலுடன் திகழ்ந்து கலைகளையும், கவிஞர்களையும் பேணி வளர்த்தார். இவர் காலத்தில் தெலுங்கு வசன நூல்கள் வளமுடன் பொலிவுற்றன. இவரே 'ஸ்ரீரங்க மஹாத்மியம்' என்று திருவரங்கத்தின் பெருமையை விளக்கும் வசன நூல் படைத்தார். மற்றொரு நூல் 'மாகமஹாத்மியம்' எனும் மாசி மாசத்தில் காவேரியில் குளித்து விரதமிருந்து திருமாலை வலிபடுவதின் சிறப்புக்களை கூறும் வசன நூல் ஆகும். இவ்விரு நூல்களும் சொக்கநாதரின் தெலுங்குப் புலமையை தெள்ளிதின் விளக்குகிறது.

''இதி ஸ்ரீபாண்டிய மண்டலாதீஸ்வர விஜயரங்க சொக்கநாத பூபால ப்ரணீதம்பைன ஸ்ரீரங்க மஹாத்ம'யம் அனு வசன காவ்யம்புன பதியவ அத்'யாயமு'' என்று கத்தியம் கூறுகிறது.

சிறந்த நடையழகும், செவ்விய கருத்தழகும் மிக்க இந்த இரு வசன காவியங்களும் அச்சேறவில்லை. ஹைதராபாத், ஆந்திர சாஹித்ய பரிஷத் காரியாலயத்தில் இதன் ஏட்டுச் சுவடிகள் உள்ளன.

விஜயரங்க சொக்கநாதனின் உறவினரும், குறுநில மன்னராகவும், மன்னரின் தோழனாகவும் திகழ்ந்தவரும் ஆகிய சமூகம் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கர் தானே சிறந்த கவிஞனாவார். பல கவிஞர்களையும் ஆதரித்தார்.

*'மெச்ச நேர்த்துவு கவிதல மேலுதெலிசி*
*இத்து வேனுகு பாடிகா'ன் எலமி கவுல*
*கன்னி கு'ணமுலு நீயத்துன் அமரெனாரா'*
*சிபு ஜயாதாரா! வேங்கட க்ருஷ்ண தீ'ர'*

என்று புலவர்களால் பாராட்டப் பெற்ற கவியரசும், புவியரசும் ஆகிய "கவிதையின் திறனறிந்து பாராட்டத் தெரிந்தவனும், கவிஞர்கட்கு யானைப் பரிசிலளிப்பனும் எல்லா நற்குணங்களும் உடையவனும், பகைவரை வென்று வாகை சூடியவனுமாகிய" வெங்கடகிருஷ்ண நாயக்கர் நான்கு நூல்களைச் செய்துள்ளார். 'ஜைமினிபாரதம்' என்ற வசன காவியம் இவருடைய முதல் நூல். வடமொழியிலுள்ள ஜைமினி பாரதம், பில்லல மர்ரி பினவீரன்னவின் தெலுங்கு ஜைமினி பாரதம் (செய்யுள் காவியம்) இரண்டையும் தழுவி இயற்றிய இந்நூல் விஜயரங்க சொக்கநாத நாயக்கருக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. ஜைமினி பாரதம் வடமொழியில் அசுவமேத பருவம் மட்டுமே உள்ளது. தெலுங்கிலும் அப்படியே மொழியாக்கம் பெற்றுள்ளது. இதன் ஏட்டுப்பிரதி ஆந்திர சாஹித்ய பரிஷத்தில் மட்டுமே உள்ளது.

சமூகம் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கரின் மற்றொரு நூல் 'அஹல்யா சங்க்ரந்தனமு' ஆகும். இது செய்யுளால் ஆன சிறந்த காவியம். வேதத்திலும், இராமாயணத்திலும், புராணங்களிலும் படைக்கப்பட்ட ஒரு சிறந்த பாத்திரம் அகலிகை. அவள் கதை பல்வேறு கவிஞர்களின் இதயத்தைத் தொட்டது. பெண்மையின் மன உணர்வுத் துடிப்புக்களையும், புலவர்களின் கவர்ச்சிக்கும், அறநெறிக் கோட்பாட்டுக்கும் இடையே சிக்கித் தவிக்கும் மனிதனின் மனப் போராட்டமும், பெண்மையின் அவல நாடகமும் இக்கதையில் சித்தரிக்கப்பட்டது. ரவீந்திரநாத தாகூர் போன்ற தற்காலப் பெருங் கவிஞர்களும் வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய பிள்ளை போன்ற தமிழறிஞர்களும் அகலிகையைப் பாத்திரமாக்கி புதிய கோணத்தில் கவிச்சித்திரங்கள் தீட்டியுள்ளனர். தமக்கு முன்னும் பின்னும் உள்ள பாத்திரப் படைப்புகளைப் பரிசீலித்தோமானால் சமூகம் வெங்கட கிருஷ்ணப்ப நாயக்கரின் பாத்திரப் படைப்பே தலை சிறந்ததாக

உள்ளதெனலாம். நாடகப் பாங்கில் பாத்திரங்கள் தகுதியுணர்ந்து பேசும் சாதுரியமும், கற்பனைத் தேனூறும் கவியமுதச் சொற்சித்திரங்களும் மிக்க இந்தக் காவியம் தெலுங்கிலக்கியத்தில் நல்ல படைப்புகளில் ஒன்றாகத் திகழ்கின்றது.

சமூகம் வெங்கிட கிருஷ்ணப்பரின் மற்றொரு வசன காவியம் 'சாரங்கதர சரித்திர' ஆகும். இது சேமகூர வேங்கட கவியின் செய்யுட் காவியத்தின் உரையாக்கம் ஆகும். வெங்கடகிருஷ்ணரின் மற்றொரு காவியம் 'ராதிகா சான்த்வனமு' என்னும் நூல் ஆகும். இந்த நூலை ஆதாரமாகக் கொண்டே முத்து பழனியும் 'ராதிகா சான்த்வனமு' எனும் காவியம் இயற்றினார்.

விஜயரெங்க சொக்கநாத நாயக்கராலும், சமூகம் வெங்கட கிருஷ்ண நாயக்கராலும் ஆதரிக்கப்பட்டவர் சேஷம் வேங்கடபதி. இவர் 'தாராச சாங்கம்' எனும் காவியம் படைத்துள்ளார். இக்காவியம் தெலுங்கிலக்கிய உலகில் மிகவும் பிரபலமானது.

இக்காவியத்தை செஞ்சியை ஆண்ட வெங்கடேந்திரரின் மரபினரான 'சினய' என்பவருக்குச் சமர்ப்பணம் செய்துள்ளார். சினய சிறந்த கவிஞரும், வைஷ்ணவ மதத்தில் ஆழ்ந்த பற்றுடையவரும் ஆவார். சினய, 'ஸ்ரீராமானுஜ விஜயம்' என்றொரு காவியம் இயற்றியுள்ளதாகத் தெரிகிறது. சசாங்க விஜயம் வியாழ பகவானின் மனைவியாகிய தாரை, சீடனாகிய சந்திரனை மோகங் கொண்டு இருவரும் குருவிற்குத் தெரியாமல் ஓடிப்போய்விட்ட புராணக் கதையை சுவைமிக்க காவியமாக்கிய இனிய நடையிலமைந்த நூலாகும். விஜயரங்க சொக்கநாத நாயக்கர் அவையிலிருந்த மற்றொரு பெரிய கவிஞர் குந்துர்த்தி வெங்கடாசலகிரி. இவர் 'மித்திரவிந்தா பரிணயம்' என்றொரு நூலும் இயற்றியுள்ளார்.

ரேலூரி காளஹஸ்தி கவி அப்பய தீட்சிதரின் சீடர் வசு சரித்திரம் சமஸ்கிருதத்தில் மொழி பெயர்த்தவர். குந்துர்த்தி வெங்கடாசல கவியின் குரு. இவரது பேரரான ரேலூரி அனந்த கவி மைசூர், செஞ்சி மன்னர்கள் ஆதரவைப் பெற்றவர். இவர் 'காதேயபாக்கியானம்' என்ற காவியம் இயற்றினார். இந்நூல் பத்ரி கிருஷ்ண பூபாலனுக்கு சமர்ப்பணம் செய்தார். இவர் கம்பளத்து நாயக்கர் குலத்தவர் ஆகும். துறையூரை ஆண்ட லிங்காரெட்டி (1632 - 67) எனும் குறுநில மன்னனுக்கு 'விருத்தாசல மகாத்மியம்' என்ற காவியம் சமர்ப்பித்துள்ளார். ரேலூரி அனந்தய்யாவின் பேரர்

ஆன அனந்தய்யா 'ஸ்ரீமுஷ்ண மகாத்மியம்' இயற்றியுள்ளார். விருத்தாசலமும், ஸ்ரீமுஷ்ணமும் தமிழ்நாட்டிலுள்ள பிரபலமான க்ஷேத்திரங்களாகும். வெலகபூடி கிருஷ்ணமாத்யுடு 'பானுமதி விஜயம்' என்னும் காவியம் இயற்றியுள்ளார். இந்நூலை எழுதுமாறு சாசனங்கள் எழுதுபவரும், அமைச்சருமான சிவராமய்யா என்பவர் தூண்டியதாக குறிப்பிடப்பட்டுள்ளது. சிவராமய்யா 1739ல் திருநெல்வேலி மாவட்ட சீவலப்பேரியில் உள்ள தெலுங்கு தானசாசனம் எழுதியவர். பானுமதி விஜயம், பானுமந்தன் எனும் அந்தண குமாரன் உஜ்ஜயினி அரச குமாரி பத்மாவதியைத் திருமணம் புரிந்த வரலாறு கூறும் காவியம். இதில் யோக ரகசியங்களையும் அத்வைத தத்துவத்தையும் விளக்கியுள்ளார். இந்த தத்துவப் பகுதிக்கு இவரே உரையும் வரைந்துள்ளார். இந்த நூல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதாகத் தெரிகிறது.

தெலுங்கு மொழிக்கு அளப்பரிய தொண்டாற்றிய ஆங்கிலேயர் சார்லஸ் பிலிப் பிரௌன் ஆவார். தெலுங்கு நூல்கள் சேகரித்தும், நூல்கள் பதிப்பித்தும், உரை எழுதுவித்தும், வேமன பத்தியம் முதலிய நூல்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தும், ஆங்கில - தெலுங்கு அகராதி தயாரித்தும், இலக்கண நூல் வரைந்தும் தெலுங்கிலக்கியத்திற்கு இணையற்ற சேவை செய்தவர். இத்தகு சிறப்புடைய சி.பி. பிரௌன் இந்நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மேலும் This poem is translated into Tamil: perhaps from Telugu. The title is affixed to it is Tamil Ariumperumal என்று கூறுகிறார். இக் குறிப்பிலிருந்து தமிழறியும் பெருமாள் என்னும் தலைப்பில் இந்நூல் தமிழாக்கம் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. விஜயரங்க சொக்கநாதரிடம் அமைச்சராக இருந்தவரின் மக்களாகிய வெலிதண்டல அளகரிகவி 'சுதந்தா பரிணயம்' எனும் காவியமும், வேங்கடபதி 'ராதை மாதவசம்வாதம்' என்று சிதம்பரம் நடேசன் மீது இயற்றிய நாடகம் ஒன்றும் உள்ளன.

மதுரையில் வாழ்ந்த ஸ்ரீபதி ராமபத்ர கவி ,'ஹாலாஸ்ய மகாத்மியம்' என்னும் ஆலவாய்ச் சுந்தரின் அழகிய திருவிளையாடல்களை வசன காவியமாக்கியுள்ளார்.

இக்காலத்தில் இருந்த மற்றொரு சிறந்த கவிஞர் பாஸ்கர வேங்கடாசலபதியாவார். இவர் 'சேது மஹாத்மியம்' எனும் இராமேசுவரத்தின் பெருமை விளக்கும் காவியம் படைத்துள்ளார். இவரது சகோதரர் நந்தவர பாஸ்கர சேஷாசலகவி

'நாஞ்சாருபரிணயம்' எனும் தெலுங்கு யட்சகானம் இயற்றியுள்ளார். இந்த நூல் கிடைக்கவில்லை என்று தெலுங்கு இலக்கிய சரிதம் எழுதிய நிடுதவோலு வெங்கட்ராவ் அவர்களும், சிறந்த ஆய்வாளர் ஆருத்ரா அவர்களும் குறிப்பிட்டுள்ளனர். எனினும் இந்த யட்சகான நூல், இராஜபாளையத்தில் கிடைத்துள்ளது. மதுரை காமராசர் பல்கலைக் கழக தெலுங்குத் துறைத் தலைவராக இருந்த காலஞ்சென்ற திம்மாவஜ்ஜல கோதண்டராமய்யா உதவியுடன் நான் எனது முன்னுரையுடன் 1987ல் வெளியிட்டுள்ளேன். அத்துடன் திருமெக்கொள திருவேங்களாசார்யர் இயற்றிய கூரத்தாழ்வாரு சரித்ர என்ற யட்சகான நூலும் வெளியிட்டுள்ளேன். இவ்விரு யட்சகான நூல்கள் வைணவ நூல்களாகும். இராஜபாளையத்தில் மட்டுமே இருந்த ஏட்டுச் சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பட்டது. சேனய கவியின் 'ஷண்முக சஹஸ்ரமு', தார்ஜடி வேங்கடராயகவியின் 'ரத்னாவளி பரிணயமு' இரண்டும் இக்காலப் படைப்புகளாகும்.

'சந்திர தாரா விலாசமு' என்ற காவியம் படைத்த 'எல்லய்யா' என்ற கவிஞர் சேலம் அருகில் 'உத்தண்டமல்ல சமுத்திரம்' என்ற ஊரில் பிறந்தவர். இவர் தன்னைப் பற்றிக் கூறுவதாவது,

*"ஶ்ரீரஹி மின் சின சேர தே சம்புலோ*
*செலுவொந்தி வெலயுனு சேலபுரமு*
*தா'னி சேருவனுனுத்'த'ண்ட மல்லசமுத்'ர*
*மனுக்'ராமமுனனுண்டு ஆந்த்'ரவிப்ரு*
*டாத்ரேயா கோ'த்ரஜு"ட்மலதேஜஸ் குடைன*
*ராமபக்துன்டைண ராமபத்ரு*
*டாதனி தனயுஞ் னனகுலுவித்'த'ரு*
*ணந்தக்'ரஜு"டு மல்லனார்யுடனக'*
*னனது கனுஜு"ண்டு விஸ்வநாதாக்யதனய*
*வினுதி கெக்கின குலசதி வெங்கடாம்ப*
*பர்ப்'ப' கலசாப்'தி' சந்த்'ருடு கவிலரேண்யு*
*லகுனு சிஷ்யுடு' எல்லய' சுகவி ஹிதுடு"*

கோலா சேஷாசலகவி 1846ல் இயற்றிய 'நீலகிரி யாத்ரா' எனும் தெலுங்கு வசன நூலில் எல்லையாவைத் தம் சமகாலத்தவராகக் குறிப்பிட்டுள்ளார்.

முன்னைய சேலம் ஜில்லா, ஹோசூர் தாலுக்கா, தொகிரியில் பிறந்தவர். ஹோசூரி சாகம்ம என்ன பெண் கவிஞர் 1760ல்

இராமாயணம், ரங்கவிலாசம் முதலிய யட்சகானங்கள் இயற்றினார். இவரைப் பற்றி ஹோசூர் கே.எஸ். கோதண்டராமையா ஒரு கட்டுரையில் முதன் முதலில் தெரியப்படுத்தினார்.

தஞ்சையிலும், மதுரையிலும் நாயக்க மன்னர்கள் ஆண்ட காலத்தில் தெலுங்கிலக்கியம் எத்துணை வளமுடன் வளர்ந்து வந்தது என்பது புலப்படுகிறது. அதுபோலவே புதுக்கோட்டையிலும் தெலுங்கிலக்கியம் வளர்ந்தது. புதுக்கோட்டை சமஸ்தானம், விஜயநகர சமஸ்தான மன்னர்களும், தஞ்சை ரகுநாத நாயக்கரும் தம்மிடம் சேனாதிபதிகளாக இருந்தவர்களைப் பாராட்டிப் பரிசில் தந்த சமஸ்தானமாகும். புதுக்கோட்டை தொண்டைமான்கள் தமிழர்களே எனினும், தெலுங்கு மொழி அன்னாளில் அரசாங்க மொழியாக இருந்தமையால் தெலுங்கிலும் புலமை பெற்றிருந் தார்கள். இவர்கள் சமஸ்தானக் கொடியில் ஸ்ரீ பிருஹதம்பா சஹாயம் என்று தெலுங்கு எழுத்தில் பொறித்துக் கொண்டனர்.

ரகுநாத தொண்டைமான் (1616 - 1730) இம் மரபின் முதல்வர். இவர் குமாரர்கள் திருமலை விஜயரகுநாதர் (1730 - 1769) ஆவர். திருமலை குமாரர் ராயரகுநாதர் (1769 - 89) ஆவார். இவர் தெலுங்கிலக்கியத்தில் புலமை மிக்கவர். பார்வதி பரிணயம் என்னும் காவியம் இயற்றியுள்ளார். இக்காவியம் மிகச்சிறந்த நடையில் கற்பனை நயமுடன் மிளிர்கிறது. தமிழ் மன்னன் தெலுங்கில் காவியம் எழுதிப் பாராட்டப்பட்டான். கி.பி. 1732ல் விஜயரகுநாதர் புதுக்கோட்டை சமஸ்தான திருமயம் அருகில் கிமானூர் எனும் கிராமத்தை அந்தணர்கட்கு தானமாகத் தந்த சாசனம் தெலுங்கில் தான் உள்ளது. பிற சாசனங்கள் தமிழில் உள்ளன. ராயரகுநாதர் காலத்திலும் தெலுங்கு அரசியல் மொழியாக இருந்தது. ரகுநாத தொண்டைமான் பார்வதி பரிணயம் காவியமும், 'கவிஜனோஜ்ஜீவனி' எனும் நூறு பாடல்கள் கொண்ட நூலும் இயற்றினார். தம் அவைப் புலவர் வெங்கன்ன கொடுத்த ஈற்றடிகளைப் பூர்த்தி செய்த செய்யுட்களின் தொகுப்பே 'கவிஜனோஜ்ஜீவனி' ஆகும்.

மதுரை நாயக்க மன்னன் முத்து வீரப்ப நாயக்கர் தம் காலத்தில் மேற்கு கோதாவரி மாவட்டம், நரசாபுரம் வட்டம், நுதுரு பாடு கிராமத்திலிருந்து சில அந்தணர்களை வரவழைத்தார். அந்த அந்தணர் மரபு பின் புதுக்கோட்டையில் நிலை பெற்றது.

நுதுருபாட்டி சீதாராமய்யா புதுக்கோட்டை ராய ரகுநாத தொண்டைமான் ஆதரித்த கவிஞர்களில் ஒருவர். இவரது மரபினர் பெருங் கவிஞர்களாகத் திகழ்ந்தனர். இவர் 'திருமல ராயோதாஹரணம்' எனும் பிரபந்தம் இயற்றியுள்ளார். இவரது குமாரரான நுதுரு பாடி வெங்கன்னா பிரசித்தமான முதன்மைக் கவிஞராக ரகுநாதரின் அவையில் திகழ்ந்தார். இவர் 'ஆந்திர பாஷார்ணவமு' என்ற நிகண்டுவும், 'ரகுநாதீயமு' எனும் அணியிலக்கண நூலும், பார்வதி கல்யாணம் எனும் யட்ச கானமும், பிருஹன்னாயாகா தண்டகம் எனும் தோத்திர நூலும் மல்லுபுராணம் எனும் மற்போர் குறித்த நூலும் (இந்நூல் கந்தருவக்கோட்டை பிருது குப்பால் மல்லனுக்குச் சமர்ப்பித்துள்ளார்.) இயற்றியுள்ளார். நவனப்ப என்ற கவிஞர் 'கட்கலட்சண சிரோமணி' என்ற வாள்களின் படைப்பு வாட்போர் புரிதல் குறித்த இலக்கணங்களை விளக்கும் நூல் ஒன்று படைத்துள்ளார். நுதுருபாடி சாம்பசிவ கவி 'பில்கணீயம்', 'தொண்டைமான் வம்ச பிரதாபமாலிகா', 'சந்திரானனா தண்டகம்' இயற்றியுள்ளார்.

இவ்விதமாக புதுக்கோட்டை ரகுநாத தொண்டைமான் காலத்திலும் தெலுங்கில் நல்ல படைப்புகள் உருவாயின. நாமக்கல் தலைமலையில் இருந்த ராமச்சந்திரா ரெட்டிக்குச் சமர்ப்பணமாக விஸ்வேஸ்வாகவி 'கிருஷ்ண விலாசம்' எனும் காவியம், 1670 - 1700ல் இயற்றியுள்ளார்.

செங்கல்பட்டு மாவட்டம், பொன்னேரி அருகில் உள்ள பிரளய காவேரிபட்டினத்தில் இருந்த மகதல ராம மந்திரிக்குச் சமர்ப்பித்து வெலிதண்ட்ல வேங்கட பதி (1740) 'ராதாமாதவ சம்வாதம்' எனும் பிரசித்தமான காதற் சுவை நூல் படைத்துள்ளார்.

செங்கல்பட்டு மாவட்டம், செய்யூர் சமஸ்தான அவைக் களக் கவிஞரான மாருபெத்தி செங்கவராய கவி (1810 - 1900) கந்தரேஸ்வர விலாம் எனும் அழகிய யட்சகான நாடகம் இயற்றியுள்ளார். எட்டயபுரம் ஜகதீஸ்வர ராமகுமார எட்டப்ப மகாராஜா (1816 - 39) அவர்கள் தெலுங்கில் புலமை மிக்கவர். தமிழ்ப் புலவர்களையும், தெலுங்குப் புலவர்களையும் ஆதரித்தவர். கடிகை முத்துப் புலவர் முதலிய தமிழ்க் கவிஞர்களும், கேசராஜு பட்ராஜு, விளாத்தியம் கிருஷ்ணாயாமாதிய முதலிய தெலுங்குப் புலவர்கள், வில்லிபுத்தூர், ஸ்ரீரங்கம் கும்பய்யங்கார் முதலிய வடமொழிப் புலவர்களையும் ஆதரித்தவர். அவர்க்கு மூன்று மொழியிலும் புலமையுண்டு. இவரது

ஆதரவில் சங்கீதமும், மூர்த்திகளில் ஒருவராகிய முத்துச்சாமி தீட்சிதரின் கடைசி சகோதரர் பாலசாமி தீட்சிதர் வளர்ப்பு மகனான சுப்பராம தீக்ஷிதர் இருந்தார். சுப்புராம தீட்சதர், சிறந்த புலமையாளர். தமிழ், தெலுங்கு, வடமொழியில் வல்லவர், இசை மேதை. இவர் 'சங்கீத சம்பிரதாய பிரதர்சனி' என்று தெலுங்கில் ஓர் அரிய நூலை எழுதி 1900ல் வெளியிட்டார். தெலுங்கு மகாபாரதத்தைத் தமிழாக்கம் செய்து வெளியிட்டார். எட்டயபுரம் சமஸ்தான பண்டிதரான திருச்சியில் வாழ்ந்த தி.சு. முருகேசம் பிள்ளை தமிழிலும், தெலுங்கிலும் புலமை மிக்கவர். இவர் தெலுங்கில், 'கம்பகவிவிதம்', 'கண்ணகி லேக நூபுர மஹிம' என்ற நூல்களை இயற்றியுள்ளார். தமிழ் தெலுங்கு மொழித் தொடர்புகள் குறித்தும் ஓர் அரிய கட்டுரையை வரைந்து பாராட்டுப் பெற்றவர். 1911 முதல் ஆந்திர சாஹித்ய பரிஷத்தோடு தொடர்புடையவராக இருந்தார்.

இதுவரை தெலுங்கு உலகம் அறியாததும், அண்மையில் தெரிவிக்கப்பட்டதுமான ஒரு செய்தி. ராஜபாளையத்தில் பதினேழாம் நூற்றாண்டில் ராஜகுலத்தைச் சேர்ந்த கவிஞர்கள் தெலுங்கு மொழியில் யட்சகானம் படைத்துள்ளனர் என்பதாகும்.

பதினேழாம் நூற்றாண்டில் ஸ்ரீவில்லிபுத்தூர் அருகிலுள்ள இராஜபாளையத்தில் ராஜுக்கள் குலத்தில் தெலுங்கு மொழியில் பெரும்புலமை மிக்க கவிஞர்கள் இருந்தனர். கிருஷ்ண தேவராயர் காலத்தில் படைவீரர்களாக வந்து மதுரையில் இருந்து தென்புலம் நோக்குச் சென்ற ராஜுக்கள் இராஜபாளையத்தில் நிரந்தரமாகத் தங்கினர். அவர்கள் தம் தாய்மொழியைப் பேணி சிறப்புடன் வளர்த்து வந்தனர்.

கொட்டுமுக்கல வரதராஜு என்பவருக்கு இரு குமாரர்கள். ஒருவர் வெங்கட்டராஜு. இவர் மிக்க புலமையுடையவர். இராமாயாண, பாரத, பாகவத நூல்களை நன்கு கற்றவர். கவிஞர். இவர் கைப்பட எழுதிப் படித்த தெலுங்கு இராமாயணம், பாரதம், பாகவதம், ஹரிஸ்சந்திர சரித்ர, பெத திருமலாச்சாரியரின் பகவத் கீதை தெலுங்கு உரை முதலிய ஏட்டுச் சுவடிகள் பாதுகாக்கப் பட்டுள்ளன. ★ வரதராஜுவின் மற்றொரு குமாரர் கிருஷ்ணமராஜு ஆவார். இவர் தமையனைப் போலவே பாண்டித்தியமும், இசைப் புலமையும் உடையவர். இவருடைய சீதா கல்யாணம் என்ற

---

★ இந்த ஏட்டுச் சுவடிகள் இந்நூலாசிரியரிடம் உள்ளன.

யட்சகானம் கிடைத்துள்ளது. கிருஷ்ணமராஜுவுடைய இரு குமாரர்கள் குமாரபெத்தி ராஜு, சிங்கராஜு என்பவர்கள் கிருஷ்ணமராஜுவின் மனைவி ரங்காம்ப, இவருடைய குமாரர் குமார பெத்தி ராஜு 'சாவித்ரி' யட்சகானமும், பெத்'த'மாம்பா குமாரர் சிங்கராஜு 'பாரிஜாா பஹரணமும்' இயற்றியுள்ளனர். ஒரே குடும்பத்தைச் சேர்ந்த இக்கவிஞர்கள் இனிய நடையில், நல்ல சொல்லாட்சியுடன் இந்நூல்களைப் படைத்துள்ளனர். இம்மூன்று நூல்களையும் இராஜபாளையம் தெலுங்கு வித்யாலயம் சார்பில், 'இராஜபாளையம் ராஜ கவுல யட்ச கானமுலு' என்று பேரிட்டு 1981ல் வெளியிட்டுள்ளேன். ஏட்டுச் சுவடியைப் பிரதி செய்து ஆய்வுரையும் எழுதிய புகழ்மிகு திம்மாவஜ்ஜல கோதண்டராமய்யா அவர்களின் முகவுரையும், எனது முன்னுரையும் கூடிய இப்பதிப்பு வந்த பின்னரே தெலுங்கு இலக்கிய உலகு இந்த நூல்களை அறிந்து சுவைத்துப் பாராட்டியுள்ளனர்.

இந்த இராஜபாளையம் கவிஞர்களின் யட்சகானங்கள் இருந்த ஏட்டுச் சுவடியில், பாஸ்கர சேஷாசல கவியின் 'நாஞ்சாருபரிணயம்' என்ற யட்சகானமும், திருமக்குள திருவேங்களரின் 'கூரத்தாழ்வார் சரித்ர' என்ற யட்சகானமும் உள்ளன. இவை பிரசுரிக்கப்பட்டுள்ளன.

தஞ்சையிலும், மதுரையிலும், புதுக்கோட்டையிலும், இராஜபாளையத்திலும் தெலுங்கு இலக்கியச் செல்வங்கள் ஈந்து தமிழகம் ஆந்திர நாட்டின் நன்றியைப் பெற்றுள்ளது.

தமிழ் இலக்கியம் தமிழகத்தில் மட்டுமே உருவானது. கன்னட இலக்கியம் கன்னட நாட்டில்தான் உருவானது. மலையாள இலக்கியம் மலையாள நாட்டில்தான் உருவானது. ஆனால், தெலுங்கு இலக்கியமோ, ஆந்திர நாட்டில் மட்டுமன்றி, தமிழ் நாட்டிலும், கன்னட நாட்டிலும்கூட உருவாகியது. இஃதொரு தனிச்சிறப்புடைய செய்தியாகும்.

தமிழ் இலக்கியத்திலிருந்து தெலுங்குக்கும், தெலுங்கிலக்கியத்திலிருந்து தமிழுக்கும் மொழி பெயர்ப்புகள் அவ்வளவாக நிகழாதது வருத்தத்திற்குரியதாகும். வடமொழி இலக்கியங்களில் பெரும்பாலானவை தெலுங்கில் வெளிவந்துள்ளன. அவை பெரும் பாலான இதிகாச புராணங்களேயாகும். சில காவியங்களும்

வந்துள்ளன. தெலுங்கிலிருந்து தமிழுக்கு வந்த முதல் மொழி பெயர்ப்பு நூல், 'வசு சரித்திரம்' ஆகும். இராமராஜ பூஷணர் பதினாறாம் நூற்றாண்டிலே இயற்றிய இக்காவியத்தை பதினேழாம் நூற்றாண்டிலேயே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருப்பது இருமொழி உறவிற்கு ஓர் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. திருவாலிகண்டபுரம், மடுவை திம்மபூபதியின் வேண்டுகோளுக்கு இணங்க தொண்டைமாந்துறை அம்பலத்தாடும் ஐயன் தமிழில் வசு சரித்திரம் இயற்றினார். இந்த நூல் ஆயிரம் பாடல்கள் கொண்டது. விருத்தப்பாக்களால் ஆனது. செம்பாகமான நடையுடையது. முப்பத்திரண்டு படலங்கள் அமைந்துள்ளது. இந்நூலின் இறுதிப் பாடல் இவ்வாறுள்ளது.

*விரிபுகழ் சேர் வசுசரித மெனும் தெலுங்கின்*
*அருத்த மதை விரித்து ரைத்தார்*
*இருவர் மாதுலன மச் சிவாயையன்*
*பாலைய னியவர்கள் பூவிற்*
*சொருபமிகு தமிழ்செய்தான் வீரமிகு*
*தொண்டை மாந்துறையில் வாழும்*
*பெருமை திகழ்ந்திடுமம் பலத்தாடும்*
*ஐயனெனப் பேர் பெற்றானே.*

இப்பாடல் மூலம், மூலத்தெலுங்குக் காவியத்தை நமச்சிவாய ஐயன், பாலையன் இருவரும் தமிழ்ப்படுத்திக்கூற அம்பலத்தாடும் ஐயன் பாக்களில் பாடினார் எனத் தெரிகிறது. இந்த அரிய நூல் 1952ல் சென்னை, அரசாங்க ஓலைச் சுவடி பதிப்பினரால் வெளியிடப்பட்டுள்ளது. ★

இந்தியச் சுதந்திரப் போரில் முதல் முழக்கமிட்ட வீரபாண்டிய கட்டபொம்மன் தெலுங்கு மரபினனே. பாஞ்சாலங் குறிச்சியில் இருந்துகொண்டு, பீரங்கிக்குண்டு வீச்சுக்களுக்கு அஞ்சாது ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடி, "வானம் பொழியுது, பூமி விளையுது! உனக்கெதற்கு வரி" என்று கேட்ட அம்மன்னனும், பாளையங்கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்து ஒரே வாரத்தில் மீண்டும் மண்கோட்டை கட்டுவித்து வீரப்போர் புரிந்த ஊமைத்துரையும், இந்திய சரித்திரத்தின் வீர வரலாற்றில் பொன்னெழுத்தால் பொறிக்கத்தக்கவர்கள். இம்மன்னர்கள் கம்பள

★ *Madras Government Oriental Manuscripts Series No. 17, 1952.*

நாயக்க மரபினர். தொன்மைக்காலந்தொட்டே தமிழக, ஆந்திர நாட்டுறவுகள் இடையறாமல் நல்லபடியாகவே இருந்து வந்துள்ளன. தமிழகத்தில் உள்ள தாய்மொழி தெலுங்காகக் கொண்ட மக்கள் பெரும்பாலும் வைணவ சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள்தான். ஆந்திா நாட்டில் குடியேறிய தமிழ்க்குடும்பங்கள் பிள்ளை, முதலியார், பிராமணர்கள் எல்லாம் இன்றும் வீட்டில் தமிழும், வெளியில் தெலுங்கும் பேசி வருகின்றனர். அவர்களில் பலர் புலமை மிக்கவர்களாகத் தெலுங்கில் நூல்கள் படைத்துள்ளனர். தமிழக தெலுங்கரும் தமிழில் நூல்கள் படைத்துள்ளனர். சிலர் சிறந்த மொழி பெயர்ப்புகள் செய்துள்ளனர்.

ஆந்திராவும், தமிழ்நாடும் பிரிப்பதற்கு முன்பு 1954ஆம் ஆண்டுக்கு முன்பு வரை சென்னை மாநிலமாக இருந்தபோது சென்னையில் தெலுங்கு மொழி அறிஞர்கள் இருந்தனர். திரைப்படம், கலை, பத்திரிகைகட்கு சென்னையே மையமாகத் திகழ்ந்தது.

மாத்தூரி அப்பாவு முதலியார் தெலுங்கில், 'மாத்ரு சதகம்' எழுதினார். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட வேதம் வெங்கடராய சாஸ்திரி தெலுங்கில் பல நூல்கள் இயற்றிப் புகழ் பெற்றவர். கந்து கூரி வீரேசலிங்கம் பந்துலு சென்னையில் இருந்தார். 1905 - 1913ல் விஞ்ஞான சர்திரிகா பிரசுரங்கள் சென்னையிலிருந்து வெளிவந்தன. 1917ல் ஆந்திர சாஹித்ய பரிஷத் சென்னையில் நிறுவப்பட்டது. 1914ல் முதல் தெலுங்கு தின பத்திரிக்கை 'ஆந்திர பத்ரிக' நாகேஸ்வர ராவ் தொடங்கினார். வீரேசலிங்கம் பந்துலு மகாகவி பாரதிக்கு ஆதர்ச புருஷராக திகழ்ந்தவர் என்பது 'சந்திரிகையின் கதை'யின் தம் கதாநாயகியை வீரேசலிங்கம் பந்துலுவிடமும், அவர் மனைவி ராஜலட்சுமியம்மாவிடமும் சென்று ஆதரவு பெற்றதாகக் கூறுவதிலிருந்து தெளிவாகிறது. பாரதியின் தம்பி விசுவநாதையருக்கு ஆசிரியர் பணி வாங்கிக் கொடுக்குமாறு பாரதியார் ஒரு கடிதம் பந்துலுவுக்கு எழுதித் கொடுத்தாகவும், அதன்படி அவருக்குச் சித்தூர் அருகே ஆசிரியர் பணி கிடைத்ததாகவும் விசுவநாதையர் கூறியுள்ளார். இச்செய்தி 'தினமலர்' நிருபருக்கு 1983ல் அளித்த பேட்டியின் மூலம் தெரிகிறது. பாரதிக்கும், வீரேசலிங்கம் பந்துலு அறிமுகமானவராகவும் இருந்திருக்கிறார்.

தெலுங்குக் கவிதை, சிறுகதை, நாடகங்களில் புதிய உத்திகளைப் பயன்படுத்திய மகாகவி குருஜாட அப்பாராவ் 'கன்யா

சுல்க' நாடகம் பிரபலமானது. இவரை ஆதரித்தவர் பூசப்பாடி ஆனந்த கஜபதி என்னும் விஜயநகர சமஸ்தான மன்னர். அப்பாராவ் உதகமண்டலத்தில் தங்கியிருந்தபோது 'நீலகிரி பாட்டலு' என்ற கவிதைகளை எழுதியுள்ளார். ராயவேலூரைச் சேர்ந்த சி. சந்திரசேகர சாஸ்திரிகள் தமிழர் ஆவார். அவரே குருஜாட அப்பா ராவுக்கு ஊக்கம் தந்து இலக்கிய முயற்சிகளில் ஈடுபடச் செய்தவர் ஆவார். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சீடர் அளகிரி ராஜு தெலுங்கர். இவரிடம் பாலவனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவர் தமிழ் கற்றார்.

திருநெல்வேலி சாது வரதராஜம் பந்துலு 1930 - 40ல் தமிழ்நாட்டு தெலுங்கர்கள் தங்கள் மொழியை மறந்துவிடாமல் இருக்க, 'தக்ஷிணாந்திர பத்ரிக' நடத்தினார். இப்பத்திரிக்கை தமிழ் எழுத்துக்களில் தெலுங்கு மொழியில் இருந்தது. சித்தூர் அருகே பூதலப்பட்டுவில் இருந்து பூதலப்பட்டி ஸ்ரீராமுலு ரெட்டி கம்ப ராமாயணம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், நாலடியார், ஒளவையார் பாடல்கள், பாரதி பாடல்கள், தெலுங்கில் மொழிபெயர்த்து வெளியிட்டு தமிழ், தெலுங்கு இலக்கிய உறவுக்கு நற்றொண்டாற்றினார். 1953ல் காரைக்குடி கம்பன் கழகம் இவரைக் கௌரவித்தது. சல்லா ராதாகிருஷ்ணசர்மா (தெலுங்கு துறைத் தலைவர், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்), பாரதியார் பாடல்களை தெலுங்கிலும், விஸ்வநாத சத்திய நாராயணாவின் 'வேயிபடக'லு' நாவல் சுருக்கம், 'ஆயிரந்தலை நாகம்' தமிழிலும் மொழி பெயர்த்துள்ளார்.

நான் (மு.கு. ஜகந்நாத ராஜு) கபிலரின், 'குறிஞ்சிப்பாட்டு', முத்தொள்ளாயிரம், திருக்குறள், புறநானூறு ஆகியன தெலுங்கிலும், கன்யா சுல்கம், மாலபல்லி, களாபூரணோதயம், ஆமுக்தமால்யத, வேல்மனா முதலியன தமிழிலும் மொழி பெயர்த்துள்ளேன். தெலுங்கு தாய்மொழியாக உடைய அறிஞர்கள் தமிழில் அரிய பல நூல்கள் படைத்துள்ளனர். கவிராஜபண்டிதர் ஜகவீர பாண்டியனார் 'பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம்' காவியமும், வசன நூலும், குமரேச வெண்பா, தருமதீப்கை கம்பன் கலை நிலை முதலியன மிக உயர்ந்த நூல்கள் இயற்றியுள்ளார்.

கவியோகி சுத்தானந்த பாரதியார் ஆயிரம் நூல்கள் எழுதிய பன்மொழி அறிஞர். 'பாரத சக்தி மகா காவியம்' இவரது பெருங் காவியப் படைப்பு. பிரஞ்சு மொழியிலிருந்து பல நூல்கள் மொழி

பெயர்த்தார். ஆங்கில, வடமொழி நூல்களும், மொழி பெயர்த்துள்ளார். 'யோகமாஜம்' நிறுவித் தமிழ்த் தொண்டாற்றி வந்தார். புகழுடம்பெய்தினார்.

பன்மொழிப் புலவர் வே. வெங்கடராஜுலு ரெட்டியார் 'கபிலர்', 'பரணர்', 'குற்றியலுகரம்' முதலிய அரிய நூல்கள் படைத்தவர். புருஷோத்தம நாயுடு திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் செய்துள்ளார். பாரிஸ்டர் ராமசாமி ராஜு திண்டிவனத்தில் 1842ல் பிறந்தவர். 'பிரதாப சந்திர விலாசம்' எனும் தமிழ் முதல் நாடகம் எழுதியவர். பம்மல் சம்பந்த முதலியார் இவரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். ஜெ.ஆர். ரங்கராஜு நாவல்கள் பல எழுதிப் புகழ் பெற்றவர். திரிலோக சீதாராம், சுரதா, அரங்க. சீனிவாசன், ருத்ர. துளசிதாஸ் முதலிய பலர் தமிழில் சிறந்த நூல்களைப் படைத்துள்ளனர் மற்றும் பலர் தமிழுக்கு அருந்தொண்டாற்றி யுள்ளனர்.

அரசியல் துறையில் பி.எஸ். குமாரசாமி ராஜாவும், ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரும், சென்னை மாநில முதலமைச்சர்களாகத் தொண்டாற்றியவர்கள். சேலம், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு, தமிழ்நாடு, பத்திரிக்கை நடத்தி அரசியல் விழிப்பை ஏற்படுத்தினார். சுதந்திரப் போராட்ட வீரர்கள், கலைஞர்கள், கவிஞர்கள் மற்றும் ஜி.டி. நாயுடு போன்ற விஞ்ஞான மேதைகள் பலருளர். கோயம்புத்தூரிலும், இராஜபாளையத்திலும் உள்ள தெலுங்கு மக்கள் தொழில், பொருளாதாரத் துறையிலும் தமிழகத்துக்கு நற்றொண்டாற்றி யுள்ளனர். இவ்விதமாக சங்க காலத்திலிருந்து ஏற்பட்ட ஆந்திர தமிழகத் தொடர்புகள் இன்று வரை இடையறாது நல்லெண்ணத்துடனும், சமச்சீருடனும் வளர்ந்து வந்துள்ளன. இதுகுறித்த விரிவான விவரங்கள் தனிநூலாகத் தரவேண்டியுள்ளது.

# 13. தற்கால வைணவ சமூகத் தொடர்புகள்

'நமது நாடு வேத காலத்திலிருந்தே வருணாசிரம தருமத்தைப் பின்பற்றி வந்துள்ளது. அந்தணர், அரசர், வைசியர், வேளாளர் எனும் பிரிவினை தொல்காப்பியமும் கூறுகிறது. இந்தியத் தத்துவ ஞான நூல்களிலும், புராணங்களிலும் இப்பாகுபாடு சிறப்பித்துக் கூறப்படுகிறது. சமூகம் நன்கியங்க வேண்டின் தொழிற் பாகுபாடு இன்றியமையாதது. அதன் அடிப்படையிலேயே வருணப் பாகுபாடு இருந்தது. வருணம் என்பது நிறம் என்ற பொருள்படும். உடலின் நிறம் கொண்டு ஏற்பட்ட பாகுபாடன்று. 'குணகர்மவிபாகம்' காரணமாக இப்பாகுபாடு ஏற்பட்டுள்ளதாக பகவத் கீதை கூறுகிறது. ஒரு வருணத்தார் தம் சுய முயற்சியால் மற்றொரு வருணத்தாராக மாற முடியும் என்ற கருத்தும் இருந்தது. சூத்திரரான வால்மீகி பிரம்ம ஞானியானதும், அரசரான விசுவாமித்திரர் பிரம்மரிஷியாகப் போற்றப்பட்டதும் இக்கருத்தை மெய்ப்பிக்கும் சான்றுகளாகும்.

எளிமையும், நற்பண்பாடு மிக்க அந்தச் சமூதாய அமைப்பு சீர்குலைந்தது. மக்கட்பெருக்கம், வேற்றினக் கலப்புகள், சமூக உற்பத்திக் கருவிகளின் மாற்றம், தத்துவ நோக்கமாற்றம் காரணமாக சமூகப் பரிணாம வளர்ச்சியில் இது தவிர்க்க முடியாதது. இந்த மாற்றத்தின் காரணத்தால் வருணாசிரம தருமங்கள் சீர்குலைந்தன. பிரம்மசரியம், கிருஹஸ்தம், வானபிரஸ்தம், சன்னியாசம் எனும் ஆசிரம ஒழுங்கு பிறழ்ந்தது. வானபிரத்தம் எனும் காடுறை வாழ்க்கை அடியோடழிந்தது. மற்ற ஆசிரமங்களிலும் போலிகள் உருவாயின. அந்தணர் வேளாண்மைத் தொழில் செய்தலும், வேளாளர் ஆசிரியத்

தொழிலை மேற்கொள்வதுமான கலப்பு ஏற்பட்டது. இது காலாந்தரத்தில் பிறப்பால் சாதிப்பிரிவினை கூறும் சாதியமைப்பாக மாறியது. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னேயே இந்தப் புதிய சாதிகள் உருவாகத் தொடங்கியது. ஆயிரம் ஆண்டுகட்கு முன்பிராத புதிய புதிய சாதிகள் நாளாவட்டத்தில் தோன்றலாயின. சாதியமைப்புகளைப் பற்றிப் பலர் ஆராய்ந்துள்ளனர். தர்ஷ்டன் எனும் ஆங்கிலேயர், தம் உதவியாளர்களைக் கொண்டு எழுதி ஆங்கிலத்தில் வெளியிட்ட தென்னிந்தியச் சாதிகளும், பழங்குடிகளும் எனும், South Indian Castes and Tribes என்ற நூல் இந்த வகையில் ஆதார நூலாகத் திகழ்கின்றது. ஆந்திர நாட்டிலாயினும் சரி, தமிழ்நாட்டிலும் சரி. தற்போது சைவமும், வைணவமும் பேதமின்றிக் கலந்து வருகின்றன என்பது தெளிவு. அந்தணர்களிலும், பிள்ளை, முதலி போன்ற மேற்குலங்களில் இன்னும் ஆசார சீலரான வீர வைணவர்களும், வீர சைவர்களும் உள்ளனர். மற்ற சாதாரணமான சாதிகளில் மரபினால் வைணவரேனும் சிவத்தலங்களை வழிபட்டு வருகின்றனர். இந்து மதம் என்ற உணர்வே மேலோங்கியுள்ளதன்றி சைவ, வைணவ பேதம் குறைந்து வருகின்றது. வைணவ மரபுகளில் அந்தணர்கள், நாயுடு, கோனார் போன்ற சில சாதிகளில் மட்டுமே திருமண் அணிதல் முதலிய புறச் சின்னங்களை விடாது பேணி வருகின்றனர். அவர்களிலும் இளைஞர்கள் புறச் சின்னங்களைப் புறக்கணித்து வருதல் கண்கூடு.

தமிழகத்திலிருந்து ஐநூறு ஆண்டுகட்கு முன்னரே சென்று ஆந்திர நாட்டில் நிலைபெற்றுள்ள அந்தணர்களில் இன்றும் தமிழைப் பாதுகாத்து வீட்டில் பேசுவோர் உள்ளனர். நெல்லூர் மாவட்டத்திலுள்ள புதூரு திராவிட அந்தணர்கள் அத்தகையோர். இவர்கள் தஞ்சாவூர் மாவட்டம், கும்பகோணம் அருகே 'கண்டரமாணிக்கம்' என்ற அக்கிரகாரத்திலிருந்து சென்ற பிராமணங்கள் ஆவர். கோதாவரி, விசாகப்பட்டினம் மாவட்டங்களில் பேரூர் திராவிட அந்தணர்கள் உள்ளனர். திமிரி, ஆராம திராவிடர்கள் என்றும் பிரிவுகள் உள்ளன. இவர்கள் தமிழகத்திலிருந்து வந்தவர்கள் என்பதில் ஐயமில்லை. இவர்கள் பெரும்பாலும் வைணவர்களே. தும்மகுண்ட திராவிட பிராமணர்கள் வீட்டில் தெலுங்கு பேசினும் முற்காலத்தில் தமிழர்களே. இந்த பிராமணர்கள் தம்மில் கலந்துரையாடும்போது தமிழே பேசுவர். புதூர் திராவிடர்கள் தங்கட்குள் பேசும் போது 'நம்பளவன்' என்று தமிழ்ச் சொல்லால் கூறி அறிமுகப்படுத்துவர். இவர்கள் எல்லோரும் வைணவர்களே.

பிற்காலத்தில் ஸ்மார்த்தர்களாக மாறியுள்ள குடும்பங்கள் பல. நெல்லூர் மாவட்ட சூலூர் பேட்டைக்கருகேயுள்ள உச்சூடு, மங்கலம்பாடு கிராமத்திலுள்ள வைதிக பிராமணர்களின் தாய்மொழி தமிழேயாகும். இன்றும் தமிழே வீட்டில் பேசி வருகின்றனர். புதூரு திராவிடர்களில் பல வீட்டுப் பெயர்கள் உள்ளன. வேதம், திருபதி கொண்ட குண்ட்ட, சதலுவாட, கொமண்டூர், உடாலி, வஜ்ஜல, திம்மாவஜ்ஜல, கலிசி, சொட்ட, பாடூரு, அல்லாடி, கொடுகு, நேலரூரு, கொண்டூரு, அப்பலகுட்டி, கும்ப்பட்டி, கோட்ட, தோபா, நல்லாரி, சிங்கராஜு, காளஹஸ்தி, புவனவல்லி, அளகப்ப, அப்பகாயல முதலியவை அவை. வீட்டுப் பெயர் என்பது தெலுங்கில் இன்ட்டிபேரு எனப்படும். இது ஒரு சாதியின் உட்பிரிவுகளான வகையினரைக் குறிக்கும். ஊர்ப்பெயராகவோ, வீரத்தலைவர்கள் பெயராகவோ குடும்பப் பெரியவர் பெயராகவோ, பட்டப் பெயர் ஆகவோ, வீட்டுப் பெயர் அமையும். தமிழகத்தில் பொதுவாக தந்தையார், பாட்டனார் பெயர்களின் முதல் எழுத்துக்களை சேர்ப்பது போல ஆந்திர நாட்டினர் தமது குல மரபின்படி வீட்டுப் பெயர்களை முன்னால் பயன்படுத்துவர். தமிழகத்திலிருந்து சென்று ஆந்திர நாட்டில் குடியேறிய இம் மரபினரில் இன்றும் வீட்டில் தமிழே பேசுவதால் தமிழரேயாவர். இவர்களில் மிகப்பெரிய அறிஞர்கள் தோன்றி வடமொழிக்கும், தெலுங்கு மொழிக்கும் வைணவத்துக்கும் தொண்டாற்றியுள்ளனர். உபிலி வரதராஜ பண்டிதர், 'இராமாயண விவேகதிலக வியாக்கியானம்' எழுதியவர். கி.பி. 1250ல் இருந்தவர். அசூரி, கொட்டைக் குலத்தினர் இவர்களில் உள்ளனர். இராமானுஜர் ஆசூரி மரபினர். ஆளவந்தார் கொட்டைக் குலத்தவர். இந்த புதூரு திராவிட பிராமணர்களில் மிகப் பிரபலமான தெலுங்கறிஞர் வேதம் வெங்கடராய சாஸ்திரி. சென்னையில் இருந்து பல நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டார். தாமே பிரதாபருதரீயம் நாடகம் இயற்றினார். நாகானந்தம் முதலிய வடமொழி நூல்களை தெலுங்காக்கம் செய்தார். 'ஆமுக்த மால்யத'விற்கு பேருரை கண்ட பெருமை சான்றவர். இவரது பேரர் வெங்கட சாஸ்திரி தற்போது சென்னை - மண்ணடியருகே மல்லீஸ்வரர் கோவில் அருகில் தம் பாட்டனாரின் அச்சகத்தை தொடர்ந்து நடத்தி வருகிறார். இவர் ஐந்தாண்டுகளுக்கு முன் காலமாகிவிட்டார். இவர் சரித்திர ஆராய்ச்சியில் சிறந்த அறிஞர். தமிழ், தெலுங்கு, வடமொழி, ஆங்கிலம் நன்கறிந்த அறிஞர். பல நூல்கள் தெலுங்கில் எழுதியுள்ளார். அல்லாடி கிருஷ்ணசாமி அய்யங்கார் பிரபலமான வழக்குரைஞராகத் திகழ்ந்தவர். வாவிள்ள வெங்கடேஸ்வர சாஸ்திரி தெலுங்கிலக்கிய நூல்களை சிறப்புற வெளியிட்ட அறிஞர். அரிய பல

இலக்கிய நூல்களை வெளியிட்டுப் புகழ் பெற்றவர். சென்னையில் மிகப் பெரிய பதிப்பகமாக பெயர் பெற்றிருந்த 'வாவிள்ள' நிறுவனம், வாரிசுதார் இல்லாமல், வழக்குமன்றம் சென்று இன்று பொலிவிழந்து போனது, வருந்தத்தக்கது. ஆச்சார்ய மாமிடிபூடி வெங்கடரய்யா மிகப் பெரிய அறிஞர். அரசியல், பொருளாதார, சரித்திர நூல்கள் படைத்துப் புகழ் பெற்ற மேதை.

திம்மாவஜ்ஜல கோதண்ட ராமையா சிறந்த விமர்சகர். நேலடூரு வெங்கடரமணய்யா தென்னாட்டு வரலாற்றுப் பரிசோதகர். சாசனங்களை ஆராய்ந்து பல சரித்திர உண்மைகளை வெளிக் கொணர்ந்தவர். தெலுங்கில் பல சரித்திர நூல்கள் எழுதிப் புகழ் பெற்றவர். அரபி, பார்ஸீ மொழிகளும் கற்றுக்கொண்டு காகதீய, விஜயநகர சாம்ராஜ்ய சரித்திரங்களை வரைந்தவர். இப்படிப்பட்ட தெலுங்கிலக்கிய உலகுக்கு இணையற்ற சேவை செய்தவர்கள் புதூரு திராவிட பிராமணர்கள் ஆன தமிழர்கள் ஆவார்கள்.

தமிழகத்திலிருந்து ஒரு காலத்தில் குடியேறிச் சென்ற கந்தாடை பரவஸ்து, கிளாம்பி முதலிய வீட்டுப் பெயர்களைக் கொண்ட பிராமண குடும்பங்களில் பல மேதாவிகள் தோன்றி பல அரிய நூல்கள் படைத்துள்ளனர். பல்வேறு சமஸ்தானங்கள் இவர்களை ஆதரித்தன. வைணவ ஆச்சாரியர்களாகவும், தெலுங்கு, வடமொழிப் பண்டிதர்களாகவும் விளங்கினர். நாகார்ஜுனா பல்கலைக் கழகத் தெலுங்கு துறைத் தலைவர் டாக்டர் தூமாட்டி தொணிப்ப அவர்கள், "ஆந்திர சமஸ்தானமுல சாஹித்ய போஷண" என்று ஓர் ஆய்வு நூல் எழுதி ஆந்திரப் பல்கலைக் கழகம் 1969ல் ஒரு நூல் வெளியிட்டுள்ளது. ஆந்திர நாட்டிலுள்ள குறுநில மன்னர்களின் ஆதரவில் தெலுங்கிலக்கியம் வளர்ந்த வரலாறும், அந்த சமஸ்தானங்களின் சுருக்க வரலாறும் உள்ளன. இந்நூலில் தமிழ்நாட்டிலிருந்து சென்ற வைணவ அந்தணர்களின் தெலுங்கு மொழிக்காற்றிய தொண்டு ஆங்காங்கே விளக்கப்பட்டுள்ளது. இதே போல தமிழ்நாட்டில் இருந்த குறுநில மன்னர்களின் ஆதரவில் வளர்ந்த தமிழிலக்கியம் பற்றியும் கவிஞர்கள் பற்றியும் மன்னர்கள் பற்றியும் விரிவாக ஆய்வு செய்து நூல் எழுதப்பட வேண்டும். பல்கலைக்கழகங்கள் இணைந்து இப்பணி ஆற்ற வேண்டும்.

ஆந்திர நாட்டுக்கும் தமிழகத்துக்கும் தொடர்புடைய இந்த அந்தணர்கள் வைணவத்தைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றனர்.

இன்றும் பல அறிஞர்கள் உள்ளனர். அனந்தபுரம் குன்ட்டி மத்திசேஷ சர்மா, வாரங்கல் கோவெல சுப்பிரசன்னாச்சாரியா, கோவெல சம்பத் குமாராசார்யா, நெல்லூர் கிளாம்பி இராமானுஜாச்சார்யா போன்ற வித்துவான்கள் இன்றும் வைஷ்ணவ சம்பிரதாயத்தில் சிறந்த புலமையுடன் திகழ்ந்து நூல்களும் இயற்றியுள்ளனர்.

தெலிங்கானா பகுதியில் மாடபூஷணம் ரங்காச்சாரியர் (1837 1912) 'இராமானுஜ ரஹஸ்யத்ரய விவரணம்', 'பிரபன்ன ஜனஜீவாதுவு' என இரு நூல்கள் தெலுங்கு எழுத்தில் தமிழில் இயற்றியுள்ளார். 1910ல் இந்நூல் பிரசுரிக்கப்பட்டுள்ளது. வாரங்கல்லில் வெங்கடேஸ்வர முத்திராட்சர சாலையில் அச்சிடப்பட்டது. இவர் தெலுங்கு மொழியில் 'திருநாமாலு' எனும் வைணவ கீதங்கள் பல இயற்றிப் புகழ்பெற்றவர்.

மரிகண்டி லட்சுமண தேசிகர் (1864 - 1930) திருநாமாலு எனும் வைணவ கீதங்கள் பல இயற்றியவர். அமராவதி நாராயணாச்சார்யுலு வரங்கல்லில் வாழ்ந்த (1874 - 1939) வைணவ பக்தர். இவர் 'இராமானுஜயசோ பூஷணம்' இயற்றியுள்ளார்.

கோயில் கந்தாடை வேங்கட சுந்தராச்சாரியார் (1875 - 1934) சிறந்த வைஷ்ணவ சம்பிரதாய பண்டிதராவார். நல்லந்திகழ் சக்ரவர்த்துல ரும்பில லக்ஷ்மி நரசிம்மாச்சார்ய (1884 - 1959) வைணவ பக்தராக பல நூல்கள் இயற்றியுள்ளார். கோவெல ரங்காச்சாரியார் (1885 - 1967) விசிஷ்டாத்துவித சித்தாந்தத்தில் பெரும் பண்டிதராகத் திகழ்ந்து 'கீதார்த்த சங்கிரகம்' முதலிய பல நூல்கள் இயற்றியவர்.

தற்போது தெலுங்கில் பிரபல கவிஞர்களுள் ஒருவராகிய வானமாமலை வரதாச்சாரியர் 'போதனா சரித்ர' என்ற சிறந்த தெலுங்குக் காவியம் இயற்றிப் புகழ் பெற்றவர்.

ஆந்திர நாட்டில் குடியேறிய தமிழ் பிராமணர்கள் வைணவத்தில் சிறந்த பண்டிதர்களாகவும், தெலுங்கு, வடமொழிப் புலமை பெற்றும் திகழ்வது போலவே, தெலுங்கு நாட்டிலிருந்து தமிழகம் குடியேறிய அந்தணர்களும், தமிழிலும், வைணவத்திலும், வடமொழியிலும் பெரும்புலமை பெற்று தமிழகத்தின் எல்லாப் பாகங்களிலும் இருக்கிறார்கள். இவர்களைப் பற்றியும் விரிவான ஆய்வு செய்யப்பட வேண்டும்.

பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியார் தெலுங்கில் ஸ்ரீபகவத் இராமானுஜ கிரந்தமாலா என்று 1939ல் தொடங்கிய நூல் வரிசையில் ஸ்ரீவசனபூஷணம் தத்துவத்திரயம், முமுட்சுப்படி, ஆசார்ய ஹ்ருதயம் முதலிய நூல்களை வெளியிட்டு ஆந்திர - தமிழக வைணவ அந்தணர்கட்கோர் உறவுப் பாலமாக அமைத்திருந்தார். தமிழகத்துக்கும், ஆந்திர நாட்டுக்கும் தொடர்புடைய பரவஸ்து பிராமண குடும்பத்தாரில் பல வித்துவான்கள் தெலுங்கில் வைணவ கிரந்தங்கள் எழுதி வெளியிட்டுள்ளனர். திருமலை, திருப்பதியில் நம்மாழ்வார் உற்சவம், திவ்வியப் பிரப்பந்தானு சந்தானம் முதலிய தமிழக வைணவ மரபுகளை நிறுத்திவிடவே விஜயநகர மன்னர்களிடம் முறையிட்டு மீண்டும் நிலைநிறுத்திய பெருமை பரவஸ்து வெங்கடாச்சாரியர் என்பவருக்கு உண்டு. கி.பி. 1523ல் பட்டர்பிரான் அய்யன் எனும் சாத்தாத வைணவ சீடன் பல மானியங்கள் தந்தான். இந்த பரவஸ்து வமிசத்தாரை விசாகப்பட்டினம் அருகே உள்ள விஜயநகர சமஸ்தானாதிபதிகள் ஆதரவளித்து வந்தனர். இந்த மரபில் பரவஸ்து கோவிந்தாச்சாரி (1848 - 1918) என்பவர், 'ஸ்ரீவசன பூஷணம்' தெலுங்காக்கம் செய்துள்ளார். இவர் ஸ்ரீபெரும்புதூர் ஆசூரி இராமானுஜ ஸ்வாமி என்பவரிடம் சீடராகி வைணவ சம்பிரதாய கிரந்தங்களைக் கற்றுத் தேர்ந்தவராகும். தத்துவத்திரயமும் தெலுங்காக்கம் செய்துள்ளார்.

வெங்கடாச்சாரி என்பவர், 1913ல் நாலாயிர பிரபந்தங்களை தெலுங்கு வியாக்கியானத்துடன் வெளியிட்டுள்ளார். இது போன்று எத்தனையோ அறிஞர்கள் உள்ளனர். இவர்களுடைய வரலாறுகள் முயன்று தொகுக்கப்பட வேண்டும்.

தமிழகத்துக்கும், ஆந்திர நாட்டுக்கும் தொடர்புடைய வைணவ சமூகங்களில் ஆந்திர க்ஷத்திரிய ராஜுக்கள் சமூகமும் ஒன்றாகும். ஆந்திர நாட்டில் கிழக்கு, மேற்கு கோதாவரி மாவட்டங்களிலும், விசாகப்பட்டினம், விஜயநகரம் மாவட்டங்களிலும் நிலக்கிழார்களாக உள்ள ராஜுக்கள் சமூகம் வைணவ சமுதாயமாகும். திருமணம் முதலிய சடங்குகளில், வைணவ மரபுப்படி திருமண் தரித்து வைதீக நெறியில் பக்தி சிரத்தையுடன் உள்ள இம்மரபு ஆந்திர நாட்டின் முக்கிய சமூகங்களில் ஒன்றாகும். விஜயநகரம், பெத்தாபுரம், துனி, மொகல்துர்ரு? இராமச்சந்திரபுரம் முதலிய சமஸ்தானாதிபதிகள் ராஜுக்களே. இராஜஸ்தானிலிருந்து ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பே வந்து விட்ட சமூகம் என்று கூறப்படினும் சான்றுகள் இல்லை. தெலுங்கைத்

தாய்மொழியாகக் கொண்ட இவர்கள் ஆந்திர நாட்டினரேயாவர். ஆந்திர நாட்டில் இவர்கள் வசிஷ்ட, தனஞ்சய, காஸ்யப, கௌண்டின்ய எனும் நான்கு கோத்திரங்களில் பூசப்பாடி, முதுனூரி, பேர்ச்சர்ல முதலிய நூற்றிருபது வீட்டுப் பெயர்களுடன் திகழ்கின்றனர். ஏறக்குறைய முப்பது லட்சம் மக்கட் தொகையுள்ள சமூகம் இது. செல்வமும், செல்வாக்கும் மிக்க சமூகம் இது.

விஜயநகர சமஸ்தானாதிபதிகள் ஆந்திர நாட்டுச் சரித்திரத்தில் குறிப்பிடத்தக்க வீர வரலாற்றையுடையவர்கள். ஹம்பி, விஜயநகர சாம்ராஜ்யாதிபதி கிருஷ்ணதேவராயருக்கும், விஜயநகர சமஸ்தானாதிபதிகட்கும் தொடர்பிருந்திருக்க வேண்டும். அந்த விஜயநகரத்தின் தொடர்பாகவே இந்த விஜயநகரம் நிர்மிக்கப்பட்டது. கலிங்க வெற்றியை அடுத்து விஜயநகர சமஸ்தானம் உருவாக ராயர் உதவியிருக்க வேண்டும்.

பூசப்பாடி மரபு முன்னோர்களில் கி.பி. 1145ல் இருந்த மைலம பீமன் என்பவர் முக்கியமானவர். இவரைப் பற்றி வேமுலவாட பீமகவி பாடியதாக ஒரு தனிப்பாடல் இருக்கிறது. ''மைலம பீமனின் வாள் எப்படிப் படைக்கப்பட்டது'' என்று கவிஞன் கற்பித்து அவனது வீரத்தை விளக்குகிறான். சிவபெருமானின் மூன்றாவது கண்ணாகிய நெற்றிக்கண் நெருப்பிலே, ஆதிசேடப் பாம்பின் விஷப்பற்களே பற்றுக்குறடாக, திசையானையின் தலையே அடிக்கல்லாக, விஷம் என்னும் இரும்பினைக் காய்ச்சி, இடிகளாகிய சம்மட்டிகளால் அடித்து யமன் என்கிற கொல்லன் மைலம பீமனுக்கு வாள் ஒன்று அடித்துத் தந்தான் என்கிறார் கவிஞர். பூசப்பாடி முதலாம் ராசி ராஜு (1400 - 1450) சாளுக்கிய மன்னர்களாலும், விஜயநகர பிரபுடதேவராயராலும் பாராட்டப்பட்டவர். இவர் குமாரர் இரண்டாம் தம்மிராஜு ஒரிசா. கட்டாக் கஜபதிகளை வென்று கஜபதி என்ற பட்டம் தம் மரபுக்கு உரிமையாக்கினார். இவர் மகன் இரண்டாம் ராசி ராஜு (1500 - 1550) காலத்தில் கடகம் பிரதாப ருத்தினிடம் கேசவபுரம் எனும் ஊரைப் பெற்றுக் கொண்டான். பிரதாப ருத்ரன் மகளை கிருஷ்ணதேவராயர் திருமணம் செய்து கொண்டதால் ராசி ராஜுவுக்கு பந்துவானார். பிரதாப ருத்திரன் மகளையே ராசி ராஜுவும் திருமணம் செய்து கொண்டார்.

இவர் மரபில் வந்த சீதாராமராஜு (1669 - 97) ஔரங்கசீபுக்கு கோல்கொண்டாப் போரில் துணை செய்து 'ஜுல்பிகார்' எனும்

இருமுனைகளிலும் கூர்மையுடைய கத்தியை பரிசிலாகப் பெற்று கௌரவிக்கப்பட்டார். இந்தக் கத்தியே விஜயநகர சமஸ்தானக் கொடியின் சின்னமாக விளங்குகிறது.

பூசப்பாடி விஜய ராமராஜு கி.பி. 1713ல் விஜயநகரக் கோட்டையைக் கட்டினார். இவர் சிறந்த வீரர். இவர் காலத்தில் பிரஞ்சுக் காரர்களுக்கும், ஆங்கிலேயருக்கும் இந்திய நாட்டு வர்த்தக சம்பந்தமாக கடும் போட்டியும், போர்களும் நிகழ்ந்து வந்தன. விஜயநகரம் அருகே உள்ள 'பொப்பிலி' சமஸ்தானம், 'வெலம' நாயக்கர்கட்கு உடையது. பொப்பிலிக்கும், விஜயநகரத்துக்கும் சரித்திரப் பிரசித்தமான போர் மூண்டது. பொப்பிலி தோற்றது. நூற்றுக்கணக்கான அந்தப்புர மகளிர்கள் தீக்குளித்தனர். 1757ல் நடந்த பொப்பிலி யுத்த வீர வரலாறு மக்கள் இலக்கியமாக்கப்பட்டு பாடப்பட்டு வருகிறது. பொப்பிலி வீரன் தாண்ட்ர பாபராயடு தன்னவர்களைக் கொன்ற விஜயராமராஜுவைப் பழிவாங்க வேண்டி இருட்டோடு சென்று தூங்கிக் கொண்டிருந்த விஜயராமராஜுவைக் கொன்று பழி தீர்த்துக் கொண்டான். அடிதமு சூரகவி, ஏனுகு லட்சுமண கவி முதலியோர் காவியங்களிலும், விஜயராமராஜுவைப் புகழ்ந்து பாடியுள்ளனர். பூசப்பாடி சின விஜயராமராஜு (1748 - 1794) காலத்தில் ஆங்கிலேயரின் கும்பிணி ஆட்சியாளர்களுக்கும் விஜயநகர சமஸ்தானாதிபதிக்கும், 'பத்மநாபம்' என்னும் இடத்தில் போர் நடந்தது. சட்ராதி லட்சுமி நரசிம்மகவி 'பத்மநாப யுத்தமு' காவியமாக்கியுள்ளார். 1794ல் ஜுலை மாதம் 10 தேதி கர்னல் பெண்டர் கஸ்ட் என்பவர் தலைமையிலான படைக்கும் சினவிஜயராம ராஜுவின் க்ஷத்திரிய வீரர்கள் நிறைந்த படைக்கும் போர் ஏற்பட்டது. இது சுதந்திரப் போரேயாகும். சின விஜயராமராஜு போரில் வீழ்ந்து பட்டார். அவருக்குத் துணை நின்ற பூசப்பாடி விஜய கோபாலராஜு, தாட்ல சினவெங்கடபதி ராஜு, பூபதி ராஜு, பத்மநாபராஜா ஜம்பன அப்பலராஜு, சின்தலபாட்டி நீலாத்திரி ராஜு, வத்ஸவாய நரச ராஜு, சாதி கோபால ராஜு ஆகிய வீரர்களும் அங்கேயே வீர சுவர்க்கம் புகுந்தனர். இவருக்குப் பின் பூசப்பாடி நாராயணகஜபதி (1794 - 1845) வரை ஆண்டார். பின் விஜய ராமகஜபதி (1826 - 1879) பல பண்டிதர்களையும் கவிஞர்களையும் ஆதரித்தார். பூசப்பாடி மன்னர்களில் தலைசிறந்தவர் ஆனந்த கஜபதி (1850 - 1897) ஆகும். இவர் பல மொழிகள் கற்ற அறிஞராகவும், அரசியல் நிபுணராகவும், பல கவிஞர்களை ஆதரித்த பெரு வள்ளலாகவும் திகழ்ந்தார். இலக்கியம், இசை, வேதாந்தம், வைணவம் ஆகிய துறைகளில் மேதாவிகளை ஆதரித்தவர்.

மாக்ஸ்முல்லருக்கு ருக்வேத சாயணபாஷ்யப் பதிப்புக்கு நிதியுதவி செய்து, 'ஆனந்த கஜபதி எடிசன்' என்று அப் பதிப்புக்கு பெயரிடப்பட்ட கௌரவம் உடையவர். தெலுங்கு இலக்கியத்தில் புதுயுக கவிஞரான குருஜாடா அப்பாராவை ஆதரித்து அதிபாலிய விவாகக் கொடுமையை நீக்கப் பாடுபட்டார். அப்பாராவின் 'கன்யாசுல்கம்' தெலுங்கு நாடகம், ஆனந்த கஜபதிக்கு சமர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது. பல வடமொழி, தெலுங்கு நூல்கள் வெளிவர உதவிய பெருவள்ளலாக விளங்கினார்.

முடும்பை நரசிம்மாச்சாரியார் (1841 - 1927) இவரது, ஆஸ்தான பண்டிதராக இருந்து பதஞ்சலியோக சூத்திரம் போன்ற பல தத்துவங்களை தெலுங்கில் மொழி பெயர்த்தார். சுரேந்திர நாத் பானர்ஜி போன்ற தேசபக்தர்கட்கும், இவர் உதவியுள்ளார். இத்தகு இலக்கியத்தை பேணி வளர்க்கும் மன்னராக இவர் புகழ் பெற்றிலங்கினார்.

இவருக்குப் பின் விஜய ராமகஜபதி (1883 - 1922) அலக நாராயணகஜபதி (1902 - 1937) மன்னர்களாயினர். பின் பி.வி.ஜி. ராஜு தம் காலத்தில் சமஸ்தானங்களை ஒழிக்கும் சுதந்திர இந்தியாவின் முயற்சிக்கு முழு ஆதரவு தந்து தமது சமஸ்தானத்தை முதன் முதலில் ஒப்படைத்துப் புகழ் ஈட்டினார். இவர் இந்தியப் பாராளுமன்ற உறுப்பினராகத் தொண்டாற்றினார். இவர் நிறுவிய அறக்கட்டளைகள் பல. பல கலாசாலைகள் விஜயநகரத்தில் இயங்கி வருகின்றன. சிம்மாசலம் கோவில் தருதகர்த்தாவாக விளங்கினார். இவரது குமாரர் ஆனந்தகஜபதி ஆந்திரப்பிரதேச அமைச்சர்களில் ஒருவராக கல்வி அமைச்சராக உள்ளார். மற்றொரு குமாரர் அசோக் கஜபதி ஆந்திர சட்டசபை உறுப்பினராக உள்ளார்.

பெத்தாபுரம் சமஸ்தானம் வத்ஸவாய திம்மகஜபதி (1760 - 1797) முதலிய மன்னர்கள் ஆண்ட பிரபலமான சமஸ்தானம். இவர்கட்கும் விஜயநகர சமஸ்தானத்துக்கும் திருமண உறவுகள் உண்டு. இந்த சமஸ்தான சரித்திரமும் விரிவானது. இந்த மன்னர்கள் பல கவிஞர்களை ஆதரித்தனர். கவி பூஷண வெங்கட நீலாத்ரி ராஜு, பரவஸ்து வெங்கட ரங்காச்சாரியார், வத்ஸ வாயாராகஜபதி (1797 - 1894) முதலியோர் சிறந்த கவிஞர்களாகத் திகழ்ந்துள்ளனர். காசிபட்ட பிரம்மய்யா சாஸ்திரி 'பெத்தாபுர சமஸ்தான சரித்திர விமர்சனம்' என்று தெலுங்கில் ஒரு நூல் இயற்றியுள்ளார். இந்நூலில் இருந்து சமஸ்தான மன்னர்கள் சரித்திரம் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது.

இம்மன்னர்களும் வைணவ சம்பிரதாயத்தினரேயாவர். ஆந்திர நாட்டில் உள்ள ராஜாக்களில் மேற்கு கோதாவரி மாவட்டம், சினநின்ட்ர கொலனுவில் உள்ள சிந்தலப்பாடி வரப்பிரசாத மூர்த்தி ராஜு முக்கியமானவர். ஆந்திர நாட்டரசியலில் முக்கிய பங்கு வகிப்பவர். அமைச்சராக இருந்துள்ளார். தமது தந்தையார் பாபிராஜு பெயரில் அறக்கட்டளை நிறுவி நான்கு கல்லூரிகளும், அறுபது உயர்நிலைப் பள்ளிகளும் தம் பகுதியில் பல்வேறு கிராமங்களில் நிறுவிய வள்ளற் பெருந்தகையாளர். உலகளாவிய சிந்தனையும் பெருந்தன்மையும் செயல திறனும் உடைய காந்தீயவாதியாவார். தாம் நிறுவிய பள்ளிகட்கு இந்திய தேசியத் தலைவர்கள் பெயர்கள் மட்டுமன்றி விண்ணில் முதலில் சென்று வந்த சுகாரிகன், ரஷியப் பெண்மணி வாலண்டினா, லெனின், நிலவில் உலவி வந்த அமெரிக்கர் ஆம்ர்ஸ்டாங், எவரெஸ்ட் ஏறிவந்த டென்சிங் போன்றவர்கள் பெயர்களையும் சூட்டியுள்ளார். இவர் ராஜாக்கள் சமூகத்துக்கே உதாரண புருஷராகத் திகழும் தியாகச் செம்மல் ஆவார்.

அல்லூரி சீதாராமராஜு இக்குலத்தில் பிறந்த வீரர். ஆங்கிலேயருடன் போராடிய பெரு வீரர். விசாகப்பட்டினம் அருகே உள்ள காடுகளில் இருந்த பழங்குடி மக்களைத் திரட்டி படை ஏற்படுத்தி ஆங்கிலேயரை எதிர்த்தவர். தமிழகத்தில் கட்டபொம்மன் போல ஆந்திர நாட்டில் இவர் சுதந்திரப் போராட்ட வீரராகப் புகழ் பெற்றவர்.

விஜயவாடா ஜி.எஸ். ராஜு, சென்னையில் உள்ள தான்ட்ல வெங்கடசுப்பராஜு (டி.வி.எஸ். ராஜு) நடிம்பல்லி ராமபத்திர ராஜு (அமலாபுரம் கல்லூரிக் கமிட்டித் தலைவர்) தந்துலூரி நாராயண ராஜு கல்லூரித் தலைவராக உள்ள ரங்கராஜு, ஹைதராபாத்தில் தாண்ட்ல சுப்பராஜு (எலிகோ கம்பெனி), கெ.வி.கே. ராஜு முதலிய பலர் தொழில் துறையில் மிகச் சிறந்து விளங்குகின்றனர். இவர்கள் அனைவரும் வைணவர்களாகவே உள்ளனர்.

ஆந்திர க்ஷத்திரிய ராஜாக்களின் மரபினர் கிருஷ்ண தேவராயர் காலத்தில் மதுரை நாயக்க மன்னர்களுடைய படைகளுடன் வந்து இராஜபாளையத்தில் குடியேறினர். ஆந்திர நாட்டைத் தவிர்த்தால் இராஜபாளையத்தில் மட்டுமே குடியேறிய இந்த மரபினர். இன்றும் வைணவ பக்தியுடன் திகழ்கின்றனர். சமயச் சடங்குகளில் திருமண் அணிந்து கொள்வர். வடகலை, தென்கலை இரண்டும் உண்டு. தங்கள் தாய்மொழி தெலுங்கை மறக்காமல் பேசி வருகின்றனர்.

தெலுங்கு எழுத்து, இலக்கியப் பயிற்சி இல்லை. தமிழ் கற்றுத் தமிழிலேயே கடிதம், கணக்கு விவகாரங்களை எழுதுவர். பதினேழாம் நூற்றாண்டில் இராஜபாளையத்தில் கொட்டு முக்கல கிருஷ்ணராஜு மரபினர் தெலுங்கில் யட்சகானம் இயற்றினர். தனுஷ்கோடி ராஜு என்பவர் மருத்துவத் துறையில் புகழ் பெற்று விக்டோரியா மகாராணியாரின் ஆதரவும் பெற்று கிறிஸ்தவ மதத்தைத் தழுவினார். அவருடைய ஆதரவில்தான் கிறிஸ்தவ கம்பன் ஆகிய 'இரட்சணிய யாத்திரிகம்' இயற்றிய கிருஷ்ணப்பிள்ளை கிறிஸ்தவராகி பல நூல்களைப் படைத்தார்.

இராஜபாளையத்தில் பிறந்த பூசப்பாடி குமாரசாமி ராஜா சென்னை மாநில முதலமைச்சராகவும், ஒரிசா மாநில கவர்னராகவும் திகழ்ந்தார். இவர் நிறுவிய 'காந்தி கலை மன்றம்' தமிழகத்தின் சிறந்த நூலகங்களில் ஒன்றாகத் திகழ்கின்றது. கல்வித்துறைக்கு பணியாற்றிய ராவ்பகதூர் ஏ.டி. தருமராஜா தொழில்துறையில் நகரை முன்னேறச் செய்த பூசப்பாடி ராமசாமி ராஜா, பி.ஏ.சி.ஆர்., ஆகியோர் தமிழகம் நன்கறிந்த பெரியோர்கள் ஆவர். தற்போதும் தொழில்துறையில் சிறந்துள்ள ராம்கோ தொழில் நிறுவனங்களின் தலைவர் பி.ஆர். ராமசுப்ரமணிய ராஜா அவர்கள் மற்றும் பேர்ச்சர்ல ராமசாமி ராஜா (பி.கே.ஆர்.) அருணாசலப்பிரதேச லெப்டினெண்ட் கவர்னராக இருந்த கொட்டுமுக்கல அய்யாசாமி ராஜா, அவர் சகோதரர் மேஜர் ஜெனரல் சிங்கப்ப ராஜா, தொழில் அதிபர்கள் நம்பூரி ராமச்சந்திர ராஜா, மந்தபாட்டி சந்திரசேகர் ராஜா, ஆனந்தாஸ் எம்.வி. பீமராஜா முதலியோர் இச் சமூகத்தின் பெருமைக் குரியவர்கள்.

பல தியாகச் செம்மல்கள் இச்சமூகத்தில் உள்ளனர். சுதந்திரப் போராட்ட காலத்தில் இராஜபாளையம் முன்னணியில் பல தியாகங்கள் புரிந்த வரலாறு பிரசித்தமானது. இலக்கியத்துறையிலும், இச்சமூகம் இன்று பிரபலமாக உள்ளது. தமிழ் இலக்கியத் துறையில் நற்பணியாற்றும் மணிமேகலை மன்றமும், அதில் உறுப்பினர்களாக உள்ள கொ.மா. கோதண்டம், பூ.அ. துரைராஜா, கொ.ச. பலராமன், கொ.ரா. வேலாயுதம் முதலியவர்கள் தமிழில் சிறுகதை நூல்கள், நாவல்கள், கவிதை நூல்கள் வெளியிட்டுள்ளனர்.

ஆந்திர நாட்டிலிருந்து ஐநூறாண்டுகட்கு முன்பு வந்து இராஜபாளையத்தில் குடியேறிய க்ஷத்திரிய ராஜாக்கள் ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் உறவுப் பாலமாக திகழ்கின்ற வைணவ

சமூகமாக உள்ளனர். ராஜாக்கள் ஆந்திர நாட்டுக்கும், இராஜபாளையத்துக்கும் வந்து போய் உறவை வளர்த்து வருகின்றனர். திருமண உறவுகள் ஏற்படுத்திக் கொள்ளவில்லை. ஆந்திர நாட்டில் ராஜாக்கள் நூற்றிருபது வீட்டுப் பெயர்கள் உடையவர்கள். அந்த வீட்டுப் பெயர்களில் இருபத்தாறு வீட்டுப் பெயர் உடையவர்களே இராஜபாளையத்தில் உள்ளனர்.

ஆந்திராவிலும், இராஜபாளையத்திலும் உள்ள ராஜாக்களின் விரிவான சரித்திரம் தெலுங்கு மொழியில் ஆயிரம் பக்கங்களில் 'ஆந்திர க்ஷத்திரிய வம்வரத்னாகரமு' என்ற பெயரில் புத்தராஜு வரஹாலராஜு என்பவர் எழுதி அண்மையில் வெளியிட்டுள்ளார். அந்நூலில் சமூகப் பெரியவர்கள் வரலாறும், சமஸ்தானங்களின் வரலாறும், எங்கெங்கு யார் யார் இருக்கின்றனர் என்ற விவரமும் கொடுக்கப்பட்டுள்ளது. இராஜாபாளையம் ராஜாக்களிடம் உள்ள தனிச் சிறப்புடைய விழா 'கொத்தலு' எனும் புதுமை விழாவாகும். மார்கழி, தை மாதங்களில் ஒரு நாள் இவ்விழா நாளை நிர்ணயிப்பர். சாமைக் கதிர் விளைந்ததும் ஓரிரண்டு ஏக்கர் நிலப்பயிரை விலைபேசி சமுதாயப் பொதுவுக்கு வைத்துக் கொள்வார்கள். ஒரு நன்னாளில் ராஜாக்கள் அனைவரும் ஒருங்கே சென்று ஊர் எல்லையில் ஏற்கனவே கொய்து கொணரப்பட்ட சாமைக் கதிர்களை ஆளுக்கொரு கொத்து ஆக எடுத்துக்கொண்டு மேள, தாளத்துடன் மாலை நேரத்தில் வீடுகட்கு வருவர். அன்று புத்தரிசிச் சமையல் உண்டு. ஒவ்வொரு வீட்டிலும் பூசை செய்து பால் வைத்திருப்பர். ஒரு வீட்டிலிருந்து புறப்பட்டு தான் கொணர்ந்த சாமைக் கதிரை அடுத்த வீட்டு பூசையறையில் வைத்து விட்டு, அங்கே சுவாமியையும் முதிய பெரியவர்களையும் வணங்கி ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு, பின் அந்த வீட்டிலிருந்து சாமைக் கதிரை எடுத்துக்கொண்டு போய் அடுத்த வீட்டில் வைப்பர். அங்கும் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு அந்த வீட்டுச் சாமைக் கதிரை எடுத்துக்கொண்டு போய் அடுத்த வீட்டில் வைத்து வழிபடுவர். இவ்விதம் ஒரு வீட்டிலிருந்து மறு வீட்டுக்குச் செல்லும், தெரு, கோட்டை முழுதும் இப்படி எல்லா வீடுகட்கும் சென்று ஆசீர்வாதம் பெற வேண்டும். ஏற்கனவே சிறிய சச்சரவுகள் ஏற்பட்டோ, பகைமை ஏற்பட்டோ இருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் செல்வர். பகையாக இருந்தவரும்கூட அன்று பேசிக்கொண்டு ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு, மீண்டும் தமது நட்பைப் புதுப்பித்துக்கொள்வர். இந்த வழக்கம் ஆந்திர ராஜாக்களிடம் இல்லை. பிற சமூகங்களிலும் காணப்படவில்லை. இந்த விழா சமுதாயக் கூட்டுறவுக்கு நல்ல எடுத்துக்காட்டான

விழாவாக அமைந்துள்ளது. இராஜபாளைய ராஜாக்கள் பொது சமுதாய மகுமைகள் ஏற்படுத்தியுள்ளனர்.

சக்கராஜாக்கோட்டை, பழைய பாளையம், சிங்கராஜாக் கோட்டை, திருவனந்தபுரம் ஆகிய நான்கு பகுதிகளிலும் நான்கு பொது மகுமைப் பண்டுகள் உள்ளன. வருமானத்தில் ஒரு பகுதியை வரியாக பொதுப்பண்டுக்கு செலுத்துவதாலும், சமையல் பாத்திரங்கள் வாடகைக்கு விடுவதாலும் கிட்டும் வருமானத்தை, பொதுக் காரியங்கட்கும், விழாக்கட்கும், ஏழை எளியவர்கட்கும் உதவித்தொகை, அன்னதானம், உடை, மருந்துகள், தருவதற்குப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. இந்த அமைப்பு ஆந்திர ராஜாக்களிடம் இதுவரை இல்லை. எனினும் சில சங்கங்கள் உள்ளன.

இராஜபாளையம் ராஜாக்கள் திருமணச் சடங்குகள் ஆந்திர ராஜாக்களைப் போன்றதே. ஆந்திராவில் உபநயனம் திருமணத்துக்கு முன்பே ஐந்தாறு மாதங்கட்கு முன்போ, ஓரிரு ஆண்டுகட்கு முன்போ கூட நடத்துவதுண்டு. ஆனால், இராஜபாளையம் ராஜாக்கள் திருமணத்தன்றுதான் உபநயனச் சடங்கும் நடத்துகின்றனர்.

திருமணங்களை ஒவ்வொரு கோட்டை பொதுச்சாவடிகளில் பதிவு செய்து கொள்ள வேண்டும். மணப்பெண் உள்ள கோட்டையில் பதிந்தாலும், மணமகன் உள்ள கோட்டையிலும் பதிதல் வேண்டும். வெளியூர்களில் இருந்தாலும், திருமணப் பதிவு இராஜபாளையம் வந்து பதிவு செய்து கொள்ள வேண்டும். சமூகக் கட்டுப்பாடுகள் உள்ள சமூகம் ஆதலின் பெரும்பாலும் வழக்குகளை தாங்களே தீர்த்துக் கொள்கின்றனர். இராஜபாளையம் ராஜாக்கள் தற்போது திருச்செந்தூர், பழனி முருகனையும், ஐயப்பனையும் வழிபட்டாலும் சடங்குகளிலும், விழாக்களிலும் திருமண் தரித்து, வைணவ மரபுப்படியே இலங்குவர். முன்பு ஜீயர்கள் வந்து கொண்டிருந்தனர், தற்போது அந்த வழக்கமும் நின்றுவிட்டது.

தமிழகத்துக்கும், ஆந்திர நாட்டுக்கும் தொடர்புடைய மற்றொரு வைணவ சமூகம் கம்மவார் எனும் நாயுடு சமூகம் ஆகும். ஆந்திராவில் கம்மவாரு, வெலம், காபு என்று மூன்று பெரிய பிரிவுகளாகியுள்ளனர். பலிஜா, தவர முதலிய பிரிவுகளும் உண்டு. நாயுடு, நாயக்கர் எனத் தமிழகத்திலும், நாயுடு, ராவ், சௌத்ரி என்று ஆந்திராவிலும் பட்டப் பெயர்களாக அமைந்துள்ளன. கொத்த பாலைய சௌதரி என்பவர் தெலுங்கில் 'கம்மவாரி சரித்ர' என்றொரு

நூல் இயற்றியுள்ளார். அதில் கர்மபூமியாகிய தெலுங்கு நாட்டில் இருந்தமையால் கர்ம (தொழில்) கம்ம என ஆகி கம்மவாரு ஆனதாகக் கூறுகிறார். கம்ம என்றால் ஓலை என்று தெலுங்கில் பொருள்படும். விஜயநகர மன்னர் வீரநரசிம்மர் காலத்தில் பதினைந்தாம் நூற்றாண்டில் பெண்களுக்கு கோஷா முறை இருப்பதைப் பற்றி ஆதரித்தும், எதிர்த்தும் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டதாகவும், அதனால் ராயர் பஞ்சாயத்து ஏற்படுத்தி விசாரணை செய்து முடிவில் சமூகச் சடங்காக அவரவர் இஷ்டப்படி இருக்கலாம் என்று சொல்லி நிர்ணயம் செய்து ஓலையில் கையெழுத்திடச் செய்ததாகவும், கோஷா முறை வேண்டும் என்றவர்கள் வெளியேறி விட்டதால் 'வெலம' ஆனார்கள் என்றும், வேண்டாம் என்று உடன்பட்டு கம்ம (ஓலை)யில் கையெழுத்திட்டவர்கள் கம்மவார் ஆனாதாகவும் ஒரு வரலாறு கூறுகிறது. கம்மவாரு நாலாம் வருணத்தாராகவே கருதப்பட்டனர். இவர்கள் இராமானுசரின் விசிடாத்துவித வைணவத்தை விரும்பி ஏற்றுக் கொண்டனர். கிருஷ்ண தேவராயருக்குப் பின்னர் தஞ்சையிலும், மதுரையிலும் நாயக்க மன்னர்கள் ஆண்ட காலத்தில் தமிழகம் முழுவதும் இவர்கள் பரவினர். தென் மாவட்டங்களில் அதிகமாக உள்ள இனம் இது. கோயம்புத்தூரில் பிரபலமான தொழில் மேதைகளாக உள்ளனர். நூற்பாலைகள் நிறுவியும், தொழிற்கூடங்கள் பல நிறுவியும் தமிழகத்துக்குப் பொருளாதாரத் துறையில் சிறந்து உள்ளனர்.

ஜி.டி. நாயுடு போன்ற விஞ்ஞான மேதைகள், ஜி.கே. தேவராஜு லு, ஜி.கே. சுந்தரம் போன்ற தொழில் மேதைகள், ஜி.ஆர். தாமோதரன் போல் கல்வித்துறை மேதைகள், கே. வெங்கட ...மி நாயுடு, எஸ். ராமசாமி நாயுடு போன்ற இலக்கி...ய அறிஞர்...கள் பலர் தமிழகத்தில் தோன்றி இச்சமூகத்தின் பெருமைக்குரியவர்களாக உள்ளனர். தற்போது கம்ம நாயுடுகள் ...ந்திராவிற்குச் சென்று திருமண உறவுகள் ...ற்படுத்திக் கொண்டுள்ளனர். பகட...ல நரசிம்மநாயுடு, ...பி.இ. பாலகிருஷ்ண நாயுடு, அரசு, நார... ...ச நாயுடு போன்...றார் தமிழ் இலக்கியத்திற்கு நல்ல ப...ப...க ...ள ...லகியுள்...ளனர். கொத்த பாவைய சௌ...யின் ...ம்மவார் சரித்...ரம் முதல் பாகம் சோ.வெ. கோவிந்தசா...மி ந...யுடு தெலுங்கி...லிருந்து தமிழில் மொ...ழி பெயர்த்து, ச.கு. கணபதி அய்ய... ...ல தமது ...ம ஜோதி ...லகத்தில் 1953ல் வெளியிட்டார். ...நூலுக்கு கி.வா. ...கந்...தன் அவர்கள் வாழ்த்துக் கவி...தகள் மூலம் அணிந்...ரை நல்கியுள்ளார்.

நாயுடு சமூகத்தைச் சேர்ந்த பெரும் தொழிலதிபர். அருப்புக்கோட்டை ஜெயவிலாஸ் குழும அதிபர் புகழ்மிகு சாது ராமசாமி நாயக்கர், அவரது குமாரர்கள் தினகரன், இவரது சகோதரர் கண்ணன் முதலியோர் அருளுள்ளத்துடன் அறக்கட்டளைகள் மூலம் கல்வித்துறைக்கு நற்பணியாற்றிச் சிறப்புடன் திகழ்கின்றனர்.

ஆந்திரநாட்டு கம்மவாரில் நாமதாரி, மோடி என்று இரு முக்கியப் பிரிவுகள் உள்ளன இவர்களுள் திருமண உறவு இல்லை. இவர்களை அவர்கள் மஞ்சம் பொர்ரு லேது (கட்டில் உறவு இல்லை) என்றும் கஞ்சம் பொத்து உந்தி (வட்டில் உறவு உண்டு) எனவும் கூறுவர். இவர்கள் எல்லோரும் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களே.

ஆந்திர நாட்டில் ரெட்டி சமூகம் மிகப் பெரியது. ராஷ்டிர கூட, ரட்டி, என்ற சொற்களே ரெட்டி ஆனது என்றும், ரேடு என்றால் அரசன் என்ற பொருள்படும் தெலுங்குச் சொல்லே மருவி ரெட்டி ஆனது என்றும் கூறுவர். ஆந்திர நாட்டின் வரலாற்றில் அனபோதா ரெட்டி, வேமாரெட்டி போன்ற மன்னர்கள் ஆண்டனர். இன்றும் பெருநிலக்கிழார்கள் அநேக உள்ளனர். தமிழ்நாட்டுக்கு வந்த வைணவ சமூகங்களில் ரெட்டி சமூகமும் ஒன்று. இச்சமூகத்தில் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சென்னை மாநில முதலமைச்சராக இருந்தவர். பன்மொழிப் புலவர் வே. வெங்கட்ராஜுலு பெரும் புலமை மிக்கவராகத் திகழ்ந்தார். தற்காலத்தில் எஸ்.கே. ராமராசன், ந. சுப்பு ரெட்டியார், அ.வெ. கிருஷ்ணசாமி ரெட்டியார் போன்ற கவிஞர், அறிஞர்களும், நீதிபதி எஸ் கிருஷ்ணசாமி ரெட்டியார் போன்ற உயர் பதவி வகித்தவர்களும் இச்சமூகத்துக்குப் பெருமை சேர்ப்பவர்கள். ஆந்திர நாட்டிலும் திக்க வரபு ராமி ரெட்டி, போன்ற கலையை வளர்க்கும் வள்ளர்கள், நீலம் சஞ்சீவ ரெட்டி (ராஷ்டிரபதியாக இருந்தவர்) பெஜவாடா கோபால ரெட்டி, காசு பிரம்மானந்த ரெட்டி, மர்ரி சென்னாரெட்டி போன்றவர்கள் அரசியலில் உயர் பதவிகள் வகித்தவர்கள்.

சமூக சீர்திருத்தக் கவிஞராகத் திகழ்ந்த பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்த வேமனா ரெட்டி குலத்தவரே ஆகும். வேமனா பத்தியங்கள் தமிழ்நாட்டுக்கு மிகவும் அறிமுகமானவை. மூட நம்பிக்கைகளைச் சாடிய பகுத்தறிவு வாதச் சித்தராகத் திகழ்ந்த வேமனாவின் சீர்திருத்தக் கருத்துக்களையுடைய இனிய எளிய

நடையில் அமைந்த செய்யுள் திருக்குறளைப்போல ஆந்திர மக்கள் அனைவர் நாவிலும் தவழுபவை. வேமனா வைணவத்தில் பிற்காலத்தில் எழுந்த போலிச் சடங்குகளையும் கண்டிக்கத் தவறவில்லை.

*''எம்பெருமதமணி எஸகி' மாம்ச முதினி*
*மாறுபேறு பெட்டி மது'வுத்'ராவி*
*வாவி வருசத'ப்பி வர்த்தின் சிசெ'டுது'ரு''*

*''சின்னெ லென்னெ ஜேஸி செர செவைஷ்ணவ மின்னா''*

என்று வைணவம் தனது தொன்மையான ஒழுக்க நெறியிலிருந்து பிறழ்ந்துவிட்டதாக வேமனா கண்டித்துள்ளார். வீர சைவத்தையும்கண்டித்துள்ளார்.

தமிழகத்திலும், கேரளத்திலும் ரெட்டியார் சமூகம் இன்று பொருளாதார நிலையில் முன்னேறி வருகிறது. ஆந்திரத்திலிருந்து தமிழகம் வந்து நிலைபெற்ற ரெட்டியார் சமூகம், திருநெல்வேலி மாவட்ட சமூகலிங்கபுரம், வள்ளியூர் ஆகிய இடங்களில் இருந்து திருவனந்தபுரம், கொச்சி ஆகிய கேரளத்தின் பெரு நகர்களில் சென்று பொருளாதாரத்தில் சிறந்து விளங்குவது பாராட்டற்பாலது. சித்தூர் அருகே வாழ்ந்த பூதலப்பட்டு ஸ்ரீராமுரெட்டி தமிழிலக்கியங்களைத் தெலுங்கில் மொழிபெயர்த்துச் சிறப்புற்றவர்கள். மருபூரி கோதண்டராமி ரெட்டி நெல்லூரில் வாழும் பேரறிஞர். கம்ப ராமாயணம் வசனமாக தெலுங்கில் மொழி பெயர்த்தவர். இந்திய நாட்டின் பேரறிஞர்களில் ஒருவராகவும், ஆங்கிலப் பேச்சாளர்களில் தலைசிறந்தவரும், விமர்சனக் கலையை தெலுங்கில் சிறப்புடன் வளர்த்தவருமான கட்டமன்சி ராமலிங்கா ரெட்டி இச்சமூகத்துக்குப் பெருமையளித்த பெரியவராவார். சி.ஆர். ரெட்டி என்றழைக்கப்பட்ட இவ்வறிஞர் ஆந்திரப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஆக இருந்து தொண்டாற்றியுள்ளார்.

தமிழகத்திலிருந்து ஆந்திர நாட்டில் நிலைபெற்றுள்ள பல முதலியார் குடும்பங்கள் தமிழை விடத் தெலுங்கே பயின்ற மொழியாகவும், பழக்க மொழியாகவும் பயன்படுத்தி வருகின்றனர். உலகப் பிரசித்தி பெற்ற அறிஞர்களான ஆற்காடு ராமசாமி முதலியார், அவருடன் பிறந்த லட்சுமணசாமி முதலியாரும் இரட்டையர் ஆவர். லட்சுமணசாமி முதலியார் கல்வித் துறையிலும், மருத்துவத்

துறையிலும் சிறந்திருந்தார். இவர்கள் குடும்பமும் வைணவக் குடும்பங்களேயாகும். முதலி, பிள்ளை, ஆகிய இனங்களில் தமிழை மறந்துவிட்டு தெலுங்கராகவே மாறிவிட்ட பல குடும்பங்கள் சித்தூர் மாவட்டத்தில் உள்ளன. தமிழகத்தில் மாதிக எனும் அரிசன இனமும் வைணவ இனமேயாகும். இவர்களில் தாசரி எனும் வகையார் வைணவத்தில் தீவிர பக்தி உள்ளவர்களாவர். தெலுங்குச் செட்டியார்கள், காட்டு நாயக்கர், யாதவர்கள் முதலிய பல தெலுங்கு மொழி இனங்கள் சிறுகச் சிறுக தமிழ் மொழி மட்டுமே தெரிந்த தமிழ் இனங்களாக மாறி வருகின்றன. இது காலவெள்ளத்தில் தவிர்க்க முடியாத ஒன்றாகும். ஆந்திராவுக்கும், தமிழகத்துக்கும் தொடர்புடைய வைணவ இனங்கள் பற்றி விரிவாக ஆராய்ச்சிகள் தனியாக மேற்கொள்ள வேண்டும். மானிடவியலாய்வாளர்கள் இச்சமூகப் பழக்கவழக்கங்களை ஆராய்ந்து, அதற்குரிய அடிப்படைக் காரணங்களையும், சமூகத் தேவைகளையும் பற்றி மதிப்பிடல் வேண்டும்.

ஒவ்வொரு சமூகத்திற்கும், ஒரு சில தனிப் பண்பு நலன்களும், சிறப்புச் சடங்குகளும், மரபு வழிப்பட்ட பழக்க வழக்கங்களும் இருக்கின்றன. அவற்றுட் பல மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது மூட நம்பிக்கைகளாகத் தோன்றினும், ஆழ்ந்து சிந்தித்தால் அவை அந்நாளில் சமூகக் கட்டுப்பாட்டுக்காகவோ, தனி மனித நலனுக்காகவோ ஏற்பட்ட தேவைகளாக இருக்கக் கூடும். மேலும், சில மனித உடற்கூற்றுக்கும் நலனுக்கும் தேவைப்பட்டவையாக இருக்கலாம். இன்னும் சில வாழ்க்கைத் தத்துவங்களின் குறியீடுகளாகவும் இருக்கலாம். ஆதலின் அவற்றையெல்லாம் அலட்சியப்படுத்தாமல் கருத்தில் கொண்டு ஆராய்தல் வேண்டும்.

தமிழகத்திலிருந்து சென்று ஆந்திராவில் குடியேறிய அந்தணர், பிள்ளை, முதலி ஆகிய இனங்களிலும், ஆந்திராவிலிருந்து தமிழகத்தில் குடியேறிய அந்தணர், ராஜாக்கள், நாயுடு, ரெட்டியார், செட்டியார், கவர, பலிஜா, கம்மாளத்தார், காட்டு நாயக்கர் என்னும் தொம்மர அருந்ததியார் எனும் மா'தி'க முதலிய வகுப்புக்களில் இன்றும் பெரும்பாலோர் வைணவ ஆசாரங்களை உடையவர்களே. எனினும், தற்போது வைணவ, சைவ பேதங்கள் மெல்ல மெல்ல நீங்கி வருகிறது. இந்து மதம் ஒரே சமயமாக மாறி வருகிறது. ஒரே சமூகத்தில் சிலர் அத்வைதிகளாகவும், சிலர்

விஸிஷ்டாத்வைதிகளாகவும், பெரும்பாலோர் இரண்டுமே ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவமுடையவர்களாகவும் உள்ளனர். பெரும்பாலோர் திருநீறணிதல், திருமண் இடுதல் ஆகிய புறச் சின்னங்களை நீக்கி வருவதும் காண்கிறோம். மதக் கருத்துக்களில் இணைந்து வரும் இச்சமூகங்கள் தத்தமக்குள்ளே சிறு பூசல்களால் விலகி இருப்பது வருந்தற்பாலதாகும். மத வகுப்புப் பிரிவினைகள் முக்கியமாக திருமண உறவுகட்கான உத்தரவாதமாக அமைந்துள்ளன.

ஒவ்வொரு வகுப்பினரும் பிற வகுப்பாரோடு திருமண உறவில் கலந்துவிடாமல் தனித்தன்மையுடனே இருக்க வேண்டும் என்றே விரும்புகின்றனர். இந்த வகுப்பு, சாதிப் பிரிவினைகளை முயன்று ஒழித்து விடலாம் என்று கருதுவது பொருத்தமன்று. ஒரு காய் பக்குவப்பட்டு முதிர்ந்து தானாகவே உதிர்வதுபோல, இச்சமூக முரண்பாடுகளும், புதிய சமுதாய மாற்றம் ஏற்பட்டால்தான் தானாகவே நீங்கும். கருத்தியலான தனித் தன்மைகள் மட்டுமன்றி வாழ்க்கைக்கு உத்திரவாதமான பொருளாதார மறுமலர்ச்சி ஏற்படாததும் இத்தனித்தியங்கும் வேட்கைக்குக் காரணங்களாகும்.

வைணவ மதத்தில் தீண்டாமையை நீக்கப் பாடுபட்டவர் இராமானுசர் என்பது அவரது வரலாற்றில் தெரிகிறது. பழைமையான வேத நெறியைத் தம் காலத்துக்கேற்ப சீர்திருத்தியதோடு, தாழ்த்தப்பட்ட சமூகங்களை தன்னம்பிக்கையுடன் முன்னேற வழி வகுத்த பெருமை இராமானுசருக்கு உண்டு.

தாழ்த்தப்பட்டோரின் இயல்பான தன்னடக்கம் - தம் பிரபத்தி மார்க்கத்துக்கு உதவும் எனக் கருதினார். அதனால், சமூக உறவுகளில் நேயம் ஏற்படுமென்றும், சமநிலை கருத்தோட்டம் ஏற்படும் என்றும் கருதினார்.

எனினும் எல்லா மதங்களைப் போலவே இம் மதத்திலும் சில சீர்கேடுகள் நுழைந்திருக்கலாம். ஆனாலும், இராமானுசரின் அடிப்படைத் தத்துவமும், சிந்தனை வளமும் உறுதியான மானுட நேய அடிப்படையில் அமைந்தது. வைணவம் இன்றும் உயிரோட்டமுள்ள சக்தியாக மனித சமூகத்தில் நின்று நிலவி நெறி காட்டுகிறது.

# 14. இருநாட்டுறவுகள்

தொன்மைக் காலந்தொட்டு அரசியல் கலாச்சாரங்களில் உறவு பூண்டிருந்த ஆந்திர நாடும், தமிழகமும் இராமானுசருக்குப் பின் வைணவத்தின் மூலம் நெருங்கிய [illegible]ணைப்பினையுற்றன. விஜயநகர சாம்ராஜ்ய மன்னர்கள் காலத்தில தமிழகமும், ஆந்திரமும், வைணவத்த[illegible]லும், அரசியலாலும நெருங்கிய பிணைப்பினை யுற்றன. சமூகங்கள் குடியேறி கலாச்சாரப் பரிவர்த்தனைகள் மூலம் நல்லுறவை வளர்த்தன. [illegible]தன் விளைவாக இரு நாடுகட்கும் தார்மீகமான நல்லுறவு நெடுங்கா[illegible]மாகவே இருந்து வந்துள்ளது.

இரு நாட்டின் கலாச்சார கேந்திரங்களாகவே இன்றும் சென்னையும், திருப்பதியும் விளங்கி வருகிறது. திருப்பதி - திருமலை தேவஸ்தானத்தார் நடத்தும் ஸ்ரீவேங்கடாசா பல்கலைக் கழகம் இன்றும் வைணவத்துக்கு நல்லூக்கம் தரும் நிலையமாக அமைந்துள்ளது. முதுகலை பட்டப் படிப்புக்கு வைணவமும் ஒரு சிறப்புப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

ஆந்திர நாட்டில் நடிகட்டிபாலெம் ஜீயர் மடத்திலிருந்து 'பக்த சிந்தாமணி' முதலிய பத்திரிக்கைகளும் வெளிவருகின்றன. பல வைணவ கிரந்தங்கள் இன்றும் தமிழ் மொழியில் வருகின்றன. தெலுங்கிலும் வருகின்றன. வைணவ சபைகளும் பல இரு நாட்டிலும் இயங்கி வருகின்றன. சென்னையில் நீதிபதி நெ. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் தற்போது ஸ்ரீவைஷ்ணவ சங்கம் சிறப்பாக இயங்கி வருகிறது. சிறந்த வைணவ

அறிஞர்களை அழைத்து பல கருத்துரைகளை வழங்கச் செய்கிறது. ஐம்பத்தெட்டாவது வைணவ மாநாடு அண்மையில் நடந்தேறியது. சென்னையில் ஸ்ரீராமானுஜ வேதாந்த மையம் சிறப்புடன் நடக்கிறது. இரண்டாண்டுகட்கு முன் ஸ்ரீபெரும்புதூரில் இராமானுசரைப் பற்றிய கருத்தரங்குகள் தமிழிலும், ஆங்கிலத்திலும் நடத்தினர். தமிழக ஆந்திர அறிஞர்கள் கலந்துகொண்டனர். 13.8.83லிருந்து 15.8.83 வரை மூன்று நாட்கள் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் குறித்து கருத்தரங்குகள் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடைபெற்றன. இக்கருத்தரங்குக்கு ஹைதராபாத்திலிருந்து கே.வி. சந்தான கோபாலாச்சாரியர், வாரங்கல்லில் இருந்து கோவில்கந்தாடை சுப்பிரசன்னாச்சாரியர் போன்ற ஆந்திர வைணவ அறிஞர்கள் வந்திருந்தனர். இதேபோல ஆழ்வார் திருநகரியில் நம்மாழ்வார் குறித்து கருத்தரங்குகள் நடைபெறுமெனத் தெரிவிக்கப்பட்டது. ஆழ்வார் ஆசாரியர்களின் அவதாரத் தலங்களிலேயே இந்தக் கருத்தரங்குகள் நடத்த முற்பட்டது பாராட்டற்பாலது. இதன் மூலம் பொதுமக்கள் தம் நகரில் அவதரித்த் பெரியோர்களின் பெருமையை உணர்வதோடு அவர்களைப் பற்றி அதிகம் அறிந்துகொள்ளத் தூண்டுகோலாகவும் அமையும். இம்மையத்தின் செயலர் எம்.என். பார்ர்த்தசாரதியும், டாக்டர் திருவேங்கடவன் முதலியோரும், இக்கருத்தரங்கினைச் சிறப்பாக நடத்த ஏற்பாடுகள் செய்கின்றனர். இது போன்ற கருத்தரங்குகள் தமிழக ஆந்திர வைணவ அறிஞர்கள் கலந்துறவாடி பரஸ்பரம் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ள உதவும்படியாக அமைகின்றன.

ஒருசில விழாச் சடங்குகளும் தமிழக ஆந்திர வைணவ உறவுக்கு உதவும்படியாக அமைகின்றன. திருவில்லிபுத்தூரில் இருந்து ஆண்டாள் சூடிக் களைந்த பூ மாலையும், ஆடையும், கிளி பொம்மைகளும், திருப்பதி வெங்கடேசுவரர்க்கு பிரம்மோற்சவ நாலாம் நாள் கருட சேவையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

திருவில்லிபுத்தூரில் இருந்துகொண்டு செல்லும் பூ மாலைக்கு திருமலை ஜீயர் சுவாமிகள் வரவேற்புச் செய்து, கருட சேவையில் ஊர்வலம் கொணர்ந்து, திருப்பாவை பாடி இறைவனுக்குச் சாத்துவர். பின் குடை இரண்டும், புடவைகளும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குக் கொடுத்தனுப்புவர். இந்த சடங்குக்கு திருக்கோவிலூர் ராஜநாயுடு குமாரர் வேணு அவர்கள் உபயதாரராக தற்போது உள்ளார். இராஜபாளையத்தில் வசிக்கும் வேணு இந்த உபயம் தமக்குக் கிடைத்த பெரும் பேறாகக் கருதிச் சிறப்புடன் நடத்தி வருகிறார்.

இதுபோன்ற பல வைணவ அவைகளும், விழாக்களும், தமிழக ஆந்திர வைணவத் தொடர்புகட்கு ஆக்கம் அளிப்பதாக அமைந்துள்ளன.

நான் எனது ஆய்வுப் பயணத்துக்காக ஆந்திராவிற்கு 15.6.83ல் பயணம் மேற்கொண்டபோது திருமலை, திருப்பதிக்குச் சென்று விட்டு 22.6.83ல் அனந்தப்பூர் வழியாக அகோபிலம் சென்றேன். அங்கு மடத்தின் மேலாளராக இருக்கும் கெ. லட்சுமிநாராயணா அவர்களும், மற்றுமுள்ள அர்ச்சகர்கள் அனைவரும் தமிழர்களாகவே உள்ளனர். கோவில் தமிழ்நாட்டு பூசை மரபுப்படியே நடைபெற்று வருகிறது. அதே போலவே சிம்மாசலமும், ஸ்ரீகூர்மமும் ஆகும். ஸ்ரீகூர்மத்துக்கு 28.10.83ல் சென்றிருந்தேன். பூரி, ஜகந்நாதர் கோயிலுக்கும் சென்றுவிட்டு வந்தேன்.

பூரி ஜகந்நாதர் கோயில் பூசை முறைகள் தமிழக வைணவ மரபுப்படி இல்லை. அதேசமயம் ஆந்திராவில் உள்ள தொன்மையான அகோபலம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் ஆகியன மட்டும் இராமானுசரால் ஏற்படுத்தப்பட்ட நியமனங்களின்படியே இன்றும் நடைபெறுகின்றன என்பதையும், அங்கு தமிழ் தாய்மொழியாகக் கொண்ட அர்ச்சகர்களும், நாலாயிர திவ்ய பிரபந்தம், அனுசந்தானம் செய்யும் பண்டிதர்களும், ஸ்ரீபாஷ்ய வித்துவான்களும் உள்ளனர் என்று கண்டேன். வைணவ அந்தணர்கள் இன்றும் தமது ஆசார அனுட்டானங்களைக் கடைப்பிடித்து திருமண் சாற்றி தம் மரபினைக் காத்து வருவதைக் கண்டேன். இதன்மூலம் தமிழகத்திலிருந்து இராமானுசருக்குப் பின் ஆசாரியர்கள் ஆந்திர நாடு சென்று வைணவத்தைப் பரப்பியதோடன்றி தமிழ்ப் பண்பாட்டையும் ஊட்டி வந்துள்ளனர் என்பதும் தெரிகிறது.

ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் ஏற்பட்டுள்ள தொன்னெடுங்காலகமாகத் தொடர்ந்து வந்துள்ள நட்புறவோடு கூடிய தொடர்புகள் தற்காலத்தில் மேலும் மேலும் நெருங்கிய உறவுகளாக உறுதிப்பட வேண்டும். சென்னை மாநகருக்கு ஆந்திராவில் ஸ்ரீசைலம் திட்டத்தின்படி குடிநீர் வழங்கும் 'தெலுங்கு கங்கா' திட்டம் இவ்விரு நாடுகட்கும் நல்லொரு உறவையும், தொடர்பையும் கொண்டு வருகிறது. அன்னலட்சுமியாகிய ஆந்திர மாதா அமுததாணம் அளித்துதவுவது வியப்பில்லை.

தமிழகத்தில் தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட லட்சக்கணக்கான மக்களும், தெலுங்கு நாட்டில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட லட்சக்கணக்கான மக்களும், தமிழகமும், ஆந்திரமும் என்றென்றும் நெருங்கிய உறவு பூண்டு, உதவியும் நேயமும் மிக்கவர்களாக இருக்க வேண்டும் என்று உளமார விரும்புகின்றனர் என்பதும் பயணம் மூலம் தெரிந்துகொண்டேன்.

ஆந்திர நாட்டுக்கும், தமிழகத்துக்கும் ஏற்பட்ட வைணவத் தொடர்பு மூலம் இணைந்த இவ்விரு நாடுகளும் இன்றும் அதிகமாகவே கலாச்சாரத் தொடர்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். அதுவே நம் நாட்டின் தேசிய ஒருமைப்பாட்டுக்கு நலம் தரும்.

# ஆய்வு நூற்பட்டி

## தமிழ்


| | | | |
|---|---|---|---|
| 1. | அகநானூறு | | |
| 2. | சிலப்பதிகாரம் | | |
| 3. | மணிமேகலை | | |
| 4. | நாலாயிர திவ்ய பிரபந்தம் | | |
| 5. | கோயிலொழுகு | | |
| 6. | திருமலையொழுகு | | |
| 7. | குருபரம்பராயிரபாவம் | - | பின்பழகிய பெருமாள் ஜீயர் |
| 8. | தேசிக பிரபந்தம் | - | வேதாந்த தேசிகர் |
| 9. | பாண்டிநாட்டுத் திருப்பதிகள் | - | ந. சுப்பு ரெட்டியார் |
| 10. | திருமந்திரம் | - | திருமூலர் |
| 11. | ஸ்ரீவீரமங்கைமுனி வைபவம் | - | வானமாமலை மடம் வெளியீடு |
| 12. | இராமானுஜ தயாபாத்ர பத்ய சரித்திரம் | - | பி.ப. அண்ணராசாரியர் |
| 13. | பூர்வாசாரிய வைபவம் | - | பி.ப. அண்ணராசாரியர் |
| 14. | சங்கரரும், வைணவமும் | - | புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார். |
| 15. | தமிழர் சமயம் யாது? | - | புத்தூர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் |
| 16. | ஆழ்வார்கள் கால நிலை | - | மு. இராகவையங்கார் |
| 17. | தமிழ் இலக்கிய வரலாறு | - | மு. வரதராசன் |
| 18. | தமிழ் இலக்கிய வரலாறு (சைவ, வைணவம்) | - | ஈ.எஸ். வரதராஜையர் |
| 19. | ஸ்ரீரங்கம் வைஷ்ணவ சபா பொன்விழா மலர் | - | |
| 20. | பாஞ்சராத்ர ஆகம சாரம் | - | சு.நி. ரந்தநாதாச்சாரியர் |
| 21. | கீழை, மேலை நாடுகளில் மெய்ப்பொருளியல் | - | அண்ணாமலைப் பல்கலைக் கழகம் |
| 22. | இந்திய தத்துவ ஞானம் | - | கி. லட்சுமணன் |

23. ஆதி கிரேக்க மெய்ப்பொருளியல் - இலங்கை அரசு வெளியீடு
24. அருள்தரும் ஆரண தேசிகன் - லிப்கோ வெளியீடு
25. அஷ்டப்பிரபந்தம் - பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்

ஆங்கிலம்

26. History of Sri Vaishnavism in the Tamil Country (Post - Ramayana) - Dr. N. Jagadeesan.
27. History of Thirupathi - T.K.T. Veeraraghavacharya
28. Temples of South India - K.R. Srinivasan
29. Sri Vaisnavism and Manipravala - Dr.K.V.K. Venkatachari
30. Collected works of Sri R.G. Bhandarkar - Volume IV

வடமொழி

31. திவ்ய சூரிசரிதம் - கருடவாஹன பண்டிதர்
32. விஸ்வகுணாதர்சசம்பு - வெங்கடாத்திரி
33. நாரத பக்தி சூத்திரம்

பிராகிருதம்

34. காதாசப்த சதி - ஹாலன்
35. பஞ்சாஸ்திகாயம் - குந்தகுந்தாசரியர்

மணிப்பிரவாளம் – தெலுங்கு லிபி

36. அஷ்டாதரஹஸ்யம் I & II - பிள்ளை லோகாச்சாரியார்
பதிப்பு - T.V.V.N. சுதர்சனாச்சாரியர்
37. திருவாய்மொழி

தெலுங்கு

38. ஆமுக்த மால்யத - கிருஷ்ணதேவராயர்
39. மனுசரித்ர - அலசானி பெத்தன்னா
40. வசுசரித்ர - ராமராஜ பூஷணர்
41. பஸவ புராணமு - பால்குரிகி சோமநாதர்

| | | | |
|---|---|---|---|
| 42. | பண்டிதாராத்ய சரித்ர | - | பால்குரிகி சோமநாதர் |
| 43. | விருஷாதிப சதகம் | - | பால்குரிகி சோமநாதர் |
| 44. | பாரிஜாதாபஹரணம் | - | திம்மன்ன |
| 45. | பாண்டுரங்க மகாத்மியம் | - | தெனாலிராமகிருஷ்ணகவி |
| 46. | பரமயோகி விலாசமு | - | தாள்ளபாக சின்னன்னா |
| 47. | அன்னமாச்சார்ய சரித்ர | - | தாள்ளபாக சின்னன்னா |
| 48. | அஷ்டமஹிஷி கல்யாணமு | - | தாள்ளபாக சின்னன்னா |
| 49. | தசரதராஜநந்தன சரித்ர | - | மரிங்கண்டி சிங்கராச்சார்ய |
| 50. | சிம்மகிரி வசனமுலு | - | குலசேகரராவ் பதிப்பு |
| 52. | அத்யாத்ம சங்கீர்தனமுலு | - | தாள்ளபாக அன்னமாச்சார்ய |
| 53. | அத்யாத்ம சங்கீர்தனமுலு | - | பெத திருமலாச்சார்ய |
| 54. | சிருங்கார சங்கிர்த்தனமுலு | - | அன்னமாச்சார்ய |
| 55. | ராயவாசகமு | - | ஸ்தானதிபதி |
| 56. | கிருஷ்ணராய விஜயமு | - | குமாரதூர்ஜடி |
| 57. | தாள்ளபாக கவுலக்ருதுலு | - | டாக்டர் வேடூரி ஆனந்த மூர்த்தி |
| 58. | அன்னமாச்சார்ய ஜீவித சரித்ர | - | வேடூரி பிரபாகர சாஸ்திரி |
| 59. | மானவல்லி கவிரசனலு | - | மானவல்லி ராமகிருஷ்ணய்யா |
| 60. | ஜீர்ணவிஜயநகர சரித்ர | - | குந்தூரி ஈஸ்வரதத் |
| 61. | ஆந்திர வாங்மய சரித்ர | - | சிஷ்டா ராமகிருஷ்ண சாஸ்திரி |
| 62. | ஆந்திருல சரித்ர சமஸ்க்ருதி | - | கண்டவல்லி லட்சுமி ரஞ்சனம் |
| 63. | தக்ஷிண தேசியாந்திர வாங்மயமு | - | டாக்டர் நிடதவோலு - வெங்கட்ராவ் |
| 64. | திருநாமமுலு | - | கிளாம்பி நரசிம்மாச்சாரியா |
| 65. | ஆர்ஷவிக்ஞான சர்வஸ்வம் | - | Dr. B. ரகுநாதாச்சார்ய |
| 66. | ஆந்த்ர சமஸ்தானமுலு சாஹித்ய போஷண | - | டாக்டர் தூமாடி தொணப்ப |
| 67. | மதுர நாயக ராஜுலு | - | சி.ஆர். சர்மா |
| 68. | சமக்ர ஆந்திர சாஹித்யம் | - | ஆருத்ரா |
| 69. | ஸ்ரீவேங்கடேச ஸ்துதி ரத்னமாலா | - | கோறாடா ராமகிருஷ்ணய்யா |
| 70. | ஆந்திர சதக சாஹித்ய விகாசம் | - | டாக்டர் கோபாலகிருஷ்ணய்யா |

71. புதூருதிராவிடுலு எவரு? - வேதம் வேங்க்ராய சாஸ்திரி
72. ஆந்திர வாங்மய சரித்ர - நவோதய சமிதி
73. மன சம்ஸ்கிருதி - சரித்ரா - நவோதய சமிதி
74. மன பண்டிதுலு, கவுலு - கோவெல சம்பத் குமாராசார்ய
75. தெலுகு ஜானபத கேய சாஹித்யம் - டாக்டர் பி. ராமாராஜு
76. விஜயநகர ஜில்லா சரித்ர - ஏ.வி.டி. சர்மா
77. பத்ராசல க்ஷேத்ர மஹிமா - டி. சுதர்சன்
78. மங்கள திரிக்ஷேத்திரமு - லட்சுமி நரசிம்ம சாஸ்திரி
79. அலசாணி பெத்தன்ன - பல்லா துர்க்கய்யா
80. ஆழ்வாருல மங்களா சாசன பாசுரமுலு - டி.கே.வி. சுதர்சனாச்சார்ய
81. யதிராஜ வைபவம் (வடமொழி) - வடுக நம்பி

## ஆய்வுக்குப் பயன்பட்ட நூலகங்கள்

1. காந்தி மலைமன்ற நூலகம் - இராஜபாளையம்
2. சரஸ்வதி மகால் நூலகம் - தஞ்சாவூர்
3. தமிழ்ப் பல்கலைக் கழக நூலகம் - தஞ்சாவூர்
4. கன்னிமாரா நூலகம் - சென்னை
5. கிருஷ்ண தேவராயர்ந்திர பாஷா நிலயம் - ஹைதராபாத்

## ஆய்வுக்குதவிய அறிஞர்கள்

1. எம்பார் விஜயராகவாச்சாரியார் - திருச்சி
2. கிருஷ்ணமாச்சாரியர் - வானமாமலை
3. கிருஷ்ணமய்யங்கார் - புத்தூர், திருச்சி
4. எஸ்.கே. ராமராசன் - வேலூர், சேலம்
5. டாக்டர் சௌரிராஜன், தமிழ்த்துறைத் தலைவர், வேங்கடேஸ்வர யுனிவர்சிட்டி - திருப்பதி
6. டாக்டர் ஜீரெட்டி சென்னாரெட்டி தெலுங்குத் துறைத் தலைவர் - திருப்பதி

7. டாக்டர் டி. கோடீஸ்வரன் (தெலுங்குத் துறைத் தலைவர், கிருஷ்ணதேவராய யுனிவர்சிட்டி) - அனந்தபுரம்
8. குண்ட்டிமத்தி சேஷ சர்மா - அனந்தபுரம்
9. தூமாட்டி தொணப்பா, தெலுங்குத்துறைத் தலைவர், நாகார்ஜுனா யுனிவர்சிட்டி - குண்டூர்
10. டாக்டர் குலசேகர ராவ் - ஹைதராபாத்
11. டாக்டர் பி. ராமராஜு - ஹைதராபாத்
12. யஸ்.வி. ஜோகாராவ், தெலுங்குத்துறைத் தலைவர், ஆந்திரா பல்கலைக்கழகம் - விசாகப்பட்டினம்
13. கோவெல சுப்பிரசன்னாச்சாரியா தெலுங்குத்துறைத் தலைவர் காகதியா யுனிவர்சிட்டி, - வாரங்கல்
14. கொர்லபாடி ஸ்ரீராமமூர்த்தி ஆந்திரா பல்கலைக்கழகம் - வால்டேர்
15. டாக்டர் மருபூரி கோதண்டராமரெட்டி - நெல்லூர்
16. ஆருத்ரா - சென்னை
17. டாக்டர் பி. சுப்பு ரெட்டியார் - சென்னை
18. ஸ்ரீ கெ. ஜெகன்னாதாச்சாரியார் - சிம்மாசலம்
19. ஸ்ரீ கூர்மாச்சாரியர் - ஸ்ரீகூர்மம்
20. லட்சுமி நாராயணா - அகோபிலம்

